


அத்தியாயம் 1

# இளைய பல்லவன்

“காஞ்சி இருக்கக் கலிங்கம் குலைந்த* களப் போர் பாடத் திறமினோ” என்று ‘கலிங்கத்துப் பரணி’யில், பரணிக்கோர் .புலவரான செயங்கொண்டார் தமிழக

---

* “காஞ்சி இருக்கக் கலிங்கம் குலைந்தது” என்பதற்கு, ‘காஞ்சி மாநகரில் குலோத்துங்கன் இருக்க, அவன் ஆணையால் அவன் படைகள் கலிங்கத்தை அழித்தன’ என்பது ஒரு பொருள். காஞ்சி என்பது மங்கையர் அணியும் ஓர் ஆபரணம். கலிங்கம் என்பது ஆடை. மகளிர் கலவியில் ‘ஆபரணம் இருக்க ஆடை கலைந்தது’ என்பது இன்னொரு பொருள். இது செயங்கொண்டார் சிலேடை – கலிங்கத்துப் பரணி ‘கடைதிறப்பு’ பகுதி.

மகளிரை அறைகூவி அழைத்து, மகளிர் தத்தம் கணவ ருடன் நடத்திய கலவிப் போரையும் கழற்சென்னியான முதலாம் குலோத்துங்கன் கலிங்கத்தின்மீது நடத்திய ஆயுதப் போரையும் சிலேடை கோத்துப் பாடியது பல வருஷங் களுக்குப் பின்புதானென்றாலும், அந்தப் போருக்கு வித்திடுவதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்பே காரணமா யிருந்த கலிங்கத்தின் பாலூர்ப் பெருந்துறை, சித்திரா பௌர்ணமியின் அந்திமாலை நேரத்தில் இயற்கை வனப் பின் எல்லையை எட்டிக் கொண்டிருந்தாலும், இயற்கை வனப்புடன் இணையும் எத்தனை எத்தனையோ செயற்கைக் கஷ்டங்களையும் சுட்டிக்காட்டிக் கொண்டுதானிருந்தது.

மாலைக் கதிரவன் தன் மஞ்சள் நிறக் கதிர்களை எதிரேயிருந்த வங்கக் கடலின் நீலநிற அலைகளின்மீது பாய்ச்சி, மயில்துத்தத்தை தங்கமாக அடிக்கும் ரசவாதி யைப்போல, அலைகளின் நிறத்தைப் பொன்னிறமாக மாற்றிக்கொண்டிருந்தாலும், அந்த மாற்றமும் ரசவாதி அகன்றவுடன் மறைந்துவிடும் மாயாஜாலத்தைப்போலவே, ஆதவன் மறைய அகன்று அகன்று சிருஷ்டியின் அநித்தி யத்தை நிரூபித்துக்கொண்டிருந்தது. அத்தகிரியில் தோன்றி மைஞ்சூரை, பூரணை, பிராணிஹிதை, பேன கங்கை, வேணு கங்கை, இந்திரவதி ஆகிய ஆறு உபநதிகளையும் சேர்த்தணைத்துக் கொண்டதால் பிரும்மாண்டமாகப் பெருகித் தொண்ணூறு காத தூரம் ஓடிவந்த களைப்பைப் போக்கிக்கொள்ள *பாலூர்ப் பெருந்துறைக் கருகில் கடற் கணவனுடன் வேகமாக மோதிக் கலந்துவிட்ட புண்ய

---

* பாலூரா என்ற பாலூர் துறைமுகம் தற்போதுள்ள சிகாகோலுக்கு அருகிலிருந்ததாகச் சில சரித்திர ஆசிரியர்கள் கருதுகிறார்கள். ஆனால் G. Jouean-Dubrenil பாலூரா கோதாவரியின் முகத்து வாரத்துக்கு அருகிலிருந்ததாக நினைக்கிறார் – Ancient History of Deccan P.P. 86-88. பின் கண்ட கருத்தே இக்கதைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது.

நதியான கோதாவரியின் வண்டல் கலந்த செந்நிற நீரும் ஆதவனுக்குத் துணை செய்து நீலக்கடலின் நிறத்தை சங்கமப் பகுதியில் சிறிது தங்கமாக மாற்றியதென்றாலும், மாலை நேரக் காற்றால் திரும்பத் திரும்ப எழுந்த பெரும் அலைகள் கோதாவரியின் பொன்னிற நீருக்கும், பழைய மயில் துத்தத்தின் நிறத்தையே அளித்துப் 'பிற்காலத்தில் இந்தக் கலிங்கத்தின் பொன்னும் மணியும் சூறையாடப் படும், நிலைப்பது மதிப்பற்ற மயில்துத்தம் தான்' என்பதை அறிவுறுத்திக் கொண்டிருந்தன. சில வருஷங்களுக் குள்ளாகவே கலிங்க நாடு நிலைகுலைந்து கலங்கிப் போய் விடும் என்பதை முன்கூட்டி அறிவிக்க விரும்பியதுபோல் ஓரத்தே அடிக்கடி கலங்கிப் பொன்னிறம் பெற்ற வங்கக் கடல்நீரை வானிலிருந்து கவனித்த இரண்டொரு வெண் ணிற மேகங்களுக்கும் அந்திச்சூரியன் தனது பொன் னிறத்தைப் பூசத்தான் முயன்றான். ஆனால் அந்த மாயையிலிருந்து தப்ப முயன்றனபோல் மேகத் துண்டுகள் கிழக்கு நோக்கி நகர்ந்து கொண்டிருந்தன. கோதாவரியின் முகத்துவாரத்தை அடுத்தாற்போல் பிரும்மாண்டமாக எழுந்த பெரும் கோட்டை மதில்களுக்குப் பின்னாலிருந்த அரண்மனை உப்பரிகை உச்சியில் தெரிந்த கலிங்கத்தின் பெருங்கொடி தனக்கு நிகரில்லையெனக் காற்றில் பட படத்துக் கொண்டிருந்தாலும், எதிரே கடலில் நங்கூரம் பாய்ச்சி நின்ற பல நாட்டுக் கப்பல்களின் கொடிகள், அலைகளால் உந்தப்பட்ட நாவாய்கள் முன்னும் பின்னும் ஆடியதன் விளைவாக, தங்கள் கொடி மரங்களுடன் முன்னால் முன்னால் சாய்ந்து 'சீக்கிரம் உனக்குத் தண் டனை இருக்கிறது. ஆணவம் வேண்டாம்' என எச்சரித்துக் கொண்டிருந்தன. அந்த நாவாய்களிலிருந்து கரையை நோக்கி நகர்ந்துகொண்டிருந்த வணிகப் படகுகளின் துடுப்புகள் சரேல் சரேலென்று துழாவப்பட்டதாலும் கரையோரம் வந்து இழுக்கப்பட்ட படகுகளாலும், படகி லிருந்து குதித்த வணிகர்களாலும், கரையோரத்திலும்

சற்றுத் தள்ளியும் இருந்த கட்டுமரங்களில் மீன் பிடிக்க மீனவர் வீசிய வலைகள் பலமாகப் பல இடங்களில் இழுக்கப்பட்டதாலும், அந்தப் பெருந்துறையின் கரையோர நீர் பெரிதும் குழம்பியும் கலங்கியும் இருந்தது.

தமிழர்கள் அதிகமாகக் குடியேறியதால், தமிழகத்தில் சாதாரணமாக வைக்கப்படும் ஊர்ப் பெயரைப் போல கலிங்கத்தின் அந்தப் பெருந்துறைக்குப் பாலூர் என்று பெயர் வைக்கப்பட்டிருந்தாலும், அந்தப் பெயரைப் 'பாலூரா' என்று கிரேக்க வணிகர்களும், அராபியரும், சீனத்தாரும் அழைத்தார்களாதலால் சரித்திரத்தில் பாலூரா என்றே அந்தத் துறைமுகத்தின் பெயர் நிலைத்து விட்டது. இருப்பினும், பாலுக்கும் அந்த ஊருக்கும் சம்பந்தமில்லையென்பதைச் சுட்டிக் காட்ட இஷ்டப் பட்டவன்போல் சித்திரா பௌர்ணமி தினத்தின் அந்த மாலை நேரத்தில் கதிரவன் மறையும் சிறிது நேரத்திற்கு முன்பாகவே தன் பால் நிறத்தை வெளிக்குக் காட்டாமல் ஏதோ பெருங்கோபத்துடன் விழிப்பவன்போல் சிவந்த பந்தாக முழுச் சந்திரனும் மெள்ள வானவெளியில் தோன்றினான்.

தங்க சூரியன் மறைய முற்பட்டுத் தங்கமதி தலை யெடுத்த பின்பு பாலூர்ப் பெருந்துறையின் அழகு முன்னை விடப் பன்மடங்கு அதிகமாகக் கண்ணையும் இதயத்தையும் கவர்ந்தது. அத்துடன் அந்தத் துறைமுகத்தே வேதனையும் கூச்சலுங்கூடக் கலந்துதான் கிடந்தது. அந்த மாலைநேரத்தில் நகரத்துக்குள்ளிருந்து திடீரென வானத் தில் கூட்டமாகப் பறந்து வந்து எதையோ மறந்து வைத்து விட்டனபோல் வெகு வேகமாகக் கூட்டமாகவே திரும்பிய புள்ளினங்கள் பாடிச் சென்ற இசை காதுக்கு மிக இன்ப மாக இருந்ததென்னமோ உண்மைதான். ஆனால், துறை முகக் கரையில், இழுக்கப்பட்ட படகுகளிலிருந்து பெரும் பொதிகளை இறக்கி மூட்டைகளைத் தோள்மேல் சுமந்து

சுங்கக் கொட்டடிக்குச் சென்றுகொண்டிருந்த ஊழியர் கூட்டம் சுமைகளை ஏற்றிக்கொள்ளப் போட்ட சத்தமும் சுமந்து சென்றபோது போட்ட முனகலும், இன்பமான இந்தத் துறைமுகத்தில், மாந்தர் துன்ப மூச்சு விடும் காலம் அதிக தூரத்திலில்லையென்பதை அறிவுறுத்தின. அத்துடன் கடற் கரையின் அலை ஓரத்திலிருந்து சற்று தூரத்தேயிருந்த சுங்கச் சாவடிகளை நோக்கிப் போடப்பட்டிருந்த ஒரே ஒரு பெரும் கப்பிச்சாலையில் தென்கலிங்கத்தின் பெரும் மாடு கள் இழுத்துச் சென்ற நானா தேசத்துப் பொதி மூட்டை களும் பெட்டிகளும் கர்ண கடூரமான சத்தத்தை விளை வித்தன. வண்டிகளில் ஏற்றப்பட்ட பெரும் சுமையைத் தாளாத மாடுகள் விட்ட பெருமூச்சையும், ஆயாசத்தையும் தலைதூக்கிப் பார்த்த கரையோரக் கடல் நாரைகள், 'குவா குவா' என்று தங்கள் நீண்ட அலகுகளை விரித்துப் பரிக சித்துப் பிறர் துன்பப்படுவதைப் பார்த்து மகிழ உலகத்தில் ஜீவராசிகள் என்றும் உண்டு என்பதை நிரூபித்தன.

இப்படி இன்பத்தையும், துன்பத்தையும் கலந்து புகட்டிக் கொண்டிருந்த பாலூர்ப் பெருந்துறை, மேல் நாட்டாரும் கீழ் நாட்டாரும், தூரக் கிழ்த்திசை நாடுகளுக்குச் செல்வ தற்கு ஒன்றுகூடும் ஒரே துறைமுகமாதலால், அந்தப் பெருந் துறையில் யவனரும், சீனரும், அராபியரும், தமிழரும், ஆந்திரரும், வடநாட்டாரும் கலந்து காணப்பட்டது என் றும் கண்கொள்ளாக் காட்சியாக இருந்ததல்லாமல், நல் லெண்ணம் மட்டும் இருந்தால் உலகம் ஒன்று கூடுவது சாத்தியம் என்பதை வலியுறுத்திக் கொண்டும் இருந்தது. இந்தக் கதை துவங்கும் 1063ஆவது வருடத்துச் சித்திரா பௌர்ணமியன்று வழக்கத்துக்கதிகமாகவே, பல நாட்டு மரக்கலங்கள் அங்கு கூடியிருந்ததால் பலதரப்பட்ட வெளி நாட்டவர் கூட்டம் அன்று துறைமுகத்தில் ஏராளமாகி, சிறு உலகம் ஒன்றே அங்கு சிருஷ்டியாகிவிட்டது போன்ற பிரமையை அளித்தது. தட்டை முகமும் மஞ்சள் நிறமும்

உள்ள குள்ளச் சீனரும், ஆஜானு பாகுவாய் உஷ்ண பூமி யின் விளைவாகக் கன்னிச் சிவந்தச் சிவப்புடன் காணப் பட்ட யவனரும் மொட்டையடித்துத் தலைக்குத் துணி கட்டி, தொள தொளத்த உடைகளுடன் உடைகள் நாலா பக்கமும் காற்றில் அலைய நடந்த சிவந்த மேனியும், திடகாத்திர தேகமும் உள்ள அராபியரும் அதிக உயரமோ அதிகக் குள்ளமோ இல்லாத தமிழகத்தாரும் உயர்ந்தும் கனத்தும் பயங்கரமாக விளங்கிய நீக்ரோவரும் கலந்து நின்ற காட்சி, நவதானியங்கள் கலந்த மங்கலப் பாலிகை போல் அந்தப் பெருந்துறையை விளங்க வைத்தாலும், அந்தப் பாலிகைகளை உடைக்க விரும்பிய அமங்கலத் தூதர்கள்போல் கூட்டங்களை விலக்க முற்பட்ட கலிங்கத் தின் சுங்கக் காவல் வீரர்கள், 'உம் இப்படி வா! அந்தப் புறம் போகாதே' என்று ஆணையிட்டு, சுங்கத்திலிருந்து யாரும் தப்ப முடியாதபடி கட்டுப்பாடு செய்து பொதி தூக்கும் ஊழியர்களை விரட்டிக் கொண்டிருந்தார்கள். அந்த விரட்டலுக்குப் பணியாத ஊழியர்களை மென்னி யைப் பிடித்துச் சுங்கச் சாவடிகளின் பக்கம் தள்ளவும் செய்தார்கள்.

இப்படிக் காவலரின் கெடுபிடியால் நடந்து கொண் டிருந்த சுங்கச் சோதனையையும், சுங்கச் சாவடிகளின் பக்கம் போய்க்கொண்டிருந்த சுமை தாங்கிய ஊழியரை யும், பெரும் சாட்டைகளைப் பக்கங்களில் சொடேர் சொடேரெனச் சொடுக்கி நீக்ரோவரை விரட்டிக் கொண்டி ருந்த * அராபியர்களையும், அமைதியாக ஒரே ஒழுங்குடன் ஏதோ படைக்கு அணிவகுப்பவர்போல் சென்று கொண்டி ருந்த யவன வணிகரின் கூட்டத்தையும் கவனித்துக்

* அராபியர்கள் நீக்ரோ அடிமைகளைக் கொண்டு போய்ச் சீனாவில் விற்றார்கள். இந்த அடிமைகளின் ஆகிருதியின் காரணமாக சீனா இவர்களைப் 'பேய் அடிமைகள்' என்று அழைத்தார்கள்... Conquest By Man by paul Herman - Page 155.

கொண்டே கரைக்கு வந்து படகிலிருந்து தானும் இறங்கித் தன் குதிரையையும் இறக்கிய ஒரு வாலிபன், சற்று நேரம் அலைப் பகுதியிலேயே புரவியுடன் நின்று கடல் பிராந்தியத்தையும் எதிரேயிருந்த பாலூர் நகரத்தின் பெரும் கோட்டையையும் நீண்ட நேரம் தன் கண்களால் துழாவினான். அந்த வாலிபன் அந்தப் பெருந்துறைக் கரையில் கால் வைத்ததுமே கலிங்கத்துப் போரின் வித்து விதைக்கப் பட்டுவிட்டது என்பதற்குச் சாட்சி சொல்ல இஷ்டப் பட்டனபோல் கடலின் அலைகள் முன்னை விடப் பெரிதாக இரைச்சல் போட்டன. கதிரவன் மறைந்துவிட்டதால் நகருக்குள் ஏற்பட்ட பெரும் விளக்குகளும் தீக்கண்களை விழித்து வந்திருப்பவன் யாரெனப் பார்க்கவும் தொடங்கின. அந்த விளக்குகளின் தீ விழிகளில் நாமும் பங்கு கொள்வது பிசகென நினைத்த சந்திரனும் தனது தங்க நிறத்தை மாற்றிக்கொண்டு வெண்ணிறம் பெற்றான்.

கரையில் திடமாகக் காலூன்றி நின்ற அந்த வாலிபனுக்கு வயது இருபத்தொன்றுக்கு மேலிருக்கக் காரணமில்லை. ஆயினும் அவன் கண்களில் விரிந்த ஆராய்ச்சி அவன் முதிர்ந்த அனுபவத்தைத் தெரியப்படுத்தியது. அவன் கன்னத்தில் சற்றே கீரியதுபோல் இருந்த ஒரு வடு அவன் வதனத்தின் அழகைக் குறைப்பதற்குப் பதில் அதற்கு ஒரு வீரக் களையையும் இணையற்ற கம்பீரத்தையுமே அளித்தது. 'காக பக்ஷகம்' என்று புராணங்களில் சொல்லப்படுவது போல் காக்கையின் இறகுகளைப்போல் தலையில் விரிந்து கன்னங்களையும் தடவித் தொடங்கிய சுருண்ட அவன் குழல்கள் மட்டுமின்றி அகன்ற நெற்றியும், அதிக வளைவு என்று சொல்ல முடியாதபடி சிறிதே வளைந்து திடீரென பக்கங்களில் கத்திகளைப்போல கூர்மையுடன் இறங்கிப் புருவங்களும், நன்றாகச் சிவந்து சற்றுத் தடித்தே இருந்த வாயிதழ்களும் அந்த இளைஞன் வீரத்துக்கும் உறுதிக்கும் பெரும் சான்றுகளாயிருந்தன.

அங்கியில் மறைந்த இடம் போக மீதி இடங்களில் வெட்டுக் காயங்களுடன் காட்சியளித்த அவன் நீளமான கரங்களும் தழும்பேறியிருந்த விரல்களும் இளைய பருவத்திலேயே அவன் பெரும் போர்களைக் கண்டவன் என்பதை வலியுறுத்தின. சற்றுக் குறுகிக் காணப்பட்ட அவன் இடையை அடுத்துக் கச்சையிலிருந்து பக்கப் பகுதியில் தொங்கிய வாள் அதிக நீளமில்லையென்றும் உறையின் பரிமாணத்திலிருந்து அதன் அகலம் மிகுதியென ஊகிக்க முடிந்தது. அவன் கச்சையில் வயிற்றுக்கு எதிரில் செருகப் பட்ட சிறு வாளின் பிடியிலிருந்த விலை உயர்ந்த கற்கள் இளைஞன் அப்படியொன்றும் ஏழையில்லையென்பதை விளக்கின. அவன் அங்கியின் முகப்புகளிலிருந்த தங்கச் சரிகை வேலைப்பாடும் இளைஞன் நல்ல பசையுள்ள குடும்பத்தில் பிறந்தவன் என்பதை நிரூபித்தன. உறுதியுடன் மணலில் புதைந்து நின்ற அவன் கால்களின் பெருவிர லொன்று மணலில் பதிந்து பதிந்து குழி செய்துகொண் டிருந்தது. அதைக்கண்ட கடல் நண்டுகள், கலிங்கத்துக்கு இப்பொழுதே இந்த இளைஞன் குழி தோண்டுகிறானோ என்று பயந்தனபோல் தங்கள் மணல் வளைகளை நோக்கி ஓடி மறைந்தன.

குதிரையின் கழுத்தில், ஒரு கையைப் போட்டுக் கொண்டு நின்ற வண்ணம் கடற்கரைப் பிராந்தியத்தைக் கண்களால் அளவெடுத்த அந்த வாலிபன் கடலின் லாவண்ணியத்தையும், கோதாவரியின் கம்பீரத் தோற்றத் தையும், வெண்மதி அள்ளிச் சொரிந்த வனப்பையும், பல நாட்டுக் கலங்களில் வந்து சுங்கச்சாவடிக்குச் சென்று கொண்டிருந்த வணிகப் பொருள்களையும் பார்த்துப் பார்த்துப் பிரமை பிடித்து நின்றான். 'இத்தனை வாணிப மும் இயற்கை வனப்பும் பொருந்திய இந்தத் துறை முகத்தை, இந்த மாணிக்கத்தை, இழக்க எதற்காகத் தென்க லிங்கத்து மன்னன் பீமனும், வடகலிங்கத்து மன்னன்

அனந்தவர்மனும் முயல்கிறார்கள்?" என்று தன்னைத்தானே கேட்டுக்கொண்ட அந்த இளைஞன் நீண்ட பெருமூச் சொன்றை விட்டுவிட்டு, தன் புரவியை இழுத்துக்கொண்டு மெள்ள மெள்ளச் சுங்கச்சாவடியை நோக்கி நடக்க லானான்.

அவன் திடமாகவும், சந்தேகமின்றி யாரையும் தகவல் கேட்காமலும் நடந்ததிலிருந்து அவன் பாலூர்ப் பெருந் துறைக்குப் புதியவனல்லவென்பதை ஊகித்துக் கொண் டார்களாதலாலும், அவன் இடையில் தொங்கிய வாளும் ஓரளவு பயங்கரமாயிருந்ததாலும் முகத்திலிருந்த களையும் சற்று எச்சரிக்கை செய்தாலும், சுங்கக் காவலர்கூட அவனை எந்தக் கேள்வியும் கேட்காமலும் தடை செய்யா மலும் விலகி வழி விட்டார்கள். பல நாட்டவரின் கூட்டத் தோடு கூட்டமாகவும் சில சமயம் சீனரோடும், சில சமயம் யவனரோடும், சில சமயம் அராபியரோடும் தோளுடன் தோள் உராய்ந்து சென்ற அந்த வாலிபன் சுங்கச் சாவடிக்கு வெளியிலேயே குதிரையை நிறுத்திவிட்டுத் தான் மட்டும் சாவடிக்குள் நுழைந்தான்.

பெரும் மண்டபமாகச் சுமார் நூறு தூண்களுடன் பல பகுதிகளாகப் பிரித்துப் பிரித்துத் தடைகள் வைத்துக் கட்டப்பட்டிருந்த அந்தச் சுங்கச்சாவடியில் சுங்கம் வாங்கும் அதிகாரிகள் ஆங்காங்கு நின்று பிரயாணிகளின் சரக்குகளுக்கு மதிப்பீடு செய்தும், சுங்கப்பணம் வாங்கியும், சுங்க முத்திரை பதிப்பித்தும் ஊழியம் புரிந்ததால் ஏற் பட்ட ஒலியும், சுங்க மதிப்பீட்டை எதிர்த்து வணிகர்கள் போட்ட கூச்சலும் காதைத் துளைத்துக் கொண்டிருந்தன. அத்துடன் வசூலிக்கப்பட்ட தங்கப் பணங்கள் பாறை களின் மீது தட்டப்பட்டதாலும், சரக்குடைய வெண்கல— இரும்புக் குடங்கள் திடீரென இறக்கப்பட்டதாலும் ஏற்பட்ட உலோக ஒலிகள் மனிதர்களின் பேச்சொலிக்கு ஆதார சுருதி கூட்டின. படகில் வந்த இளைஞன் உள்ளே

நுழைந்ததும் அந்தச் சுங்கக் கூட்டத்தையும் அங்கு வசூலிக் கப்பட்ட பெரும் சுங்கத் தொகைகளையும் பார்த்துக் கொண்டே வணிகரல்லாத பிரயாணிகள் சோதிக்கப்படும் இடத்துக்குச் சென்று தன் இடையிலிருந்த பட்டுப் பையை எடுத்து சுங்க அதிகாரியிடம் அளித்துவிட்டு விரலில் இருந்த ஒரு முத்திரை மோதிரத்தையும் காட்டினான். அந்த மோதிரத்தைக் கண்ட மாத்திரத்தில் மின்னலால் தாக்குண் டவன்போல் பேரதிர்ச்சியும் குழப்பமும் திகிலும் அடைந்த சுங்க அதிகாரி சிலவிநாடிகள் ஸ்தம்பித்து நின்றான். பிறகு அந்த இளைஞன் கொடுத்த பையைச் சோதிக்காமல் திருப்பி அவனிடம் கொடுத்துவிட்டு, "சற்று இப்படி வாருங்கள்" என்று கையால் சைகை காட்டிக் கொண்டே தன்னிடத்தில் வேறொருவனை இருக்கச் செய்து சாவடி யின் கோடியிலிருந்த அறையை நோக்கி நடந்தான். வந்த இளைஞனும் மீண்டும் இடையில் பையைச் செருகிக் கொண்டு, பதிலேதும் பேசாமலும், முகத்தில் எத்தகைய வியப்பும் காட்டாமலும் சுங்க அதிகாரியைத் தொடர்ந் தான்.

அக்கம் பக்கத்தில் எச்சரிக்கையுடன் பார்த்துக் கொண்டே கோடியிலிருந்த தனியிடமொன்றை அடைந்த, சுங்க அதிகாரி, இளைஞன் அருகில் வந்ததும், "நீங்கள் அணிந்துள்ள மோதிரத்தின் மதிப்புத் தெரியுமா உங்க ளுக்கு?" என்று பயத்துடன் வினவினான்.

அவன் சொற்களின் உண்மைக் கருத்தைப் புரிந்து கொண்டாலும், புரியாதது போல் நடித்த இளைஞன், "தெரியும், ஆயிரம் பொற்கழஞ்சுகள். அதற்குச் சுங்கம் உண்டானால் விதியுங்கள்" என்று கூறி சுங்க அதிகாரி யைக் கூர்ந்து நோக்கினான்.

சுங்க அதிகாரியின் விழிகளில் கோபமே அதிகரித்தது. "விலையைச் சொல்லவில்லை. வேறு மதிப்பைச் சொன்

னேன்" என்றான் சுங்க அதிகாரி கோபம் குரலில் உஷ்ணத் துடன் ஒலிக்க.

"வேறு எந்த மதிப்பைக் குறிப்பிடுகிறீர்கள்?" என்று மீண்டும் வினவினான் இளைஞன்.

"இதைச் சிலர்தான் அணிய முடியும்" என்று சுட்டிக் காட்டினான் சுங்க அதிகாரி.

"ஆம்."

"இது பல்லவ ராஜ சின்னம்."

"அதனாலென்ன?"

"இதைப் பல்லவ ராஜ வம்சத்தைச் சேர்ந்தவர்கள் மட்டுமே அணியலாம்."

"அதையும் நானறிவேன்."

இதைக் கேட்டதும் சுங்க அதிகாரியின் முகத்தில் ஈயாடவில்லை. "அப்படியானால் தாங்க..............?" என்று திணறினான்.

"கருணாகர பல்லவன்." ஏதோ ஒரு சாதாரண விஷயத்தை அறிவிப்பவன்போல் தன் பெயரை அறிவித் தான் அந்த இளைஞன்.

சுங்க அதிகாரிக்குக் கொஞ்ச நஞ்சமிருந்த தைரியமும் போய்விட்டது. அவன் இதயத்தில் விவரிக்க இயலாத பல உணர்ச்சிகள் மோதின. "இளைய பல்லவரா?" என்று மிதமிஞ்சிய வியப்பும் திகைப்பும் கலந்த குரலில் வினவினான் சுங்க அதிகாரி.

'ஆம்' என்பதற்கு அறிகுறியாகத் தலையை ஆட்டிய கருணாகர பல்லவன், "இனி நான் போகலாமல்லவா?" என்று வினவிக்கொண்டே மெல்லத் திரும்பினான்.

"நில்லுங்கள்" என்ற அதிகாரியின் குரலைக் கேட்டுத் திரும்பிய இளைய பல்லவனை அருகில் இழுத்த அதிகாரி, "நீங்கள் போக வேண்டிய இடம் எது?" என்று பயத்துடன் வினவினான்.

"கோடிக்கரை கூலவாணிகன் மாளிகை."

"அது நகரத்துக்குள் அல்லவா இருக்கிறது?"

"ஆம்."

"அப்படியானால் இப்பொழுது போக வேண்டாம். அடுத்தாற்போலுள்ள என் இல்லத்தில் தங்கியிருங்கள். நள்ளிரவுக்குப் பின் போகலாம்" என்று மன்றாடினான் சுங்க அதிகாரி.

"இப்பொழுது ஏன் போகக் கூடாது?" என்று சற்று நிதானத்தை இழந்து கேட்டுவிட்டு மீண்டும் போகத் துவங்கிய கருணாகர பல்லவன் கையைப் பிடித்து நிறுத்திய சுங்க அதிகாரி கலவரத்துடன் சொன்னான்: "பிடிவாதம் வேண்டாம். சொல்வதைக் கேளுங்கள். ஊருக்குள் சென்றால் நீங்கள் உயிருடன் மீள முடியாது" என்று.

கருணாகர பல்லவன் விழிகளில் வியப்பு மலர்ந்தது. ஆனால் காரணத்தை அதிகாரி மெள்ள மெள்ள விவரிக்கத் தொடங்கியவுடன் அந்த வியப்பு கோபமாக மாறத் தொடங்கவே, தான் இருக்குமிடம் கலிங்கத்தின் சுங்கச் சாவடியென்பதையும், சுற்றுமுற்றும் வீரர்கள் நடமாட்டம் இருக்கிறது என்பதையுங்கூட கவனிக்காமல், "அத்தனைத் துணிவா இந்தக் கலிங்க பீமனுக்கு?" என்று ஆத்திரத்தால் சற்று இரைந்தும் கூவிவிட்டான் கருணாகர பல்லவன். அந்தக் கூச்சல் அதிகாரியின் காதில் மட்டும் விழுந்திருந்தால் இந்தக் கதையின் போக்கும், கருணாகர பல்லவன் வாழ்க்கையின் போக்கும் வேறு திசையில் திரும்பியிருக்கும். ஆனால் விதி யாரை விட்டது? அவன் கூவியது சற்று தூரத்தேயிருந்த இரு வீரர்களின் காதிலும் விழுந்தது. உடனே நிகழ்ந்தது பிரளயம்.

அத்தியாயம் 2

# அசைந்த திரை! அஞ்சன விழிகள்!

***பா***லூர்ப் பெருந்துறையின் பிரும்மாண்டமான அந்தச் சுங்க மண்டபத்தில், பல நாட்டு வணிகரும் மற்றோரும் வாதிட்டதால் விளைந்த கூச்சலையும் மீறிக் காவலர் காதில் விழும்படியாகக் கலிங்கத்து மன்னனை நிந்தித்துக் கருணாகர பல்லவன் கூவிவிட்டதையும், அந்த நிந்தனை காதில் விழுந்ததும் வாள்களின் மேல் கைகளை வைத்த வண்ணம் காவலர் இருவர் அவனை அணுகத் தொடங்கி விட்டதையும் கண்ட சுங்க அதிகாரி அடியோடு நிலை குலைந்து திகைத்துப் போய்விட்டானென்றாலும், அதற்குக் காரணமான இளையபல்லவன் மட்டும், தன்னை எதிர் நோக்கி வரும் ஆபத்தைப்பற்றிச் சிறிதும் சிந்தியாமலும், கோபம் தலைக்கேறி நின்றதால் விளைவைப் பற்றி அறவே கவலைப்படாமலும், உறையிலிருந்த தன் வாளை வெகு வேகமாக உருவினான். சாதாரணமாக நிதானத்தை இழக்காதவனும் திடபுத்தியுள்ளவனுமான கருணாகர பல்லவன் அன்று நிதானத்தை அறவே இழந்து உணர்ச்சி களின் வசப்பட்டு வாளை உருவியதற்குக் காரணம் இருக்கத் தான் செய்தது. சுங்க அதிகாரி கூறிய விவரங்கள் அப் பொழுதும் அவன் புத்தியில் வலம் வந்து வந்து இளமை யின் வேகத்தால் ஏற்பட்ட அவன் உணர்ச்சிகளை மேலும்

மேலும் கொந்தளிக்கவே செய்தன. அந்தக் கொந்தளிப்பின் விளைவு அவன் வீரவதனத்தில் இரத்தக் குழம்பைப் பாய்ச்சிச் செக்கச் செவேலென அடித்திருந்ததாலும், அவன் அணிந்திருந்த அங்கி பழுப்பு நிறம் வாய்ந்திருந்ததாலும், சுங்கச் சாவடியின் பல இடங்களில் சுடர்விட்டுப் பழுப்புக் கட்டைகளுடனும் சிவப்பு ஜ்வாலைகளுடனும் நின்ற தீப்பந்தங்களைப் போலவே கருணாகர பல்லவனும் அந்தப் பெரும் மண்டபத்தில் நின்றான். பிற்காலத்தில் கலிங்கத்தின் பல பகுதிகளைக் கொளுத்திவிட்ட அந்த இளைய பல்லவனுக்கு மட்டும் வாய்ப்பு இருந்திருந்தால், அந்தப் பெரும்பணி சித்திரா பௌர்ணமியின் அந்த இரவிலேயே நடந்திருக்கும். அத்தனை கோபத்தைக் கிளறி உணர்ச்சிகளைக் கொந்தளிக்கச் செய்துவிட்ட செய்திகளைக் கருணாகர பல்லவனின் செவிகளில் பாயச்சியிருந்தான் சுங்க அதிகாரி. இளையபல்லவனின் இயற்கைக் குணத்தை மட்டும் சுங்க அதிகாரி முன்கூட்டி உணர்ந்திருந்ததால், தன்னந்தனியே வந்திருக்கும் ஓர் இளைஞன் ஆபத்தை விளைவிக்கக் கூடிய செயல்களில் அத்துமீறி இறங்க மாட்டான் என்ற அசட்டு நம்பிக்கை மட்டும் அவனுக்கு இருந்திராவிட்டால், கலிங்கத்தில் ஊழியம் புரிந்தாலும் தமிழனாகப் பிறக்கும் பாக்கியத்தைச் செய்திராவிட்டால், அவன் வாயைத் திறந்தே இருக்க மாட்டான். ஆனால் பல்லவ முத்திரையுடன் கூடிய மோதிரத்தை இளைய பல்லவன் கரத்தில் பார்த்தவுடன் தமிழக அரச குடும்பத்தைச் சேர்ந்த ஒருவனை நாசமாக விடக்கூடாது, எப்படியும் காப்பாற்றியே தீரவேண்டும் என்ற நல்லெண்ணத்திலேயே அவன் இளையபல்லவனைத் தனியாக அழைத்துச் சென்று, பாலூரில் உள்ள நிலையை மெள்ள மெள்ள விவரித்தான். அவன் தன்னை முதன் முதலில் யாரென விசாரித்தபோது சற்றும் வியப்பெய்தாமல் கேள்விகளுக்குப் பதில் சொன்ன இளைய பல்லவன், சுங்க அதிகாரி

தன்னைத் தனிமையில் வரும்படி சைகை காட்டி அழைத்துச் சென்றதும் சற்று வியப்பே எய்தினான். தனி இடத்தை அடைந்ததும், தன்னை ஊருக்குள் செல்ல வேண்டாமென்று அவன் தடுக்கவே அந்த வியப்புப் பன்மடங்கு அதிகமாகியதால், அகல விரிந்த கண்களைச் சுங்க அதிகாரியின்மீது நிலைக்கவிட்டான் கருணாகர பல்லவன். இளைய பல்லவன் முகத்திலும் கண்களிலும் விரிந்த வியப்பின் சாயையைக் கவனிக்கத் தவறாத சுங்க அதிகாரி, சற்று வெறுப்புடன் இதழ்களை மடித்து, "இளையபல்லவர் வியப்படைய வேண்டிய நேரமல்ல இது" என்று சற்றுக் கண்டிப்புத் தொனித்த குரலில் மெல்லக் கூறினான்.

இளைய பல்லவனின் இமைகள் சற்றே உயர்ந்தன. கூர் விழிகள் சுங்க அதிகாரியை நன்றாக ஊடுருவிப் பார்த்தன. பிறகு அவன் இதழ்களிலிருந்து உதிர்ந்த சொற்களில் ஏளனமும் தொனித்தன. "வியப்பை விதைத்தவர் தாங்கள். விதைத்தபின் விளைவை எப்படித் தடுக்க முடியும்?" என்று ஏதோ தத்துவ வினாவை விடுப்பவன் போல் கேட்டான் கருணாகர பல்லவன்.

பல்லவனின் அந்தப் பதில் மிகவும் விசித்திரமாயிருந்ததால் சுங்க அதிகாரியின் முகத்திலும் வியப்புக்குறி லேசாகப் படரவே, அவனும் திருப்பிக் கேட்டான், "என்ன! வியப்புக்கு வித்திட்டவன் நானா?" என்று.

"சந்தேகமென்ன! தாங்கள்தானே இங்கு தனிமையில் வரும்படி என்னை அழைத்தீர்கள்?" என்று வினவினான் கருணாகர பல்லவன்.

"ஆமாம். அதில் வியப்புக்கு இடமெங்கே இருக்கிறது?" என்று வினவினான் சுங்க அதிகாரி.

"பூம்புகாரிலிருந்து மரக்கலத்தில் வருகிறேன்; அதுவும் அரசாங்க அலுவலாகப் பாலூர்ப் பெருந்துறையில் இறங்கு

கிறேன். சுங்கச்சாவடியில் சோதனைக்கு இடமில்லாமல் செல்ல என் முத்திரை மோதிரத்தையும் காட்டுகிறேன். உடனே தாங்கள் என்னைச் செல்ல அனுமதித்திருக்க வேண்டும். அதுதான் நியாயமாக நடக்கக் கூடியது. ஆனால் அனுமதிக்கவில்லை. தனிமையில் பேச அழைக்கிறீர்கள். மற்றச் சுங்க அதிகாரிகளுக்கு எட்டாக் கையாக இருக்கும் இந்த இடத்துக்கு அழைத்து வருகிறீர்கள். அது மட்டுமல்ல, ஊருக்குள் செல்ல விரும்பும் என்னைத் தடையும் செய்கிறீர்கள். இத்தனைக்கும் வியப்படையாமல் எந்த மனிதனால் இருக்க முடியும்" என்று கேட்டான் கருணாகர பல்லவன், சற்றே இகழ்ச்சியுடன் இளநகை கூட்டி.

சுங்க அதிகாரி தன் இதழ்களையும் சிறிது ஒருபுறம் இழுத்துத் தனக்கும் இகழ்ச்சி முறுவல் கூட்ட முடியும் என்பதை நிரூபித்தான். பேச்சிலும் தான் இளைய பல்லவ னுக்குச் சோடையில்லையென்பதைக் காட்டத் தொடங்கி, "நீங்கள் சொல்லுவதிலும் பொருளிருக்கிறது. வியப்புக்கும் இடமிருக்கத்தான் செய்கிறது" என்று கூறி 'வியப்புக்கும்' என்ற சொல்லில் கடைசி 'உம்மை'ச் சற்று அழுத்தியும் உச்சரித்தான்.

"வியப்புக்கும் என்றால் வேறு உணர்ச்சிக்கும் இட மிருக்கிறது என்கிறீரா?" என்று வினவினான் இளைய பல்லவன்.

"ஆம். தங்கள் நிலையில் நானிருந்திருந்தால் வியப்புக்கு இடமளிக்க மாட்டேன்."

"வேறு எதற்கு இடமளிப்பீர்!"

"எச்சரிக்கைக்கு."

"எதைப் பற்றி எச்சரிக்கை?"

"தங்கள் உயிரைப்பற்றி!"

இதைக் கேட்டதும் இளையபல்லவன் அதிர்ச்சி யடைந்து விடுவானென்று சுங்க அதிகாரி எதிர்பார்த்

திருந்ததால் அவன் ஏமாந்தே போனான். கருணாகரனின் விழிகளில் மேலும் வியப்பின் சாயையே படர்ந்தது. அந்த வியப்பு குரலிலும் தொனிக்கக் கேட்டான், "அரசாங்க அலுவலாக வந்திருக்கிறேன். இதோ இந்தப் பையில் சோழ மன்னனின் ஆக்ஞா பத்திரம் இருக்கிறது. நான் அரசாங்கத் தூதன். என்னைக் காப்பாற்றுவது கலிங்கத்து மன்னனின் கடமை. அப்படியிருக்க என் உயிருக்கு என்ன ஆபத்து நேரிட முடியும்?" என்று.

"முதலில் உயிருக்கு ஆபத்து நேரிடாது" என்று பணிவுடன் ஒப்புக்கொண்ட சுங்க அதிகாரியின் குரலில் ஏளனம் ஒலித்தது.

"பின்னால் ஏற்படுமா?" இளைய பல்லவன் சற்று நிதானத்தைக் கைவிட்டுக் கேட்டான், இந்தக் கேள்வியை.

"ஆமாம். முதலில் சிறையில்தான் தள்ளுவார்கள். பிறகு சமயம் பார்த்து..." என்று வாசகத்தை முடிக்காமல் விட்ட சுங்க அதிகாரி, கழுத்தில் தன் கையை வைத்துச் சரேலென்று குறுக்கே இழுத்து முடிவு என்னவென்பதை அடையாளத்தால் காட்டினான்.

இளையபல்லவன் முகத்திலிருந்த வியப்புடன் மெள்ள மெள்ளக் கோபமும் கலந்துகொள்ளவே, "இளைய பல்லவனான என்னையுமா சிறையில் தள்ளுவார்கள்?" என்று சற்றுச் சீற்றத்துடனேயே கேட்டான்.

"தங்களைத்தான் முக்கியமாகத் தள்ளுவார்கள்!" என்று பதில் சொன்னான் சுங்க அதிகாரி.

"வீர ராஜேந்திர சோழதேவரின் ஆக்ஞா பத்திரத்தை வைத்திருக்கும் என்னையா?" — இம்முறை கேள்வியில் கோபம் பூர்ணமாக ஒலித்தது.

"அந்த ஆக்ஞா பத்திரம்தான் தங்களுக்கு எமன்?"

"என்ன உளறுகிறீர்? கலிங்கத்துக்கு அமைதியை அளிக்கும் சாஸனம் அது."

"ஆனால் அந்தச் சாஸனம் கலிங்கத்தின் துறைமுகங் களைச் சோழர்கள் ஆதிக்கத்திற்குள் கொண்டு வரும் நோக்கமுடையது."

இதைக் கேட்டதும் கருணாகர பல்லவன் திக்பிரமை பிடித்து நின்றான். மிகவும் ரகசியமாகத் தன்னிடம் வீர ராஜேந்திர சோழதேவர் அளித்த ஆக்ஞா பத்திரத்தில் அடங்கிய விவரங்கள், கலிங்கத்தின் ஒரு மூலையிலுள்ள பாலூர் துறைமுகத்தின் சாதாரண ஒரு சுங்க அதிகாரிக்குத் தெரிந்திருப்பதை அறிந்ததும், மீண்டும் சொல்ல வொண்ணா வியப்பின் வசப்பட்டுக் கையைக்கூட அசைக் காமல் நிலைத்து நின்றுவிட்ட இளைய பல்லவனை நோக்கிய சுங்க அதிகாரி, "மீண்டும் வியப்பையே அடை கிறீர்கள் இளையபல்லவரே. அதற்கு நேரமில்லை. எச்சரிக் கைக்குத்தான் நேரம் என ஆரம்பத்திலேயே சொன்னேன்," என்று ஏளனத்துடன் கூறிவிட்டு, பிறகு குரலைத் தணித்துக் கொண்டு மேலும் சொன்னான்: "இளைய பல்லவரே! கலிங்கத்தின் நிலை தாங்கள் எண்ணி வந்ததுபோல் இல்லை. வீர ராஜேந்திர சோழதேவர் கலிங்கத்துடன் சமாதானத்தை விரும்பலாம். ஆனால் தென் கலிங்கத்து மன்னன் பீமனோ, வட கலிங்கத்து மன்னன் அனந்தவர் மனோ சோழநாட்டுடன் சமாதானத்தை விரும்பவில்லை. சென்ற ஆண்டில் *கூடல் சங்கமத்திலும், அதற்கு முன்பு **கொப்பத்திலும் நடந்த போர்களைக் கலிங்கத்து மன்னர் கள் இன்னும் மறக்கவில்லை. படைகளை அணிவகுப் பதிலும் நடத்துவதிலும் இணையற்றவரென்று பாரதம் புகழும் மேலைச் சாளுக்கிய சோமேச்வர மாமன்னரையே முறியடித்த சோழ மன்னர்களின் பெரும் பலத்தைக்

---

* துங்கை, பத்திர ஆகிய இரு நதிகளும் கலந்து துங்கபத்திரா நதியாகும் இடம்.

** கிருஷ்ணா நதிக்கரையிலிருந்த நகரம், பெரிய கோட்டை வசதிகளை உடையது.

கண்டும் சோழ சாம்ராஜ்யம் மேற்கொண்டு விரிவடைந்து கொண்டே கலிங்கத்தின் வாசலுக்கும் வந்துவிட்டதைப் பார்த்தும் கலிங்கம் திகிலடைந்திருக்கிறது. வேங்கி நாட்டில் சதா உலவும் கலிங்கத்தின் ஒற்றர்கள், கலிங்கத்தின் துறை முகங்களின் ஆதிக்கத்தை வீர இராஜேந்திர சோழ தேவர் விரும்புவதாகவும், அந்த விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ளக் கலிங்கத்தின்மீது படையெடுக்கவும் அவர் தயாரென்றும் செய்தி கொண்டு வந்திருப்பதாகப் பாலூரில் பெரும் வதந்தி சில நாள்களாக உலவுகிறது. இந்த வதந்தி யின் விளைவோ என்னவோ எனக்குத் தெரியாது— பாலூரிலுள்ள தமிழ்ப் பெருவணிகர்கள் பலரும், படை வீரர்கள் சிலரும் சிறைகளில் தள்ளப்பட்டிருக்கிறார்கள்...”

இதற்குமேல் சுங்க அதிகாரி பேசவில்லை. இளைய பல்லவன் என்ன சொல்லப் போகிறானென்பதைக் கவனிக்கச் சற்றே தன் பேச்சை நிறுத்தினான். இளைய பல்லவனின் முகத்தில் சிந்தனையின் சாயை தீவிரமாகப் படர்ந்தது. அவனும் சில விநாடிகள் பேசாமலே நின்று கொண்டு, சுங்க அதிகாரி விவரித்துச் சொன்ன விஷயங் களை மீண்டும் மீண்டும் அலசிப் பார்த்தான். ‘முதலாம் ராஜேந்திர சோழ தேவர் கங்கை கொள்ளப் பெரும் படையனுப்பிய காலத்துக்கு முன்பிருந்தே சோழ நாட் டுடன் பகைமையும் சாளுக்கியர்களுடன் தோழமையும் பாராட்டிய கலிங்க நாடு, திடீரெனத் தம்முடன் சமா தானத்துக்கு இசையும் என்று வீர ராஜேந்திர சோழ தேவர் எப்படி எண்ணினார்? கொப்பத்தில் ராஜாதி ராஜனாலும், இளவரசன் இரண்டாவது ராஜேந்திரனாலும், கூடல் சங்கமத்தில் இரண்டாவது ராஜேந்திரனாலும், அவர் மகன் ராஜ மகேந்திரனாலும் சாளுக்கியர்கள் அடைந்த பெரும் தோல்விகளுக்குப் பிறகு கலிங்கம் கலங்குவது இயற்கைதானே?’ என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்ட கருணாகர பல்லவன், ‘இருப்பினும், போர்களை

விடச் சமாதானம் சிறந்ததல்லவா? சில துறை முகங்களைக் கலிங்கம்விட்டுக் கொடுத்தால்தான் என்ன? போர்களை நிறுத்தலாம். மக்கள் மாளமாட்டார்கள்' என்றும் மனத்திற்குள் சொல்லிக்கொண்டான்.

அவன் மனத்திலோடிய எண்ணங்களைச் சுங்க அதிகாரி புரிந்துகொண்டிருக்க வேண்டும். ஆகவே அவன், "இளைய பல்லவரே! கலிங்கத்தின் துறைமுகங்களை, அதுவும் முக்கியமாக இந்தப் பாலூர்ப் பெருந்துறையை, சோழ மன்னர் விரும்பும் காரணம் கலிங்க மன்னர்களுக்கு நன்றாகத் தெரியும்" என்றான்.

"என்ன காரணம்?" என்று வினவினான் இளைய பல்லவன்.

"புகாரும், புதுவையும், சோழகுலவல்லியும், கொற்கையும், தமிழகத்தின் பெரும் துறைமுகங்கள்தான். ஆனால் அவற்றைவிடச் சிறந்தது இந்தப் பாலூர்த் துறைமுகம்" என்று சுட்டிக் காட்டினான் சுங்க அதிகாரி.

"எப்படி!"

சுங்க அதிகாரி மிகுந்த அமைதியுடன் சொன்னான்: "இது சொர்ண பூமியின் திறவுகோல்," என்று.

கருணாகர பல்லவன் புரிந்துகொண்டும் புரிந்து கொள்ள்ாதவன்போல் கேட்டான், "சொர்ணபூமியின் திறவுகோலா?" என்று.

"ஆம் இளையபல்லவரே! வைரமும் வைடூரியமும் பதிக்கப் பெற்ற மணிக்கதவுகள் உள்ள கடாரத்துக்கும், தங்கம் மண்ணிலே கொழித்துக் கிடக்கும் சொர்ணத் தீவுக்கும் இந்தப் பாலூர்ப் பெருந்துறைதான் திறவுகோல். இந்தத் துறைமுகத்திலிருந்துதான் வசதியான காற்று தென்கிழக்கு நோக்கி அடிக்கிறது. புகாரிலிருந்தும், புதுவையிலிருந்தும்கூடச் செல்லலாம். ஆனால் அந்தப் பிராந்தியங்களில் சில சமயங்களில் அடிக்கும் பெரும் காற்றுகள்

கப்பல்களைத் திசை மாறச் செய்திருக்கின்றன. மூழ்கிய கப்பல்களின் எண்ணிக்கையும் அதிகம். ஆனால் பாலூர்ப் பெருந்துறையிலிருந்து தென்கிழக்கில் சென்றால் எந்த ஆபத்துமில்லை. ஆகவே இந்தப் பாலூர்ப் பெருந்துறையை உடைய நாடு, தென்கிழக்கு நாடுகளின் வாணிபத்தின் முழுப் பலனை அடையும் கடாரத்தை வெற்றி கொண்டு மரகதத் தோரணத்தையும் ஆபரண வாயிலையும் கொண்டு வந்தும் முதலாம் ராஜேந்திரரின் கடற்படை இங்கிருந்து தான் கிளம்பியது. இதையெல்லாம் கலிங்கர்கள் அறிவார் கள். ஆகவே உயிரைக் கொடுத்தாலும் வாணிபம் கொழிக் கும் இந்தப் பெருந்துறையைக் கொடுக்க மாட்டார்கள்!" என்று பதில் சொன்னான் சுங்க அதிகாரி.

"ஆகவே..."

"உங்களுக்கு ஆபத்து ஊருக்குள் காத்திருக்கிறது. நீங்கள் வருவது மட்டுமல்ல, வரும் அலுவல் மட்டுமல்ல, இந்தப் பெருந்துறையில்தான் இறங்குவீர்கள் என்பதும் தென்கலிங்க மன்னருக்குத் தெரிந்திருக்கிறது."

"அப்படியா!"

"ஆமாம் இளையபல்லவரே! ஆக, நீங்கள் ஊருக்குள் போவதானால் மாற்று உடையில் போக வேண்டும். அதுவும் நள்ளிரவில் போக வேண்டும்."

"அத்தனை எச்சரிக்கை தேவையா?"

"அவசியம் தேவை. ஊர் முழுதும் படை நடமாட்ட மிருக்கிறது. தமிழர்கள் பலரைச் சந்தேகத்தின்மேல் சிறை செய்திருக்கிறார்கள் என்று முன்பே சொன்னேனல்லவா? அது மட்டுமல்ல..." குரலை மிகவும் தாழ்த்தினான் சுங்க அதிகாரி.

கருணாகரன் முகத்தில் மெள்ள மெள்ளக் கோபம் துளிர்த்தது. "இன்னும் என்ன தேவை, தமிழர்களை அவமதிக்க?" என்று சீறினான்.

"தேவையானது நடந்திருக்கிறது. தமிழர்கள் வீதியில் நடமாடினாலும் கண்காணிப்பு இருக்கிறது," என்றான் சுங்க அதிகாரி.

"என்ன அக்கிரமம்! சாதாரண மக்களையெல்லாம் ஒற்றர்களாக எண்ணுகிறானா பீமன்?" என்று சீறிய இளையபல்லவனின் குரலில் அதிகக் கொந்தளிப்பு தெரிந்தது.

அந்தக் கொந்தளிப்பைக் கவனிக்காத சுங்க அதிகாரி மேலும் தன் சாமர்த்தியத்தைக் காட்டி, "அது மட்டுமல்ல.." என்று ஆரம்பித்தான்.

"எது மட்டுமல்ல?" என்று மீண்டும் சீறினான் இளையபல்லவன்.

"இரவில் தமிழர் யாரும் ஊரில் நடமாட அனுமதிக்கப் படுவதில்லை. அது மட்டுமல்ல..."

இந்த 'அது மட்டுமல்ல' பெரும் கசப்பாயிருந்ததால் முகத்தைச் சுளித்தான் கருணாகர பல்லவன். "ஒவ்வொன் றாகச் சொல்ல வேண்டாம்; முழுவதையும் ஒரே அடி யாகச் சொல்லித் தொலையும்!" என்று எரிந்தும் விழுந் தான். அந்த முகச் சுளிப்பையும் எரிச்சலையும் கொந்தளிப் பாக அடிக்கப் பெரும் கொள்ளியை இளைய பல்லவனின் உணர்ச்சிகளில் செருகினான் சுங்க அதிகாரி. "அது மட்டு மல்ல இளைய பல்லவரே! சோழ வம்ச இளவலும் நேற்றுச் சிறை செய்யப்பட்டிருக்கிறார்" என்று அக்கம் பக்கம் பார்த்து மிக மெதுவான குரலில் கூறினான்.

"யாரது?" எரிமலை குமுறும் குரலில் எழுந்தது இளையபல்லவனின் கேள்வி.

"அம்மங்காதேவியின் மகன்! ராஜராஜ நரேந்திரன் செல்வன்!" என்றான் சுங்க அதிகாரி.

எரிமலை திடீரென வெடித்தது. "அத்தனை துணிவா கலிங்கத்துப் பீமனுக்கு?" என்று கோபம் கொந்தளிக்கக்

குரலில் கனல் பொறிகள் சிதறக் கூவினான் கருணாகர பல்லவன். அதைக் கேட்டுத் திகைத்துப்போன சுங்க அதிகாரி, சுயநிலை அடையுமுன்பாக, வாள் தாங்கிய காவல் வீரரிருவர் இளையபல்லவனை அணுகிவிட்டதால், மேற்கொண்டு என்ன செய்வது என்பதை அறியாமல் தத்தளித்தான் சுங்க அதிகாரி. நிதானத்தைத் தான் இழந்து விட்டதால் நிலைமை மீறிவிட்டதை உணர்ந்த கருணாகர பல்லவன் மின்னல் வேகத்தில் தன் வாளை உருவிக் காவல் வீரர் இருவரின் வாள்களையும் சரேலெனத் தடுத் தான். அதே நேரத்தில், கச்சையில் வயிற்றுக்கு நேரேயிருந்த தன் குறுவாளை எடுத்து ஒரு காவலன் வயிற்றில் பாய்ச்சிக் கொண்டே அகலமான தன் பெருவாளை மற்றொரு வீரன் கழுத்தில் பாய்ச்சினான்.

மின்னல் வேகத்தில் நிகழ்ந்துவிட்ட அந்த விபரீதத் தாலும் காவலரிருவர் திடீரெனத் தரையில் சாய்ந்துவிட்ட தாலும், அடுத்த வினாடி அந்தப் பெரும் சுங்க மண்டபம் அமளி துமளிப்பட்டது. கண்ணிமைக்கும் நேரத்தில் இரு காவல் வீரரை வானுலகுக்கு அனுப்பிய கருணாகர பல்லவனைச் சூழ மற்றும் சில வீரர் விரைந்தாலும், அவர்கள் சூழ்வதற்கு முன்பே வணிகர்களிடம் அச்சம் ஏற்பட்டு அவர்கள் சரக்குகளைக் காப்பாற்றப் பெரும் கோஷத்தைக் கிளப்பி அங்குமிங்கும் ஓடியதால் காவலர், வணிகர், அடிமைகள் இவர்கள் கலந்துபோய்விட்டதாலும், இந்தக் குழப்பத்தில் ஓரிரு பந்தங்களும் தளைகளிலிருந்து கீழே விழுந்துவிட்டதாலும், நிலைமையை நன்றாகப் பயன் படுத்திக் கொண்ட கருணாகரன் திடீரென வர்த்தர்களுக் கிடையே பதுங்கி மறைந்து ஓரமாக ஒதுங்கி ஒதுங்கி வெளியே வந்து தன் புரவியை அவிழ்த்து ஏறப் போன வனை, கையைப் பிடித்துத் தடுத்த சுங்க அதிகாரி, "வேண்டாம், புரவியை நான் பார்த்துக்கொள்கிறேன். இப்படி வாருங்கள்" என்று சுங்கச் சாவடியின் மறைவிட

மொன்றுக்கு அழைத்துச் சென்று, “இந்தாருங்கள், இந்த மேலங்கியால் உங்களை நன்றாக மறைத்துக் கொள்ளுங்கள். இது அராபியர் உடை, தலையிலிருந்து கால் வரைக்கும் மறைக்கும். அதோ போகும் அராபிய வணிகர் கூட்டத்துடன் கலந்து ஊருக்குள் நுழையுங்கள். கூலவாணிகன் விடுதிக்குப் பிறகு செல்லலாம். ஊருக்குள் நுழையுங்கள். நுழைந்ததும் வெளிநாட்டு வணிகர் தங்கும் பெரும் வீதிக்குள் சென்றால் அங்கு தங்க இடமும் இருக்கிறது. தமிழரை அந்த இடத்தில் யாரும் தேடவும் மாட்டார்கள். அங்கு இருங்கள். பிறகு சந்திக்கிறேன்” என்று கூறிவிட்டு, அராபியர் அங்கியொன்றையும் அளித்துவிட்டுப் பழைய படி சுங்கச் சாவடியிருந்த கட்டடத்துக்குள் நுழைந்தான்.

சுங்க அதிகாரியின் சொற்களை நன்றாக மனத்தில் பதித்துக் கொண்ட கருணாகர பல்லவன், அடுத்த விநாடி அங்கு நிற்காமல் பாலூர்ப் பெருந்துறையின் கோட்டை வாயிலுக்குச் செல்லும் அராபியர் கூட்டங்களுடன் கலந்து சென்றான். கோட்டைக் காவலர் ஒவ்வொருவரையும் தனிப்படப் பரிசோதனை செய்தே உள்ளே அனுமதித்தார்கள். கருணாகர பல்லவன் வாயிலை அணுகியதும் திடீரெனத் தலை கவிழ்ந்து, ஏற்கெனவே சோதனை செய்யப்பட்ட அராபிய வணிகன் ஒருவனது மூட்டையை எடுத்துக் கொண்டு அவனைத் தொடர முற்பட்டான். காவலன் முதலில் அவனைப் போக அனுமதித்துவிட்டாலும், கால்புறத்தில் சற்றே தூக்கியிருந்த அவன் மேலங்கியிலிருந்து தலை நீட்டிய வாளின் நுனியைப் பார்த்ததும், “ஏய்! வா! இப்படி!” என்று அழைத்தான்.

கருணாகர பல்லவன் திடீரென அங்கியைக் கழற்றிக் காவலன் முகத்தில் எறிந்ததன்றி, அடுத்த விநாடி தன்னைச் சூழ்ந்துகொண்ட நாலைந்து காவலரைத் தன் வாள் வீச்சினால் விலக்கிக்கொண்டு ஓரிருவரை வெட்டிப் போட்டுவிட்டு, அந்தப் பெரும் துறைமுக நகரின் வீதிகளில்

எங்கு போகிறோம் என்பதை அறியாமல் ஓடினான். அவனைத் தொடர்ந்து பத்துப் பதினைந்து காவலரும் விரைந்தனர்.

பாலெனக் காய்ந்து கொண்டிருந்த அந்த வெண்ணில வில் பாலூர்ப் பெருநகரத்தின் நடுப்பகுதி வெள்ளை வேளேரென்றும், வீடுகளின் தாழ்வாரங்களில் நிழலடித்தும் பக்கப் பகுதிகள் கரேலென்று இருட்டாகவும் தெரிந்ததால், அந்த நகரம் இருளும், ஒளியும், நன்மையும் தீமையும் கலந்த மனித இதயம்போல் காட்சியளித்தது. வீரர்கள் கண்களில் படாமல் இருள் அடித்த பகுதிகளிலேயே ஓடினாலும், வீரர்கள் அவன் காலடி ஒலியைக் கொண்டே அவனைத் துரத்திச் சென்றார்கள். எந்த வினாடியிலும் தான் அகப் பட்டுக் கொள்ளலாம் என்பதைக் கண்டதும் என்ன செய்வதென்பதை அறியாமல் திடீரெனப் பக்கத்திலிருந்த மாளிகைத் தாழ்வாரத்தில் பதுங்கினான். பிறகு மெள்ள மெள்ள இருளடித்துக் கிடந்த மாடிக் கூரைப் பகுதி மீது தொற்றி ஏறவும் தொடங்கினான்.

அந்தப் பல அடுக்கு மாளிகையின் சுவர்களில் நீண்டி ருந்த கைப்பிடிகளைப் பிடித்த வண்ணம் அபாய நிலை யில் நடந்து நடந்து தொற்றி ஏறி, இரண்டாவது அடுக்கின் தாழ்வரையை அடைந்த இளையபல்லவன், கீழே கருமை யுடன் தெரிந்த அதல பாதாளத்தையும், தான் பிடித்திருந்த மெல்லிய தாழ்வரைச் சுவரையும் பார்த்து, பிடி சிறிது பிசகினாலும் மரணம் நிச்சயம் என்பதை உணர்ந்து கொண்டான். இருப்பினும் மிகுந்த எச்சரிக்கையுடன் நடந்து ஒரு மூலைக்கு வந்ததும், அடுத்து ஒரு சாளர மிருப்பதைக் கண்டு, அந்தச் சாளரத்தை எட்டிப் பிடித்து வெகு லாகவமாகத் தன் உடலை அதில் சாய்த்து ஓசைப் படாமல் அங்கிருந்த அறைக்குள் குதித்தான்.

அறையில் யாருமில்லாதது பெரும் ஆறுதலாயிருந்தது இளைய பல்லவனுக்கு. அறையிலிருந்த சிறு விளக்குகூட

மங்கலான ஒளியைத்தான் பரப்பியது. அந்த மங்கலான ஒளியிலிருந்தும் தன்னைக் காப்பாற்றிக்கொள்ள எண்ணிய கருணாகர பல்லவன், அந்த அறையின் ஓரத்தில் ஒரு திரையிருந்ததைக் கவனித்து, அடிமேலடி வைத்து, ஓசைப் படாமல் அதை அணுகி, அதற்குப் பின்னால் ஒளிந்துகொண்டான். எதிர்பாராத விதமாக யாராவது அறைக்குள் வந்தால் தன்னைக் காத்துக்கொள்ள, வாளை உறையில் போடாமல் கையில் பிடித்தவண்ணம் அசையாமல் திரை மறைவில் நின்றான்.

சில நிமிடங்களுக்கெல்லாம் அந்த அறைக்குள் ஓர் உருவம் நுழையத்தான் செய்தது. ஆனால் அதைக் கண்டதும் இவன் வீரமெல்லாம் எங்கோ பறந்தது. வாள் பிடித்த அவன் கை வெலவெலத்தது. உறுதியான அவன் கால்களும் உதறத் தொடங்கின. அந்த உருவம் நுழைந்த சில வினாடிகளுக்குள்ளேயே பெருத்த சங்கடத்தில் சிக்கித் திணறினான் அந்த மாவீரன். அவன் உணர்ச்சிகளை அப்படி ஆட்டிவைக்க உள்ளே நுழைந்தது ஒரு பெண் உருவம். ஏதோ பஞ்சின்மேல் நடப்பதுபோல் மெல்லடி வைத்து அறையில் நுழைந்தது அந்த மோகன பிம்பம். அதுவும் முன்னாடை களைந்து மறு ஆடை உடுக்க வந்தது. அறைக்குள் நுழைந்ததும் கதவைத் தாழிட்டு முன்னாடையை மெள்ள மெள்ளக் களையவும் முற்பட்டாள் அந்த மோகனாங்கி. நெறியினின்று சிறிதும் பிறழாத குலத்தில் வந்த இளைய பல்லவன் தன் கண்களை இறுக மூடிக் கொண்டான். பயத்தால் திரைச்சிலையைச் சிறிது இறுக்கியும் பிடித்தான். அப்படி அவன் பிடித்ததால் அசைந்த அந்தத் திரைச்சிலையை அந்த ஏந்திழையின் அஞ்சன விழிகள் திடீரென ஏறெடுத்து நோக்கின.




கணக்கற்ற போர் முனைகளிலும் ஆபத்தான எத்தனையோ இதர சூழ்நிலைகளிலும் அச்சத்துக்கு அறவே இடம் கொடாத கருணாகர பல்லவன் அன்று அந்த மாளிகைத் தளத்தின் மேலறையில் பஞ்செனு நடந்து வந்த அஞ்சன விழியாளொருத்தி அறைக்கதவைத் தாளிட்டதும் பெரும் திகில் வசப்பட்டு, தான் ஒளிந்திருந்த திரைச் சீலையை இடது கையால் இறுகப் பிடித்துக்கொண்டதல்லாமல், எல்லை மீறிய அச்சத்தின் விளைவாகக் கண்களையும் மூடிக்கொண்டு விட்டானாதலால், அடுத்து நடந்தது என்ன என்பதை அறியச் சிறிதும் சக்தியற்றவனானான். ஊனக் கண்கள் மூடிவிடும்போது திறக்கும் சுபாவமுள்ள அவன் மனக்கண்கள் மட்டும் நன்றாக மலர்ந்து புதுப் புதுக் கற்பனைகளைக் கிளப்பிவிட்டதால், 'நான் இருப்பதை அறிந்தவுடன் இந்த அழகி கதறுவாள். மாளிகைக் காவலர் வருவார்கள். ஆகவே மேலும் சண்டைதான்' என்று தனக்குள்ளேயே சொல்லிக்கொண்ட கருணாகர பல்லவன், அவள் கூச்சலை எதிர்பார்த்து இருந்த இடத்திலேயே அசைவற்று நின்றான். ஆடையைக் களைய முற்பட்ட அந்த ஆரணங்கு விளைவித்த தர்ம சங்கடமான இந்த நிலையிலிருந்து தப்பிவிடச் சீக்கிரம்

காவலர் வந்து சண்டை துவங்கிவிட்டால்கூட மிகவும் நல்லது என நினைத்து நின்ற இளைய பல்லவன், வினாடி கள் பல ஆகியும் அறையில் கூச்சல் ஏதும் இல்லாததை எண்ணிப் பார்த்து வியப்பின் வசப்பட்டுக் கண்களைத் திறக்கலாமா வேண்டாமா என்று தத்தளித்து நின்ற சமயத் தில், "வா வெளியே!" என்று அதிகாரம் ததும்பி நின்ற சொற்களிரண்டு அவன் இரண்டு கண்களையும் சரே லெனத் திறந்துவிட்டாலும், இதய உறுதியை மட்டும் மேலும் குலைக்கவே செய்தன. ஆண் மகனொருவன் அறையில் மறைந்திருக்கிறானென்பதை அறிந்ததால் அந்த ஏந்திழை கதறுவாள் என்று எதிர்பார்த்ததற்கு முற்றும் மாறாக, அவள் வெகு நிதானமாகவும் அச்சமில்லாமலும் அதிகாரத்துடன் தன்னை வெளியே வரும்படி அழைத்த தைக் கேட்டவுடன் வியப்பின் எல்லையை எய்திய இளையபல்லவன், குனிந்த தலையை நிமிர்த்தித் திரைச் சீலைக்கு மேல் எட்டிப் பார்த்துக் கண்களை அகல விரித்தான். அவன் எதிரே விரிந்தது ஒரு மோகன உலகம்.

அறை விளக்கின் பொன்னிற வெளிச்சத்துடன் அறைக்கு வெளியேயிருந்து சாளரத்தின் மூலம் பாய்ந்து வந்த வெண்மதியின் வெள்ளிக் கிரணங்களும் கலந்து கொண்டதால் பொன்னும் வெள்ளியும் இணைந்த ஒரு மாய உலகம் அந்த அறையில் சிருஷ்டிக்கப் பட்டிருந்ததை யும், மயக்கம் தரும் அந்த இரு ஒளிகளின் இணைப்பிலே புதிதாக உதயமான மாய தேவதைபோல் இதயத்தைக் கலங்க வைக்கும் எழிலுடன் அந்தப் பெண் கையிலொரு வாளையும் ஏந்தி நின்றுகொண்டிருந்ததையும் கண்ட கருணாகர பல்லவன், தானிருக்கும் இடத்தையும் சூழ்நிலை யையும் அறவே மறந்தான். அவன் மனக்கண்களிலிருந்து பாலூர்ப் பெருந்துறை மறைந்தது; சுங்கச்சாவடி மறைந்தது, துரத்தி வந்த காவலர் மறைந்தனர்; நிலைத்து நின்றது, எதிரே வாளேந்திப் போர்க்கோலத்துடன் தோற்றமளித்த

அந்த மோகன பிம்பம் ஒன்றுதான். விளக்கின் பொன்னொளியும் வெண்மதியின் வெண்ணொளியும் கலந்து அவள்மீது பாய்ந்த போதிலும் கலப்படத்தைவிட அசல் சிறந்தது என்பதை அறிவுறுத்த முற்பட்டதுபோல் எக்கலப்புமற்ற சொர்ணமென அவள் மேனி சற்றே மஞ்சளோடிப் பளிச்சிட்டதைக் கண்ட இளைய பல்லவன், இப்படியும் ஒரு நிறம் சிருஷ்டியிலிருக்கிறதா என்று வியந்தான். அவள் சேலை இடையில் நன்றாக இழுத்துச் சுற்றப்பட்டிருந்தாலும் மடிப்புகள் நன்றாக அமையாமல் ஆங்காங்கு அலங்கோலமாகத் தொங்கியதால் பழைய ஆடையைக் களைய முற்பட்டதுமே திரைக்குப் பின்னால் தானிருப்பதை அவள் அறிந்திருக்க வேண்டுமென்றும் சேலையைச் சரேலென்று எடுத்து அவசர அவசரமாகச் சுற்றிக் கொண்டிருக்க வேண்டுமென்றும் ஊகித்துக் கொண்டானானாலும், அப்படி அலங்கோலமாகச் சேலையை அவள் சுற்றிக்கொண்டிருந்ததே அவளுக்கு எத்தனை அழகாயிருந்தது என்பதை எண்ணிப் பார்த்த அந்தப் பல்லவ வாலிபன் 'அடுக்கடுக்காகக் கொசுவிப் பட்டைகளை ஒட்டிப் புனையப்படும் ஆடையில் இருப்பதைவிட, அலங்கோல ஆடையில் பெண்களின் அழகு எத்தனை வசிகரத்தைப் பெறுகிறது! அப்படியிருக்கப் பெண்கள் எதற்காக ஆடை புனைவதற்கு அத்தனை சிரமப்பட வேண்டும்?' என்று தன்னையே. கேட்டுக்கொண்டான்.

ஆடை, சிறிது அலங்கோலப்பட்டிருந்த போதிலும் கழுத்துக்கருகில் அது நன்றாகச் சுற்றி வளைக்கப்பட்டிருந்ததையும், கழுத்தைச் சுற்றி வந்த மேலாடை நன்றாக இழுத்தும் இடுப்பில் செருகப்பட்டதால் கழுத்தும் அதற்குக் கீழே இரண்டங்குலமே கண்களுக்குப் புலனானதையும் கண்ட கருணாகர பல்லவன், நெறிமிகுந்த ஒரு பெண்ணிடம் தான் சிக்கிக்கொண்டிருப்பதை உணர்ந்தான். அப்படி உணர்ந்தும்கூட, புஷ்பத்திலிருந்து மீள இஷ்டப்படாத

வண்டுகளைப்போல் அவன் கண்கள் புஷ்பத்தினும் மிருது வாகத் தோன்றிய அவளை வட்டமிட்டன. மேலாடை நன்றாக இழுத்துச் சுற்றப்பட்டிருந்த காரணத்தாலேயே மறைவிலும் நிறைவு பெற்றுத் தெரிந்த அழகு, இளைய பல்லவனின் உடலைக் கல்லாகச் சமைத்துவிட்டதென்றா லும், அவன் இதயத்துக்கு மட்டும் புரவி வேகத்தைக் கொடுத்து ஓடச் செய்தது.

வினாடிகள் இரண்டொன்று ஓடியும், நேராக அந்த அழகியைப் பார்க்கச் சக்தியற்றதால் மார்பை வளைத்து ஓடிய சேலையையும், அந்தச் சேலையிலிருந்து இடைவெளி கொடுத்து பளிச்செனத் தெரிந்த இடைப் பிரதேசத்தையும் பார்த்த கருணாகர பல்லவன் வாளை ஏந்தி நின்ற அவள் கையையும் பார்த்து, இத்தனை மெலிந்து குழைந்து கிடக்கும் இந்த இடையை உடையவளுக்கு இத்தனை உறுதியான கை எங்கிருந்து வந்தது என்று எண்ணிப் பார்த்தான். அத்துடன் வாளைப் பிடித்து நீண்டு பூவின் இதழ்கள் போலிருந்த அவள் விரல்களையும் கண்ட அவன், 'மென்மைக்கும் கடினத்துக்கும் இயற்கை ஏதோ சம்பந்தத்தை ஏற்படுத்தியிருக்கிறது, இல்லையேல் இந்தப் பூவிரல்கள் இத்தனை திடமாக வாளைப் பிடிக்க முடியுமா?' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டான். கண்ணைச் சரேலென்று தூக்கிய இளைய பல்லவன் அந்தப் பெண்ணின் முகத்தை இரண்டொரு விநாடிகளே ஆராய்ந்தானென்றாலும், அந்த இரண்டு விநாடிகளிலும் எத்தனையோ துன்பத்தை அனுபவிக்கவே செய்தான். அதிகப்படியான இன்பமும் துன்பந்தான் என்பதை அன்று உணர்ந்தான் அந்தப் பல்லவ வாலிபன்.

நீருண்ட மேகத்தைவிடக் கறுத்து அடர்த்தியாகத் தலைமீதிருந்த அவள் குழல் பின்னி விடப்படாததாலும், வாரி எடுத்து முடியப்பட்டிருந்தாலும் ஒவ்வோரிடத்திலும்

பிய்ந்து தொங்கி நுதலிலும் கன்னத்திலும் சில இழைகள் பதிந்து கிடந்ததுகூட அவள் முகத்துக்கு இணையற்ற அழகையே கொடுத்தது. விசாலமான அவள் லலாடப் பிரதேசம் மயிரிழைகளால் ஆங்காங்கு மறைக்கப்பட்டிருந் தாலும் இடையிடையே அவள் தங்கச் சருமம் பாளம் பாளமாகத் தோன்றி மேகத் திரையைக் கிழிக்க முயலும் சந்திரக் கிரணங்களைப் போலப் பளிச்சிட்டன. நுதலைக் கண்களிலிருந்து தடுத்து நின்ற வளைந்த கரிய புருவங் களுக்குக் கீழிருந்த இரு கண்களும் கரிய இமைகளுக் கிடையே கூர்வேல்களெனப் பிரகாசித்துக் கொண்டிருந்த தையும், விகசிக்க அப்பொழுதுதான் முற்பட்ட புஷ்ப மொட்டு போன்ற நாசி மிக எடுப்பாக அமைந்து அவள் முகத்துக்கு இணையற்ற கம்பீரத்தைக் கொடுத்ததையும், பக்கங்களில் வழவழத்து இயற்கை மஞ்சளும், கோபத்தால் ஏற்பட்ட சிவப்புமாகக் கலந்து தங்க அரளியும் செவ்வலரி யும் சேர்ந்தது போலப் பிரமையளித்த அவள் அழகிய கன்னங்கள், இதழ்கள் பதிவதற்காகவே சிருஷ்டிக்கப்பட்ட மலர்ப் படுக்கைகள் போலிருந்ததையும் கவனித்த இளைய பல்லவன், அவள் செவ்விய இதழ்களைக் கவனித்ததும் அவை உவமைக்கும் கற்பனைக்கும் அப்பாற்பட்டிருப்பதை உணர்ந்து கொண்டான். கோபத்தால் அவள் வாயிதழ் களைச் சற்றே கூட்டியிருந்ததால், மலர இஷ்டப்படாத புஷ்பம்போல் அவள் இதழ்களின் சேர்க்கை காணப் பட்டது. அவற்றில் காணப்பட்ட நீரோட்டம், 'அமுதம் என்பது இருந்தால் இதுவாகத்தான் இருக்க வேண்டும்' என்று பொருள் கூறுவது போலிருந்தது. அந்த உதடுகளி லேயே நீண்ட நேரம் இளைய பல்லவனின் கண்கள் நிலைத்தன. கண்களென்ன, அவன் இதயமும் அந்தக் கனியிதழ்களை விட்டு அகல இஷ்டப்படாதது போலவும், அந்த இதழ்களிடம் ஓடிவிட ஆசைப்படுவது போலவும் வேகமாக அடித்துக் கொண்டிருந்தது.

இப்படி எண்ணங்களும், இதயமும் ஒருங்கே மயங்க மலைத்து நின்று, திரைச்சீலைக்கு மேலிருந்தே கண்களால் எதிரே இருந்த மோகன பிம்பத்தை எடை போட்டுக் கொண்டிருந்த இளைய பல்லவன், "வா வெளியே!" என்று இரண்டாம் முறை எழுந்த அதிகாரக் குரலின் காரணமாகக் கனவுலகத்திலிருந்து நனவுலகத்துக்கு வந்தவன், மெள்ளச் சமாளித்துக் கொண்டு, இடது கை பற்றிய சீலையை விடுத்து திரை மறைவிலிருந்து வெளியே வந்தான். வலது கையில் வாளை உருவிப் பிடித்த வண்ணம் வந்த அந்த வாலிபனை அந்த ஏந்திழையும் எவ்விதப் படபடப்புமின்றி ஆராய்ந்தாள். ஆடவன் ஒருவன் தனது அறையில் ஒளிந்து கொண்டிருக்கிறானென்பதை அறிந்தும் கூச்சல் போடாமலும், அந்த அறையிலிருந்த ஒரு வாளை உருவிப் பிடித்துக் கொண்டு தன்னை மிரட்டி வெளியில் அவள் அழைத்ததையும் கண்ட கருணாகரபல்லவன், அச்சத்தை சொப்பனத்திலும் காணாத வீராங்கனை ஒருத்தியிடம் தான் சிக்கிக் கொண்டிருப்பதை உணர்ந்தான். அப்பொழுதுதான் அந்த அறையைச் சுற்றிக் கவனித்த இளைய பல்லவன், சுவர்களில் பல இடங்களில் பலவிதமான வாள்கள் தொங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்ததன்றி, அந்தப் பெண் வாளைப் பிடித்துக் கொண்டிருந்த முறையையும் பார்த்து, அவளுக்கு ஓரளவு வாள் பயிற்சி இருக்க வேண்டுமென்றும் ஊகித்துக் கொண்டான்.

அறையைச் சுற்றி அவன் கண்கள் சுழன்றதையும் தன் கைவாளின்மீது அவை கடைசியாக நிலைத்ததையும் கவனித்த அந்த அழகி, அவன் உள்ளத்தே ஓடிய எண்ணங்களைப் புரிந்துகொண்டவள் போல், "ஆம், எனக்கு வாளைப் பிடிக்கத் தெரியும். அவசியமானால் சுழற்றவும் முடியும். ஆகவே உன் கையிலுள்ள வாளைக் கீழே எறிந்து விடு! எதிர்ப்பு பயனளிக்காது," என்றாள் திடமான குரலில்.

அவள் பேச்சும், பேச்சில் கண்ட துணிவும், கருணாகர பல்லவனுக்கு மென்மேலும் பிரமிப்பை அளித்தாலும் அவள் சொற்படி வாளைக் கீழே எறிய இஷ்டப்படாமல், "மன்னிக்க வேண்டும். இந்த வாள் என் ஆயுள் துணைவன். பல வருடங்களாக நாங்கள் இணைபிரியாதிருக்கிறோம். ஆகவே இப்பொழுது இதைப் புறக்கணிப்பதற்கில்லை. தவிர..." என்று பதில் சொல்ல முயன்று மென்று விழுங்கி இழுத்தான்.

அவள் வண்டுவிழிகள் வியப்பினால் மலர்ந்தன. "தவிர, உம், சொல் மேலே!" என்று மலர் அதரங்கள் உத்தரவிட்டன.

அவள் அஞ்சன விழிகளை ஒருமுறை கருணாகர பல்லவனின் விழிகள் நன்றாக ஏறெடுத்துப் பார்த்தன. "வீரர்கள் தோல்வியுறும் போதுதான் வாளைக் கீழே எறிவார்கள்" என்று சுட்டிக் காட்டினான் துணிவுடன்.

அவள் இதழ்கள் இகழ்ச்சியால் சற்றே மடிந்தன. அப்படி அவை கடைசியில் மடிந்ததால் கன்னங்களில் விழுந்த குழிகளும் அவளுக்குப் புதுவிதமான அழகை அளித்ததைக் கருணாகர பல்லவன் கவனித்தான். அவன் தன்னைப் பல இடங்களிலும் கவனிப்பதைக் கண்டதால் மிகுந்த சங்கடமும் சீற்றமும் அடைந்த அந்த அழகி, "நீ ஆண்மகனானதால் என்னிடம் தோற்கமாட்டாய். சற்று விளையாடிப் பார்க்கலாம் என்று மனப்பால் குடிக் கிறாயா?" என்று இகழ்ச்சியும் கோபமும் தொனித்த குரலில் வினவினாள்.

கருணாகர பல்லவன் இளநகை புரிந்தான். "அப்படி நான் நிச்சயமாகச் சொல்லவில்லையே."

"எதை நிச்சயமாகச் சொல்லவில்லை?" மீண்டும் சீற்றத்துடன் எழுந்தது அவள் கேள்வி.

"உங்களிடம் தோற்கமாட்டேன் என்பதை."

"பெண்ணென்பதால் என்னைப் பார்த்து நகைக்கிறாயா?"

"இல்லை, இல்லை. நகைப்புக்கு இடமில்லை."

"வேறெதற்கு இடமிருக்கிறது?"

"பிரமிப்பிற்கு."

அந்த வாலிப வீரன் தன் அழகைப் பற்றிக் குறிப்பிடுகிறானென்பதைச் சந்தேகமற உணர்ந்துகொண்ட அந்தப் பெண், ஒரு விநாடி தன் காற் பெருவிரலால் நிலத்தைக் கீறி இடையைச் சிறிது நெளித்துச் சற்றே சங்கடப் பட்டாலும், அடுத்த விநாடி அதை உதறிவிட்டு, "நீ சீக்கிரம் அந்த வாளைக் கீழே எறியாவிட்டால் உன் பிரமிப்பு இன்னும் அதிகமாகும்!" என்று கூறிவிட்டுக் கோபம் துளிர்த்த புன்முறுவலொன்றையும் உதடுகளில் படர விட்டாள்.

"இப்பொழுதிருப்பதைவிட அதிக பிரமிப்பு எப்படி ஏற்பட முடியும்?" என்று விஷமத்துடன் வினவினான் கருணாகர பல்லவன்.

"ஏற்பட வழியிருக்கிறது" என்றாள் அவளும் இகழ்ச்சியுடன்.

"என்ன வழி?"

பதிலுக்கு, "இதோ பார்!" என்று கூறிய அந்தப் பெண் என்ன செய்ய உத்தேசிக்கிறாள் என்பதை அவன் ஊகிக்கு முன்பாகவே அவள் கைவாள் திடீரெனச் சுழன்று இளைய பல்லவனது வாளை மின்னல் வேகத்தில் விர்ரென்று ஒருமுறை சுழற்றிடவே, திக்பிரமையடைந்த அந்த வீரன் எல்லையில்லாப் பிரமிப்புடன் அந்தப் பெண்ணைக் கூர்ந்து நோக்கினான். இன்னும் ஒரு விநாடி தான் அசந்திருந்தால் அவள் வாள் சுழன்ற வேகத்தில் தன் வாள் அந்த அறையின் மூலைக்குச் சென்றிருக்குமென்பதை உணர்ந்துகொண்ட அந்தப் பல்லவ வீரன், இத்தனை லாகவமாக வாளைச் சுழற்றக்கூடிய பெண்களும் இந்த நாட்டி

லிருக்கிறார்களா என்று எண்ணிப் பார்த்து, மிதமிஞ்சிய வியப்புக்கு உள்ளாகி அந்த வியப்பின் குறிகள் முகமெங்கும் படரவும் நின்றான்.

பிரமிப்புக்கு உள்ளானது அவன் மட்டுமல்ல, அந்தப் பெண்ணின் கண்களும் பிரமிப்பைக் கொட்டின. அதையும் கருணாகர பல்லவன் கவனிக்கத்தான் செய்தான். ஆனால், அவள் பிரமிப்படைய வேண்டிய காரணமென்னவென்பதைப் புரிந்துகொள்ள முடியாததால் கேட்டான்: "நீங்கள் என்ன அதிசயத்தைக் கண்டுவிட்டீர்கள்?" என்று.

"இதுவரை காணாத அதிசயத்தை இன்று கண்டேன்!" என்றாள் அவள். இதைச் சொன்ன அவள் குரலில் கோபமில்லை, இகழ்ச்சியுமில்லை. வியப்பும் பிரமிப்புமே மிதமிஞ்சி ஒலித்தன.

"என்ன அப்பேர்ப்பட்ட அதிசயம்?" என்று மீண்டும் வினவினான் கருணாகர பல்லவன்.

"என் வாள் சுழன்று, எதிரியின் வாள் பறக்காதது இதுதான் முதல் தடவை" என்றாள் அந்த அழகி.

"நான் எதிரியா?" என்று கேட்டான் கருணாகர பல்லவன்.

"இல்லையா?" என்று பதிலுக்குக் கேட்டாள் அந்தப் பெண்.

"இல்லை."

"அப்படியானால் கள்வனாயிருக்க வேண்டும்."

"கள்வனுமல்ல."

"அப்படியானால் தமிழனா?"

இந்தக் கேள்வி மேலும் பிரமிப்பையே அளித்தது இளைய பல்லவனுக்கு. "கள்வனாயிராவிட்டால் தமிழனாயிருக்க வேண்டுமா?" என்று வினவினான் ஆச்சரியத்துடன்.

அவள் நிதானமாகப் பதில் சொன்னாள். "நீ நாணய மாக வாயில் வழியாக வரவில்லை. சாளரத்தின் மூலம் உள்ளே குதித்திருக்கிறாய். தவிர, திரைமறைவில் இருந்திருக் கிறாய். ஒளிபவன் கள்வனாயிருக்க வேண்டும். இல்லை யேல் தமிழனாயிருக்க வேண்டும். தமிழர்களைத்தான் சில நாள்களாகக் கலிங்க அதிகாரிகள் சிறைக்குள் தள்ளி வருகிறார்கள்" என்று சுட்டிக் காட்டினாள் அந்தப் பெண். அத்துடன் அவள் மீண்டும் அவனை ஏற இறங்கப் பார்த்து, "ஆமாம், நான் தப்புதான் செய்துவிட்டேன். நீ திருடனல்ல. தமிழன்தான். திருடனுக்கு இத்தகைய வாள் தேவை யில்லை. பொருளை எடுத்துக்கொண்டு ஓடுபவனுக்கு வாள் ஒரு வீண் சுமை. அப்படியே ஆயுதம் தேவையானா லும் தூங்கும்போது கொல்ல ஒரு குறுவாள் போதும். இத்தகைய பெரிய, அகலமான வாள் தேவையில்லை. தவிர உன் வாளில் ரத்தக் கறையும் இருக்கிறது. ஒருவேளை சற்றுமுன் கலிங்க வீரர்கள் துரத்தி வந்தது உன்னைத் தானோ?" என்று சந்தேகமும் குரலில் ஒலிக்கக் கேட்டாள்.

அவள் ஊகத்தைக் கண்டு பெரிதும் வியந்தான் கருணாகர பல்லவன். 'அழகுடன் புத்தி இணைவது அபூர்வம்! அத்தகைய அபூர்வம் இதோ இருக்கிறது' என்று தனக்குள்ளேயே சொல்லிக்கொண்ட அந்த வாலிபன் அவள் கேட்டதற்குப் பதில் சொல்ல முற்பட்டு, "ஆம். என்னைத்தான் துரத்தி வந்தார்கள்" என்றான்.

"துரத்தி வந்தார்கள், சேதமும் பட்டிருக்கிறார்கள்," என்றாள் அவள், அந்த வாலிபன் வாளில் தோய்ந்திருந்த குருதியைக் கண்டு.

"எனக்கு ஓரளவு போரிடத் தெரியும்" என்று சங்கோஜத்துடன் கூறினான் இளையபல்லவன்.

"இதில் அடக்கம் வேண்டாம். நீ திறமையுடன் போரிடக் கூடியவன். எனக்குத் தெரியும்."

"எப்படித் தெரியும்?"

"நான் வாள் சுழற்றிய முறை எங்கள் நாட்டின் தனிப் பயிற்சி. அதை உபயோகித்தால் எதிரி கையிலிருக்கும் வாள் உடனே பறக்க வேண்டும். ஆனால் உன் வாள் திடமாக நின்றுவிட்டது. இந்த முயற்சியில் நான் தோல்வியடைவது இதுவே முதல் முறை. இன்னொரு முறை முயன்றால் கண்டிப்பாய் வெற்றியடைவேன்!"

இளைய பல்லவன் நகைத்தான். "என்னிடம் வாள் போரில் வெற்றியடைய முடியாது பெண்ணே. ஆனால், வேல் போரில் வெற்றியடையலாம்?" என்று கூறவும் செய்தான்!

"வேல் போரா?" ஏதும் புரியாமல் வினவிய அவள் விழிகள் இளைய பல்லவன் முகத்தில் நிலைத்தன.

"ஆம் பெண்ணே! கருணாகர பல்லவனை வாள் போரில் வென்றவர்கள் இதுவரை இல்லை. ஆனால் அதோ உன் முகத்திலிருக்கும் அந்தக் கூர்வேல்கள்! அவற்றின் சக்தி வேறு. உன்னிடம்தான் எத்தனை படைக் கலங்கள்! ஆர்க்கும் நூபுரங்கள், பேரி, வெற்கண், வெம் புருவம், போர் வில், முரசுபோல் ஒலிக்கும் காலாபரணம், வேல் கண்கள், போர் வில்லென வளைந்த புருவங்கள் எத்தனைப் போர்க் கருவிகள், இவற்றை வெற்றி கொள்ள என்னால் முடியாது, முடியாது!" என்றான்.

அவன் சரச வார்த்தைகளை அவள் கவனிக்கவில்லை. உவமைகளின் இன்சொற்களைக் கவனிக்கவில்லை. அவள் காதில் ஒலித்ததெல்லாம், 'கருணாகர பல்லவன்' என்ற இரண்டே சொற்கள்தான். "எந்தக் கருணாகர பல்லவர்? இளைய பல்லவரா!" என்று பிரமிப்புடன் கேட்டாள் அந்த அழகி.

அவள் பிரமிக்க வேண்டிய காரணம் இளைய பல்லவனுக்குப் புரியவில்லை. "ஆம்" என்று பதில் சொன்னான்

குழப்பத்துடன். அவள் கேட்ட அடுத்த கேள்வி, அவன் பிரமிப்பை உச்ச நிலைக்குக் கொண்டு போயிற்று.

"எந்த இளைய பல்லவர்? அநபாயச் சோழர் நண்பரா?"

"ஆம்."

இதைக் கேட்டதும் மிகுந்த குழப்பத்துக்கு உள்ளான அவள் முகத்தில் அடக்கத்தின் சாயை அதிக வேகமாகப் படர்ந்தது. கண்கள் நிலத்தை நோக்க, "அடடா! உங்களை இத்தனை நேரம் ஏக வசனத்தில் மரியாதையின்றிப் பேசிவிட்டேனே!" என்றாள் அவள்.

அவள் திடீர் மாற்றத்துக்கு அப்பொழுதும் காரணத்தை அறியாத கருணாகர பல்லவன், "அதனால் பாதகமில்லை. என்னை உனக்கு எப்படித் தெரியும்?" என்று கேட்டான்.

"பார்த்ததில்லையே தவிர, உங்களை நாடித்தானே இங்கு வந்திருக்கிறோம்?" என்றாள் அவள்.

"வந்திருக்கிறோமென்றால் இன்னொருவர் யார்?" என்று வினவினான்.

"என் தந்தை?"

"யார் உன் தந்தை?"

அவள் மெள்ள மெள்ளப் பெயரை உச்சரித்தாள். அந்த உச்சரிப்பு அவனை ஓர் உலுக்கு உலுக்கியது. மிதமிஞ்சிய பிரமிப்பால், "யார்? யார்? இன்னொரு முறை சொல்!" என்று சற்று இரைந்து கூவிக்கொண்டு அந்தப் பெண்ணை இரண்டே அடிகளில் நெருங்கினான்.

அத்தியாயம் 4

# பயங்கர ஓலை!

அறை விளக்கின் மங்கலான தங்க ஒளியிலும் மங்காத தங்கமெனத் திகழ்ந்த தேக லாவண்யத்துடன் தேவதை போல் நின்று அந்த எழிலரசியைக் கண்டதும் அரை மயக்கத்துக்குள்ளான இளைய பல்லவன், அவள் பேசப் பேசச் சுயநிலையை அடைந்தானானாலும், அவள் தந்தையின் பெயரை உச்சரித்ததுமே பெரும் அதிர்ச்சியை யும் விவரிக்க இயலாத வியப்பையுமடைந்தவனாய், என்ன செய்கிறோமென்பதை அறியாமல், "யார்! யார்! இன் னொருமுறை சொல்!" என்று கூவிக்கொண்டு தனக்கும் அவளுக்குமிருந்த இடைவெளியை இரண்டே வினாடி களில் கடந்து, அவள் இரு கைகளையும் தன் கைகளால் இறுகப் பிடித்துக்கொண்டதன்றி அவளைக் கூர்ந்து நோக்க வும் செய்தான். எதிர்பாராத விதமாக அந்த வாலிபன் திடீரெனத் தன் கையைப் பிடித்ததைக் கண்டு அவள் அஞ்சவுமில்லை. திமிறிக் கைகளை விடுவித்துக் கொள்ளவு மில்லை. அவள் விழிகள் நன்றாக உயர்ந்து மிகுந்த கோபத் துடன் அவன் விழிகளுடன் விநாடி நேரம் உறவாடின. பவள இதழ்கள் முதலில் வெறுப்புடன் மடிந்து, பிறகு சற்றே விரிந்து சொற்களை உதிர்த்தன. "என் தந்தை யின் பெயரை இன்னொரு முறை கேட்க என் அருகே வர

அவசியமில்லை. கைகளைப் பற்றி நெறிக்கவும் தேவையில்லை!" என்றாள் அந்த அழகி, சொல் ஒவ்வொன்றிலும் அனல் வீச.

கனலை வாரித் தெளித்த, வெறுப்பை அள்ளி வீசிய அந்தச் சொற்களுக்குக்கூட கருணாகர பல்லவனைச் சுயநிலைக்குக் கொண்டு வரும் சக்தி இல்லை. அந்த ஆரம்ப இரவின் சம்பவங்கள் அனைத்தும் ஒன்றன்பின் ஒன்றாக அவன் சிந்தனையில் வலம் வந்ததால், அந்த இரவு தன்னைக் குழப்புவதற்கும் தன்னைத் திரும்பத் திரும்ப வியப்பின் வசப்படுத்துவதற்குமே ஏற்பட்டதோ என்ற நினைப்பிலேயே அவன் மனம் ஆழ்ந்து கிடந்தது. 'வீரராஜேந்திர சோழ தேவர் அளித்த சமாதானப் பத்திரத்துடன் கலிங்கம் வந்தேன். சுங்கச் சாவடியிலே சண்டை மூண்டது. வீரர்களுக்குத் தப்பி ஓர் அறையில் குதிக்கிறேன். யாரைக் காணவும், காக்கவும் மன்னர் உத்தரவிட்டாரோ, அவர் மகள் வாள் முனையில் என்னை வரவேற்கிறாள். இந்த விந்தைகள் 'கதைகளில் நிகழ்வதுண்டு. வாழ்க்கையில் விளைவதுண்டா?" என்று திரும்பத் திரும்ப எண்ணிப் பார்த்து, பிடித்த கைகளை விடுவிக்காமலே சில விநாடிகள் மௌனமாக நின்றுவிட்ட கருணாகர பல்லவனை அவள் சொற்கள் மீண்டும் தாக்கின. "தமிழர் பண்பாடு விசித்திரமாயிருக்கிறது இளைய பல்லவரே! முன்பின் அறியாத பெண்களின் கைகளைப் பிடிக்கும் படிப்பினைதான் தமிழக வாலிபர்களுக்குக் கற்பிக்கப்படுகிறதோ?' என்று சுடச்சுட அவள் சொற்களை உதிர்த்ததன்றிச் சற்றே திமிறவும் செய்தாள்.

அப்படி அவள் சொற்களைச் சுடச்சுட உதிர்த்தாலும், கைகளைத் திமிறியதாலும் ஓரளவு சுயநிலையை அடைந்ததன் விளைவாகத் திடீரென அவள் கைகளை விட்டு விட்டு இளைய பல்லவன், "மன்னிக்க வேண்டும்! உணர்ச்சி வேகத்தில் முறை தவறி நடந்துவிட்டேன்," என்று

குழம்பிக் குழம்பிச் சொற்களை உதிர்த்த வண்ணம் அவளிடமிருந்தும் திடீரெனத் திரும்பி, கையில் அப்பொழுதும் உருவிப் பிடித்திருந்த வாளை உறையில் போட்டுக் கொண்டு, தன்னை நிதானத்துக்குக் கொண்டுவரச் சாளரத்துக்காகச் சென்று வெளியே தலை நீட்டி, கீழிருந்த வீதியைக் கவனித்தான். வீதியில் அப்பொழுதும் வீரர்கள் நடமாட்டம் இருந்தது. தன்னைத் துரத்தி வந்த காவலாட்களுடன் குதிரை வீரர்களும் சேர்ந்துகொண்டு விட்டதையும், எதிரும், புதிருமாக வீடுகளின் கதவுகளைத் தட்டி வீரர்கள் சோதனையில் ஈடுபட்டிருந்ததையும் கண்ட அந்த வாலிபன், சோதனை தொடர்ந்து நடந்தால் தான் பிடிபட அதிக நேரமாகாது எனத் தீர்மானித்துக் கொண்டு, மீண்டும் அறையின் உட்புறத்தை நோக்கித் திரும்பினான். அந்தச் சமயத்திலும் அந்த அழகி இருந்த இடத்தைவிட்டு அசையாமலும் கையில் உருவிப் பிடித்த வாளைச் சுவரின் ஆணியில் மாட்டாமலும் நின்றிருப்பதைக் கண்டதும் மெள்ளப் புன்முறுவல் செய்த இளைய பல்லவன், "இன்னும் வாள் தேவையா? என்னை யாரென்றுதான் தாங்கள் புரிந்துகொண்டு விட்டீர்களே?" என்றான், நிலைமையைச் சற்றுச் சீர்திருத்த முயன்று.

அவள் கருவிழிகள் அவனை மறுபடியும் நன்றாக ஏற இறங்கப் பார்த்தன. "புரிந்துகொண்டதால்தான் வாள் தேவையாயிருக்கிறது" என்றாள் அவள் இதழ்களில் இகழ்ச்சி நகைகூட்டி.

"என்ன, புரிந்துகொண்டதால் வாள் தேவையாயிருக்கிறதா!" சற்று ஆச்சரியத்துடனேயே வினவினான் கருணாகர பல்லவன்.

"ஆம்."

"நான் கருணாகர பல்லவன் என்பதை அறிந்த பின்புமா இந்த வாளின் உதவி தேவை?"

"பெயரைக் கேட்டதும் தேவையில்லை என்றுதான் எண்ணினேன். ஆனால்...!" என்று சொல்லி வாசகத்தை முடிக்காமல் விட்ட அந்த அழகி, சிறிது சங்கடத்துக்கும் உள்ளானதைக் கவனித்த இளைய பல்லவன், "ஆனால் என்ன? தைரியமாகச் சொல்லுங்கள்" என்று வினவினான்.

பெண்மையின் சங்கடத்தின் விளைவாக நிலத்தில் தாழ்த்திய விழிகளை அங்கிருந்து அகற்றாமலே அவள் பதில் சொன்னாள்: "கருணாகர பல்லவர் என்ற பெயரைக் கேட்டதும் சற்றுத் துணிவுதான் கொண்டேன். தமிழகத்தின் பெரும் வீரர் இருக்கும்போது, பெண்களுக்கு எந்த ஆபத்தும் நேரிடக் காரணமில்லையென்று நினைத்தேன். ஆனால் முன்பின்னறியாத பெண்ணின் கையைப் பற்றும் பண்பாடு இளைய பல்லவருக்கு உண்டு என்பதை அறிந்த பின்புதான், எதற்கும் வாள் கையிலிருப்பது நல்லது எனத் தீர்மானித்தேன்."

அவள் வார்த்தைகள் உதிர உதிர அவளை விடப் பன்மடங்கு சங்கடத்தையும் வெட்கத்தையும் அடைந்த கருணாகர பல்லவன், "செய்தது தவறுதான். ஆனால் நினைத்துச் செய்த தவறல்ல. இந்த ஊரில் நான் கால் வைத்த விநாடி முதல் தொடர்ச்சியாக நடந்த சம்பவங்கள் தூண்டிய உணர்ச்சி வேகத்தில் நடந்த தவறு" என்று தட்டுத் தடுமாறிச் சமாதானம் சொன்னான்.

பல வீரர்களிடம் தன்னந்தனியே போரிட்டுப் பாலூர்க் கோட்டைக் காவலையும் மீறி வந்திருக்கும் அந்த வாலிப வீரன் தன்னெதிரில் குழந்தைபோல் நிற்பதையும் தட்டுத் தடுமாறிச் சமாதானம் சொல்வதையும் கண்ட அவள் இதயத்தில் அவனைப்பற்றி ஏற்பட்ட ஆரம்ப சந்தேகம் மறைந்து அனுதாபம் உதயமானாலும், அதை வெளிக்குக் காட்டாமல் கடுமையாகவே பேச முற்பட்ட அந்த அழகி, உணர்ச்சிகளை அடக்குவதுதான் வீரர்களுக்கு அழகு. இல்லையா? இளைய பல்லவரே?" என்று வினவினாள்.

"உணர்ச்சிகளை அடக்கத்தான் வேண்டும். ஆனால் இரண்டு சமயங்களில் உணர்ச்சிகளை அடக்குவது வீரர் களுக்கு அழகுமல்ல, விவேகமுமல்ல" என்றான் இளைய பல்லவன்.

"எந்தச் சமயங்கள் அவை?" என்று கேட்டாள் அவள் வியப்புடன்.

"ஒன்று, போரிடும் சமயம். அந்தச் சமயத்தில் வீர உணர்ச்சிக்கு இடம் கொடுக்காதவன் வெற்றியடைவ தில்லை. அடுத்தது..." திடீரென்று பேச்சை நிறுத்தினான் இளையபல்லவன், "அடுத்தது காதல்" என்று சொல்ல முற்பட்டவன் தன் யுக்தியையும் தத்துவத்தையும் அளவுக்கு மீறிக் காட்டினால் மேலும் அந்தப் பெண்ணின் இகழ்ச்சிக் கும் கோபத்துக்கும் இலக்காக நேரிடும் என்ற எண்ணத் தால் சம்பாஷணையை வேறு திசையில் மாற்றி, "எதற்கு வீண் விவாதம்? உங்களை எதிர்பாராத விதமாகச் சந்தித் தேன். உங்கள் தந்தையின் பெயரைக் கேட்டதும் அதிர்ச்சி யடைந்தேன். அதனால் உணர்ச்சிப் பெருக்கெடுக்கவே உங்கள் கைகளைப் பிடித்துவிட்டேன். தவறுக்கு வருந்து கிறேன் அரசகுமாரி! வருந்தி மன்னிப்புக் கேட்பவர்களுக்கு மன்னிப்பளிப்பது மன்னர் குலத்தார் பண்பாடு. அந்தப் பண்பாட்டிலிருந்து தாங்கள் பிறழ்வது முறையாகாது" என்றான் ஏதோ தத்துவத்தை எடுத்துச் சொல்பவன் போல.

வீரர்கள் உணர்ச்சிகளை இழக்கக்கூடிய இரண்டா வது சம்பவத்தைக் குறிப்பிடப் போய், சரேலென அந்த வாலிபன் பேச்சை மாற்றியதை அந்த அழகி கவனிக்கத் தவறவில்லை. அவன் என்ன சொல்ல முயன்றான் என்பதையும் அவன் அடைந்த சங்கடத்திலிருந்தே அவள் புரிந்து கொண்டாளாதலால், அவள் முகத்தில் அதுவரை விரிந்து கிடந்த கோபச்சாயை அகன்று வெட்கம் கலந்த சிரிப்பின் சாயை மெள்ளப் படர்ந்தது. சிவந்த புஷ்பம்

போல் மெள்ளமெள்ள விகசித்த இதழ்களில் மகிழ்ச்சியைத் தோற்றுவித்த இளநகை விரிந்தது. அந்த மங்கையின் செங்கமல விழிகளும் மகிழ்ச்சியால் துள்ளி விளையாட முற்பட்டன. அந்தக் கருமணிகளில் பிரதிபலித்த அறை விளக்கின் பொன்னிற ஒளி அந்த விழிகளுக்குப் பெரும் விஷமத்தைக் கற்பித்தன. "இளைய பல்லவர் வாள் வீச்சில் வல்லவர் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் பேச்சி லும் வல்லவர் என்று இன்றுதான் அறிந்தேன்" என்றாள் அந்த அழகி 'களுக்'கென்று சிரிப்பை உதிரவிட்டு. உதிர விட்ட அந்தச் சிரிப்பைத் தொடர்ந்து கையிலிருந்த வாளையும் பக்கத்திலிருந்த மஞ்சத்தின்மீது எறிந்தாள்.

அவள் முகத்தில் கோபம் அகன்றதையும், அவள் இதழ்கள் மகிழ்ச்சி நகை கூட்டியதையும் கண்ட இளைய பல்லவனின் மனமும் பெரிதும் சாந்தப்பட்டதால் அவன் நிதானமாகப் பேச முற்பட்டு, "என் நிலைமை உங்களுக்குப் புரிந்திருக்கிறது, அரசகுமாரி. கோட்டைக் காவலரிட மிருந்து தப்பிக் கடாரத்தின் இளவரசர் தங்கியிருக்கும் மாளிகைக்குள் வந்து குதிப்பேனென்பதை நாம் எப்படி எதிர்பார்த்திருக்க முடியும்? அதுவும் அவர் அழகிய மகளின் வாள் முனையில் நிற்பேனென்பதைத்தான் நான் எப்படி எதிர்பார்த்திருக்க முடியும்? அப்படி எதிர்பாராத காரணத்தால்தான் நான் சற்றுத் தவறாக நடந்துவிட்டேன். உண்மையில் உங்கள் தந்தை இன்னார் என்று நீங்கள் தெரிவித்ததும் திக்பிரமையே அடைந்தேன்" என்றான்.

அரசகுமாரி ஒரு விநாடி யோசித்துவிட்டுக் கேட்டாள். "திக்பிரமை அடைய அதில் என்ன இருக்கிறது? என் தந்தையின் பெயர் குணவர்மன் என்றேன். கடாரத்தின் இளவரசர் ஒருவருக்குத்தான் அந்தப் பெயர் இருக்க வேண்டுமா?"

"இருக்க வேண்டிய அவசியமில்லை. ஆனால் இத்தகைய பெரும் மாளிகைகள் பாலூரில் மூன்று வீதி

களில்தான் உண்டு. ராஜவீதி, வணிகர் வீதி, வெளிநாட்டுப் பிரமுகர்கள் தங்கும் வீதி ஆகிய இம்மூன்று வீதிகளைத் தவிர இந்தக் கோட்டைக்குள் பெரும் மாளிகைகள் எங்கும் கிடையாது. 'வர்மர்' என்ற பிற்பகுதியுடைய பெயர்கள் கலிங்க அரச பரம்பரைக்கு உண்டு. கடலுக்கப்பாலுள்ள உங்கள் ஸ்ரீ விஜய சாம்ராஜ்யத்தின் சைலேந்திர பரம் பரைக்கும் உண்டு. ஆகையால் கலிங்கத்தின் பீமவர்மன், அனந்தவர்மன் என்ற பெயர்களையும், சொர்ணம் கொழிக் கும் தீவுகளை ஆளும் சைலேந்திர பரம்பரையில் சூடா மணிவர்மன் ஸ்ரீமார விஜயதுங்கவர்மன் என்ற பெயர் களையும் கேட்கிறோம். அரசியலில் பழக்கமுடையவர் களுக்கு உங்கள் தந்தை யாரென்பதை நிர்ணயிப்பது கஷ்ட மல்ல. நீங்கள் தங்கியிருப்பது வெளிநாட்டுப் பிரமுகர் தங்கும் வீதி. உங்கள் தந்தையின் பெயர் குணவர்மர். இரண்டையும் இணைத்துப் பாருங்கள்" என்று விளக்கி னான் கருணாகர பல்லவன்.

"அதனால் அவர் கடாரத்தின் இளவரசராயிருக்க வேண்டுமென்று தீர்மானித்துவிட்டீர்களா?" என்று கேட்டாள் அரசகுமாரி.

"அதனால் மட்டுமல்ல, அரசகுமாரி. நீங்கள் என்னை வரவேற்ற தோரணை, வாளைப் பிடித்த முறை, இவற்றி லிருந்து நீங்கள் ஏதோ ஓர் அரச குடும்பத்தைச் சேர்ந்தவர் களென்று தீர்மானித்தேன். உங்கள் தந்தை பெயரைக் கேட்டதும் என் கற்பனை நிச்சயப்பட்டது" என்றான் இளைய பல்லவன்.

இதற்கு அரசகுமாரி பதிலேதும் சொல்லவில்லை. சற்று நேரம் மௌனமே சாதித்தாள். பிறகு, "என்ன விசித்திரமான இரவு இது, இளைய பல்லவரே! உங்கள் உதவியை நாடி நாங்கள் கலிங்கம் வருகிறோம். எங்களை நாடி நீங்களும் வருகிறீர்கள். இப்படி எதிர்பாராத வித மாகத் திடீரென இந்த இரவில் இந்த அறையில் சந்திக்

கிறோம். அதுமட்டுமல்ல, ஒருவரையொருவர் சந்திக்க வந்த நாமிருவரும் பெரும் ஆபத்திலும் சிக்கியிருக்கிறோம்" என்று மெள்ளச் சொன்னாள்.

கருணாகரபல்லவனின் புருவங்கள் சந்தேகம் கேட்பன போல் சற்றே எழுந்தன. "நான் ஆபத்திலிருப்பது உனக்குத் தெரியும், அரசகுமாரி. ஆனால் உங்களுக்கு என்ன ஆபத்து இருக்க முடியும்? மாறு பெயரிலேதானே இங்கு வசிக்கிறீர்கள்?" என்று கேட்டான் அவன்.

"ஆம், மாறு பெயரில்தான் இங்கு வசிக்கிறோம். ஆனால் இந்த ஊர் அதிகாரிகளுக்கு ஏதோ சந்தேகம் ஏற்பட்டிருக்க வேண்டும், இளைய பல்லவரே! இரண்டு நாள்களாக இந்த மாளிகையின்மீது கண்காணிப்பு பலமாக இருக்கிறது" என்று பதில் சொன்னாள் அவள்.

இதைக் கேட்டதும், தீவிர சிந்தனையில் ஆழ்ந்து விட்ட கருணாகரன் நீண்ட நேரம் பேசாமலே அறையில் அங்குமிங்கும் உலாவினான். பிறகு சட்டென்று அறை நடுவே நின்று அவளை நோக்கி, "நீங்கள் இங்கு வந்து எத்தனை நாள்களாகின்றன?" என்று வினவினான்.

"கிட்டத்தட்ட பதினைந்து நாள்களாகின்றன."

"உங்களைத் துறைமுகத்தில் யார் சந்தித்தது?"

"யாரோ கோட்டைக்கரைக் கூலவாணிகனாம்."

"அவன்தான் இந்த மாளிகையை அமர்த்திக் கொடுத்தானா?"

"ஆமாம்."

"அவன் இங்கு நாளைக் காலையில் வருவானா?"

"தெரியாது!"

"தெரியாதா?"

"பத்து நாள்களாக அவன் இந்தப் பக்கமே நாடவில்லை."

இந்தப் பதிலைக் கேட்டதும் சில விநாடிகள் அசை வற்று நின்றுவிட்ட கருணாகர பல்லவன், மேலே ஏதோ பேச முற்படுமுன் அந்த அறைக் கதவு பலமாகத் தட்டப் பட்டது. "காஞ்சனா, காஞ்சனா, உனக்காக எத்தனை நேரம் காத்திருப்பது? ஆடை புனைய இத்தனை நேரமா?" என்று அடுத்தடுத்துக் கேட்கப்பட்ட கேள்விகளின் காரண மாகச் சட்டென்று அரசகுமாரி கதவைத் திறக்கவே, உள்ளே நுழைந்த சைலேந்திர குலத் தோன்றலான குணவர்மன் அந்த அறை அளித்த காட்சியைக் கண்டு, வாயிற்படியைத் தாண்டி வைத்த ஒரு கால் அப்படியே இருக்க, உள்ளே முழுவதும் நுழையாமலும், ஏதும் புரியாமலும் தன் கண்களை அறையிலிருந்த இருவர் மீதும் மாறிமாறி நிலைக்க விட்டான்.

அந்த நிலைமை அங்கிருந்த மூவருக்குமே பெரும் சங்கடத்தை விளைவித்தது. ஆடையைச் சரியாகப் புனை யாமல் அரைகுறையாகச் சுற்றிக்கொண்டு தன் புதல்வி நிற்பதையும், அவளை விழுங்கி விடுபவன்போல் ஒரு வாலிப வீரன் கண்களை அவள்மீது செலுத்திக் கொண் டிருப்பதையும் கண்ட குணவர்மனுக்கு, என்ன பேசுவது, என்ன செய்வது என்று தெரியாததால், சற்றே குழம்பி னான். அரைகுறையாகச் சுற்றப்பட்ட ஆடையுடன் தான் நிற்பதைத் தந்தை கண்டு மலைத்ததைக் கவனித்த அரச குமாரி, நாணம் உணர்ச்சிகளைக் கௌவிக் கொள்ளவே குழப்ப மிகுதியால் தரையில் கண்களை ஓட்டினாள். மற்ற இருவரைவிடக் கருணாகர பல்லவனின் நிலை அதிக சங்கடமாயிருந்த போதிலும் அரசகுமாரியின் பெயர் 'காஞ்சனாதேவி' என்பதை அவள் தந்தையின் அழைப்பி லிருந்து அறிந்துகொண்ட காரணத்தால், அவன், 'காஞ்சனா தேவி! என்ன அழகான பெயர்!' என்று தனக்குள்ளேயே திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டதன்றி, 'இவள் அழகுக்குப் பெயர் விளக்கம் கூறுகிறது. இவளும் சொர்ண

விக்ரகம் போலத்தானே இருக்கிறாள்' என்று விவரித்து மனத்தை மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்த்திக் கொண்டிருந்தான்.

இப்படி மூவரும் மூன்றுவித மார்க்கத்தில் சிந்தனைகளை ஓட்டியதால் ஏற்பட்ட மௌனத்தை, சங்கடத்திலிருந்து முதலில் தன்னை மீட்டுக்கொண்ட காஞ்சனா தேவியே கலைக்கத் தொடங்கி, "ஆடை புனையத்தான் அறைக்கு வந்தேன்..." என்று இழுத்தாள்.

"அப்படியானால் ஏன் புனையவில்லை?" என்று எழுந்தது குணவர்மனின் கேள்வி, சற்றுக் கோபத்துடன்.

"அதற்குள் இவர் வந்துவிட்டார்" என்றாள் காஞ்சனாதேவி, இளைய பல்லவனைக் கையால் சுட்டிக்காட்டி.

குணவர்மனின் குழப்பமும் கோபமும் அதிகமாகிக் கொண்டிருந்தன. தன் பெண் பாதி ஆடை உடுக்கும் போது ஊர் பேர் தெரியாத ஆடவன் ஒருவன் அறைக்குள் வந்ததை நினைத்தபோதே கோபம் அவன் முகத்தில் தாண்டவமாடியது. அதைப்பற்றித் தன் பெண் வெட்கமில்லாமல் பேசுகிறாளே என்பதை நினைக்க அந்தக் கோபம் எல்லையைத் தொட்டது. ஆனால் திடீரென ஏற்பட்ட அந்தச் சூழ்நிலையில் சிறிது குழப்பத்துக்கும் உள்ளான குணவர்மன், "இவர் வந்துவிட்டாரா!" என்று முதலில் சிறிது வியப்பைக் காட்டி, பிறகு, "இவர் யார்? முன்பே தெரியுமா உனக்கு?" என்று புதல்வியைக் கேட்டான்.

"தெரியாது. சற்று முன்புதான் அறிந்தேன்" என்றாள் காஞ்சனாதேவி.

"அப்படியா!" என்று எழுந்தது குணவர்மனின் இரண்டாவது கேள்வி. அவன் குரலில் ஒலித்தது இகழ்ச்சியா கோபமா என்பது விளங்கவில்லை காஞ்சனா தேவிக்கு. இருந்த போதிலும் மறுபடியும் சொன்னாள், "அறிந்ததும் வியப்படைந்தேன்," என்று.

"எப்படி வந்தார் இவர்?" என்று குணவர்மன் விசாரித்தான்.

"சாளரத்தின் வழியாக."

"வீரர்கள் வரச் சரியான வழிதான் இது!"

"தவறாக எண்ணுகிறீர்கள், தந்தையே. இவர் கலிங் கத்தின் வீரர்களால் துரத்தப்பட்டார். தப்பி வந்து அறைக் குள் குதித்தார்."

"வீரர்களுக்குப் பயந்து பெண்ணிடம் சரணாகதியா? சிறந்த வீரன்தான். சந்தேகமில்லை."

தந்தை திரும்பத் திரும்ப இடக்காகவும் இகழ்ச்சியா கவும் பேசியதால் சற்றுக் கோபமடைந்த காஞ்சனாதேவி, "யோசித்துப் பேசுங்கள், தந்தையே! இவரை யாரென்று நீங்கள் அறியாமல் பேசுகிறீர்கள்!" என்று எச்சரித்தாள்.

"அந்த வாய்ப்பு உனக்குத்தான் முதலில் கிடைத் திருக்கிறது" என்றான் குணவர்மன்.

அவன் சொற்களில் கண்ட இகழ்ச்சியின் விளை வாகச் சீறி எழுந்த காஞ்சனாதேவி, "அந்த வாய்ப்பை உங்களுக்கும் அளிக்கிறேன், தந்தையே! பெற்றுக்கொள் ளுங்கள். யாரை நாடி நீங்கள் கலிங்கம் வந்திருக்கிறீர்களோ, யார் துணை கொண்டு சோழவேந்தன் உதவியை நாடக் கடல் கடந்து இங்கு வந்து தங்கியிருக்கிறீர்களோ! அந்த இளைய பல்லவர்தான் உங்கள் முன்பு நிற்கிறார்?" என்று கூறிவிட்டு அந்த அறையை விட்டுச் செல்லச் சரேலெனத் திரும்பினாள்.

"நில்லுங்கள், அரசகுமாரி!" என்று அவளைத் தடுத்த கருணாகர பல்லவன், "சைலேந்திர மன்னரே! விதியின் விசித்திரக் கயிறுகள் விபரீத நிலையில் இந்த மாளிகையில் நம்மைப் பிணைத்திருக்கின்றன. விரிவாகப் பேச இது சமயமல்ல. ஆனால் இதை மட்டும் படியுங்கள்" என்று தன் கச்சையிலிருந்த பையை எடுத்துப் பிரித்து, அதற்குள்ளிருந்த

ஓர் ஓலையை எடுத்துக் குணவர்மனிடம் நீட்டினான். அந்த ஓலையை விளக்கின் அருகில் கொண்டு சென்று படிக்கத் துவங்கிய குணவர்மனின் முகத்தில் பெரும் வியப்பும் திகைப்பும் மெல்ல மெல்லப் படரலாயின. சில விநாடிகள் ஓலையைக் கையில் பிடித்த வண்ணமே நின்று விட்ட குணவர்மன் அந்த ஓலையைத் தனது மகளிடம் நீட்டினான். ஓலையில் கண்ட வரிகளில் ஓடிய ஏந்திழையின் கண்கள் மெள்ள எழுந்து இளைய பல்லவனை நோக்கின. "இந்த ஓலையில் கண்டிருப்பது உண்மையானால்... இதில் கண்டிருப்பது மட்டும் நடந்துவிட்டால்..." என்று ஏதோ சொல்ல முயன்று, பெரும் திகிலால் பேச முடியாமல் சொற்களை விழுங்கினாள் காஞ்சனாதேவி.

அவளைத் தொடர்ந்து பேசிய குணவர்மனின் குரல் மிகவும் தீனமாக ஒலித்தது. "ஓலையில் கண்டிருப்பது நடந்தால் எங்கள் குலம் ஒழிந்தது! சைலேந்திரர் பேரரசு முறிந்தது! சொர்ண பூமியே அழிந்தது!"

"என்ன பயங்கர ஓலை! என்ன பயங்கரத் திட்டம்!" என்று காஞ்சனா தேவியும் பெருமூச்செறிந்தாள். அறை விளக்கின் சுடர்கூட லேசாக நடுங்கியது.




கச்சையில் செருகியிருந்த கருக்குப் பட்டுப் பையி லிருந்து கருணாகர பல்லவன் எடுத்துக் கொடுத்த ஓலை யைப் படித்த மாத்திரத்தில் பெரும் பிரமிப்புக்கும் திகைப்புக்கும் உள்ளான தந்தையும் மகளும் நீண்ட நேரம் ஏதும் பேசாமல் உள்ளத்தில் ஆயிரமாயிரம் எண்ணங்கள் எழுந்தோட ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டே நின்றிருந்தார்கள். ஓலையைக் கண்டதால் அந்த இருவர் உள்ளத்திலும் ஏற்பட்ட திகிலையும் குழப்பத்தையும் நன்கு அறிந்துகொண்ட கருணாகரபல்லவன், அவர்கள் உணர்ச்சி களின் கொந்தளிப்பு தானாகவே அடங்கட்டும் என்ற நினைப்பால் ஏதும் பேசாமல் அவர்கள் மௌனத்தில் தானும் பங்கு கொண்டானாகையால், அந்த அறையில் பயங்கரமான அமைதியே நிலவிக் கிடந்தது. சதா அலை மோதும் மனித வாழ்க்கையில் அமைதிக்கோ மௌனத் துக்கோ எத்தனை நேரம்தான் இடமிருக்க முடியும்? ஆகவே பல நிமிஷங்கள் உணர்ச்சி வசப்பட்டு நின்ற தந்தையும் மகளும் கடைசியாக விளக்கடியிலிருந்து திரும்பி, ஏதேதோ சந்தேகங்கள் பாய்ந்து நின்ற தங்கள் கண்களை இளைய பல்லவன்மீது செலுத்தினார்கள். குணவர்மனின் கண்களை ஒரு வினாடியே சந்தித்த இளைய பல்லவனின் கண்கள் காஞ்சனா தேவியின் அஞ்சன விழிகளை மட்டும் நீண்ட நேரம் கவர்ந்து நின்றதன்றி,

அத்தனைக் குழப்பத்திலும் சந்தேகத்திலும் சஞ்சலத்திலும் கூட அந்த விழிகளின் ஒளி சிறிதும் குன்றாதிருந்ததை அவன் மனம் எண்ணிப் பார்த்து எல்லையற்ற மகிழ்ச்சி யையும் வியப்பையும் அடைந்தது. குழப்பத்தின் விளை வாகப் பெரும் குருதி பாய்ந்து சிவந்து நின்ற வழவழத்த அவள் கபோலங்களின் அழகையும் காணத் தவறாத கருணாகர பல்லவன் 'திகைப்பிலும் குழப்பத்திலும் முகம் விகாரப்படுவது இயற்கை. ஆனால் இயற்கையின் அந்த நியதியையும் மீறும் இவள் அழகு எத்தனை சிறந்தது?' என்று தனக்குள்ளேயே ஆச்சரியப்பட்டுக் கொண்டான். தான் கொண்டுவந்த ஓலை அளித்த பயங்கரச் செய்தியைக் கேட்ட பின்பு சற்றே துவண்ட தேகத்தின் விளைவாக அவள் நுண்ணிய இடை ஒரு பக்கம் சாய்ந்து வளைந்த தால் அவள் நின்ற நிலையில் எத்தனை ஒய்யாரம் ஏற்பட்டது என்பதையும் கவனித்த கருணாகர பல்லவன், 'வாளேந்திய வீராங்கனையின் நிமிர்ந்த உருவத்துக்கும், இடை வளைந்து நிற்கும் இந்த மோகன பிம்பத்திற்கும் எத்தனை வித்தியாசம்! ஒவ்வொரு மாற்றமும் இவளுக்கு எத்தனை விதவிதமான அழகை அள்ளிச் சொரிகிறது!' என்று தனக்குள் சொல்லிக்கொண்டான்.

காஞ்சனாதேவி அந்தப் பார்வை அம்புகளால் பெரிதும் அவஸ்தைப்பட்டுச் சற்றே நெளிந்தாளானாலும், தந்தை பக்கத்திலிருந்ததால் அந்த வாலிபன் பார்வையை அவரும் கவனித்துவிட்டால் என்ன செய்வது என்ற எண்ணத்தின் விளைவாக மேலும் தாமதம் செய்யாமல் பேச்சைத் துவங்கி, "இந்த ஓலை உங்களிடம் எப்படிக் கிடைத்தது?" என்று மெள்ள வினவினாள்.

கருணாகர பல்லவனின் கண்கள் காஞ்சனா தேவி யின் பக்கத்திலிருந்த குணவர்மனை ஒருமுறை ஏறெடுத்து நோக்கிவிட்டுப் பிறகு காஞ்சனாதேவியைச் சற்று உற்றுப் பார்த்தன. "தேவி! இந்த ஓலையைச் சோழ சாம்ராஜ்

யாதிபதி வீரராசேந்திரரே என்னிடம் நேரிடையாகக் கொடுத்தார். உங்களிருவரையும் எப்படியும் கண்டு பிடித்துக் காப்பாற்றிச் சோழ நாடு அழைத்து வரும் படியும் உத்தரவிட்டார். ஓலையில் கண்டிருந்த விஷயத் தைக் கவனித்தீர்களா இல்லையா?" என்று பாதி விளக்க மும் பாதி கேள்வியும் தொனித்த சொற்களும் அவன் உதடுகளிலிருந்து உதிர்ந்தன.

இதற்குக் காஞ்சனாதேவி பதிலேதும் சொல்லாவிட் டாலும் திகில் நிரம்பிய குரலில் குணவர்மனே சொன் னான்: "நன்றாகக் கவனித்தோம் இளைய பல்லவரே! என்னையும் கலிங்கத்தைத் தாண்டுமுன்பு கொன்று விடும்படி இந்த ஓலையில் உத்தரவிருக்கிறது."

"உங்களுக்கு உங்கள் நாட்டில் நிரம்ப விரோதிகள் இருக்க வேண்டும் குணவர்மரே!" என்று கூறிய இளைய பல்லவன் சற்று நிதானித்துவிட்டு, "ஆமாம், உங்கள் உயிருக்கே உலை வைக்க முயலும் இத்தனைக் கொடிய விரோதிகள் உங்களுக்கு ஏற்பட என்ன காரணம்." என்றும் விசாரித்தான்.

குணவர்மன் முகத்தில் அதுவரை இருந்த குழப்பமும் திகிலும் சரேலென மறைந்து அவற்றின் இடத்தைக் கம்பீரத் தின் சாயை ஆக்ரமித்துக் கொண்டது. அந்தக் கம்பீரம் குரலிலும் தாண்டவமாடப் பேச முற்பட்ட குணவர்மன், "விரோதிகள் என்று பன்மையில் பேச வேண்டாம் இளையபல்லவரே! என் நாட்டு மக்கள் அனைவரும் என்னை நேசிக்கிறார்கள். அந்த நேசம்தான் என் வாழ்வின் நாசத்தில் வந்து முடிந்தது. எனக்கு விரோதிகள் இல்லை. இருப்பது ஒரே ஒரு விரோதிதான். அவன் பெயர்தான் இந்த ஓலையில் கையொப்பமாகப் பொறிக்கப்பட்டி ருக்கிறது". என்று உணர்ச்சி பொங்கப் பதில் சொன்னான்.

அதுவரை கோழை போலிருந்த குணவர்மன் திடீரென நிமிர்ந்து நின்றதையும் அரச தோரணையில்

பேச முற்பட்டதையும் கண்ட கருணாகர பல்லவன், கடாரத்து இளவரசனிடம் பெருமதிப்புக் கொண்டதன்றி அனுதாபத்துடனும் பேசத் தொடங்கி, "அந்த ஓலையில் கையொப்ப மிட்டிருப்பவனா!" என்று வினவினான்.

"ஆம், அவனேதான். ஜெயவர்மன் ஒருவர்தான் என் நாட்டில் எனக்கு விரோதி," என்றான் குணவர்மன், வருத்தம் தோய்ந்த குரலில்.

"யாரிந்த ஜெயவர்மன்?" என்றான் கருணாகர பல்லவன், விஷயத்தைத் தெளிவாக அறிந்துகொள்ளும் நோக்கத்துடன்.

"என் மாற்றாந்தாயின் மகன்."

"அதாவது..."

"என் சகோதரன்!"

"அப்படியானால் உங்கள் தந்தைக்கு மனைவியர் இருவரா?"

"ஆம்."

"கடாரத்தின் மன்னர் உங்கள் சகோதரரா?"

கடாரத்தின் மன்னன் என ஜெயவர்மனை இளைய பல்லவன் குறிப்பிட்டதை ரசிக்காத குணவர்மனின் முகம் லேசாகச் சுளித்தது.

"தற்சமயம் அவன்தான் அரசாள்கிறான்" என்று வெறுப்புடன் பதில் சொன்னான் குணவர்மன்."

"மன்னரை 'அவன்' என்று சொல்கிறீர்களே?" என்று கேட்டான் இளையபல்லவன்.

"எனக்கு நான்கு வயது சிறியவன் அவன்."

"இருந்தாலும் அரியணையில் அமர்ந்திருக்கும் மன்ன ரல்லவா?"

"உண்மைதான். ஆனால் சைலேந்திரர்களின் அரி யணையில் அமரவேண்டியவன் அவனல்ல, நான்தான்."

"விந்தையாயிருக்கிறதே!"

"விந்தையேதுமில்லை இளையபல்லவரே! என் தாய் தான் என் தந்தையின் பட்டமகிஷி. நான்தான் முடி சூட என் தந்தையால் தேர்ந்தெடுக்கப்பட்ட இளவரசன். கடாரத்தில் நான் தற்சமயம் இளவரசனாயிருப்பதற்கும் தந்தை இருக்கும்போது கிடைத்த பதவிதான் காரணம்."

"அப்படியா!" என்ற கருணாகர பல்லவனின் எண்ணங்கள் கடார மன்னர்களின் குழம்பிய அரச பரம்பரைச் சிக்கல்களில் புகுந்தது. கடாரத்தின் சைலேந்திர மன்னர்கள் சில காலம் விரோதம் பாராட்டியதையும், இளையபல்லவன் நன்கு அறிந்தான். சமீபத்தில் கடாரத்திலும் சொர்ணத் தீவிலும்*, சாவகத்திலும் அரசியல் குழப்பங்கள் அதிகமாகி விட்டதையும் கருணாகர பல்லவன் உணர்த்திருந்தானானாலும் இத்தகைய ஓர் அரியணைப் போட்டி நடக்கிறதென்பதை அறிய வாய்ப்பில்லாதிருந்ததாகையால், குணவர்மன் குறிப்பிட்ட விஷயங்களைப் பூரணமாகக் கிரகிக்கச் சக்தியற்றவனானான். ஆகவே சில நிமிடங்கள் யோசித்த பிறகு, "குணவர்மரே! உங்கள் குடும்பக் கதையில் கலகமும் போட்டியும், ஏன் கொலை முயற்சியும்கூடக் கலந்திருக்கிறது. அவற்றை விவரித்துச் சொன்னால்தான் நான் உள்ள நிலைமையைச் சரிவர உணர முடியும்" என்றான்.

சைலேந்திர ராஜா பரம்பரைச் சிக்கலை அறிந்து கொள்ளக் கருணாகர பல்லவன் ஆவலுடன் இருந்தானானாலும் அந்த ஆவலை உடனே பூர்த்தி செய்யக் குணவர்மன் முனையவில்லை. "இளையபல்லவரே! கடாரத்தின் கதை மகத்தானது... அதை நிதானமாகத்தான் சொல்ல வேண்டும். நீங்கள் எங்களைச் சந்தித்த முறையின் விசித்திரத்தை எண்ணிப் பார்க்கும் போது ஏதோ நல்லதொரு விதிதான் நம்மைப் பிணைத்திருக்கிறதென்று

* சொர்ணத் தீவு என்பது சுமித்திராவின் பழைய பெயர். சொர்ண பூமியென்பது தெற்கு பர்மா, மலேயா, சுமாத்ரா முதலியவற்றின் பொதுப் பெயர்.

நினைக்கிறேன். இரவு ஆரம்பித்து ஐந்து நாழிகைகள்தான் ஆகியிருக்கின்றன. சற்று முன்பு நீங்கள் பட்ட அவதிக்குப் பின்பு உங்களுக்கும் சற்று அமைதி தேவை. ஆகவே நீராடி விட்டு வாருங்கள். உணவு அருந்தியபிறகு பேசுவோம். விளக்கமாக விஷயத்தைக் கேட்டபின்பு அடுத்தபடி என்ன செய்தால் இந்தப் பாலூர்ப் பெருந்துறையிலிருந்து தப்ப முடியும் என்பதை நிர்ணயிப்போம்," என்று கூறிய குணவர்மன் தன் மகளை நோக்கி, "காஞ்சனா! இளைய பல்லவரை நீராடும் இடத்திற்கு அழைத்துச் செல். ஏவலாட்களை விட்டு அவருக்குச் சகல வசதிகளையும் செய்து கொடு" என்று சொல்லிக் கொண்டு போனவன், வாயிற்படிக்கருகில் திடீரெனத் திரும்பிய இளைய பல்லவனை ஏற இறங்கப் பார்த்து, "இவரும் நானும் கிட்டத்தட்ட ஒரே உயரப் பருமன்தான். ஆகவே என் உடைகளில் சிலவற்றை இவர் அணிந்து கொள்ளலாம்" என்றும் மகளுக்கு உணர்த்திவிட்டு அறையிலிருந்து வெளியே நடந்தான்.

அவன் சென்றதும் கருணாகர பல்லவனை நோக்கிப் புன்முறுவல் செய்தாள் காஞ்சனாதேவி. "ஏன், வரலாமே இளையவல்லவரே! தந்தை உத்திரவிட்டு விட்டார். பணிப் பெண் காத்திருக்கிறேன்" என்று விஷமமாகப் பேசவும் பேசினாள்.

பதிலுக்குக் கருணாகர பல்லவன் சற்று இரைந்தே நகைத்தான். அவன் சிரிப்பின் காரணத்தை அறியாத காஞ்சனாதேவி, "ஏன் நகைக்கிறீர்கள்" என்று வினவினாள்.

"உங்களைப் பணிப் பெண்ணாகப் பெற்றால் என் கதி என்ன ஆகும் என்று நினைத்தேன். சிரிப்பு வந்தது" என்றான் கருணாகர பல்லவன்.

"ஏன் என்ன ஆகும்? நான் பணிப் பெண்ணாக வந்தால் பணிவிடைகளில் குறைவிருக்குமா?"

"இருக்காது இருக்காது. இந்த அறைக்குள் வந்ததும் அதைப் புரிந்துகொண்டேன்."

"என்ன புரிந்துகொண்டீர்கள்?"

"வாள் முனையில் பணிவிடைகள் கிடைக்குமென்பதை."

இதைக் கேட்டதும் காஞ்சனாதேவியும் கலகலவென நகைத்தாள். "பேச்சில் வல்லவர் என்று நான் முன்னம் சொன்னதே சரியாகிவிட்டது. சரி சரி, வாருங்கள்" என்று சற்றுப் பொய் அதட்டலும் போட்டு அவனை அந்த அறையைவிட்டு அழைத்துச் சென்றாள் அரசகுமாரி.

குணவர்மனுக்குக் கோடிக்கரைக் கூலவாணிகன் அமர்த்தியிருந்த மாளிகை மிகப் பெரிதாகவே இருந்ததைக் கவனித்த இளையபல்லவன், அதன் அமைப்பைப் பார்த்துக் கொண்டே அரசகுமாரியைப் பின்தொடர்ந்தான். அந்த அறைகள் இருந்த முறையும், பெருங் கதவுகள் இரும்புத் தாழ்ப்பாள்களுடன் பொருத்தப்பட்டிருப்பதையும் கண்ட அந்த வாலிப வீரன் அவசியமானபோது அந்த மாளிகை சிறு கோட்டையாகவும் மாறக்கூடும் என்று தீர்மானித்தான். ஒருவேளை அந்த வீடு கலிங்கத்தின் காவல் வீரர்களால் முற்றுகையிடப்பட்டாலும் பத்துப் பதினைந்து வீரரும் அவசியமான உணவுமிருந்தால் எதிரிகளை ஒரு வாரத்துக்கு மேல் எதிர்த்து நிற்க முடியும் என்றும் திட்டம் போட்டான் கருணாகர பல்லவன். இப்படி எதிரிகளைச் சமாளிக்கும் வழியையும், பாலூர்ப் பெருந்துறையிலிருந்து குணவர்மனையும் காஞ்சனாதேவியையும் தப்ப வைத்து அழைத்துச் செல்லும் மார்க்கத்தையுமே திரும்பத் திரும்ப மனத்தில் எண்ணிக்கொண்டு அரசகுமாரியைப் பின்தொடர்ந்த இளையபல்லவன், பணியாட்களின் உதவியால் நீராட்டத்தை முடித்துக்கொண்டு குணவர்மனது உடைகளை அணிந்துகொண்டதும் போஜன அறைக்குள் நுழைந்தான். அவன் நுழைந்தபோது அந்த அறையில்

குணவர்மன் இல்லை. காஞ்சனாதேவி மட்டுமே அவனை எதிர்கொண்டாள். முன்பு அறையின் மங்கலான வெளிச்சத்தில் பார்த்ததைவிடப் பன்மடங்கு அழகுற துலங்கினாள் காஞ்சனாதேவி. அரைகுறை ஆடையுடனும், ஆபரணமில்லாமலும் அப்பொழுது அவளைப் பார்த்த கருணாகரனுக்கு, குறைவற்ற ஆடைகளுடனும் அணிமணிகளுடனும் அவள் நின்றிருந்த தோற்றம் பெரும் பிரமிப்பை அளித்தது. சேலையை மிக அழகாக அணிந்ததால் இடையிலிருந்த பட்டை கால்களுக்கிடையில் அழகாக ஓடிப் பாதங்களின் மேற்புறங்களைத் தடவ, இறுக்கிக் கட்டப்பட்ட இடை சற்று இருந்தும் இல்லை போல் தோற்றமளிக்க நின்றிருந்தாள் காஞ்சனாதேவி. அவள் முகத் தாமரை மந்தகாசத்தால் விரிந்து கிடந்தது. ரவிக்கைக்கு மேலே தெரிந்த வெளேரென்ற சருமத்தில் நவரத்தினங்கள் பதிந்த சிறிது ஆபரணமொன்று பலப்பல நிறங்களை விளக்கொளியில் கிளப்பி, இரட்டை வண்ணச் சேலையின் வர்ண ஜாலங்களுடன் போட்டி போட்டுக் கொண்டிருந்தது. இளைய பல்லவனைக் கண்டதும் அவள் முகத்தில் வெட்கம் விரிந்தது. ஆனால் அரச தோரணை மாறாததால், கம்பீரமும் வெட்கமும் இணைந்து முகத்தின் பொலிவைப் பன்மடங்கு உயர்த்தியதைப் புரிந்துகொண்டான், அந்த வாலிப வீரன்.

அவனை வரவேற்ற காஞ்சனாதேவிகூட நீராட்டத்தாலும் புதுஉடை புனைந்ததாலும் இளைய பல்லவனது தோற்றத்தில் ஏற்பட்ட அற்புத மாற்றத்தைக் கண்டு பெரிதும் வியந்தாள். துவட்டிய பின்பும் அவன் சுருட்டை மயிர்கள் நீரை ஓரிரு இடங்களில் மணிகள்போல் சொட்டிக் கொண்டிருந்ததையும், அப்படிச் சொட்டிய நீரும் அவன் முகத்துக்குப் பெரும் கம்பீரத்தை அளித்ததையும், அழகாக இருந்த இளமீசை அவன் வீரத்துக்குச் சான்று கூறியதையும் காஞ்சனாதேவி கவனித்தாள்.

குணவர்மனின் அரச உடை அவனுக்கு எத்தனைப் பொருத்தமாக இருந்தது என்பதையும், கன்னத்திலிருந்த காயத்தின் கீறல் வடுகூட அவனுக்கு இணையற்ற அழகை அளித்ததையும், அவன் கைகள் முழந்தாளைத் தொடும் அளவுக்கு நீண்டு கிடந்ததையும் கண்ட காஞ்சனாதேவி தான் பாரதத்தின் சிறந்த வீரன் ஒருவனுக்கு முன்பு நிற்பதை அறிந்தாள். அறிந்ததன் விளைவோ, என்னவோ, "வீரரே! வருக வருக!" என்று அழைப்பும் விடுத்தாள்.

அவள் அப்படி அழைத்ததால் புன்முறுவல் கொண்ட கருணாகர பல்லவன், "ஏது, வரவேற்பு பலமாயிருக்கிறது?" என்று கேட்டுக்கொண்டே அவளை அணுகி வந்தான்.

"விருந்தினர்களை வரவேற்பதும் உபசரிப்பதும் எங்கள் நாட்டுப் பழக்கம்" என்று கூறிய காஞ்சனாதேவி, "இதோ தந்தையும் வந்துவிடுவார்" என்று குணவர்மன் வராததற்கு மன்னிப்புக் கேட்கும் பாவனையில் வார்த்தைகளை உதிர்த்தாள். குணவர்மன் வரவைப்பற்றிக் கருணாகர பல்லவன் கவலைப்படவில்லை. காஞ்சனா தேவியுடன் தனித்திருப்பதே அவனுக்குப் பெருமகிழ்ச்சியைக் கொடுத்ததால், "வரட்டும். நிதானமாக வரட்டும். எனக்கொன்றும் அவசரமில்லை" என்றான்.

அந்த வாலிபனின் சொற்களில் புதைந்து கிடந்த எண்ணத்தைப் புரிந்துகொண்டாலும் புரிந்துகொள்ளாதது போலவே நடித்தாள் காஞ்சனாதேவி. "உங்களைக் காக்க வைக்க இஷ்டமில்லை. இருப்பினும் தந்தை நீராடச் சற்று அதிக நேரமாகும். என்ன செய்வது?" என்று உள்ள எண்ணத்துக்கும் உதட்டுச் சொற்களுக்கும் சம்பந்தமில்லாமல் பேசினாள் காஞ்சனாதேவி. அத்தகைய சம்பாஷணை எத்தனை நேரம் நடந்தாலும் அந்த இருவருக்கும் திருப்தியாகவே இருந்திருக்கும். ஆனால் அந்தத் திருப்திக்கு இடைஞ்சலாகச் சீக்கிரமே உள்ளே நுழைந்த குணவர்மன், "உணவருந்தலாம் வாருங்கள்" என்று அழைத்தான்.

தங்கக் கலங்களில் பலப்பல விதமான உணவுகளும் கனிகளும் பரிமாறப்பட்ட போதிலும் மூவரும் அதிகமாக உண்ணவேயில்லை. மூவர் புத்தியிலும் அலைமோதிக் கொண்டிருந்த எண்ணங்கள் பசியைப் பெரிதும் தடை செய்திருந்தனவாகையால், அரை நாழிகைக்குள் உண வருந்திய அம்மூவரும் கைகழுவிவிட்டுப் பணியாட்கள் கொடுத்த பட்டுத் துணிகளில் கைகளைத் துடைத்துக் கொண்டு மாளிகையின் மாடியறையொன்றை அடைந் தனர். அந்த அறையிலிருந்த விசாலத்தையும் அதிலிருந்த மஞ்சங்களையும் பார்த்த கருணாகர பல்லவன் அவர் களுக்குத் தகுந்த ஏற்பாடுகளையே கோடிக்கரைக் கூல வாணிகள் செய்திருக்கிறானென்பதை உணர்ந்து அவனைப் பெரிதும் மனத்திற்குள் பாராட்டிக் கொண்டும், அந்த அறையைத் தன் கண்களால் அளவெடுத்துக் கொண்டும் மஞ்சமொன்றில் உட்கார்ந்ததன்றி, மற்ற இருவரையும் உட்காரும்படியும் சைகை காட்டினான். அவன் சைகைப் படி காஞ்சனாதேவி எதிரேயிருந்த மஞ்சமொன்றில் அமர்ந் தாளானாலும், குணவர்மன் உட்காராமல் சற்று எட்ட விலகி அவ்விருவரையும் சிறிது நேரம் பார்த்துக் கொண்டு ஏதும் பேசாமல் மௌனமாக நின்றான். கடைசியில் மௌனத்தைக் கலைத்துக் கொண்டு, "இளைய பல்லவரே! நான் கேட்பதற்கு மன்னிக்க வேண்டும். நீங்கள் இளைய பல்லவர் என்பதற்கு நீங்கள் கூறிய வார்த்தையைவிட வேறு சான்றுகள் இல்லை. ஆகவே தாங்கள்தான் இளைய பல்லவர் என்பதற்கு ஏதாவதொரு ஆதாரம் இருந்தால் நாம் பேசலாம்" என்று கூறினான்.

குணவர்மனின் நிலைமையைப் பூரணமாக அறிந்து கொண்டதால் அவன் காட்டிய எச்சரிக்கையைக் கண்டு சிறிதும் கோபம் கொள்ளாத இளைய பல்லவன், தன் கையை நீட்டி, பல்லவ ராஜ முத்திரையுடன் கூடிய மோதிரத்தைக் காட்டி, "இது போதுமா குணவர்மரே?" என்று வினவினான்.

குணவர்மன் திருப்தியுடன் தலையை அசைத்தான். "போதும் இளைய பல்லவரே, போதும். நான் சந்தேகப் படுவதைப் பற்றிக் கோபம் வேண்டாம். நான் அடைந் துள்ள தொல்லைகள், ஏமாற்றங்கள் என்னை அவநம்பிக் கையுள்ளவனாக அடித்திருக்கின்றன. மன்னித்துவிடுங்கள். இனி நாம் மனம் விட்டுப் பேசுவோம்" என்ற குணவர்மன், "இளைய பல்லவரே! சிறிது நேரத்தில் ஸ்ரீவிஜய சாம்ராஜ் யத்தின் அதாவது சைலேந்திரர்கள் பேரரசின்— நீங்கள் பொதுவாக அழைக்கும் கடாரத்தின்—விந்தைக் கதையைச் சொல்கிறேன். அதற்குமுன்பு நீங்கள் சொல்லுங்கள் உங்கள் கதையை. நீங்கள் எதற்கு இந்தப் பாலூர் வந்தீர்கள்?" என்று மெல்லக் கேட்கவும் செய்தான்.

கருணாகர பல்லவனின் கூரிய கண்கள் குணவர் மனை ஊடுருவிப் பார்த்தன. "நான் சொல்வதற்கு அதிகம் எதுவுமில்லை குணவர்மரே! பூம்புகாரின் சுங்கக் காவல ரிடம் உங்கள் நாட்டு ஒற்றன் ஒருவன் பிடிபட்டான். அவ னிடம் உங்களைக் கொல்லப் பணித்த அந்த ஓலையிருந்தது. ஆகவே உங்களை எப்படியும் காப்பாற்றிப் புகாருக்கு அழைத்து வரும்படி வீரராஜேந்திர சோழ தேவர் எனக்குப் பணித்தார். நிலமார்க்கமாக வந்தால் நாளாகுமென்பதால் கடல் மார்க்கமாகச் செல்லவும் ஆணையிட்டார். ஆகவே புரவியுடன் மரக்கலத்திலே வந்து இந்தத் துறைமுகத்தில் இறங்கினேன். அங்குதான் சில விபரீத விவரங்களைக் கேள்விப்பட்டேன். அதுவும் ஒரு சுங்க அதிகாரி மூலமாக" என்று பேசிச் சற்று நிறுத்தினான் இளையபல்லவன்.

"என்ன விபரீதச் செய்திகள் இளைய பல்லவரே?" என்று வினவினான் குணவர்மன், குரலில் கவலையொலி துலங்க.

"முதலில் தமிழர்கள் சிறை செய்யப்படுவதாகக் கேள்விப் பட்டேன். அது மட்டுமல்ல, வேங்கி நாட்டு மன்னன் ராஜ ராஜேந்திரனுக்கும், சோழர் குலச் செல்வி அங்கம்மா

தேவிக்கும் அவதரித்த, ராஜேந்திரன் என நாங்கள் அழைக்கும், அநபாய சோழர் இங்கு சிறைப்பட்டிருப்பதாகவும் அறிந்தேன்" என்றான் இளைய பல்லவன்.

"என்ன! அநபாயச் சோழரா? தங்கள் நண்பரா? இத்தனைத் துணிவா, கலிங்க மன்னனுக்கு!" என்று தந்தை மகள் இருவரும் ஏகோபித்துக் கேட்டார்கள்.

கருணாகர பல்லவன் இளமுறுவல் செய்துவிட்டு, "நீங்கள் சொன்ன அந்த வார்த்தைகளைச் சொன்னதால் தான் என்னை வீரர்கள் துரத்தினார்கள். அவர்களிடமிருந்து தப்பித்தான் உங்கள் அறையில் குதித்தேன்" என்றான்.

"அப்படியா?" என்றான் குணவர்மன்.

"ஆமாம், குணவர்மரே! ஏற்கெனவே சிதைந்து கிடக்கும் சோழ, கலிங்க உறவைச் சீர்படுத்தவும், அமைதியைத் தென்னகத்தில் நிலைக்கச் செய்யவும், சமாதான ஆக்ஞா பத்திரமொன்றையும் வீரராஜேந்திரர் கொடுத்திருக்கிறார். அதுவும் இனி செல்லாது. இரண்டு நாட்டுக்கும் மேலும் பகையும் போரும்தான் என நினைக்கிறேன். சமாதானத் தூதனாக வந்தேன். இனி சமரின் தூதனாகத் திரும்பப் போகிறேன். சமரின் முரசொலி இப்பொழுதே என் காதில் கேட்கிறது" என்றான் இளையபல்லவன்.

குணவர்மன் பதிலேதும் சொல்லாமல் அவனை வெறித்துப் பார்த்துக்கொண்டு நின்றான். "இதிலும் விசித்திரமிருக்கிறது இளைய பல்லவரே! கலிங்கத்தின் பகை கடாரத்துக்கு நன்மை பயக்கிறது" என்று சற்று குதூகலத்துடனேயே கூறிய குணவர்மன், "இப்பொழுது கேளும் இளையபல்லவரே, கடாரத்தின் விந்தைக் கதையைச் சொல்லுகிறேன். சீருடன் இருக்க வேண்டிய ஒரு சாம்ராஜ்யம் சீரழியும் பாதையில் இறங்கிச் செல்லும் சோகக் கதையைச் சொல்லுகிறேன். அதன் கதைதான் என் கதையும்" என்று தனது கதையை விவரிக்கத் தொடங்கினான்.

அத்தியாயம் 6

# ஸ்ரீவிஜய சாம்ராஜ்யம்

ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தின் மாபெருங் கதையே தன் கதையென முகவுரை துவங்கி அந்தக் கதையை விவரிக்கவும் முற்பட்ட குணவர்மன், கதையை உடனடியாக எடுத்துச் சொல்ல முடியாமல் மயங்கியும் தயங்கியும் நின்று நிலை தடுமாறி அறையில் அப்படியும் இப்படியும் சில விநாடிகள் உலவி, தனக்குள் ஏதோ முணுமுணுத்துக் கொண்டான். துவங்கிய கதையைச் சொல்லவும் முடியாமல், மெல்லவும் மாட்டாமல் அவன் திணறித் திண்டாடுவதைக் கண்ட இளையபல்லவன் அவனை ஏதும் கேட்காமல், கவலை தோய்ந்த அவன் வதனத்தையும், அத்தனை கவலையிலும் தளராமல் திடமாகவும், கம்பீரமாகவும் நின்ற அவன் சரீரத்தையும் கண்களால் அளவெடுத்தான். குணவர்மன் கிட்டத்தட்டத் தன் உயரமே இருப்பதையும், அவனுக்கு வயது நாற்பத்தைந்துக்கு மேலிருக்க முடியாதென்றாலும், தலையிலிருந்து பாய்ந்த கேசத்தின் சில பகுதிகளும், முகத்தின் குறுக்கே கவலை உழுதுவிட்டிருந்த இரண்டொரு கோடுகளும், அவன் தோற்றத்துக்குப் பத்து வயதைக் கூட்டியே சொல்லும் நிலைமையில் வைத்திருந்ததையும், கவனித்த கருணாகர பல்லவன், 'இவன் வாழ்க்கையில் பெரிதும் அல்லல்பட்டிருக்க வேண்டும்' என்று தனக்குள் சொல்லிக்கொண்டான். இத்தனை கவலையிலும் அவன் உதடுகளில் காஞ்சனாதேவியின்

உதடுகளிலிருந்த உறுதியும் துடிப்புமிருந்ததைப் பார்த்த பல்லவ வீரன் கடாரத்தின் இளவரசன் எந்த அசந்தர்ப்ப நிலையிலும் துன்பத்திலும் மனத்தை மட்டும் தளரவிடாத இரும்புத் திடம் வாய்ந்தவன் என்பதைப் புரிந்துகொண் டான். அத்தனை திடமும் உறுதியுமிருந்தாலும், அவன் முகத்திலோ கைகளிலோ வடுக்கள் ஏதுமே இல்லாததை யும் கவனித்து ‘அரசியல் தொல்லைதான் இவனுக்கு அதிகமே தவிர வாளைச் சுழற்றும் வேலை இவனுக் கிருக்கக் காரணமில்லை. இவன் போர்களில் அதிகமாக ஈடுபடாதவன்’ என்று தனக்குள்ளேயே முடிவு கட்டிக் கொண்டதன்றி, ‘அப்படியிருக்க இவன் பெண்ணுக்கு மட்டும் திறமையான வாள்பயிற்சியை எதற்காக அளித் திருக்கிறான்?’ என்று தன்னைத்தானே கேட்டுக் கொள்ள வும் செய்தான்.

மிதமிஞ்சிய கவலையாலும், ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத் தைப் பற்றிய நினைப்பாலும் எண்ணங்கள் உள்ளத்தில் எழுந்து அலைமோதிக் கொண்டிருந்த அந்த நிலையில்கூட குணவர்மனின் கண்கள், இளைய பல்லவனது விழிகள் பாய்ந்த இடங்களையும், அப்படிப் பாய்ந்ததின் விளை வாக முகத்தில் உலவிய எண்ணங்களையும் கவனிக்கத் தவறாததால், அவன் இதழ்களில் வருத்தம் கலந்த புன்முறு வலொன்று தவழ்ந்தது. அதற்குக் காரணம் சொல்ல அவன் முனைந்தபோது அவன் சொற்களிலும் அந்த வருத்தம் பிரதிபலித்தே நின்றது. “இளைய பல்லவர் நினைப்பதில் தவறில்லை. நான் வாள்போரில் அதிகமாக ஈடுபடாதவன் தான். அதற்குக் காரணமிருக்கிறது” என்று குணவர்மன் மெள்ள மெள்ளச் சொற்களை உதிர்த்தான்.

வாள்போரில் திறனிருந்தாலும் இல்லாவிட்டாலும், முகபாவத்திலிருந்தே பிறர் உணர்ச்சிகளை ஊடுருவிப் பார்க்கும் சக்தி கடாரத்தின் இளவரசனுக்கு மிதமிஞ்சி இருந்ததைக் கவனித்த கருணாகர பல்லவன், பெரு

வியப்பை அடைந்தானானாலும் அதை வெளிக்குக் காட்டாமல், "கடாரத்தின் இளவரசர் மீது எந்தக் குறையையும் கற்பிக்கும் நோக்கம் எனக்கில்லை" என்று ஏதோ சமாதானம் சொல்ல முயன்றவனை இடையிடையே தடுத்த குணவர்மன், "இளைய பல்லவரே! இதற்குச் சமாதானம் ஏதும் தேவையில்லை. தமிழகத்தின் இணையற்ற வீரனெனப் பெயரெடுத்த உமது கண்கள், மற்றவர்களிடத்திலும் வீரத்தின் அடையாளங்களை எதிர்பார்ப்பது நியாயம் தானே? அந்தக் குறிக்கோளேதும் தென்படாதபோது, 'இவன் வீரன்தானா?' என்ற சந்தேகமே உமக்கு ஏற்படுவதும் இயற்கைதான். ஆனால் இதிலும் என் வாழ்க்கையில் சில மர்மங்கள் கலந்திருக்கின்றன," என்றான்.

'அரசனாயிருப்பவன் வாள்போர் பயிலாததற்கும் இவன் வாழ்க்கை மர்மங்களுக்கும் என்ன சம்பந்தமிருக்க முடியும். ஒருவேளை இவன் கோழையாயிருப்பானோ? கோழைத்தனத்தை மறைப்பதற்குக் காரணங்களைக் கண்டு பிடிக்கிறானோ?' என்று சிந்தனை வசப்பட்ட கருணாகர பல்லவன் மீண்டும் தன் கண்களால் குணவர்மனது முகத்தை ஆராய்ந்தான். கவலை தோய்ந்து கிடந்த அந்தச் சந்தர்ப்பத்திலும், ஈட்டிகள்போல் ஜொலித்த குணவர்மனின் கண்களைக் கண்டதும், 'சேச்சே! நாம் நினைத்தது தவறு. இத்தகைய கண்களை உடையவன் ஒருகாலும் கோழையாயிருக்க முடியாது,' என்ற முடிவுக்கு வந்த இளைய பல்லவன் மேற்கொண்டு ஏதும் பேசாமல் குணவர்மனது கதையைக் கேட்க ஆயத்தமானான். குணவர்மனது அந்தச் சில நிமிஷங்களில் தன் தயக்கத்தை உதறிக்கொண்டு, இளைய பல்லவனை நோக்கி, "இளைய பல்லவரே! நான் கடாரத்தின் இளவரசனாயிருக்கும் காரணம் தெரியுமா உமக்கு?" என்று ஒரு கேள்வியை வீசினான்.

"தெரியாது குணவர்மரே! தாங்கள் சொல்லித்தான் தங்களைப் பற்றிய விவரம் எதையும் நானறிய முடியும். சில

நாழிகைகளுக்கு முன்புதானே நாம் சந்தித்திருக்கிறோம்!" என்று கருணாகர பல்லவன் பதில் கூறினான்.

"உண்மைதான் இளைய பல்லவரே" என்று சொல்லித் தலையையும் அசைத்து ஆமோதித்த குணவர்மன், "நான் கடாரத்தின் இளவரசனாயிருப்பதற்கு என் ஆசை காரண மல்ல. உண்மையில், கடாரத்தின் ஆட்சி பீடத்தையும் அந்த ஆட்சிபீடம் அளிக்கும் அதிகாரத்தையும், அந்தஸ்தையும், செல்வாக்கையும் அனைத்தையும் வெறுக்கிறேன். கடாரத் தின் இளவரசுப் பதவி என் தந்தையால் என்மீது சுமத்தப் பட்டது. என் இஷ்டத்திற்கு விரோதமாக," என்று பதில் கூறிய குணவர்மன், "இதைக் கேட்க உங்களுக்கு விசித்திர மாயிருக்கலாம் இளைய பல்லவரே! ஆனால் உண்மை அதுதான். ஆட்சிபீடத்தை நான் வெறுக்கவே செய்கிறேன். ஆனால் அது என்னைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டி ருக்கிறது. இது உலக விசித்திரம். வேண்டாதவனிடம் பதவி ஒட்டிக் கொள்கிறது. வேண்டுபவனை வெட்டி விலக்கித் தள்ளுகிறது" என்றான்.

குணவர்மன் சொன்னது பெரும் விசித்திரமாயிருந்தது இளையபல்லவனுக்கு. "ஆட்சியில் வெறுப்பிருந்தால் சோழ நாட்டின் உதவியை ஏன் நாடுகிறீர்கள்? கடாரத்தின் மீது படையெடுத்து, ஜெயவர்மனை முறியடித்து ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தை என்னிடம் ஒப்படைக்க வேண்டும், என்று சோழப் பேரரசர் வீரராஜேந்திரருக்கு நீங்கள் ஓலையே அனுப்பியிருந்தீர்களே?" என்று வினவினான் இளைய பல்லவன்.

இந்தக் கேள்வியால் சிறிதும் கலங்காத குணவர்மன் திடமாகவே பதில் சொன்னான், "ஓலை அனுப்பியிருந் தேன், இளைய பல்லவரே! அரச பதவியை நாடித்தான் இங்கும் வந்திருக்கிறேன். முடிந்தால் ஜெயவர்மனை விரட்டி அரசபீடத்தில் உட்காரவும் உத்தேசம்தான். ஆனால் இத்தனையிலும், பற்று சிறிதுமில்லாமலே ஈடு

பட்டிருக்கிறேன். இவையனைத்திலும் கடமை சம்பந்தப் பட்டிருக்கிறது. எந்த சைலேந்திர வம்சத்தில் நான் பிறந்தேனோ அந்த சைலேந்திர வம்சத்தைப் பற்றிய கடமை அது. ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தின் மக்களுக்கு நான் செலுத்த வேண்டிய கடமை அது. கடமைதான் என்னை இங்கு இழுத்து வந்திருக்கிறது இளையபல்லவரே! ஆசை அல்ல?" அத்துடன் மேலும் பேசத் துவங்கிய குணவர்மன், "இளைய பல்லவரே! இதைத்தான் நான் ஆரம்பத்திலேயே சொன்னேன். ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தின் கதைதான் என் கதை என்று. கேளும் அந்தக் கதையை," என்று கூறி, இளைய பல்லவனை விட்டுத் திரும்பி அந்த அறையின் கிழக்குப் பகுதியிலிருந்த பெரும் சாளரத்தைத் திறந்து வெளியே நீண்ட நேரம் நோக்கிக் கொண்டு பேசாமலே நின்றான். பல நிமிஷங்கள் கழித்துத் திரும்பிய குணவர் மனின் கண்கள் ஏதோ கனவுலகத்தில் சஞ்சரிப்பன போல் காணப்பட்டன. அதுவரை கவலை மண்டிக்கிடந்த வதனத்தில் சாந்தியும் பெருமையும் நிலவிக் கிடந்தன. அந்தக் கனவுக் கண்களால் இளைய பல்லவனையும் தனது புதல்வியையும் மாறிமாறிப் பார்த்துவிட்டுத் தன் ஒரு கையை உயர்த்தி, சாளரத்தை நோக்கி நீட்டி, "இளைய பல்லவரே! இந்தச் சாளரத்துக்கு வெளியே நீர் கண்களைச் செலுத்தினால், நீலக் கடல்தான் உமது கண்களுக்குத் தெரியும். ஆனால் என் கண்களுக்குத் தெரிவது அதுமட்டு மல்ல. அந்தக் கடலுக்கப்பாலுள்ள சைலேந்திரர்களின் மாபெரும் அரசான ஸ்ரீவிஜய சாம்ராஜ்யம் தோன்றுகிறது. பலப்பல தீவுகள் தோன்றுகின்றன. கடாரம் தோன்றுகிறது. சொர்ணத் தீவும், சாவகமும், பாலியும் தோன்றுகின்றன. அந்தத் தீவுகளில் தினம் தினம் வந்து குவியும் வணிகப் பொருள்களும் தோன்றுகின்றன. அத்தனை வணிகப் பொருள்கள் அங்கு ஏன் வந்து குவிகின்றன? காரணம் இருக்கிறது. இளையபல்லவரே! பலமான காரணம் இருக் கிறது. உலகத்தில் சகல நாட்டினரும் விரும்பும் தங்கம்

அந்தத் தீவுகளில் இருக்கின்றது. அதனால்தான் பழைய கிரேக்க மாலுமிகள் அவற்றை கிரிஸே (தங்கம்) தீவு என்றும், சொர்ணத் தீவு என்றும் சொர்ண பூமியென்றும் பலபடிப் பெயரிட்டு அழைத்தார்கள். அந்தத் தீவுகளில் உள்ள மண்ணில் பொன் கலந்திருக்கிறது. மண்ணை நீரில் போட்டால் தங்கம் பிரியும் அளவிற்குப் பொன் மண் ணுடன் இணைந்து கிடக்கிறது. அவ்வளவு தங்கம் உலகத் தின் எந்த நாட்டு மண்ணிலும் கிடையாது. மற்றவர்கள் தங்கள் நாட்டை ஆசையால் பொன்னாடு என்று அழைக்கிறார்கள். ஆனால் எங்கள் நாடு உண்மையிலேயே பொன்னாடு. பொன் ஏராளமாக விளையும் பூமி அது. அதன் பொன்னை வாரிச் செல்லவே உலக வணிகர்கள் அங்கு வருகிறார்கள்," என்று பேச்சைச் சற்று நிறுத்தி இளைய பல்லவனை உற்றுப் பார்த்தான்.

இளையபல்லவன் முகத்தில் வியப்புதான் மிஞ்சிக் கிடந்தது. சொர்ணபூமியின் பொன்னை நினைத்து உண் டான வியப்பல்ல. சொந்த நாட்டைப் பற்றிப் பேச முற்பட்டதும் குணவர்மனுக்கு உண்டான ஆவேசத்தைக் கண்டதால் ஏற்பட்ட வியப்பு அது. அந்த வியப்பைக் கவனித்த பின்பும் குணவர்மன் ஆவேசத்தைக் கைவிடா மலே சொன்னான்: "இந்தத் தீவுகள் உங்கள் பாரத நாட்டு டன் ஒட்டியிருந்த காலமொன்று உண்டென்று பூதத்துவ சாஸ்திரிகள் சொல்லுகிறார்கள். இளைய பல்லவரே, பாரதத்தின் கடற்கரையோரமாகப் போய்த் தெற்கே திரும்பினால் கிழக்கு நாடு பாரதத்தின் நிலப் பரப்புடன் தொடர்பு கொண்டே செல்கிறது. அந்த நிலப்பரப்பைக் கடாரத்துக்குக் கீழேதான், கடல் குறுக்கிட்டு உடைக்கிறது. அப்படிக் கடல் உடைத்துப் பிரிந்த இடங்கள் தீவுகளாகிச் சொர்ணத் தீவு (சுமாத்ரா) என்றும், சாவகத் தீவு என்றும், பாலித் தீவு என்றும் வெவ்வேறு விதமான பெயர்களைப் பெற்றுத் திகழ்கின்றன. ஆனால் இந்தத் தீவுகளின், கலா

சாரங்கள் பொதுப்படையானவை. பழைய காலத்தில் இவை ஒன்றுபட்டிருந்ததைக் குறிக்கின்றன. அதுமட்டு மல்ல, பாரதத்துக்கும் அவற்றுக்கும் யுகாந்தரமாக இருந்து வரும் தொடர்பையும் குறிக்கின்றன. அங்குள்ள சைவமும் வைணவமும் பௌத்தமும் பாரத நாடு அளித்தவை. அங்குள்ள சிற்பமும், சித்திரமும், கோயிலும், குளமும், இலக்கியமும் எல்லாமே இந்த நாடு அளித்தவைதான். காட்டுமிராண்டிகளே ஆதியில் நிரம்பிக் கிடந்த சொர்ண பூமி, பௌத்த, சைவ, வைணவத் துறவிகளின் வருகையால் நாகரிகத்தையும் பல நாடுகளும் கண்டு வியக்கும் தன்மை யையும் அடைந்தது. அப்படி ஏற்பட்ட நாகரிகத்தின் விளைவாகத்தான் மூன்று நூற்றாண்டுகளுக்கு முன்னால் ஸ்ரீவிஜய சாம்ராஜ்யம் சொர்ணத்தீவில் எழுந்தது."

இந்த இடத்தில் கதையைச் சற்றே நிறுத்திய குணவர் மன், "இனி மிக்க கவனமாகக் கேளுங்கள் இளையபல்ல வரே!" என்று எச்சரித்துக் கொண்டும், அறையில் அங்கு மிங்கும் கனவில் நடப்பவன்போல், உலாவிக் கொண்டும் கதையைச் சொல்லிக் கொண்டு போனான்: "சுமார் முந் நூறு ஆண்டுகளுக்கு முன்னால் சாவகத் தீவின் மத்தியி லிருந்த சிற்றரசில் ஸஞ்சயன் என்ற அரசன் தோன்றினான். அவன் சைவ சமயத்தவன். அவன் ஆட்சியில் அந்தச் சிற்றரசு பேரரசாக விரிந்தது. ஸஞ்சயன் பெரும்படை திரட்டி, பொன் பெரிதும் விளையும் சொர்ணத்தீவைத் தன்வசப்படுத்திக் கொண்டான். அதற்கு ஸ்ரீவிஜயம் என்ற பெயரையும் சூட்டினான். அவன் காலத்திலும் அவனுக் குப் பின் வந்த ஆறு மன்னர்களின் காலத்திலும், ஸ்ரீவிஜயம் சொர்ணத் தீவையும் சாவகத்தையும் இன்னும் பல தீவு களையும் கொண்ட பெரும் சாம்ராஜ்யமாக விரிந்தது. அதில் சைவம் பெரிதும் தழைத்தது. ஸஞ்சயன் ஸ்தாபித்த ஸ்ரீவிஜய சாம்ராஜ்யம் மதத்தை அதிகமாக வற்புறுத்தாது இருந்திருக்குமானால், அந்தச் சாம்ராஜ்யம் இன்னும்

நிலைத்திருக்கும். ஆனால் ஸஞ்சய வம்சத்தின் ஆட்சி சைவ ஆட்சியாக இருந்தது. ஆகவே மஹாயன பௌத்தம் கிளைத்த சாவகத்தில் அதற்கு எதிர்ப்பு ஏற்பட்டது. அதை எதிர்த்த ஒரு சிறு அரச பரம்பரைதான் சைலேந்திர அரச பரம்பரை. இந்தப் பரம்பரையின் ஆதிகர்த்தாவான பானு வர்மனும் ஸஞ்சயன் உதித்த அதே சாவகத்தின் நடுவிடத்தில் தோன்றினான். சைலேந்திரர்கள் வம்சம் முதல் மூன்று தலைமுறைகளிலேயே பெரிதும் வலுவுற்றது. ஆறாவது தலைமுறையில் ஸ்ரீவிஜய மன்னன் பிகாதனுக்கும், சைலேந்திர ராஜகுமாரி பிரமோதவர்த்தினிக்கும் திருமணம் நடந்தது. அந்தத் திருமணத்துடன் ஸஞ்சயன் பரம்பரை ஆட்சியும் முடிந்தது. பிகாதனுக்குப் பிறகு அவன் மைத்துனனும், சைலேந்திர வம்ச ராஜபுத்திரனுமான பாலபுத்திரன் ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தின் அரியணையில் ஏறினான். சைலேந்திரர்கள் காலத்தில் ஸ்ரீவிஜயம் கிழக்குத் தீவுகளையெல்லாம் கொண்ட பெரும் சாம்ராஜ்யமாகிச் சீரும் சிறப்பும் பெற்றது. பாலபுத்திரனுக்குப் பிறகு மூன்று தலைமுறைகளில் அதன் புகழ் உலகெங்கும் பரவியது. பட்டு நெய்யும் சீனாவுக்கும் முத்துக் குளிக்கும் தமிழகத்துக்கும் இடையே இருந்ததன் விளைவாக, அதன் வாணிபமும் வாணிபத்தைக் கட்டுப்படுத்துவதில் அதற்கு இருந்த சக்தியும் பெரிதும் வளர்ந்தது. இந்தக் காலத்தில் தான் சூளாமணிவர்மனும் அவனுக்குப் பிறகு ஸ்ரீமார விஜயதுங்கவர்மனும் ஸ்ரீவிஜய சாம்ராஜ்யப் பேரரசர்களாய் விளங்கினார்கள். பின்னவர் காலத்தில்தான் சோழர்களுக்கும் ஸ்ரீவிஜயத்துக்கும் நட்பு வலுப்பட்டு, நாகப்பட்டிணத்தில் புத்த விஹாரமான சூளாமணி விஹாரத்தைக் கட்ட ராஜேந்திரசோழ தேவர் ஸ்ரீ விஜயப் பேரரசருக்கு நில தானமும் கொடுத்தார். இந்த நட்பு நீண்டிருந்தால் தமிழகத்திற்கும் ஸ்ரீவிஜயத்திற்கும் போர் நிகழ்ந்திராது. ஆனால் வர்த்தகப் போட்டி போரில் வந்து முடிந்தது..."

இந்தச் சமயத்தில் குறுக்கே புகுந்து ஒரு கேள்வியைக் கேட்டான் இளைய பல்லவன், "வர்த்தகப் போட்டியா?" என்று.

"ஆமாம்" என்பதைச் சுட்டிக்காட்டும் பாவனையில் தலையை அசைத்த குணவர்மன் மேலும் சொன்னான்: "ஆமாம் இளைய பல்லவரே! ஸ்ரீமார விஜயதுங்கவர்ம னுக்குப் பிறகு அரச பதவிக்கு வந்த ஸங்க்ரம விஜயதுங்க வர்மன் பாரதத்திலிருந்து வரும் பொருள்களுக்குப் பலமான சுங்க வரிகளை விதித்தார். இதனால் வெகுண்ட ராஜேந்திர சோழ தேவர் ஸ்ரீவிஜயத்தை நோக்கித் தமது கடற்படையை ஏவினார். எந்தக் கடலைத் தாண்டிப் பெருவாரியான தமிழர் படை வர முடியாதென்ற தைரியத் தால் ஸங்க்ரம விஜயதுங்கர் சுங்க வரிகளை விதித்தாரோ, அந்தக் கடலைத் தாண்டித் தமிழர் பெரும் படை வந்தது. கடாரத்தையும், ஸ்ரீவிஜயத்தையும் சூறையாடியது. ஸங்க்ரம விஜயதுங்கவர்மனையும் சிறை பிடித்துச் சென்றது. பிறகு ராஜேந்திர சோழதேவரின் கருணையால் ஸங்க்ரம விஜய துங்கவர்மன் விடுதலையடைந்தார். அவர் காலமுதல் ஸ்ரீவிஜயம் வலிமை குன்றியது. என் தந்தையின் காலத்தில் அரியணைப் போட்டிச் சண்டையும் கிளம்பியது. என் சகோதரன் அரசைப் பறித்துக்கொள்ள விரும்பினான். அதன் விளைவாக, என்னைச் சொர்ணத் தீவிலிருந்து கடாரத்துக்கு அனுப்பி அங்கு என்னை இளவரசனாக்கி னார் என் தந்தை. எனக்கு அதில் இஷ்டமில்லை."

"ஏன்?" என்று குறுக்கிட்டான் இளையபல்லவன்.

"சிறு வயதிலேயே நான் பௌத்த மதகுரு ஒருவரிடம் பாடம் பயின்றேன். அவருடைய சீடர்களிடம் பழகினேன். இருபது வயதுவரை பௌத்த விஹாரங்களிலும், பௌத்தத் துறவிகளுடனும் காலம் கழித்தேன். ஆகவே, இக வாழ்க்கை யில் மனம் செல்லவில்லை. புத்தத் துறவியாவதிலேயே மனம் சென்றது. இதைக் கவனித்த என் தந்தை எனக்குப்

பலவந்தமாகத் திருமணம் செய்வித்தார். அதன் பலன்தான் இவள்” என்று காஞ்சனாதேவியைக் காட்டினான் குணவர்மன்.

இளையபல்லவன் காஞ்சனாதேவியை நோக்கிப் புன்முறுவல் செய்தான். ‘கட்டாய விவாகத்தின் கனி, காதல் விவாகத்தில் கிடைக்கும் கனிக்கு எந்த விதத்திலும் குறைந்ததல்ல’ என்று எண்ணினான்.

குணவர்மன் மேலும் சொன்னான்: “இவளுக்கு வயது வருமுன்பே இவள் தாய் இறந்துவிட்டாள். மீண்டும் என் மனம் துறவற வாழ்வை நாடியது. இகவாழ்வை வெறுத்தது. ஆனால் நாளுக்கு நாள் ஏற்பட்ட மாறுதல்கள் என் மனத்தை மாற்றவே செய்தன. ஜெயவர்மன் ஆட்சி ஸ்ரீவிஜயத் துக்குப் பெரும் சாபக்கேடாக முடிந்தது. மக்கள் துன்புறுத் தப்பட்டார்கள். சாதாரணக் குற்றங்களுக்குப் பெரும் தண்டனைகள் விதிக்கப்பட்டன. ஜெயவர்மனுக்குப் புத்தி சொல்ல முற்பட்ட மந்திரிகளின் தலைகள் துண்டிக்கப் பட்டன. ஸ்ரீவிஜய சாம்ராஜ்யம் மெள்ள மெள்ளச் சீரழியத் தொடங்கியது. அக்கம் பக்கத்து அரசாங்கங்களின் விரோத மும் வந்து சம்பவித்தது. இப்படியே போனால் மக்கள் தவிப்பார்கள், நாடு அழிந்துவிடும் என்ற முடிவுக்கு வந்தேன். ஆகவே கடாரத்தைத் தன் வசம் ஒப்புவிக்கும்படி ஜெயவர்மன் அனுப்பிய ஓலையைத் திருப்பியனுப்பினேன். முடிந்தால் ஜெயவர்மன் கடாரத்தை அழித்திருப்பான். ஆனால் மக்களின் பெருவாரியான ஆதரவு எனக்கிருப்ப தைக் கண்டு அஞ்சியிருக்கிறான். அவன் அச்சம் குலையு முன்பு சோழர் உதவியை நாடி சைலேந்திரர் ஆட்சியை மீண்டும் நிலை நிறுத்தவும், என் நாட்டு மக்களின் துன்பத்தைப் போக்கவும், இந்நாடு வந்திருக்கிறேன். துறவு மனப்பான்மை இருந்தும் அரசுக்காக அயல்நாடு வந்து உதவி நாடும் விபரீத நிலை எனக்கு ஏற்பட்டிருக்கிறது.

இதுதான் கதை இளைய பல்லவரே! ஆனால் கதை போகிற போக்கைப் பார்த்திரா?"

கருணாகர பல்லவன் அந்த நீண்ட கதையைக் கேட்ட தால், துயிலிலிருந்து எழுபவன் போல் எழுந்தான். "ஏன் கதை போகிற போக்குக்கு என்ன?" என்று கேட்டான்.

"சோழநாடு செல்ல கலிங்கம் வந்தேன். ஆனால் இங்கு என் அதிர்ஷ்டம் என்னைத் தொடர்ந்து வந்திருக்கிறது. இங்கு கலிங்கத்தக்கும் சோழ நாட்டுக்கும் போர் ஏற்படும் போலிருக்கிறது" என்றான் குணவர்மன்.

"ஆம்; அப்படித்தான் தெரிகிறது" என்றான் இளைய பல்லவன்.

"உங்களைப் பற்றியும் அநபாய சோழரைப் பற்றியும் எங்கள் நாட்டில் கதைகள் உலாவுகின்றன இளைய பல்லவரே! உங்கள் இருவரில் ஒருவர் வந்து என் படை களுக்குத் தலைமை வகித்தாலே ஜெயவர்மனை வெற்றி கொள்ள முடியுமென்று மக்கள் நினைக்கிறார்கள். என் மந்திரிகளும் அப்படித்தான் சொன்னார்கள். ஆனால் இங்குள்ள நிலையைப் பாரும். இங்கு நீர் துரத்தப்பட்டு நானிருக்கும் மாளிகையில் பதுங்கியிருக்கிறீர். அநபாயர் ஏற்கெனவே சிறைப்பட்டிருக்கிறார். என் அதிர்ஷ்டத்தைப் பற்றி என்ன நினைக்கிறீர்?" என்றான் குணவர்மன், துன்பப் புன்முறுவல் கோட்டி.

குணவர்மனின் அதிர்ஷ்டம் நன்றாக விளங்கியது இளைய பல்லவனுக்கு. 'இவன் அதிர்ஷ்டம்தான் என்னை யும் அநபாயரையும் இந்த நிலைக்குக் கொண்டு வந்தி ருக்கிறது' என்று மனத்திற்குள் சபித்த இளைய பல்லவனை மட்டுமின்றிக் குணவர்மனையும், ஏன் காஞ்சனா தேவியை யும்கூட வியப்பில் அழுத்த வல்ல விசித்திர சம்பவ மொன்று திடீரென அந்த அறையில் நிகழ்ந்தது. அந்த நிகழ்ச்சியின் காரணமும் திறந்திருந்த சாளரத்தின் மூலமாக வெகு வேகமாக உள்ளே வந்தது.



# காட்டுப் புறாவும், வீட்டுப் புறாவும்

கலிங்கத்திற்குத் தென் கிழக்கிலும் தமிழகத்துக்கு நேர் கிழக்கிலும் வங்கக் கடலுக்கு அக்கரையில் விரிந்த ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தின் பெரும் சரித்திரத்தையும், துன்பமும் துரதிர்ஷ்டமும்• கலந்த அதன் சோகக் கதையையும் குணவர்மன் சொல்லி முடித்ததும் முடிக்காததுமாக, அவன் துயரத்தைத் துடைக்க வந்த தேவதூதன்போல் சாளரத்தின் மார்க்கமாக ஏதோ புயலால் உந்தப்பட்டது போல் வெகுவேகமாகச் சிறகடித்துக் கொண்டு வெண்புறா ஒன்று உள்ளே வந்து, சற்று அப்பாலிருந்த ஒரு மஞ்சத்தின் முகப்பில் உட்கார்ந்து அறையிலிருந்த மூவரையும் இரண்டு மூன்று முறை தலையை அசைத்து அசைத்து உற்றுப் பார்த்தது. வீடுகளில் புறாக்கள் வளர்க்கப்படுவதோ, தப்பிய ஓரிரு புறாக்கள் எதிர் இல்லங்களுக்குப் பறந்து சென்றுவிடுவதோ அப்படியொன்றும் வியக்கத்தக்க விஷய மல்லவென்றாலும், உள்ளே வந்த புறாவின் அபரிமித வளர்ச்சியும், அதன் கால்களுக்கிருந்த அளவுக்கதிகப்பட்ட நீளமும், மிகப் பெரிய அலகும் சாதாரணமாக அது கலிங்கத்திலோ தமிழகத்திலோ காணப்படும் புறாவல்ல வென்பதை நொடிப் பொழுதில் உணர்ந்து கொண்ட இளைய பல்லவனே மற்ற இருவரும் வியப்பிலிருந்து மீளுமுன்பாகத் தன்னை நிதானப்படுத்திக் கொண்டு சரேலென்று எழுந்து சென்று அந்தப் பெரும் புறாவைத் தன் இரு கைகளாலும் பிடித்து எடுத்தான். அப்படி அவன்

எடுத்துப் பிடித்துத் தடவிக் கொடுத்த போதும் அது எந்த வித சத்தத்தையும் கிளப்பாமல் திரும்பத் திரும்ப விழித்த தைக் கண்ட காஞ்சனாதேவி, மஞ்சத்திலிருந்து எழுந்து அவனிடம் வந்து, "அதோ, அந்தப் புறாவை இப்படி என்னிடம் கொஞ்சம் கொடுங்கள்" என்று கொஞ்சும் சொற்களைக் கொண்டு கெஞ்சினாள்.

ஆனால் இளைய பல்லவன் அவளுக்குப் பதிலேதும் சொல்லாமலும், அவள் கேட்டபடி புறாவைக் கொடுக்கா மலும் அந்தப் புறாவைத் திரும்பத் திரும்ப உற்றுப் பார்த்து விட்டுத் திடீரென சாளரத்தை நோக்கிச் சென்று வெளியே எட்டி நீண்ட நேரம் எதிர்சாரியிலிருந்த மாளிகைகளில் கண்களை ஓட்டினான். தப்பிச் சாளரத்துக்குள் ஓடிவந்து விட்ட புறாவைக் கண்டு முதலில் வியப்புக்குள்ளான குணவர்மனும் காஞ்சனாதேவியும் இளைய பல்வனின் அந்தப் புறா ஆராய்ச்சியையும், சாளரத்திடம் ஓடி வெளியே பார்த்து அவன் நடத்திய சோதனையையும் கண்டு அவற்றுக்குக் காரணம் புரியாதவர்களாய் அவனே வந்து விவரிக்கட்டுமென்று பேசாமலே நின்றுகொண்டிருந்தனர். நீண்ட நேரம் வெளியே யாரையோ பார்க்க முயன்றும் முடியாமையால், ஏமாற்றப் பெருமூச்சு விட்டுக் கொண்டு மீண்டும் அறையின் நடுவுக்கு வந்த இளைய பல்லவன் கடாரத்தின் அரசகுமாரியை நோக்கி, "காஞ்சனாதேவி! அதோ அந்த மூலையிலுள்ள தீபத்தைச் சற்று அருகில் கொண்டு வாருங்கள். இந்தப் புறாவைப் பரிசோதித்துப் பார்ப்போம்" என்று கூறினான்.

அரசகுமாரியின் அஞ்சன விழிகள் ஆச்சரியத்தால் மலர்ந்தன. "இன்னும் சோதிப்பதற்கு என்ன இருக்கிறது அதில்? இத்தனை நேரந்தான் துருவித் துருவிப் பார்த்தீர் களே" என்று அவள் சொற்கள் இனிமையுடன் உதிர்ந்தன. சாதாரண சமயமாக இருந்தால் அந்த இனிமையில் இளையபல்லவன் இதயத்தைப் பறிகொடுத்திருப்பான்.

ஆனால் அவன் இதயமும் சித்தமும் அந்தப் புறாவிடமே லயித்திருந்ததால் அந்த இனிமையைக்கூட கவனிக்காத வனாய், "அரசகுமாரி! இந்தப் புறாவை அத்தனை எளிதில் சோதித்துவிட முடியாது. சற்று அந்த விளக்கை எடுத்து வாருங்கள். நம் மூவர் கதியையும் இந்தப் புறாவே ஒருவேளை நிர்ணயிக்கக்கூடும்," என்றான்.

இதைக் கேட்ட அரசகுமாரி மட்டுமின்றி அதுவரை சோகத்தின் பிம்பமாயிருந்த குணவர்மன்கூட வியப்புக் குள்ளானதால் அவனும் கேட்டான்: "இதென்ன விசித் திரம் இளையபல்லவரே? இந்தப் புறாவா நமது கதியை நிர்ணயிக்க முடியும்? என் நாட்டின் பெரும்படைகளே அதை நிர்ணயிக்க முடியும்?"

இளையபல்லவனின் இடது கை புறாவைப் பிடித் திருந்தது. வலது கை அதை மெல்லத் தடவிக் கொடுத்துக் கொண்டிருந்தது. அத்துடன் குணவர்மன் கூறியதைக் கேட்டதும், அவன் இதழ்கள் இளநகை புரிந்தன. "ஆண்டவன் படைப்பில் எது அதிக பலமுள்ளது. எது சொற்பப் பலமுள்ளது என்பதை மனிதன் நிர்ணயிக்க முடியாது குணவர்மரே. மனிதனுக்குச் சிறு அலுவலைப் புரிவதற்கும் பெரும் ஆயுதங்கள் தேவை. ஆண்டவன் இஷ்டத்துக்கு வளைந்து கொடுக்கச் சிறு துரும்பும் போதும். உமது படைகள் சாதிக்க முடியாததை இந்த அற்பப் பறவை சாதித்தாலும் சாதிக்கும்" என்ற கருணாகர பல்லவன், "குணவர்மரே! உமது நாட்டில் புறாக்கள் இருக் கின்றனவா?" என்று ஏதோ சந்தேகம் கேட்பவன்போல் கேள்வியொன்றையும் விடுத்தான்.

இந்தக் கேள்வியின் அர்த்தத்தைப் புரிந்துகொள்ள முடியாத குணவர்மன் தன் மகளின் முகத்தை ஒருமுறை பார்த்துவிட்டு, பிறகு கருணாகர பல்லவனை நோக்கி, "புறாக்கள் இருக்கின்றன. அதற்கென்ன?" என்று வின வினான்.

"பெரும் புறாக்கள்?" என்று மீண்டும் அழுத்திக் கேட்டான் இளையபல்லவன்.

"இருக்கின்றன. சாவகத் தீவின் அடர்த்தியான காடு களில் இருக்கின்றன" என்றான் குணவர்மன்.

இந்தப் பதிலைக் கேட்டதும் குணவர்மனை நோக்கி இரண்டடி எடுத்து வைத்த கருணாகர பல்லவன், "இருக்க லாம் குணவர்மரே! ஆனால் இத்தனைப் பெரிய புறாவை நீங்கள் சாவகத்தின் காடுகளில் பார்த்திருக்க முடியாது. உங்கள் நாட்டு வணிகர்கள் எங்கள் புகார் நகருக்குப் பெரும் புறாக்களையும் நானாவிதக் கிள்ளைகளையும், சாவகத்தின் காடுகளிலிருந்து கொண்டுவந்து அரண்மனை களிலும் வணிகர் மாளிகைகளிலும் விற்கிறார்கள். நான் பார்த்திருக்கிறேன் அந்தப் புறாக்களை. விளையாட்டுக்கும் உணவுக்கும் உங்கள் நாட்டுப் புறாக்கள் பயன்படுகின்றன. ஆனால் அறிவுச் செயல்களுக்கு அவை உதவுவதில்லை. இப்பொழுது கவனியுங்கள் இந்தப் புறாவை" என்று அவரிடம் தன் இடது கையைத் தூக்கி அதிலிருந்து புறா வைக் காட்டி, "கிட்டத்தட்ட வல்லூரின் அளவுக்கு இந்தப் புறா வளர்ந்திருக்கிறது. இந்தச் சாதிப் புறாக்கள் உலகி லேயே அபூர்வமானவை. ஒரே ஒரு இடத்தில்தான் இருக் கின்றன" என்றான்.

"எந்த இடம் அது?" விஷயத்தைத் தெரிந்து கொள் வதற்காகக் கேட்டான் குணவர்மன்.

"பாரத நாட்டுக்கு மேல் திசையில் எரித்திரியக் கடல் இருக்கிறது..."

"ஆமாம்."

"அதன் மூலம் அரபு நாடுகளுக்குச் செல்லும் வழியில் இடையே கடலில் இருக்கிறது பறவைத் தீவு எனும் ஒரு தீவு."

"அப்படியா?"

"ஆமாம் குணவர்மரே! அந்தப் பறவைத் தீவில்தான் இத்தகைய பெரும் புறாக்கள் கிடைக்கின்றன. அந்தத் தீவை எந்த மரக்கலமும் அணுகுவதில்லை. அணுகும் கப்பல்களைக் கூட்டம் கூட்டமாக வரும் பறவைகள் அழித்துவிடும். ஆனால் தூரமாகப் பறந்து தனித்துவரும் சில புறாக்கள் வணிகர் கைகளில் சிக்குகின்றன. முக்கிய மாக யவன வணிகர்கள்தான் இவற்றைப் பிடித்துக் கொண்டு வருகிறார்கள். அவற்றை எங்கள் நாட்டு யவன வீரர்கள் வாங்குகிறார்கள்."

"வாங்கி?"

"தூது செல்லப் பழக்குகிறார்கள்."

இதைக் கேட்டதும் குணவர்மனுக்கும், காஞ்சனா தேவிக்கும் உண்மை மெள்ள மெள்ளப் புரியலாயிற்று. "அப்படியானால் இதுவும் தூதுப் புறாவா?" என்று ஏக காலத்தில் ஆச்சரியத்துடன் கேட்டார்கள்.

"ஆம்" என்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்த கருணாகர பல்லவன், "சந்தேகமில்லை குணவர்மரே! இந்தப் புறாவைப் பார்த்ததுமே இது தூதுப் புறாவென்பதைத் தெரிந்துகொண்டேன். இதன் பரிமாணமும் அலகும் நடத்தையும் அதைச் சந்தேகமற நிரூபித்தன" என்று வாய்விட்டுச் சொன்னான்.

"நடத்தையா?" என்று வியப்புடன் வினவினாள் காஞ்சனாதேவி.

"ஆம் அரசகுமாரி! ஆண்டவன் சிருஷ்டிக்கும் ஒவ்வொரு ஜீவராசிக்கும் நடத்தை உண்டு. மற்ற ஜீவராசிகள் பிறக்கும்போது உள்ள நடத்தையைவிட்டு மாறுவதில்லை. மனிதன்தான் மாறுகிறான். உதாரணமாக இதோ பாருங்கள்" என்று கூறிவிட்டுக் கையிலிருந்த புறாவைப் பறக்க

விட்டான். அந்தப் புறா எந்த இடத்துக்கும் செல்லாமல் சிறகடித்து மீண்டும் முதலில் உட்கார்ந்திருந்த மஞ்சத்தின் முகப்பிலேயே வந்து உட்கார்ந்தது.

"பார்த்தீர்களா அரசகுமாரி! முதலில் உட்கார்ந்த இடத்தைவிட்டு நகர்கிறதா இந்தப் பறவை? நகராது அரச குமாரி, நகராது. இதன் உடலில் எங்கோ மறைந்திருக்கும் செய்தி எடுக்கப்படும் வரையில் இது இந்த அறையை விட்டு வெளியே பறந்தும் செல்லாது. அவ்வளவு திறமை யுடன் யவனர்கள் அவற்றைப் பழக்குகிறார்கள்" என்று விளக்கினான் கருணாகர பல்லவன்.

"அப்படியானால் செய்தியை எடுத்துப் பாருங்களேன்" என்றாள் காஞ்சனாதேவி.

இளையபல்லவன் மெள்ளப் புன்னகை செய்துவிட்டுச் சொன்னான்: "செய்தியை எடுப்பது அத்தனை எளிதல்ல அரசகுமாரி" என்று.

"ஏன் எளிதல்ல? புறாவின் காலில்தானே கட்டு வார்கள் செய்தி ஓலையை?"

கருணாகரபல்லவன் உடனே பதிலேதும் சொல்லா மல், புறா உட்கார்ந்திருந்த மஞ்சத்திடம் சென்று, புறா வைப் பிடித்துக்கொண்டு வந்து, "இந்தாருங்கள் அரச குமாரி! நீங்களே சோதித்துச் செய்தியை எடுத்துக் கொடுங்கள்" என்று அந்த வெண் புறாவை அவளிடம் கொடுத்தான்.

காஞ்சனாதேவியின் அழகிய கரங்கள் அந்தப் புறாவை ஆசையுடன் பற்றின. அவள் அஞ்சன விழிகள் அதன் பட்டுக் கால்களை ஆராய்ந்தன. அந்த வெண்புறாவின் வழ வழத்த உடலைப் பலபடி திருப்பித் திருப்பிப் பார்த்தாள் அவள். கால்களிலோ அதன் உடலிலோ செய்திச் சுருள் ஏதுமில்லாததைக் கண்ட காஞ்சனா தேவியை நோக்கி மெல்ல நகைத்தான் கருணாகர பல்லவன்.

"எதற்கு நகைக்கிறீர்கள்?" என்று கோபத்துடன் கேட்டாள் அவள்.

"செய்தி கிடைக்கவில்லை போலிருக்கிறதே!"

"ஆமாம். இருந்தாலல்லவா கிடைக்கும்?"

"கால்களைப் பரிசோதித்தீர்களா?"

"ஆம், பரிசோதித்தேன்."

"கால்களில் ஓலையைக் கட்டி அனுப்பும் முறை பண்டையக் கால முறை அரசகுமாரி."

"உடலையும் பார்த்தேன்."

"அங்கும் கிடைக்கவில்லையாக்கும்."

"கிடைக்கவில்லை."

"உங்களுக்குக் கிடைக்காது அரசகுமாரி."

"ஏன்?"

"இது அந்தப்புர ஸ்திரீகள் வளர்க்கும் மாடப் புறா வல்ல. படைவீரர் வளர்க்கும் தூதுப் புறா. அதை ஆராயும் பொறுப்பைப் படைவீரர்களுக்கு விட்டுவிடுவது நல்லது."

"தங்களைச் சொல்லிக் கொள்ளுகிறீர்களாக்கும்?" என்றாள் காஞ்சனாதேவி கோபம் தொனிக்க.

"கோபம் வேண்டாம் தேவி. இப்படிக் கொடுங்கள் அந்தப் புறாவை. தூர இருக்கும் அந்த விளக்கைச் சற்று அருகில் கொண்டு வாருங்கள்" என்று கூறிய கருணாகர பல்லவன், காஞ்சனாதேவியின் கைகளிலிருந்து புறாவை வாங்கிக் கொண்டான். அதற்கு மேல் ஏதும் பேச இஷ்டப் படாததாலும், தூதுச் செய்தி ஏதாவது இருந்தால் அதை அறிந்துகொள்ள வேண்டுமென்ற ஆவலாலும் தூரத்தே யிருந்த கலிங்க நாட்டு மணிவிளக்கைத் தூக்கி வந்து

கருணாகர பல்லவனுக்கு அருகே நின்று ஒளியைப் புறாவின் மீது நிலைக்க விட்டாள் காஞ்சனாதேவி.

புறாவின் உடலைக் கையிலிருந்து விடுவித்துக் கால்களை மட்டும் பிடித்துக்கொண்டு அதை உயரத் தூக்கிய இளையபல்லவன் அதன் பெரும் இறக்கைகளைக் கூர்ந்து நீண்ட நேரம் கவனித்தான். பிறகு முன்னும் பின்னும் நீண்டு கிடந்த இறக்கைகளை ஒவ்வொன்றாகத் தூக்கித் தூக்கித் தன் விரல்களால் தடவினான். அந்தப் பட்சியை அவன் மிகவும் ஜாக்கிரதையாகத் தடவித் தடவி அதற்கு எதும் சிரமமில்லாமல் சோதிப்பதையும், அவன் விரல் படும் இடங்களில் அந்தப் பறவையும், நீண்ட நாள் அவனுடன் பழக்கப்பட்டதுபோல் இறக்கைகளைத் தூக்கித் தூக்கிக் காட்டியதையும் கண்ட காஞ்சனாதேவி பெரிதும் ஆச்சரியத்தில் ஆழ்ந்தாள். 'தூதுப் புறா சோதனையிலிருந்து சகல போர்த் தந்திரங்களையும் அறிந்திருப்பதால்தான் இவர் புகழ் கடாரம் வரையில் பரவியிருக்கிறது' என்று சொல்லிக் கொண்டாள் அவள். அத்துடன் ஒரு விஷயம் ஆச்சரியமாகவுமிருந்தது கடாரத்தின் இளவரசிக்கு. 'இத்தனை மெல்லிய பறவையின் இறகில் செய்தி ஓலையை எப்படி அடியோடு மறைக்க முடியும்?' என்றும் தன்னைத் தானே கேட்டுக் கொண்டாள் அவள்.

குணவர்மன் மனத்தில் ஏதேதோ எண்ணங்கள் எழுந்து அலைமோதிக் கொண்டிருந்தன. 'உண்மையில் இது தூதுப் புறாதானா? இல்லை, இளையபல்லவன் இல்லாததைக் கற்பனை செய்கிறானா? தூதுப் புறாவாயிருந்தால் இது எந்தவிதத் தூதைக் கொண்டு வந்திருக்க முடியும்? இதில் ஏதாவது நமக்கு விடிமோட்சமுண்டா?' என்று ஏதேதோ யோசித்துக் கொண்டும் அடிக்கடி புறாவையும் கருணாகர பல்லவனையும் பார்த்துக்கொண்டும் நின்றான்.

கருணாகர பல்லவன் குணவர்மனையோ, அருகே பிம்பம்போல் நின்ற காஞ்சனாதேவியையோ ஏறெடுத்தும்

பார்க்காமல், தன் சோதனையிலேயே முனைந்தான். புறாவின் ஒரு புறத்து இறக்கைகளை விரல்களால் தடவித் தடவிச் சோதித்த பிறகு, மற்றொரு பக்கத்துக்காக அதைத் திருப்பி அந்தப் பகுதிகளையும் சோதித்தான். அந்தப் பகுதியின் இறக்கைகளுக்குள்ளும் அவன் விரல்கள் நீண்ட நேரம் துழாவிக் கொண்டிருந்த சமயத்தில் ஏதோ ஓரிடத்தில் அவன் விரல் பட்டதும் அந்தப் புறா 'கூ...கூ...' என்று திடீரெனச் சத்தமிட்டது. அந்த இடத்தில் வைத்த ஆள்காட்டி விரலை அகற்றாமல் விளக்குக்காக நன்றாகப் புறாவை உயரத் தூக்கிய இளையபல்லவன், வேலினும் கூரிய தன் விழிகளை இறக்கையின் அந்தப் பகுதியில் ஓட்டி, மற்றும் இரண்டு விரல்களை இறக்கையின் அந்தப் பகுதியில் புகவிட்டு, இறக்கையும் உடலும் இணைந்த இடத்திலிருந்து சின்னஞ்சிறு பட்டுத் துணியொன்றை வெளியே எடுத்தான்.

அந்தப் பட்டுத் துணியின் பரிமாணத்தைப் பார்த்துக் காஞ்சனாதேவி மட்டுமல்ல, குணவர்மனும் ஆச்சரியத்தின் எல்லையை எய்தினான். தென்னை ஈர்க்கின் கனமும் அரைச் சுண்டுவிரல் அகலத்துக்குமாகச் சுற்றப்பட்டிருந்த அந்தப்பட்டுத் துணி எத்தனை நீளமிருக்கும், அதில் செய்தியைத்தான் எப்படி எழுத முடியும் என்று நினைத்துப் பார்க்க முடியாத அந்த ஸ்ரீவிஜய பெருமக்கள் இருவரும் வியப்பு முகங்களில் நன்றாகப் பிரதிபலிக்கக் கருணாகர பல்லவனை உற்று நோக்கினார்கள். அவர்கள் முகங்களில் படர்ந்த ஆச்சரிய ரேகையைக் கவனித்த கருணாகர பல்லவன் உதடுகளில் லேசாகப் புன்முறுவல் காட்டி, “உங்களுக்கு இது ஆச்சரியமாகத்தானிருக்கும். ஆனால் தமிழகத்திலிருக்கும் எங்களுக்கு அது அதிசயமல்ல?” என்று கூறி, நன்றாக இறுக்கிச் சுருட்டப்பட்டிருந்த அந்தப் பட்டு சுருளை தன் விரல்களால் மெல்ல மெல்லப் பிரித்தான். சுருள் பிரியப் பிரிய அந்தப் பட்டுத் துணி நீண்டது. கிட்டத்

தட்ட ஓர் அடிக்கு மேல் நீண்டு, பஞ்சினும் மெல்லிய தாய்க் காணப்பட்ட அந்தப் பட்டில் செய்தியொன்று பொறிக்கப்பட்டதற்கு அடையாளமாக எழுத்துகள் சிவப்பாகத் தெரிந்தன. வெண்பட்டில் சிவப்பாகத் தெரிந்த அந்த எழுத்துகள் கலிங்கத்தின் விளக்கொளியில் பெரும் நெருப்புத் துண்டங்களைப்போல் பளபளத்தன.

"ஆச்சரியம் ஆச்சரியம்!" என்று வாய்விட்டே சொன் னான் குணவர்மன். அந்தப் பட்டுச் சீலை விரிந்த விந்தை யைக் கண்டு.

"உங்களுக்கு இது ஆச்சரியம்தான் குணவர்மரே" என்றான் இளைய பல்லவன்.

"இத்தனை மெல்லிய பட்டுத் துணி இருக்கக் கூடு மென்று நான் கேள்விப்பட்டதுகூட இல்லை" என்றான் குணவர்மன்.

"நீங்கள் கேள்விப்படாதிருக்கலாம். ஆனால் ரோமா புரியும் மற்ற மேல்நாடுகளும் கேள்விப்பட்டிருக்கின்றன. சீனத்துப் பட்டுக்கு அடுத்தபடியாக எங்கள் மெல்லிய பஞ்சு உடைகளும் பட்டு உடைகளும்தான் ரோம சாம் ராஜ்யத்தில் வாங்கப்படுகின்றன. இறக்கைக்குள் அடையக் கூடிய இந்தச் சிறு பட்டுத் துணியைப்பற்றி ஆச்சரியப்பட வேண்டாம். அரசகுமாரி உடுக்கக்கூடிய பெரும் சேலை ஒரு கைக்குள் அடங்கும்படியான ஆடைகளையும் எங்கள் நெசவாளர்கள் தயாரிக்கிறார்கள்."

"அப்படியா!" என்று வினவினாள் காஞ்சனாதேவி.

"ஆம் அரசகுமாரி! ஒருவேளை இந்தக் கலிங்கத்தி லிருந்து நாம் தப்பிச் சோழ நாடு சென்றால், அத்தகைய பட்டாடை ஒன்று இந்த அடிமையின் பரிசாகத் தங்க ளுக்கு அளிக்கப்படும்" என்று பதில் சொன்ன கருணாகர பல்லவன், "அதிருக்கட்டும் அரசகுமாரி, இந்தச் செய்தியை முதலில் படிப்போம். விளக்கை இன்னும் சற்று அருகில்

காட்டுங்கள்" என்று கூறவே அரசகுமாரி விளக்கை அவன ருகில் காட்டினாள்.

மெள்ள மெள்ள விரித்துப் பிடித்த அந்தச் சின்னஞ் சிறு பட்டுத் துணியில் காணப்பட்டவை நாலைந்து வரிகளென்றாலும், அவற்றில் அவர்கள் விமோசனத்துக் கான செய்தியே விரிந்து கிடந்தது. அந்த நாலைந்து வரிகளைப் படித்துக்கொண்டே போன இளைய பல்லவ னின் முகம் திடீரெனப் புத்தொளி பெற்றது. அவன் கண் களில் எல்லையற்ற மகிழ்ச்சி தாண்டவம் ஆடியது. "நினைத்தேன்! நினைத்தேன் அப்பொழுதே!" என்று இரைந்து கூவிக்கொண்டு திடீரென்று மஞ்சத்தை விட்டு எழுந்தான் கருணாகர பல்லவன்.

அவன் மகிழ்ச்சிக்கும் பேச்சுக்கும் காரணம் புரிந்து கொள்ளமுடியாத தந்தையும் மகளும் ஒருவரையொருவர் சில விநாடிகள் பார்த்துக் கொண்டனர். கடைசியில் குணவர்மனே கேட்டான்: "என்ன நினைத்தீர்கள் இளைய பல்லவரே?" என்று.

"புலியைச் சிறையிலடைப்பது கஷ்டமென்று."

"எந்தப் புலியை?"

"இந்தப் புலியைத்தான்" என்று குணவர்மனிடம் அந்தப் பட்டுத் துணியை நீட்டினான் இளைய பல்லவன். அந்தப் பட்டுத் துணிமீது ஏக காலத்தில் கண்களை ஓட்டிய குணவர்மனின் முகத்திலும், காஞ்சனாதேவியின் முகத்திலும் பிரமிப்பு மட்டுமின்றி ஏதோ புதையலைத் திடீரென்று பிடித்துவிட்டது போன்ற நம்பிக்கையொளியும் சுடர் விட்டது.

"கடாரத்தின் மன்னருக்குப் பயம் வேண்டாம். மூன்று நாள்கள் அங்கேயே இருங்கள். பல காரியங்கள் நடக்கும். இடையூறு செய்ய வேண்டாம்— அநபாயன்" என்று கண்டிருந்தது.

அந்த ஓலையைத் திரும்பத் திரும்பப் படித்த குணவர்மன், "இளைய பல்லவரே! இந்தக் கையெழுத்து அநபாயரதுதானா?" என்று சந்தேகத்துடன் வினவினான்.

"ஆம், அவருடையதுதான்."

"அப்படியானால் அவர் தப்பியிருக்க வேண்டும்."

"தப்பித்தான் இருக்க வேண்டும்."

"கலிங்கத்தின் சிறையிலிருந்து தப்புவது அவ்வளவு எளிதா?"

"எளிதல்ல குணவர்மா! ஆனால் அநபாயரின் திறமை எல்லையற்றது. அவரை எந்த இடத்திலும் அடைத்து வைப்பது கஷ்டம்."

"ஏதோ எனக்கும் அதிர்ஷ்டமிருப்பதாகத் தெரிகிறது இளைய பல்லவரே. எப்படியாவது அநபாயர் வந்து நம்மை விடுவித்து, சோழநாடு அழைத்துச் சென்றால் நான் வந்த காரியம் கைகூடும்" என்று கூறி ஆயாசம் தீர்ந்ததற்கு அறிகுறியாகப் பெருமூச்சு விட்டான் குணவர்மன்.

"முதலில் இங்கிருந்து தப்பும் மார்க்கத்தைப் பார்ப் போம் குணவர்மரே! இப்பொழுது நாம் செய்ய வேண்டிய தெல்லாம் மூன்று நாள்கள் காத்திருப்பதுதான்" என்று விளக்கினான் கருணாகர பல்லவன்.

அதற்கு மேல் பேசுவதற்கு ஏதுமில்லாததால், "சரி இளைய பல்லவரே இரவும் ஏறிக்கொண்டிருக்கிறது. நீங்கள் படுக்கச் செல்லுங்கள். காஞ்சனா! இவருக்கு எந்த அறை யைக் கொடுக்கலாம்?" என்று வினவினான்.

"எந்த அறைக்குள் ஏறிக் குதித்தாரோ அந்த அறை யையே கொடுக்கலாம்!" என்றாள் காஞ்சனாதேவி.

"சரி அப்படியே செய். பணிப் பெண்களை விட்டு வேண்டிய வசதிகளைச் செய்து கொடு" என்று குணவர்

மன் கூறியதும் தன்னுடன் வரும்படி இளைய பல்லவ னுக்குச் சைகை செய்த காஞ்சனாதேவி அறையை விட்டு வெளியேறத் திரும்பினாள். கருணாகர பல்லவன் தூதுப் புறாவை மீண்டும் கையில் பிடித்துக் கொண்டு அவளைத் தொடர்ந்தான்.

மீண்டும் அந்தப் பழைய மாடியறையை அடைந்ததும், "உள்ளே செல்லுங்கள்" என்று கூறிய காஞ்சனாதேவி வாயிற்படிக்கு வெளியிலேயே நின்றாள்.

"ஏன்? நீங்கள்?" என்று மெள்ள இழுத்தான் இளைய பல்லவன்.

"ஊஹூம் நீங்கள் மட்டும் போங்கள்."

"நான் வேண்டுமானால்..."

"என்ன சொல்கிறீர்கள்?"

"திரைக்குப் பின்னால் ஒளிந்து கொள்கிறேன்..."

அதைக் கேட்ட காஞ்சனாதேவி கலகலவென நகைத் தாள். "இளைய பல்லவருக்கு ஏற்கெனவே இத்தகைய பழக்கம் பலம் போலிருக்கிறது" என்றும் சொன்னாள் சிரிப்புக்கிடையே.

இளையபல்லவன் கையிலிருந்த பறவைத் தீவின் காட்டுப் புறா, இருமுறை சிறகடித்தது. கடாரத்தின் வீட்டுப் புறா ஒருமுறை நெளிந்தது. இரண்டு புறாக்களை யும் மாறி மாறிப் பார்த்த கருணாகர பல்லவனின் மனம் புத்தம் புதிய கனவுலகத்தில் பறந்துகொண்டிருந்தது. அவன் கண்கள் மிகுந்த தைரியத்துடன் எதிரே இருந்த வீட்டுப் புறாவின்மீது நிலைக்கவும் செய்தன.

அத்தியாயம் 8

# அபாய அறிவிப்பு!

அந்த இரவில், அறை ஜாமத்திற்கு முன்பு, எந்த முன்னறிவிப்புமின்றிச் சாளரத்தின் மூலம் திடீரென வந்து குதித்துத் திரை மறைவில் பதுங்கிய இளையபல்லவன், சில நாழிகைக்குள்ளாகவே தன்னுடன் நீண்ட நாள் பழக்க முள்ளவன் போல் நடந்துகொள்ளத் துவங்கிவிட்டதையும் படுக்கச் செல்லும் அந்த நேரத்திலும் இடக்கு வார்த்தைகள் பேச முற்பட்டதையும் கண்ட காஞ்சனாதேவிக்கு, அவன் மீது எல்லையற்ற கோபம் சுடர்விடுவதே இயற்கையென் றாலும் அந்த இயற்கைக்கு இதயம் இடம் கொடாமல், உள்ளம் பூராவும் மகிழ்ச்சி வெள்ளம் பாயவே, அவள் அறை நாதாங்கியைப் பிடித்த வண்ணம் இடை சிறிது நெளிய மிக ஒய்யாரமாக நின்றாள். தவிர, இளைய பல்லவன், அவன் கையிலிருந்த காட்டுப் புறாவையும் நோக்கித் தன்னையும் நோக்குவதைக் கண்டதும் சிறிது புன்முறுவலும் கோட்டினாள் கடாரத்தின் இளவரசி. இளைய பல்லவன் அவள் நின்ற அழகையும், உள்ளே ஓடிய எண் ணங்களின் விளைவாக அவள் உதடுகளில் தோன்றிய புன்னகையையும் கவனித்ததன்றி, அவள் கழுத்தில் வளைய வந்து மார்பில் தொங்கிய நவரத்தின மாலையை யும் பார்த்து அவள் புன்னகையின் ஒளிக்கு முன்பு அந்த நவரத்தின மாலையின் ஒளி எத்தனை சர்வ சாதாரண மானது என்பதை நினைத்து வியந்தான். எத்தனையோ பளபளப்பான கற்களை உலகத்தில் ஆண்டவன் சிருஷ்டித்

திருந்தும், அவற்றுக்குப் பின்பு தொக்கி நிற்க உணர்ச்சி யாகிற ஒளியை மட்டும் சிருஷ்டிக்காத காரணத்தினா லேயே ஒரு பெண்ணின் இளநகை முன்பு இரத்தின வைடூரியங்களும் ஒளியிழந்து விடுகின்றன என்பதை எண்ணி ஆச்சரியத்தில் ஆழ்ந்தான். காஞ்சனா தேவியின் கண்களும் உதடுகளும், உணர்ச்சிகளின் விளைவாகப் பேசும் பேச்சுகளுக்கு ஈடு கொடுக்க முடியாமல் நவரத்தின மாலையின் வைடூரியங்கள் எத்தனை மௌனத்தையும், சங்கடத்தையும் அடைந்திருக்கின்றன என்பதையும் இளையபல்லவன் அலசிப் பார்த்து, 'விளக்கில் இவை பளிச்சுப் பளிச்சென்று மின்னுவதற்கும் அந்தச் சங்கடம் தான் காரணமாயிருக்க வேண்டும்' என்று தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டான். செயற்கைக் கற்கள் சிறிதளவும் ஈடு கொடுக்க முடியாத இயற்கை லாவண்யங்களுடன் திகழ்ந்த காஞ்சனாதேவிக்கு ஆபரணங்கள் அனாவசியம் என்றே முடிவுக்கு வந்த கருணாகர பல்லவன், சொர்ணச் சாயை யுடனும் பட்டு போல் மென்மையுடனும் விளங்கிய அவள் கழுத்தையும், கன்னங்களையும் ஒருமுறை தடவிப் பார்த்துத் தன் இடது கையிலிருந்த வெண்புறாவின் முதுகை மெல்லத் தடவிக் கொடுத்தான்.

அவன் கண்கள் பாய்ந்த இடங்களைக் கவனித்த காஞ்சனாதேவி அவன் புறாவின் முதுகைத் தடவியதும் தன் கபோலங்களையே அவன் வருடிவிட்டது போல் பெரிதும் சங்கடத்துக்குள்ளாகி, தலையைச் சரேலென்று மறுபுறம் திருப்பிக் கொண்டாள். அப்படித் திருப்பியதால் தன் பார்வைக்கு நேரெதிரில் வந்துவிட்ட அவள் வலது கன்னத்தில் வெட்கத்தின் குருதி பாய்ந்து அதைச் செக்கச் செவேலென்று அடித்துவிட்டதைக் கண்ட இளையபல்லவ னும், தான் வரம்பு மீறிவிட்டதை உணர்ந்து, பேச்சினால் உணர்ச்சிகளுக்குத் தளைபோட முற்பட்டு, "காஞ்சனா தேவி!" என்று ஒருமுறை அழைத்தான்.

அவளிடமிருந்து ஒரு "ஹூம்"காரந்தான் பதிலாக வந்தது.

"நான்..." சிறிது தடுமாறியே பேசினான் அந்த வீரன்.

"ஹூம்" அப்பொழுதும் அதே சத்தம்தான் வந்தது அவளிடமிருந்தது. அந்தச் சத்தத்தில் சங்கடத்துடன் ஓரளவு கடுமையும் கலந்திருந்தது.

"விளையாட்டாகப் பேசிவிட்டேன்" என்று மறுபடி யும் பேச்சைத் துவங்கி, முடிக்க முடியாமல் திணறினான் இளையபல்லவன்.

"ஹூம்!"

"மன்னிப்புக் கேட்கிறேன்."

"ஹூம்! ஹூம்."

"இந்த ஹூம்முக்கு மேல் வார்த்தைகளே வராதா உங்களுக்கு?" இம்முறை இளையபல்லவன் சொற்களில் சிறிது தைரியமும் தொனித்தது.

சரேலெனத் திரும்பிய காஞ்சனாதேவியின் கண்களில் மிகுந்த கம்பீரமும் மிதமிஞ்சிய கடுமையும் கலந்திருந்தன. உரிமையற்ற ஆடவன் அதிக உரிமை கொண்டாட முயலும்போது கற்புக்கரசிகளின் இதயத்தில் ஏற்படும் உக்கிரம் அந்தக் கண்களில் இருந்தது. "வார்த்தைகள் வரும் இளைய பல்லவரே! நிரம்ப வரும், வரம்புக்குள் சம்பாஷ ணையும் செய்கையும் இருக்கும் பட்சத்தில்" என்ற அவள் சொற்களிலும் அந்தக் கடுமை நன்றாகப் புலனாயிற்று. இப்படிப் பேசிய அந்த அழகி, அதுவரையிருந்த சங்கடத் தையும் சலனத்தையும் உதறிக்கொண்டு நெளிந்த நிலை யிலேயே சிறிது நிமிர்ந்து கம்பீரத்துடன் நின்றாள்.

ஆளும் தோரணையில் நின்ற அந்த ஆரணங்கைக் கவனித்த இளையபல்லவனின் விழிகள், அவள் விழிகளி லிருந்து தப்பவே முயன்றன. பத்து வாள்கள் வீசப்பட்டா லும் அவற்றை உறுதியுடன் நோக்கவல்ல அவன் கண்கள்

அந்தப் பெண்ணின் பார்வைக்கு முன்னால் உறுதி குலைந்து நிலை தடுமாறின. அவன் பேசிய சொற்களும் அப்படி உறுதி குலைந்து தழுதழுத்தே வெளிவந்தன. "புரிகிறது அரசகுமாரி! தவறு புரிகிறது!" என்ற சொற்களைத் தட்டுத் தடுமாறியே உதிர்த்தான் இளையபல்லவன்.

சில வினாடிகள் முன்பு தன்னை அலசிய கண்கள் நிலைகுலைந்து, பெண்களின் கண்களைப்போல் நிலத்தை நோக்குவதைக் கண்டாள் கடாரத்துக் கட்டழகி. புறாவைப் பிடித்திருந்த இடது கையும் அதன் முதுகைத் தடவிய வலது கையும் சற்றே நடுங்குவதையும் பார்த்த அந்தப் பேரழகியின் முகத்திலிருந்த கோபம் மெள்ள மெள்ள அகன்றது. 'இவர் மிகுந்த பண்பாடுள்ளவர். அதனால்தான் தவறை உணர்ந்ததும் நடுங்குகிறார். பாவம்! எதற்காக இத்தனைக் கடுமையை இவரிடம் காட்டினேன்!' என்று தனக்குள் எண்ணமிட்டாள் காஞ்சனாதேவி. அத்துடன், 'ஆண்களின் சலனத்துக்குப் பாதி பெண்கள்தானே காரணம்? பெண்கள் கொடுக்கும் இடத்தால்தானே ஆண்கள் வரம்பு மீறுகிறார்கள்? இவர் திரை மறைவி லிருக்கிறேனென்று சொன்னதும் நான் நகைத்தது மட்டும் சரியா? பெண்மைக்கு அழகா?' என்று தன்னையும் கண்டித்துக் கொண்ட காஞ்சனாதேவி, பேச்சை வேறு திசையில் மாற்றி, "இரண்டாம் ஜாமம் துவங்கிவிட்டது இளைய பல்லவரே!" என்றாள்.

"ஆம், அரசகுமாரி! ஊரும் மெள்ள மெள்ள அடங்கி வருகிறது. கப்பல் துறையிலும் கூச்சல் அதிகமாகக் காணோம். வீதியிலும் ஜனநடமாட்டம் குறைந்துவிட்டது" என்று சம்பாஷணையில் கலந்துகொண்டான் கருணாகர பல்லவன், சிறிது தைரியத்தை வரவழைத்துக் கொண்டு.

"வீதியில் மட்டுமல்ல, வீட்டிலும் சத்தத்தைக் காணோம்."

"ஆமாம், உறங்கும் நேரம் வந்துவிட்டது! உங்கள் பணிப்பெண்கள் காத்திருப்பார்கள், செல்லுங்கள்."

"நீங்களும் உறங்குங்கள். அதோ மஞ்சமிருக்கிறது. விடி விளக்கும் அறை மூலையிலிருக்கிறது. வேறெதாவது தேவை யானால் சொல்லுங்கள்" என்று கேட்டாள் காஞ்சனா தேவி.

"வேறெதுவும் தேவையில்லை, அரசகுமாரி. மஞ்சம் கூடத் தேவையில்லை. என்னால் தரையிலும் படுத்து உறங்க முடியும். ஆனால் இன்றிரவு உறக்கம் பிடிப்பது கஷ்டம்" என்று பதில் கூறினான் கருணாகர பல்லவன்.

அவன் பதிலைக் கேட்டதும் ஒருமுறை மிரண்டு விழித்தாள் அவள். இளையபல்லவன் மீண்டும் பழைய பல்லவியைப் பாடவும், பழைய ஆராய்ச்சியைத் தொடங்க வும் முற்பட்டுவிட்டானோ என்ற திகைப்பால், "ஏன் உறக்கம் பிடிக்காது இளைபல்லவரே!" என்று தைரியமாகக் கேட்கவும் செய்தாள்.

அவள் விழித்ததையும், விழிப்பிலிருந்த திகைப்பையும் கருணாகர பல்லவன் கவனிக்கவே செய்தான். அவற்றின் பொருளும் அவனுக்குப் புரிந்துதானிருந்தது. ஆகவே அவ ளுக்குத் தைரியத்தை ஊட்டச் சொன்னான், "அரசகுமாரி! காரணம் நீங்கள் நினைப்பதல்ல. சித்தத்தில் சிக்கல்கள் பல சூழ்ந்திருக்கின்றன."

"என்ன சிக்கல்கள்!"

"அரசியல் சிக்கல்கள். உங்கள் நிலை, என் நிலை, அநபாயர் நிலை."

"ஆம், ஆம். எல்லோர் நிலையும் அபாய நிலைதான்."

"சாதாரண அபாய நிலையல்ல, அரசகுமாரி. நமது உயிர்களை மட்டும் பாதிக்கக்கூடிய நிலையல்ல. பெரிய அரசுகளைப் பாதிக்கக் கூடியது!"

"பெரிய அரசுகளையா?"

"ஆம், சோழநாடு, வேங்கிநாடு, கலிங்கநாடு, கடாரம் இத்தனையையும் பாதிக்கக்கூடிய சிக்கல்கள் இந்த ஒரே நகரத்தில் பாலூர்ப் பெருந்துறையில் ஏற்பட்டிருக்கின்றன."

"புரிகிறது இளையபல்லவரே!"

"என்ன புரிகிறது, அரசகுமாரி? உங்களுக்குப் புரிவதெல்லாம் இந்தப் பாலூர்ப் பெருந்துறையில் நமக்கிருக்கும் ஆபத்துதான். ஆனால் சந்தர்ப்பங்கள் எப்படி அமைந்திருக்கின்றன பாருங்கள். சாதாரணக் காலத்தில் நீங்கள் கலிங்கம் வந்திருந்தால் இங்கிருந்து சோழநாட்டுக்கு எவ்விதத் தடையுமின்றிப் பயணம் செய்திருக்கலாம். சோழ நாட்டுடன் கலிங்கம் போரிட ஏற்பாடு செய்யும் சமயத்தில் வந்திருக்கிறீர்கள். அதுவும் நான் கலிங்கத்தில் கால் வைத்த இந்த தினத்தில் நிலைமை மிகவும் முற்றிவிட்டது. கலிங்கத்துக்கும் எனக்கும் போதாத அம்சங்கள் பலவற்றைச் சூழ்நிலை சுட்டிக் காட்டுகிறது. என் மனத்தில் ஏதேதோ எண்ணங்கள் எழுந்து மோதுகின்றன. கலிங்கத்தால் நான் அழிவேனா அல்லது என்னால் கலிங்கம் அழியுமா என்பதுகூடப் புரியவில்லை எனக்கு. காலம்தான் இதற்குப் பதில் சொல்லும்" என்று ஏதோ தீர்க்கதரிசி போல் பேசினான் கருணாகர பல்லவன்.

பாலூர்ப் பெருந்துறையில் ஏற்பட்டுள்ள நிலைமைக்கு அத்தனை தூரம் கற்பனை தேவையில்லை என்று நினைத்த கடாரத்து இளவரசி, "இளையபல்லவர் மதிப்பீடு அளவுக்கு மீறியிருக்கிறது. போர்கள் அத்தனை சீக்கிரமாக ஏற்படுமா?" என்றாள்.

கருணாகர பல்லவன் துன்பப் புன்முறுவலொன்றை இதழ்களில் படரவிட்டான். "அரசகுமாரி! தமிழகத்தை நீங்கள் அறியமாட்டீர்கள். தமிழர்கள் எந்த நஷ்டத்தையும் பொறுப்பார்கள். மான நஷ்டத்தை மட்டும் பொறுக்க மாட்டார்கள். ராஜராஜ சோழரும், ராஜேந்திர சோழரும்

ஏன், இன்று அரியணை எறியிருக்கும் வீரராஜேந்திர சோழ தேவர்கூட ராஜ்ய விஸ்தரிப்புக்காகப் போர்களில் இறங்க வில்லை. அக்கம் பக்கத்து நாடுகள் கடைபிடித்த கொள்கை கள், தமிழருக்கு விளைவித்த அநீதிகள், இவற்றாலேயே போரில் இறங்கினார்கள். சோழர் படைகள் என்றும் போருக்குச் சித்தமானவை. மிகப் பலமானவை. ஆனால் சின்னஞ்சிறிய ஆட்டுக்குட்டி போன்ற கலிங்கம், புலியுடன் விளையாடத் துவங்கியிருக்கிறது. இரண்டு நாடுகளுக்கு மிடையே போரை எதிர்பார்க்கிறேன். கலிங்கத்துப் பீமன் தமிழர்கள் பலரைச் சிறையில் தள்ளியிருப்பதே போர் நிகழப் போதிய காரணம். தவிர, அநபாயரையும் சிறை செய்தானென்றால் கேட்க வேண்டியதில்லை. அந்த ஒரு குற்றத்துக்கு இந்த நாட்டை நானே கொளுத்திவிடுவேன்! என்றோ ஒருநாள் இந்த நாடு என் கையால் நாசமடையும்!" என்று உணர்ச்சி பொங்கக் கூறினான் கருணாகர பல்லவன்.

அவன் உணர்ச்சி ஆவேசத்தைக் கண்டு அரசகுமாரி அசந்து போனாள். சற்று முன்பு காதல் விஷயத்தில் அதைரியத்துடன் உலாவிய கண்கள், போரை எண்ணும் போது உணர்ச்சி வேகத்தில் சுழல்வதை எண்ணி வியந்தாள் அவள். தீர்க்கதரிசிபோல் அன்று அவன் பேசிய பேச்சு அவளுக்கு விசித்திரமாயிருந்தது. 'கலிங்கத்தின் நிலை சரியில்லைதான். ஆனால் அநபாயர் தப்பிவிட்டார். இனி இவரும் நாங்களும்கூடத் தப்பலாம். அதற்கு உதவத்தான் கோடிக்கரைக் கூலவாணிகன் இருக்கிறான். அநபாயரும் தூதுப் புறா மூலம் தைரியம் சொல்லி ஓலை அனுப்பி யிருக்கிறார். எல்லோரும் தப்பிச் சோழ நாடு சென்று விட்டால் இரண்டு நாடுகளுக்கும் பேச்சு வார்த்தை யிலேயே சமரசம் ஏற்படலாம்' என்று நினைத்தாள் அவள்.

காலம், கருணாகர பல்லவன் வார்த்தைகளைத்தான் சரியென நிரூபித்தது. பிற்காலத்தில் தொண்டைமான்

என்ற சிறப்புப் பெயர் பெற்றுப் பெரும் படைகளுடன் கலிங்கத்தின்மீது படையெடுத்து அழிக்கவிருந்த இளைய பல்லவன் அப்படியொரு காலம் வரும் என்பதை அந்த இரவில் நினைக்காவிட்டாலும், தமிழர்களுக்குக் கலிங்கம் இழைத்த அநீதிகளை எண்ணி அவன் இதயம் கொந்தளித்தது. அந்தக் கொந்தளிப்பின் விளைவாக உணர்ச்சி வசப்பட்டுப் பேசிவிட்ட கருணாகர பல்லவன் மெள்ள மெள்ளச் சுயநிலை திரும்பி, "அரசகுமாரி! உணர்ச்சி வசத்தால் ஏதேதோ பேசிவிட்டேன். நீங்கள் உறங்கச் செல்லுங்கள்," என்று முடிவாகக் கூறினான்.

மேற்கொண்டு ஏதும் பேசாமல் திரும்பிய காஞ்சனா தேவியை, "அரசகுமாரி!" என்று மீண்டும் அழைத்துத் தடுத்த கருணாகர பல்லவன், "இதைப் பிடியுங்கள்!" என்று தூதுப் புறாவை அவளிடம் நீட்டினான்.

அதை ஆசையுடன் வாங்கி மார்பில் அணைத்துக் கொண்டாள் அரசகுமாரி. ஒரு கையால் அதைத் தடவிக் கொடுத்துக் கொண்டும் சொன்னாள், "அப்பா! சீனத்துப் பட்டைவிட எத்தனை மென்மை? எத்தனை வழவழப்பு!" என்று.

"ஆம் அரசகுமாரி," என்றான் இளையபல்லவன் புன்முறுவலுடன்.

"அழகில் இணையற்றது."

"அறிவிலும் இணையற்றது."

"தூது செல்லும். அவ்வளவுதானே?"

"அது மட்டுமல்ல அரசகுமாரி. பழகினால் பல அலுவல்களைச் செய்யும். செய்தி தீட்டிய பட்டுத் துணியை இறக்கைகளில் மறைத்து அனுப்புவது மட்டுமல்ல, ஒரு முறை சைகை காட்டிக் குறிப்பினால் அறிவித்தால் மூக்கினாலும் ஓலைகளை எடுத்துச் செல்லும். உட்காரச் சொல்லும் இடங்களில் உட்காரும். மறையச் சொன்னால் மறையும். வேவும் பார்க்கும்."

அரசகுமாரி வியப்பு மிதமிஞ்சியது. "வேவு பார்க்குமா!" என்று கேட்டாள் அவள் வியப்புக் குரலிலும் ஒலிக்க.

"பார்க்கும்."

"பார்த்து எப்படி வந்து சொல்லும்?"

"எதிரிகள் நடமாட்டம் சமீபத்தில் இருந்தால் சிறகைப் பலமுறை அடித்துக் கொள்ளும். நின்ற இடத்தில் நிற்காது. அங்கும் இங்கும் தத்தி அவஸ்தைப்படும். நாம் செயலற்று இருந்தால் கையை அலகால் கொத்திக் காயப்படுத்தவும் செய்யும். புகாரின் யவனர்கள் இப்படியெல்லாம் இப்புறாக் களைப் பழக்குகிறார்கள்."

ஆச்சரியத்துக்குள்ளான அரசகுமாரி அதற்குமேல் ஏதும் சந்தேகம் கேட்காமல், "வருகிறேன் இளைய பல்லவரே! இரவில் ஏதாவது அபாயம் நேர்ந்தால் புறாவை அனுப்புகிறேன்" என்று சொல்லி நகைத்து விட்டுச் செல்லத் தொடங்கினாள்.

"நீங்கள் அனுப்பத் தேவையில்லை. அதுவே இந்த அறைக்கு வரும்" என்று கூறிய கருணாகர பல்லவன். அரச குமாரி கண்ணுக்கு மறைந்தவுடன் அறைக்குள் திரும்பி மேலங்கி முதலியவற்றைக் களைந்து, பஞ்சணையில் படுத்தான். இலவம் பஞ்சாலும் சீனத்துப் பட்டாலும் தயாரிக்கப்பட்ட அந்தப் பஞ்சணை மிக மெதுவாக இருந்தாலும் கலிங்கத்தில் காலடி வைத்த வினாடி முதல் ஏற்பட்ட நிகழ்ச்சிகள் உள்ளத்தில் பெரும் அலைகளாக எழுந்து மோதிக் கொண்டிருந்ததால் உறக்கம் பிடிக்காமலே நீண்ட நேரம் படுத்துக் கிடந்தான் அந்த வாலிபன். ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தின் சரித்திரமும் காஞ்சனாதேவி யின் இணையற்ற அழகும் திரும்பத் திரும்ப அவன் மனக் கண்களுக்கு முன்னால் எழுந்து உலாவின. தன்னால் முடியுமானால் அவசியம் ஜெயவர்மனைக் கொன்று ஸ்ரீவிஜயத்தில் குணவர்மனுக்கு முடிசூட்டுவதென்ற

முடிவுக்கு வந்த இளைய பல்லவன், தன் சொப்பனத்தை எண்ணித் தானே நகைத்துக் கொண்டான். ஸ்ரீவிஜயம் எங்கே, நான் எங்கே? ஸ்ரீவிஜயத்துக்குச் செல்லப் பெரும் கடற்படை வேண்டும். கடற்படை இருந்தாலும் அதைச் செலுத்தத் திறன் வேண்டாமா? மரக்கலம் செலுத்தியே பழக்கமில்லை எனக்கு. மனக்கோட்டை மட்டும் பலமா யிருக்கிறது!' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டு, 'சரி, சற்று நிம்மதியாக உறங்குவோம்," என்று கண்களை மூடினான்.

ஆனால் அன்றிரவு அத்தனை சுலபத்தில் அவனுக்கு நிம்மதியளிப்பதாகக் காணோம். சுமார் அடுத்த அரை ஜாமம்தான் அவன் படுத்திருந்தான். திடீரென வீதியில் தடதடவெனப் புரவிகள் வரும் சத்தம் கேட்கவே சட் டென்று எழுந்து சாளரத்துக்கு வெளியே தலையை நீட்டிப் பார்த்தான். சுமார் நான்கு புரவிகள் எதிரேயிருந்த மாளிகைத் தாழ்வாரத்து வெளிக்கூரையின் இருட்டடித்த இடத்தில் நகர்ந்து நின்றன. அந்தப் புரவிகளில் ஒன்றி லிருந்து குதித்த போர்க் கவசமணிந்த வீரனொருவன் வீதியில் இருமுறை அங்குமிங்கும் உலாவினான். பிறகு திடீரென்று குறுக்கே நடந்து மாளிகையின் கீழ்க்கதவை லேசாக மும்முறை தட்டவும் செய்தான். அவன் தட்டுவ தற்கும் இரண்டறைகளுக்கு அப்பாலிருந்த தன் பள்ளி யறையிலிருந்து காஞ்சனாதேவி ஓடி வருவதற்கும் சரியா யிருந்ததைக் கவனித்தான் இளைய பல்லவன். அது மட்டு மல்ல, காஞ்சனாதேவிக்கு முன்பாக பறவைத் தீவின் அந்தப் பெரும் புறா சிறகடித்துப் பறந்து வந்து அவன் மார்மேல் உட்கார்ந்து அவன் மார்பை மும்முறை அலகால் குத்தவும் செய்தது. அந்தப் புறாவைத் துரத்தி வந்த காஞ்சனாதேவியின் கண்கள் அச்சத்துடன் எழுந்து கரணாகர பல்லவனின் கண்களுடன் கலந்தன.

"ஆம், தேவி. ஏதோ அபாயம்தான் வந்திருக்கிறது. இதைப் பிடியுங்கள்" என்று புறாவைப் பிடித்து அவளிடம் கொடுத்த இளையபல்லவன் தன் மேலங்கியை மிகத் துரித மாக அணிந்து இடையில் வாளையும் எடுத்துக் கட்டிக் கொண்டு திடுதிடுவென்று அறைக்கு வெளியே நின்றான்.

"சற்று நிதானியுங்கள். தந்தையை எழுப்புகிறேன்" என்று தடுத்தாள் காஞ்சனாதேவி.

"யாரையும் எழுப்ப வேண்டாம். நீங்கள் அறைக்குச் சென்று தாழிட்டுப் படுத்துக் கொள்ளுங்கள். என் குரலோ உங்கள் தந்தை குரலோ கேட்டாலொழியக் கதவைத் திறக்க வேண்டாம்" என்று எச்சரிக்கை செய்த கருணாகர பல்லவன் கண வேகமாகப் படிகளில் இறங்கிக் கீழ்த்தளத் துக்குச் சென்றான்.

அவன் கீழ்த்தளத்தின் வாயிற்படியை அடைவதற்கும் கவசமணிந்த வீரன் உள்ளே நுழைவதற்கும் சரியாயிருந்தது. அந்த இரவில் மென்மேலும் பல விந்தைகள் காத்திருந்தன, இளைய பல்லவனுக்கு. எதிரே வெகு வேகமாகப் படிகளில் இறங்கி வந்த இளைய பல்லவனைக் கண்டதும் கவச மணிந்த வீரன் தலை தாழ்த்தி வணங்கினான். எதிரி எதற் காகத் தலை வணங்குகிறான் என்பதை எண்ணிப் பார்த்து, ஏதும் புரியாமல் வியப்பில் ஆழ்ந்த இளைய பல்லவனை, வந்த வீரனின் பேச்சு இன்னும் அதிக ஆச்சரியத்தில் அமிழ்த்தியது.

"இந்த மாளிகையில் கருணாகர பல்லவர் தங்கியிருப்ப தாகக் கேள்விப்பட்டோம்..." என்று துவங்கினான் வீரன்.

கருணாகர பல்லவன் அந்த வீரனைக் கூர்ந்து நோக்கி, "யார் நீங்கள்?" என்று கேட்டான், சந்தேகம் தொனித்த குரலில்.

"கருணாகர பல்லவரின் நண்பரொருவர் அனுப்பி னார்" என்று பதில் கூறினான் அந்த வீரன்.

“யாரந்த நண்பர்?”

“அதைக் கருணாகர பல்லவரிடம்தான் சொல்ல முடியும். மற்றவர்களிடம் சொல்ல உத்தரவில்லை” திட்டமாக அறிவித்தான் அந்த வீரன்.

“நான்தான் இளையபல்லவன்.”

“அடையாளம்?”

“இதோ பார்” இடது கையிலிருந்த முத்திரை மோதிரத் தைக் காட்டினான் இளையபல்லவன்.

அதைக் கவனித்ததும் மீண்டுமொருமுறை தலை வணங்கிய அந்த வீரன், “தாங்கள் என்னை நம்பி என்னு டன் வர இதைக் காட்ட உத்தரவாயிருக்கிறது,” என்று கூறி, தன் கச்சையிலிருந்து மற்றொரு மோதிரத்தை எடுத்துப் பதிலுக்குக் காட்டினான்.

அந்த மோதிரத்தைக் கையில் வாங்கிய கருணாகர பல்லவனின் கண்களில் வியப்பின் எல்லை தெரிந்தது. மிகுந்த பயபக்தியுடன் கண்களில் அந்த மோதிரத்தை ஒற்றிக்கொண்டான். அவன் முகத்தில் ஒரு விநாடி குழப்பம் தெரிந்தது. ‘புறா பொய் சொல்லுமா? அதன் அபாய அறிவிப்பு பொய்யா? வந்திருப்பவர்கள் நண்பர்களானால் அது ஏன் சிறகடித்து ஓடி வந்தது? என் மார்பை ஏன் குத்தியது?” என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டான். மீண்டும் மோதிரத்தை நன்றாக ஆராய்ந்தான். ‘சந்தேகமி ல்லை. புறா தவறுதான் செய்திருக்கிறது. இந்த முத்திரை மோதிரத்தின் ஆணையை மீற முடியாது. வந்திருப்பவர்கள் விரோதிகளாயிருக்க முடியாது. நண்பர்களைத் தவிர வேறு யார் இந்த மோதிரத்தைக் கொண்டு வர முடியும்?” என்று தன்னைக் கடைசியில் திடப்படுத்திக் கொண்ட கருணாகர பல்லவன், “இந்த மோதிரத்துக்குடையவர் எங்கிருக்கிறார்?” என்று கேட்டான்.

"பதில் சொல்ல உத்தரவில்லை, இளைய பல்லவரே" என்றான் வீரன்.

கருணாகர பல்லவன் மேற்கொண்டு அவனுடன் விவாதிக்காமல் பணிப்பெண் ஒருத்தியை அழைத்து, "நான் வெளியே செல்கிறேன். சீக்கிரம் திரும்பி விடுவேனென்று உன் தலைவியிடம் சொல்" என்று காஞ்சனா தேவிக்குச் செய்தி அனுப்பிவிட்டு, கவசமணிந்த வீரனை நோக்கி, "சரி, புறப்படுங்கள்" என்று கூறி அவனைத் தொடர்ந்து சென்றான்.

இளைய பல்லவனுடன் வீதிக்கு வந்த அந்த வீரன் எதிர்த் தாழ்வரை நிழலில் மறைந்திருந்த மற்றப் புரவி வீரரை வெளியே வரும்படி அழைத்தான். அவர்களிலொரு வனது புரவியில் கருணாகர பல்லவனை ஏறச் சொல்லி மற்ற வீரர்கள் பின் தொடரத் தன் புரவியைச் செலுத்தி னான்.

புரவியில் ஆரோகணித்துச் சென்ற கருணாகர பல்லவன், தன்னை அழைத்துச் செல்லும் வீரர் இரண்டு மூன்று வீதிகளைக் கடந்து வணிகர் பெரு வீதிக்குள் புகுவதைக் கண்டதும், 'சரி சரி, இவர்கள் கோடிக்கரைக் கூலவாணிகன் விடுதிக்கு அழைத்துச் செல்கிறார்கள். புறாதான் தவறு செய்துவிட்டது. நண்பர்களை விரோதி களாக நினைத்துவிட்டது' என்று நிச்சயப்படுத்திக் கொண் டான். அந்த நிச்சயத்தால் வெகு அலட்சியமாகப் புரவியை நடத்திக்கொண்டு வீரர்களுடன் சென்றான்.

இரண்டு மூன்று வீதிகளைக் கடந்து வணிகர் பெரு வீதியின் கோடியிலிருந்த பெரிய மாளிகையொன்றின் முன்பு வந்ததும் வீரர்கள் இளைய பல்லவனை இறங்கச் சொன்னார்கள்.

புரவியிலிருந்து இறங்கியதும் கோடிக்கரைக் கூல வாணிகனின் அந்த மாளிகைக்குள் சர்வசகஜமாக நுழைந்

தான் இளையபல்லவன். மூன்றாம் ஜாமம் நெருங்கிக் கொண்டிருந்த அந்த வேளையிலும் கூலவாணிகனின் மாளிகைக் கூடத்தில் பெருவிளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. கூடத்தின் நடுவில் பெரும் கூட்டமொன்று உட்கார்ந்திருந்தது.

அதன் நடுவிலிருந்து எழுந்த கூலவாணிகனைக் கண்ட கருணாகர பல்லவன் பெரும் வியப்புக்கு மட்டுமல்ல, அதிர்ச்சிக்கும் சீற்றத்துக்கும் உள்ளானான்.

புறாவின் அபாய அறிவிப்பில் பிசகில்லை என்பதை உணர்ந்தான். அவன் கை, மின்னல் வேகத்தில் வாளை நாடிச் சென்றது. மீண்டும் ஸ்தம்பித்தான் அவன். உறையில் வாள் இல்லை. பேரிடி போன்ற சிரிப்பொலி யொன்று அவன் பின்புறத்திலிருந்து எழுந்தது.



அத்தியாயம் 9

# வலைக்குள் வந்த சிங்கம்

**பா**லூர்ப் பெருந்துறையில் பெருவணிகர் வீதிக்குள் நுழைந்த சமயத்திலோ, கூலவாணிகனின் மாளிகைக் கூடத்துக்குள் வந்த விநாடியிலோ எந்தவிதச் சந்தேகத்திற்கும் இடங்கொடாத இளையபல்லவன் அந்தக் கூடத்தில் உட்கார்ந்திருந்த பெருங் கூட்டத்தின் நடுவிலிருந்து கூலவாணிகன் எழுந்த தோரணையைக் கண்டதுமே ஏதோ விபரீதம் நேர்ந்திருக்கிறதென்ற தீர்மானத்துக்குள்ளானானென்றால், கூலவாணிகனின் முகத்திலிருந்த திகிலையும் அவனிருந்த கோலத்தையும், கண்டதும் அபாரமான அதிர்ச்சிக்கும் சீற்றத்துக்கும் இடங்கொடுத்தான். தாறுமாறாகக் கிழிக்கப்பட்டிருந்த உடைகளுடனும், முகத்தில் மிதமிஞ்சிய திகிலுடனும், கயிறுகளால் பிணைக்கப்பட்ட கைகளுடனும் எழுந்து நின்ற கூலவாணிகனையும் அவனைச் சுற்றிலும் வணிகர் உடையிலிருந்த கலிங்கவீரர் கூட்டத்தையும் பார்த்த கருணாகர பல்லவன், உண்மையைக் கண்ணிமைக்கும் நேரத்தில் புரிந்துகொண்டு வாளை உருவ, கச்சையை நோக்கிக் கையைக் கொண்டுபோன சமயத்தில், தன் வாளும் மிகத் தந்திரமாகப் பின்புறத்திலிருந்து உருவப்பட்டுவிட்டதையும், அந்த வாளை உருவியவன் வெளியிட்ட பேய்ச் சிரிப்பு அந்தக் கூட்டத்தையே இடித்து விடுவதுபோல் ஒலித்ததையும் கவனித்து, ஒரு கணம் ஸ்தம்பித்து நின்றான். மறுகணம், தன்னை நோக்கி

அப்படி நகைத்தவனைப் பார்க்கப் பின்புறம் திரும்பினான். அப்பொழுதுதான் சிரிப்பைச் சற்று அடக்கிக் கொண்ட கலிங்க மன்னன் பீமன், முகத்தில் பரவிய கேலிப் புன்னகையுடன் அவனெதிரே காட்சியளித்தான்.

எதை எதிர்பார்த்தாலும், கலிங்கத்து மன்னன் தலை நகரைவிட்டுப் பாலூர்ப் பெருந்துறைக்கு வருவானென்பதைக் கனவிலும் எதிர்பார்க்காத கருணாகர பல்லவன், தன் அதிர்ச்சியையும் சீற்றத்தையும் சிறிதளவு உதறிவிட்டுச் சற்று வியப்பு மண்டிய வதனத்துடனேயே மன்னனை ஏறெடுத்து நோக்கினான். சோழ நாட்டு விஸ்தரிப்பு வெள்ளத்தில் எதிர்நீச்சல் போடும் உறுதி கலிங்கத்து மன்னன் முகத்திலிருந்ததையும், சில வருடங்களுக்கு முன்பு தான் சந்தித்த போதில்லாத சதைப் பிடிப்பும் அவனுக் குண்டாகி, பெயருக்குத் தகுந்தபடி உயரம் பருமனுடன் அவன் அசல் பீமனாகவே விளங்கியதையும் கண்ட கருணாகர பல்லவன், பலமும் யுக்தியும் நிறைந்த பெரு விரோதியின் முன்பு தானிருப்பதை உணர்ந்தான். கலிங் கத்து மன்னன் அந்தச் சமயத்தில் ராஜரீகத்துக்கான உடை யேதும் அணியாமல் சயனத்துக்குச் செல்லும் சாதாரண உடையே அணிந்திருந்ததையும், தன்னிடமிருந்து லாகவமாக உருவிவிட்ட தன் வாளைத் தவிர வேறு வாள் ஏதும் இல்லாமல் அவன் மிக அசட்டையாக நின்றிருந்ததையும் கவனித்த கருணாகர பல்லவன், அவன் நெஞ்சுரத்தைப் பெரிதும் வியந்தான். தன் வீரர்களோடு ஒரு வீரனாகப் பழகும் கலிங்கத்துப் பீமனின் வீரர்களை அவனிடமிருந்து எந்தவிதத்திலும் பிரிப்பதோ அவர்களில் யாரையும் தன் உதவிக்கு இணைப்பதோ முடியாத காரியமென்பதும் வெட்ட வெளிச்சமாயிற்று இளைய பல்லவனுக்கு. உதடு களும் கன்னங்களும் தடித்து நின்றதால் ஓரளவு பயங்கர மாகத் தெரிந்த பீமனது முகத்தில் பளிச்சிட்ட கண்கள் தன்னை ஊடுருவிப் பார்ப்பதையும் புரிந்துகொண்ட

இளையபல்லவன் தன்னைத் திடப்படுத்திக்கொள்ள பீமனிடமிருந்து திரும்பிக் கூலவாணிகனின் கூட்டத்தையும் அங்கு குழுமியிருந்த கலிங்கத்து வீரரையும் கவனித்தான்.

அரண்மனையையும் தோற்கடிக்கும் சிறப்பு வாய்ந்த கோடிக்கரைக் கூலவாணிகன் சேந்தனின் பெருமாளிகைக் கூடம் சுமார் ஆயிரம் பேருக்கு ஒரே காலத்தில் விருந்தளிக் கக்கூடிய அளவுக்கு விசாலமாயிருந்தது. ஆங்காங்கு ஒவ்வொரு மூலையிலுமிருந்த திண்டு திவாசுகளும் கணக் கெழுதும் பெட்டிகளும், விதவிதமான சரக்கு மூட்டை களும் பலதரப்பட்ட வியாபாரம் அங்கு நடப்பதை உணர்த்தின. அந்த மாளிகைக் கூடத்தின் மேற்கூரையில் பலநாட்டு ஓவியங்களால் தீட்டப்பட்ட வண்ணச் சித்திரங் கள், கூலவாணிகனின் செல்வச் சிறப்புக்கு அத்தாட்சியாய் விளங்கின. இத்தனைச் செல்வச் சிறப்பிருந்தும், வர்த்தக விஸ்தரிப்பிருந்தும், அரசியலில் சிக்கிய ஒரே காரணத்தால் கூலவாணிகன் அன்று துன்புறுத்தப்பட்டு, கைகள் பிணைக்கப்பட்டு நின்ற பரிதாபக் கோலத்தைக் கண்ட கருணாகர பல்லவன், கூலவாணிகன் சேந்தனிடம் பெரும் அனுதாபமே கொண்டான். பீமன் கையில் வகையாய்ச் சிக்கிவிட்ட தனக்கும் கூலவாணிகனுக்கும் என்ன கதி கிடைக்குமென்பதைச் சந்தேகத்துக்கிடமின்றிப் புரிந்து கொண்ட இளையபல்லவன், மேற்கொண்டு நடப்பது நடக்கட்டுமென்று பீமனை நோக்கி மீண்டும் திரும்பி, “கலிங்கத்து மன்னரை இங்கு நான் எதிர்பார்க்கவில்லை” என்று சம்பாஷணையில் மெள்ள இறங்கினான்.

பீமனுடைய பெரும் மீசையும் கருத்த பெரிய புருவங் களும் ஆச்சரியத்துக்கு அறிகுறியாக ஒருமுறை எழுந்து தாழ்ந்தன. “தாங்கள் எதிர்பார்க்காத சம்பவங்கள் பல நிகழ்ந்திருக்கின்றன இந்த இரவில்!” என்று பதிலுக்குச்

சொற்களை உதிர்த்த அவன் உதடுகளில் புன்முறுவலொன்றும் படர்ந்தது.

மன்னன் பதிலிலிருந்து அவன் தன்னைப்பற்றிய பல விவரங்களை அறிந்திருக்கிறானென்பதை இளையபல்லவன் உணர்ந்து கொண்டானேயொழிய, அந்த விவரங்கள் என்னவாயிருக்கக் கூடும் என்பதை அறியாததால் அவற்றைப் பற்றித் தெரிந்துகொள்ளும் நோக்கத்துடன், "உண்மைதான்! நள்ளிரவில் வணிகர் விடுதிக்கு மன்னர் வருவது நான் எதிர்பார்க்காத சம்பவம்தான். இத்தகைய விஜயத்துக்குக் கலிங்கத்தின் சம்பிரதாயம் இடம் கொடுக்கிறதா?" என்று வினவினான்.

பீமன் முகத்தில் ஆலோசனை படர்ந்தது. ஏதோ யோசித்துவிட்டுச் சொன்னான். "சம்பிரதாயம் இடம் கொடாதுதான். ஆனால் எல்லாம் வணிகர் செய்யும் வாணிபத்தைப் பொறுத்தது."

பீமன் செய்த போலிச் சிந்தனையும், அவன் கூறிய சொற்களின் பொருளும் புரிந்துதானிருந்தது இளைய பல்லவனுக்கு. இருப்பினும் புரியாதவன்போல், "நீங்கள் சொல்வது விளங்கவில்லை" என்று பதில் கூறினான்.

"வாணிபத்தில் பலவிதமுண்டு" என்று சுட்டிக்காட்டி மெள்ள நகைத்தான் பீமன்.

"மன்னருக்கு வாணிபத்திலும் நல்ல பரிச்சயமுண்டு போலிருக்கிறது?" என்று இளைய பல்லவன் பதிலுக்கு இகழ்ச்சி நகை புரிந்தான்.

நிராயுதபாணியாகக் கலிங்கத்து வீரர்கள் மத்தியில் சிறைப்பட்டு நின்ற சமயத்திலும் இளையபல்லவன் இகழ்ச்சி நகை புரிந்ததையும், சர்வசகஜமாகப் பேசத் துவங்கிவிட்டதையும் கண்ட பீமன், அவன் நெஞ்சுரத்தைப் பெரிதும் வியந்தான். அந்த வியப்பு குரலிலும் ஓரளவு தொனிக்கப் பேச முற்பட்டு, "வாணிபத்திலும் பரிச்சயம்

தேவையாயிருக்கிறது, இளைய பல்லவரே! காரணம் தெரியுமா?" என்று வினவினான்.

"தெரியாது" என்றான் இளையபல்லவன்.

"இதில் கஷ்டமேதுமில்லை. வாணிபத்தில் பலவகை யுண்டென்று முன்னமே நான் குறிப்பிடவில்லையோ?"

"ஆம். குறிப்பிட்டீர்கள்"

"பொருள்களில் செய்யும் வாணிபம் ஒருவகை."

"ஓகோ?"

"அரசியலில் வாணிபம் மற்றொரு வகை"

"அப்படியா!"

'அரசியலை வாணிபத்திலும், வாணிபத்தில் அரசிய லையும் கலப்பதால் பல தொல்லைகள் உண்டாகின்றன" என்று கூறிய பீமன், புன்முறுவல் செய்தான்.

இளையபல்லவன் இதற்கு ஏதும் பதில் சொல்லாது போகவே, சற்றுப் பெரிதாகவே நகைத்த கலிங்கத்து மன்னன், "ஏன் பதிலில்லை, இளைய பல்லவரே! வணிகர் கள் அரசியலில் கலக்கும்போது மன்னரும் வாணிபத்தில் கலக்கத்தானே வேண்டியிருக்கிறது? இந்தச் சந்தர்ப்பத்தில் நாம் சம்பிரதாயத்தை மட்டும் கவனிக்க முடியுமா? முடியாது முடியாது. வாணிபத்திலும் சோழ நாட்டிலிருந்து வரும் வணிகரிடமும் நாம் சிறிது கவனத்தைச் செலுத்தத் தான் வேண்டியிருக்கிறது. செலுத்துவதில் பலனுருக்கிறது" என்றும் கூறினான்.

"என்ன பலன்?" இளையபல்லவன் சற்று நிதானத்தை இழந்து இரைந்தே கேட்டான் இந்தக் கேள்வியை.

நிதானத்தைச் சிறிதும் இழக்காமலே பதில் சொன் னான் பீமன். "அநபாயச் சோழரின் இணைபிரியாத தோழரான இளைய பல்லவரின் சந்திப்பு எனக்குக் கிடைத்திருப்பதே பெரும் பலனல்லவா?"

"இதற்குத் தாங்கள் இத்தகைய முயற்சி எடுத்திருக்க வேண்டியதில்லை" என்று சற்றுக் கோபத்துடன் கூறினான் இளையபல்லவன்.

"அப்படியா!" என்று கேட்ட பீமனின் முகத்தில் ஆச்சரிய ரேகை படர்ந்தது.

"ஆம் மன்னவா! தங்களைக் காணவே நான் கலிங்கம் வந்தேன். இத்தனை வீரர்களை அனுப்பிப் பவனி நடத்தா விட்டாலும் தங்களை நாடிக் கண்டிப்பாய் வந்திருப்பேன்" என்றான் இளையபல்லவன்.

"ஆம், ஆம், மறந்துவிட்டேன்" என்றான் பீமன்.

"எதை மறந்துவிட்டீர்கள்?"

பீமன் சொன்ன பதில் ஒருவிநாடி பேரதிர்ச்சியைக் கொடுத்தாலும் அடுத்த விநாடி அந்த அதிர்ச்சி மறைந்தது இளையபல்லவனிடமிருந்து. "ஆம்! ஆம். மறந்துவிட்டேன். வீரராஜேந்திர சோழதேவரிடமிருந்து நீங்கள் சமாதான ஓலை கொண்டு வந்திருப்பதை மறந்துவிட்டேன்" என்று பீமனின் பதிலைக் கேட்டதும் அதிர்ச்சியடைந்த இளைய பல்லவன், 'இந்த விவரம்தான் சுங்க அதிகாரிக்கே தெரிந் திருந்ததே. மன்னனுக்குத் தெரிவதில் வியப்பென்ன?' என்று தன்னைத்தானே சமாதானப்படுத்திக் கொண்டான். அத்துடன் சற்றுக் கோபத்துடன் கேட்கவும் செய்தான். "நான் சமாதான ஓலை கொண்டு வந்ததை அறிந்துமா என்னைச் சிறைப்படுத்தினீர்கள்?" என்று.

பீமன் முகத்தில் வருத்தக் குறி தோன்றியது. "சிறைப் படுத்திக் கொண்டு வருவது உசிதமில்லைதான். ஆனால் சமாதானத் தூதர்கள் இறங்கும் துறைமுகச் சுங்கச் சாவடியில் அந்நாட்டு மன்னர்களைத் தூஷிப்பதும், வீரர் துரத்த ஓடுவதும், மாளிகையில் பதுங்குவதும் உசிதமா என்பதை எண்ணிப் பாருங்கள்!" என்று வருத்தத்துடன் கூறுபவன் போல் பாசாங்கு செய்த பீமன் உண்மையில்

தன்னைப் பார்த்து நகைக்கிறான் என்பதை உணர்ந்து கொண்டான் இளையபல்லவன். தவிர தான் பாலூர்ப் பெருந்துறையில் காலெடுத்து வைத்த விநாடியிலிருந்து தன் நடவடிக்கைகள் பலவற்றையும் கலிங்க மன்னன் தெரிந்து கொண்டிருப்பதை உணர்ந்த கருணாகர பல்லவன், தன் இருப்பிடத்தை அவன் எப்படிக் கண்டுபிடித்தானென்பதை மட்டும் புரிந்துகொள்ள முடியாமல் சிந்தை குழம்பினான். ‘சுங்கச் சாவடி நிகழ்ச்சியைக் காவல் வீரர்களிடமிருந்து அறிந்திருக்கலாம். ஊருக்குள் ஏற்பட்ட சண்டை நிகழ்ச்சியையும், துரத்திய வீரர்கள் சொல்லியிருப்பார்கள். ஆனால் குணவர்மன் தங்கியிருந்த மாளிகையில் ஒளிந்ததை இவன் எப்படி அறிந்தான்?’ என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்ட இளைய பல்லவன். பதிலேதும் கிடைக்காமல் பீமனை நோக்கினான்.

கருணாகர பல்லவனது எண்ணத்தில் சுழன்ற ஒவ்வொன்றையும் புரிந்துகொண்ட பீமன் சொன்னான்: “இளையபல்லவரே! ஆபத்திலிருப்பவன் புத்தி எப்பொழுதும் சுறுசுறுப்புடன் வேலை செய்கிறது. கலிங்க நாடு ஆபத்திலிருக்கிறது. ஆகவே அதன் மன்னன் விழிப்புடனிருக்கிறான். கலிங்கத்தின் துறைமுகங்களைக் கைப்பற்றிக் கொண்டு சோழ நாடு அளிக்க விரும்பும் போலிச் சமாதானத்தைத் தென்கலிங்கமும் ஏற்காது, வடகலிங்கமும் ஏற்காது. ஆகவே சோழர் போர் தொடுப்பார்கள். அத்தகைய நிலையில் சோழ நாட்டிலிருந்து படைகள் வந்திறங்க இருக்கும் கலிங்கத்தின் முதல் துறைமுகமான பாலூர்ப் பெருந்துறையில் நாங்கள் சர்வ எச்சரிக்கையுடனிருப்பது இயற்கைதானே? அதன் விளைவாகத்தான் இங்கிருக்கும் தமிழ் ஒற்றர்களையும், இங்கு வரும் சோழ நாட்டுப் படைத் தலைவர்களையும் கண்காணிப்புச் செய்கிறோம். நீங்கள் பாலூர்ப் பெருந்துறையில் கால் வைத்த விநாடி முதல், கலிங்கத்தின் ஒற்றர்கள் உங்களைக்

கவனித்து வருகிறார்கள். நீங்கள் வெளிநாட்டுப் பிரமுகர் வீதியில் மறைந்ததும் அந்த வீதி முழுதும் ஒற்றர் பார்வைக்குள் அகப்பட்டது. தவிர..."

இப்படிச் சம்பாஷணையை அரைகுறையாக விட்ட பீமன் மீண்டும் இளநகை கொண்டான். அந்த இளநகையில் பெரும் பொருள் சிக்கியிருப்பதை உணர்ந்த இளைய பல்லவன், "ஏன் பேச்சைப் பாதியில் நிறுத்திவிட்டீர்கள்? எதையோ சொல்ல வந்தீர்களே?" என்று கேட்டான்.

சொல்ல வந்ததைச் சொன்னான் பீமன். அதைக் கேட்டதும் மீண்டும் திகைப்பும் அதிர்ச்சியும் சூழ்ந்து கொண்டன இளையபல்லவனின் சித்தத்தை.

"ஆம் ஆம். பேச்சைப் பாதியில்தான் நிறுத்திவிட்டேன். நான் சொல்ல வந்தது..." என்ற பீமனை இடைமறித்த இளையபல்லவன், "நீங்கள் சொல்ல வந்தது?" என்று வினவினான்.

"ஒற்றர்கள் கண்பார்வையிலிருக்கும் தெருவில், புறா மூலம் தூது விடுவது அத்தனை சரியல்ல என்று நினைக்கிறேன்" என்றான் பீமன்.

இதைக் கேட்டதும் சில விநாடிகள் ஸ்தம்பித்து நின்று விட்டான் இளைய பல்லவன். அவன் திகைப்பைக் கண்ட கலிங்கத்துப் பீமனது முகத்தில் இகழ்ச்சிப் புன்முறுவல் பெரிதாகப் படர்ந்தது. "நீங்கள் மறைந்த வீதியைப் பற்றிச் செய்தி கிடைத்ததும் அதே வீதியைக் கண்காணிக்க ஒற்றர்களை ஏவினேன். தூதுப்புறா அந்த வீதியில் ஒரு மாளிகையை நோக்கிப் பறந்ததாகச் செய்தி கிடைத்ததும் மற்றதை ஊகித்துக் கொண்டேன். இதற்குப் பிரமாத ஆராய்ச்சி தேவையில்லை .இளைய பல்லவரே" என்றும் விளக்கினான்.

இளையபல்லவனின் சித்தம் குழப்பத்தில் ஆழ்ந்து கிடந்தது. குழப்பம் நிரம்பிய வதனத்துடனேயே பீமனை ஏறெடுத்து நோக்கிய இளையபல்லவன், "புரிந்தது

மன்னவா! தங்கள் ஒற்றர் கண்காணிப்புத் திறன் புரிந்தது. இனி என்னை என்ன செய்வதாக உத்தேசம்?" என்று வினவினான்.

"மூன்றாவது ஜாமம் நெருங்குகிறது" என்று பதில் சொன்னான் பீமன்.

"ஆம்" என்றான் இளையபல்லவன்.

"காலை வரை எந்தத் தண்டனையும் தங்களுக்கு விதிப்பதற்கில்லை."

"ஏன்?"

"நீதி மண்டபத்தில் விசாரிக்காமல் தண்டனையிடும் வழக்கம் கலிங்கத்தில் கிடையாது."

"நீதிக்கு மதிப்புக் கொடுக்கிறீர்களா?"

"பெருமதிப்புக் கொடுக்கிறோம். பரம விரோதி களையும் தீர விசாரித்தே தண்டனை கொடுக்கிறோம். ஆகவே தாங்கள் இன்றிரவு நிம்மதியாக உறங்கலாம்" என்று கூறிய பீமன் சரேலெனத் தன் வீரர்களை நோக்கித் திரும்பி, "கலிங்கத்தின் வலைக்குள் தானாக வந்த இந்தப் பல்லவச் சிங்கத்தையும், வேவு பார்க்கும் அந்தக் கூல வாணிகனையும் சிறையில் அடையுங்கள்!" என்று ஆணை யிட்டு, "வருகிறேன் இளையபல்லவரே! நாளை நீதி மண்ட பத்தில் சந்திப்போம்" என்று அந்த வாலிப வீரனிடம் விடையும் பெற்றுக்கொண்டு வாயிலை நோக்கி நடந்தான்.

மன்னன் ஆணைப்படி கலிங்கத்தின் வீரர்கள் கூல வாணிகனையும் இளைய பல்லவனையும் புரவிகளில் ஏற்றிச் சிறைச்சாலைக்கு அழைத்துச் சென்றார்கள். பாலூர்ப் பெருந்துறையின் சிறைச்சாலை பெருவணிகர் வீதிக்கு இரண்டு வீதிகள் தள்ளியே இருந்தபடியால் வெகு சீக்கிரம் அவர்கள் சிறைக்கு வந்தார்கள். பெரு மதில் களால் சூழப்பட்டு, பல வாயில்களையுடைய அந்தச் சிறைக் கூடத்தை ஏறிட்டுப் பார்த்த கருணாகர பல்லவன்

அதிலிருந்து தப்புவது யாருக்கும் நடவாத காரியமென்ப தைப் புரிந்துகொண்டான். தவிர, அவனும் கூலவாணிக னும் சேர்த்தே தள்ளப்பட்ட சிறையின் பெரிய அறையைச் சுற்றிலுமிருந்த வலுவான இரும்புச் சட்டங்கள் சிறையி லிருந்து எமனும் தப்ப முடியாதென்பதை நிரூபித்தன வாகையால் 'விஷயம் நாளையுடன் முடிந்துவிடும்' என்ற முடிவுக்கே வந்தான் இளையபல்லவன். ஆனால் விஷயம் அத்தனை எளிதில் முடிவதாயில்லை. முடிவதற்குச் சரித்திரமும் இடம் கொடுக்கவில்லை. மறுநாள்காலை அவன் அருந்துவதற்குக் கொண்டுவரப்பட்ட அதிசய உணவும் இடம் கொடுக்கவில்லை. உணவைக் கண்டு கூல வாணிகன் அதை வெறுப்புடன் நோக்கினான். ஆனால் இளைய பல்லவன் விழிகளில் வெறுப்பு இல்லை, விருப்பே படர்ந்து நின்றது. சில ஜாமங்களில் உயிர் துறக்கப் போகும் இளையபல்லவன் உணவைக் கண்டதும் விருப்பம் காட்டியது பெரும் வெறுப்பாயிருந்தது கூலவாணிகனுக்கு. 'இறக்கப் போகிறவனுக்கு இவ்வளவு விருப்பமா உணவில்? சே! இவன் ஒரு மனிதனா' என்று அலுத்துக் கொண்டான். ஆனால் இளைய பல்லவன் விருப்பத்துக்குக் காரணமா யிருந்தது உணவு மட்டுமல்ல என்பதைக் கூலவாணிகன் புரிந்து கொள்ளவில்லை.

அத்தியாயம் 10

# விமோசனச் சீலை

சிறிது நேரத்துக்கெல்லாம் சிறைக் காவலர் தொடரப் பாலூர் நீதி மண்டபம் சென்று, சம்பிரதாய விசாரணைக்கு இலக்காகி ஊரின் ஒரு மூலையிலிருந்த கொலைக்களத்தில் தலையிழக்கவிருந்த கருணாகர பல்லவன், அதைப்பற்றித் தினையளவும் சிந்திக்காமல் அன்று காலை கொண்டு வரப்பட்ட உணவுத் தட்டின் மேலிருந்த துணியை அகற்றி, மிக ஜாக்கிரதையாக மடித்து வைத்து உணவைச் சுவைத்துச் சுவைத்து உண்ணத் தொடங்கியதைக் கண்ட கூலவாணிகன் அவனை மிதமிஞ்சிய வெறுப்புடனேயே நோக்கினான். அந்த வெறுப்பு அப்பொழுது துவங்கிய தல்ல. முதல் நாள் மூன்றாம் ஜாமத்தில் சிறையில் தள்ளப் பட்டதும் சிறையிலிருந்த மஞ்சத்தைத் தட்டிவிட்டுக் கருணாகர பல்லவன் படுக்க ஏற்பாடு செய்தவுடனேயே ஏற்பட்ட வெறுப்பு அது. சிறையில் இருவரையும் காவலர் தள்ளியதும், காவலரில் ஒருவன் கூலவாணிகனின் கைக் கட்டுகளை அவிழ்த்துவிட்டதன்றி, அந்தச் சிறை, பிரமுகர் கள் தங்கும் சிறையென்பதையும், ஏதாவது தேவையா யிருந்தால் சொல்லலாமென்று பணிவுடன் கேட்டான். கூலவாணிகன் அதற்கேதும் பதில் சொல்லாவிட்டாலும் கருணாகர பல்லவன் மட்டும், அப்பொழுது தேவையேது மில்லையென்றும், ஏதாவது வேண்டும் பட்சத்தில் குரல் கொடுப்பதாகவும் கூறியதைக் கேட்டதுமே கசப்படைந் தான் கூலவாணிகன். ஆகவே சிறைக் காவலர் சிறையைப்

பூட்டிச் சென்றதும் கருணாகர பல்லவனை நோக்கி வினவினான். “ஏன்? தங்களுக்கு இந்த இடத்தில் சௌகரி யம் ஏதாவது தேவையாயிருக்கிறதா?”

கருணாகர பல்லவன் ஒருமுறை சிறையைச் சுற்றிக் கவனித்தான். ராஜபிரமுகர்கள் தங்குவதற்கு வேண்டிய சகல சௌகரியங்களும் அங்கிருப்பதையும், மஞ்சங்களில் கூடப் பஞ்சணைகள் இருப்பதையும் பார்த்து, “எனக்குத் தேவையேதுமில்லை. உனக்கு?” என்று வினவினான்.

சிறையிலும் சௌகரியம் தேடும் இளையபல்லவனை வெறுப்புடன் நோக்கிய கூலவாணிகன், தனக்கு ஏதும் தேவையில்லையென்பதைத் தலையை ஆட்டிய தோரணை யாலேயே தெரிவித்துவிட்டு, கிழிந்த தன் ஆடைகளைச் சிறிது சரிசெய்து கொண்டதன்றி, கயிறுகள் கட்டியிருந்த தால் நைந்து போயிருந்த மணிக்கட்டுகளையும் கவனித்துக் கொண்டான். அவற்றைக் கவனித்த கருணாகர பல்ல வனும் கூலவாணிகனை நோக்கி, “சேந்தா! கலிங்க வீரர்கள் உன்னை மிகவும் துன்புறுத்தியிருக்கிறார்கள் போலிருக்கிறதே?” என்று அனுதாபத்துடன் வினவினான்.

“சோழநாட்டு ஒற்றனிடமிருந்து உண்மையை வர வழைக்க வேறு என்ன செய்வார்களென்று நினைக்கிறீர் கள்?” என்று வினவினான் கூலவாணிகன், பதிலுக்கு.

“உன்மீது இவர்களுக்கு எத்தனை நாள்களாகச் சந்தேகம்?” என்று மீண்டும் வினவினான் கருணாகர பல்லவன்.

“இங்கு வரப்போவதாக நீங்கள் எனக்கு ஓலை யனுப்பியது எப்பொழுது?”

“பத்து நாள்களுக்கு மேலாகிறது.”

“அந்தப் பத்து நாள்களாக என் மாளிகைமீது கலிங்கத் தின் ஒற்றர்கள் கண் வைத்திருக்கிறார்கள்.”

"தமிழ் வணிகர்களையும் பிரமுகர்களையும் சிறையில் பிடித்து அடைத்து வைக்கும் வேலை எத்தனை நாள்களாக நடக்கிறது."

"மூன்று நாள்களாக."

"அதாவது?"

"மன்னன் பீமன் பாலூர் வந்த நாளாக."

"பீமன் வந்து மூன்று நாள்களாகின்றனவா?"

"ஆம். மிக ரகசியமாக வந்தான். இல்லாவிடில் நான் எச்சரிக்கையடைந்திருப்பேன். மன்னன் வருவதற்கு அறிகுறி யாகத் தாரைகள் ஊதப்படவில்லை. சங்கங்கள் சப்திக்க வில்லை. முதலில் ஊருக்குள் வரவேண்டிய குதிரைப் படைகளும் வரவில்லை. பீமன் வந்தது, நேற்று வரை யாருக்குமே தெரியாது. திடீரென நேற்று, மாளிகையில் என்னை வீரர்களுடன் வந்து பீமனே சிறைப்படுத்தித் துன்புறுத்திய பின்புதான் எனக்கே தெரியும்."

"பீமன் வந்து மூன்று நாள்களாயின என்று சொன் னாயே சேந்தா, அதெப்படித் தெரியும் உனக்கு?"

"பீமனே சொன்னான், 'நான் வந்து மூன்று நாள்களாக உன்னைக் கவனித்து வருகிறேன்' என்று."

இளையபல்லவன் சிறிது நேரம் சிறையில் அப்படியும் இப்படியும் உலாவியபடி சிந்தனையில் ஆழ்ந்தான். திடீரென்று மௌனத்தைக் கலைத்துக் கொண்டு, "நான் வந்திருப்பதை எப்படியறிந்தான் பீமன்?" என்று வின வினான் சேந்தனை நோக்கி.

"அது என் குற்றம் இளைய பல்லவரே! தாங்கள் அனுப்பிய ஓலையை என் பணப்பெட்டியில் ரகசிய அறையில் வைத்திருந்தேன். அந்த அறையைத் திறக்கும் முறை எனக்குத்தான் தெரியும் என்று மனப்பால் குடித் திருந்தேன். ஆனால் சோதனையின்போது நிமிட நேரத்தில் பீமன் அந்தக் கள்ள அறையைத் திறந்தான். பீமன் இந்தப்

பிறவியில்தான் மன்னன். சென்ற பிறவியில் பெட்டி திறக்கும் திருடனாயிருந்திருக்க வேண்டும்" என்று அலுத்துக்கொண்டு கூறினான் சேந்தன்.

இளையபல்லவன் முகத்தில் கவலைக்குறி படர்ந்தது. "அந்த ஓலையில் கடாரத்தின் மன்னன் குணவர்மனைப் பற்றிக் குறிப்பிட்டிருந்தேனே?" என்றான், குரலிலும் கவலை பாய.

"ஆம், குறிப்பிட்டிருந்தீர்கள்" என்றான் சேந்தன்.

"அப்படியானால் குணவர்மன் பாலூரில் இருப்பது பீமனுக்குத் தெரியும்?"

"தெரிந்திருக்க வேண்டும்."

"அவனிருக்குமிடம்?"

"அதுவும் தெரிந்திருக்க வேண்டும்."

"அப்படியானால், சோழநாட்டின் உதவியை நாடி வந்திருக்கும் குணவர்மனை ஏன் பீமன் சிறைப்படுத்த வில்லை?"

"அதுதான் எனக்கும் புரியவில்லை."

குணவர்மனையும் காஞ்சனாதேவியையும் சிறைப் படுத்தாமல் விட்டு வைப்பதற்கு ஆழ்ந்த அரசியல் காரணங்கள் இருக்கவேண்டும் என்று இளையபல்லவன் முடிவுக்கு வந்திருந்தானானாலும், அந்தக் காரணங்கள் என்னவாயிருக்கக் கூடும் என்பது புரியவில்லை அவனுக்கு. அவர்களுக்கும் தன்னைப்போல் பேராபத்துக் காத்திருக் கிறது என்பதை மட்டுமே புரிந்துகொண்ட இளைய பல்லவன், பீமனிடம் அகப்பட்டால் காஞ்சனாதேவியின் கதி என்னவாகுமோ என்பதை நினைத்துத் திகில் கொண் டான். அந்தத் திகிலுடன் அநபாயனைப் பற்றிய எண்ண மும் கலந்துகொள்ளவே பல விவரங்கள் விளங்காமல் குழம்பிய இளையபல்லவன், அவற்றைப் பற்றிச் சேந்த னிடமே விளக்கம் கேட்க முற்பட்டு, "சேந்தா!" என்று அவனை விளித்தான்.

அப்பொழுதும் மனவேதனைப் பட்டுக் கொண்டிருந்த சேந்தன் பதிலுக்கு, "ஹூம்" கொட்டினான்.

"அநபாயச் சோழரையும் பீமன் சிறைப்படுத்தினானாமே. தெரியுமா உனக்கு?" என்று வினவினான் கருணாகர பல்லவன்.

"தெரியும்" என்றான் கூலவாணிகன் பெருமூச்சு விட்டு.

"அவரையும் இந்தச் சிறையில்தானே அடைத்திருப்பார்கள்?"

"இதில்தான் அடைத்திருக்க வேண்டும். இந்த ஊரில் வேறு சிறை கிடையாது."

"இந்தச் சிறையைப் பார்த்தாயா சேந்தா!" என்று ஆச்சரியத்துடன் கேட்ட இளைய பல்லவன், சிறையையும் சாளரத்தின் மூலம் தெரிந்த சாளரத்தின் வெளிப்புறத்தையும் சுட்டிக் காட்டினான்.

அவன் சிறையை ஆராய்ந்ததால் வெறுப்புக் கொண்ட கூலவாணிகன், "இப்பொழுதே ஆராய்ந்துவிடுங்கள் சிறையின் அமைப்பை. நாளை நடுப்பகலுக்குப் பின்பு நமது கண்கள் எதையும் ஆராய முடியாது" என்றான்.

அவன் சொன்னதைக் காதில் வாங்கிக்கொள்ளாமலே பேசிக்கொண்டு போனான் கருணாகர பல்லவன். "இந்தச் சிறையின் அமைப்பை நன்றாகப் பார் சேந்தா! சுற்றிலும் பெரிய இரும்புச் சட்டங்கள், சிறையின் ஒவ்வொரு கூடத்திலும் ஏராளமான வீரர்கள். சாளரத்துக்கு வெளியேயும் பார். அதோ தெரியும் உயர்ந்த மதில் பெரும் கோட்டையின் மதில்களைப் போலிருக்கிறது. அவற்றை எவனும் தாண்டிக் கடக்க முடியாது. தவிர, சிறையின் அறைகளுக்கும் அந்த மதில்களுக்கும் இடையேயுள்ள வெளிப்பகுதி குதிரை வீரர்களால் காக்கப்பட்டிருக்கிறது..."

இப்படிப் பேசிக்கொண்டு போன இளையபல்லவனை இடைமறித்த கூல்வாணிகன், "இந்தச் சிறையிலிருந்து

யாரும் தப்பமுடியாது என்பதற்குக் காரணம் கூறுகிறீர்களா?" என்று இகழ்ச்சியுடன் கேட்டான்.

இளையபல்லவனின் கண்கள் கூலவாணிகன் முகத்தில் நன்றாகப் பதிந்தன. குரலை மிகவும் தாழ்த்திக் கொண்டு சொன்னான் இளையபல்லவன், "சேந்தா, இந்தச் சிறையிலிருந்து போரிட்டு யாரும் தப்ப முடியாது."

வெட்ட வெளிச்சமாகத் தெரிந்த அந்த உண்மையைத் தெரிவிக்க அத்தனை ரகசியமென்னவென்பதை அறியாத கூலவாணிகன், "அது தெரிந்த விஷயம்தானே?" என்றான்.

"ஆனால்..." என்று கூறி அப்புறமும் இப்புறமும் கவனித்தான் இளையபல்லவன்.

"ஆனால்?"

"இதிலிருந்து அநபாயர் தப்பியிருக்கிறார்."

கூலவாணிகனின் முகத்தில் வியப்புக்குறி படர்ந்தது. "ஆமாம், மறந்துவிட்டேன். எப்படித் தப்பினார்?" என்று கேட்டான், வியப்புக் குரலிலும் ஒலிக்க.

"அதுதான் எனக்கும் புரியவில்லை. இதிலிருந்து அவர் போரிட்டுத் தப்பியிருக்க முடியாது."

"வேறெப்படித் தப்பியிருக்க முடியும்!"

"தந்திரத்தால் தப்பியிருக்க வேண்டும்."

"என்ன தந்திரமாயிருக்கும்?"

"எனக்குப் புரியவில்லை. ஆனால் யாரோ நண்பர்கள் உதவி அவருக்கு இருந்திருக்க வேண்டும்."

"ஆம். ஆம், உண்மை."

"அது மட்டுமல்ல சேந்தா! அந்த நண்பர்கள் எண்ணிக்கையும் கணிசமாயிருக்க வேண்டும்."

"அதெப்படித் தெரிகிறது?"

"சிறையிலிருந்து தப்பிய பின்பு இன்னும் அவர் பாலூர்ப் பெருந்துறையில் சுதந்திரமாக உலாவுகிறார். அது மட்டுமல்ல, புறா மூலம் குணவர்மனுக்குத் தூதும்

அனுப்பியிருக்கிறார். அநபாயருக்கு இவ்வூரில் பக்கபலம் நிரம்ப இருக்கிறது, சந்தேகமில்லை."

இதைக் கேட்டதும் வியப்புக்குள்ளான கூலவாணிகன், "என்ன தூதுப் புறாவா! செய்தியா?" என்று ஆச்சரியத்துடன் வினவினான். சிறிது நேரத்துக்கு முன் பீமனும் இளையபல்லவனும் புறாவைப் பற்றிப் பேசிக்கொண்டதைக் கூலவாணிகனும் கேட்டுக் கொண்டுதான் இருந்தானெனினும் அப்போதிருந்த குழப்பமான மனநிலையில் அவன் அதைச் சரியாக மனத்தில் வாங்கவில்லை.

இளையபல்லவன், "ஆம் சேந்தா! குணவர்மனுக்குப் புறா மூலம் தூது வந்தது. அதில் அநபாயரே கையொப்பமிட்டிருந்தார்" என்றான்.

"அநபாயரே கையொப்பமிட்டிருந்தாரா?"

"ஆம் சேந்தா!"

"என்ன கண்டிருந்தது ஓலையில்?"

"குணவர்மனை மூன்று நாள்கள் பொறுத்திருக்கும்படி கண்டிருந்தது. மூன்று நாள்கள் அந்த மாளிகையில் எது நடந்தாலும் கவனிக்க வேண்டியதில்லையென்றும் எழுதியிருந்தது."

இம்முறை கூலவாணிகன் தீவிர சிந்தனையில் ஆழ்ந்தான் "மூன்று நாள்கள்! மூன்று நாள்கள்!" என்று சொல்லிப் பெருமூச்சு விட்டான்.

கூலவாணிகனின் வருத்தத்தையும் பெருமூச்சையும் கவனித்த இளையபல்லவன் கேட்டான்: "மூன்று நாள்களுக்கென்ன சேந்தா?"

"மூன்று நாள்கள் இந்தப் பாலூர்ப் பெருந்துறையில் அநபாயர் இருக்கப்போகிறார் என்பது தெளிவாகவில்லையா?" என்று வினவினான் சேந்தன்.

"ஆம்."

"அப்படியானால் அந்த மூன்று நாள்களில் ஒவ்வொரு வினாடியும் அவர் உயிர் ஆபத்திலிருக்கிறது."

"ஆபத்துக்கு அஞ்சும் சுபாவம் அநபாயருக்குக் கிடையாதென்பது உனக்குத் தெரியாதா?"

"தெரியும். அதனால்தான் நான் அஞ்சுகிறேன்."

"நீ அஞ்சுவானேன்?"

"சோழநாட்டு நலனில் அக்கறையுள்ள யாரும் அஞ்சுவார்கள்."

"என்ன அச்சம் அதில்?"

கூலவாணிகன் பதில் சொல்லவில்லை. சிறிது நேரம் இளைய பல்லவனை உற்றுப் பார்த்துக் கொண்டு நின்றான். பிறகு சொன்னான்: "நான் வணிகன் மட்டுமல்ல, இளைய பல்லவரே!"

"ஆம்," என்று தலைஅசைத்தான் இளையபல்லவன், கூலவாணிகன் எதைச் சொல்ல உத்தேசிக்கிறான் என்பதை அறியாமல்.

"நினைவு தெரிந்த நாளாக ஒற்றன் வேலையும் செய்கிறேன்."

"ஆம், சேந்தா."

"ஆகவே சோழநாட்டு அரசியல் நிலை, படைத் தலைவர்களைவிட எனக்கு நன்றாகத் தெரியும்."

"ஓகோ!"

"நீங்கள் பெரும் வீரர், இணையற்ற படைத்தலைவர். ஆனால் உங்களுக்கு மக்கள் மனம் தெரியாது. அவர்களுடன் சதா உலவிப் பழகும் நான்தான் அறிவேன்."

"சரி, சேந்தா."

"சோழநாட்டு மக்கள் என்ன விரும்புகிறார்கள் தெரியுமா, படைத் தலைவரே!"

"சொல்."

"அநபாயரை அரியணையில் எதிர்பார்க்கிறார்கள்."

திடீரெனக் கூலவாணிகன் வீசிய அந்தச் சொல் சரத்தால் தாக்குண்டவனைப் போல் சில விநாடிகள் அசைவற்று நின்றுவிட்டான் இளையபல்லவன். பிறகு கூலவாணிகனை நோக்கி, "சேந்தா, வீரராஜேந்திர சோழதேவர் இப்பொழுதுதானே அரியணையில் ஏறியிருக்கிறார்" என்று வினவினான்.

"ஆம், இளையபல்லவரே" என்றான் கூலவாணிகன்.

"அப்படியிருக்க அநபாயர் எப்படி அரியணை ஏற முடியும்?"

"மக்கள் அவரை விரும்புகிறார்கள்."

"வீரராஜேந்திரரிடம் பக்தியில்லையா மக்களுக்கு?"

"இருக்கிறது. அவர் வீரத்தில் இருக்கிறது. ஆனால்...?"

"ஆனால், என்ன சேந்தா?"

"அக்கம்பக்கத்து நாடுகள் விஷயத்தில் அவர் கடைப்பிடிக்கும் கொள்கையை மக்கள் ஏற்கவில்லை. உதாரணமாக, வேங்கியில் சாளுக்கிய விஜயாதித்தனை அரசாள விட்டிருப்பது பிடிக்கவில்லை. அங்கு அரசாள வேண்டியவர் அம்மாங்காதேவியின் புதல்வரல்லவா?"

"ஆம். ஆனால், இப்பொழுது சாளுக்கியர்களுடன் போர் தொடுப்பதில் கஷ்டங்களிருக்கின்றன."

"கஷ்டங்களை மக்கள் கவனிப்பதில்லை இளையபல்லவரே, நீதியைத்தான் கவனிக்கிறார்கள். நீதி நிலைத்திருந்தால் அநபாயர் வேங்கியின் அரியணையில் அமர்ந்திருக்க வேண்டும். அமர்ந்திருக்கத் தகுதியுள்ளவர் என்று மக்கள் நினைக்கிறார்கள். அநபாயர் போர் வீரர் மட்டுமல்ல. ராஜதந்திரத்திலும் வல்லவர். வீர ராஜேந்திரருக்கு ராஜதந்திரம் அத்தனை போதாது என்பது மக்கள் நம்பிக்கை."

சேந்தன் கூறியது அத்தனையும் சரியென்பது தெரிந்தே இருந்தது இளைய பல்லவனுக்கு. வீரராஜேந்திரனுக்குப் பிறகு எப்படியும் அநபாயன் சோழ அரியணையில் மட்டு மின்றி வேங்கி அரியணையிலும் அமரக்கூடும் என்ற நம்பிக்கையுமிருந்தது. இருப்பினும், அதற்குக் கால மிருக்கிறது என்று நினைத்த இளையபல்லவன் பதிலேதும் சொல்லவில்லை. கூலவாணிகன் சேந்தனே மேற்கொண்டு பேசினான். "நான் அஞ்சியதற்குக் காரணம் தெரிகிறதா உங்களுக்கு? அநபாயர் நமது நாட்டின் உயிர். அவர் இந்த ஊரிலிருக்கும் மூன்று நாள்களும் அவர் உயிர் ஆபத்தி லிருக்கிறது."

அதை ஆமோதித்த இளையபல்லவன், "அதைப்பற்றி நாம் கவலைப்பட வேண்டியதில்லை சேந்தா. நாளைக்கு நமது உயிர் எமலோகத்தை நாடிச் சிட்டாய்ப் பறக்கும்!" என்று கூறியபின்பே, அநபாயனைப் பற்றிய நினைப்பி லிருந்து சிறையின் சூழ்நிலைக்கு வந்த கூலவாணிகன், அடுத்த நாள் தன் தலை போய்விடுமென்பதை நினைத்து நடுங்கினான். இளையபல்லவன் மட்டும் அந்த நினைப்பை அறவே உதறிவிட்டு, மஞ்சத்திலிருந்து பஞ்சணையை நன்றாகத் தட்டிவிட்டு, "அப்பாடா" என்று படுத்தான். அவன் அப்படி ஆனந்தமாகப் படுத்தது கூலவாணி கனுக்குப் பெரும் வெறுப்பாயிருக்கவே, "ஏன், பஞ்சணை சுகமாயிருக்கிறதோ?" என்று வினவினான்.

"ஆமாம், சேந்தா! கலப்படமில்லாத இலவம் பஞ்சு" என்றான் இளையபல்லவன்.

"நன்றாக உறங்குங்கள்" என்று இகழ்ச்சியுடன் கூறிய கூலவாணிகன், அடுத்த சில வினாடிகளில் அயர்ந்து போனான். இளையபல்லவன் சில வினாடிகளிலேயே கண்களை மூடி நன்றாகத் தூங்க முற்பட்டதைக் கண்டு "நாளை உயிர் போக இருக்க எப்படித் தூக்கம் வருகிறது இவருக்கு?" என்று சொல்லிக்கொண்டு மிதமிஞ்சிய

வெறுப்புடன் உறங்காமலே அன்றிரவைக் கழித்தான் கூலவாணிகன். மறுநாள் காலைப்பொழுது விடிந்து நீண்ட நேரமட்டும் நன்றாகத் தூங்கிய இளையபல்லவன், உணவைத் தட்டுகளில் கொண்டு வந்த காவலர் எழுப்பிய பின்பே எழுந்திருந்து பெருங்கிண்ணங்களிலிருந்த நீரால் பல்துலக்கி முகம் கழுவினான்.

உணவைத் தட்டுகளில் வைத்துக் காவலர் சென்றதும், 'இரவு நன்றாகத் தூங்கினீர்களா?' என்று இகழ்ச்சியுடன் கேட்டான் சேந்தன்.

"ஆம், உறங்கினேன்."

"எப்படி உறக்கம் பிடித்தது?"

"ஏன்? பிடிக்காமலென்ன?"

"இன்று நாம் வெட்டப்படுவோம்."

"ஆகவே இன்றிரவு உறங்க முடியாதல்லவா? அதற்காகத்தான் நேற்றிரவே போதிய அளவு தூங்கிவிட்டேன்" என்று கூறி நகைத்த இளையபல்லவன், உணவின் எதிரில் சில வினாடிகளில் உட்கார்ந்தான். கூலவாணிகன் உணவுத் தட்டினருகில்கூட வராமல் இளையபல்லவனை வெறுப்புடன் பார்த்துக்கொண்டு நின்றான். சில வினாடிகள் உணவுத் தட்டை உற்றுப் பார்த்த இளையபல்லவன், திடீரென அதன்மேல் மூடப்பட்டிருந்த துணியை எடுத்து மடித்து ஒருபுறம் வைத்துவிட்டு உணவருந்துவதில் முனைந்தான். அவன் மிகுந்த விருப்பத்துடன் உணவைச் சுவைத்து அருந்துவதைக் கண்ட கூலவாணிகனின் வெறுப்பு பன்மடங்காகியது.

"ஏன் சேந்தா, நீ சாப்பிடவில்லை?" என்று வினவினான் இளையபல்லவன்.

"தேவையில்லை எனக்கு" என்று கூறிய கூலவாணிகன் முகத்தை வேறுபுறம் திருப்பிக் கொண்டான்.

உணவை நிதானமாகச் சுவைத்து உண்ட பின்பு தட்டு களை எடுத்துச் செல்ல வீரர்களைப் பணித்த கருணாகர பல்லவன் அதன்மேல் மூடியிருந்த துணியை மட்டும் தன் மஞ்சத்தில் ஒளித்தான். வீரர்கள் தட்டுகளை எடுத்துச் சென்றதும் கூலவாணிகனை அழைத்த கருணாகர பல்லவன், "சேந்தா, இதைப் பார்!" என்று தான் ஒளித்து வைத்திருந்த துணியை எடுத்து அவனிடம் காட்டினான்.

"என்ன அந்தத் துணிக்கு?" என்று எரிந்து விழுந்தான் கூலவாணிகன்.

"அருகில் வா!" என்றான் இளையபல்லவன்.

அருகில் நெருங்கியதும், இளையபல்லவன் காட்டிய அந்தத் துணியைக் கண்டு பிரமித்த கூலவாணிகன், "இது..." என்று ஏதோ குழறினான்.

"உஸ்... இரைந்து பேசாதே!" என்று அவன் வாயைப் பொத்திய இளையபல்லவன், "இது நம் விமோசனத்தின் சிலை. இதைக் கேள்," என்று கூறி, அவன் காதில் மிகவும் ரகசியமாக ஏதேதோ ஓதினான்.



## அத்தியாயம் 11

உணவுத் தட்டு சிறைக்குள் கொண்டு வரப்பட்ட போது மிகவும் அசட்டையாயிருந்த கருணாகர பல்லவன் அந்தத் தட்டின்மீது மூடப்பட்டிருந்த வெள்ளைச் சீலையைக் கண்டதும் எச்சரிக்கை அடைந்துவிட்டதை ஆரம்பத்தில் கவனிக்காத கூலவாணிகன் சேந்தன், இளைய பல்லவன் மிகச் சாவதானமாக உணவருந்தியதைப் பற்றி முதலில் வெறுப்படைந்தானானாலும், ஒளித்து வைத்தத் துணியை எடுத்துக் காட்டியதும் மிதமிஞ்சியப் பிரமிப்புக்கே இலக்கானான். காவலர் உணவுத் தட்டை எடுத்துச் சென்றதும், "இங்கு வா. இந்தத் துணியைப் பார்" என்று அழைத்த இளையபல்லவன்மீது, "என்ன அந்தத் துணிக்கு?" என்று எரிந்து விழுந்த கூலவாணிகன், அந்தத் துணியிலிருந்தது என்னவென்பதை அறிந்ததும் வியப்பின் எல்லையை அடைந்தான். அப்படி ஏற்பட்ட எல்லையில்லாத வியப்பின் விளைவாக, "இளையபல்லவரே! இது..." என்று ஏதோ குழறவும் முற்பட்டான்.

அந்தக் குழறலை ஒரே பார்வையாலும் "உஸ்! இரைந்து பேசாதே" என்ற மூன்று சொற்களாலும் தேக்கிவிட்ட இளையபல்லவன், சேந்தனை அருகில் வர இழுத்து, அவன் காதுக்கருகில் குனிந்து, "சேந்தா! இது நம் விமோசனச் சீலை. இப்பொழுது புரிகிறதா உனக்கு?" என்று மிகவும் ரகசியமாகக் கேட்டான்.

# 11. நீதி மண்டபம்



அப்பொழுதும் பிரமிப்பின் பிடியில் சிக்கிக் கொண்டிருந்த கூலவாணிகன் சேந்தன், "புரிகிறது இளைய பல்லவரே! நன்றாகப் புரிகிறது. ஆனால்...?" என்று ஏதோ கேட்க முற்பட்டான்.

இளையபல்லவன் மீண்டும் அவன் காதிலே ரகசியமாக ஓதத் தொடங்கி, "சேந்தா! இதில் சந்தேகத்துக்கு இடமில்லை. இதிலிருக்கும் கையொப்பம் அநபாயருடையதுதான். அவன் நமக்கு அளிக்கும் அபயம்தான் இந்தச் சீலையில் கண்ட வரிகள்" என்று கூறினான்.

கூலவாணிகன், அந்தச் சீலையை வாங்கிக்கொண்டு, அந்த அறைச் சாளரத்தின் அருகில் சென்று அந்தச் சீலையில் கூரிய மயிலிறகு நுனியால் மிக மெல்லியதாகத் தீட்டப்பட்டிருந்த நாலு வரிகளைக் கவனித்தான். "எதற்கும் அஞ்ச வேண்டாம். சமயத்தில் உதவி வரும். சந்தர்ப்பம் கிடைக்கும்போது பயன்படுத்திக் கொள்ளவும் — அநபாயன்" என்ற வரிகள் மெல்லியதாக மிகத் தெளிவாகத் தீட்டப்பட்டிருந்தன. அந்த வரிகளை மீண்டும் மீண்டும் கூலவாணிகன் படிப்பதைக் கண்ட இளைய பல்லவன் சாளரத்தருகில் தானும் சென்று, அவனுக்குப் பக்கத்தில் நின்று அந்தச் சீலையை வாங்கித் தன் கச்சையில் செருகிக்கொண்டான். தவிர, மறுபடியும் சிறையில் மஞ்சங்கள் இருந்த மத்திய இடத்திற்குச் செல்ல முயன்ற கூலவாணிகனைத் தடுத்து, "சேந்தா! இப்பொழுது மஞ்சத்துக்குச் செல்ல வேண்டாம். இப்படியே நாம் வெளியே நடமாடும் குதிரைக் காவலரை வேடிக்கை பார்ப்போம்" என்றும் கூறினான்.

என்னதான் அநபாயன் அனுப்பிய சீலை அபயம் தந்திருந்தாலும் ஆபத்திலிருந்து தப்பும் வரையில் நிச்சயமாக எதையும் சொல்ல முடியாதென்ற தீர்மானத்துடனிருந்த கூலவாணிகனுக்கு வேடிக்கை பார்க்க அது உசிதமான சமயமாகத் தெரியாததால், "வேடிக்கை பார்க்க

இதுதான் சமயமா இளைய பல்லவரே?" என்று கசப்புடன் வினவினான்.

இளையபல்லவனின் இதழ்களில் சற்றே இளநகை படர்ந்தது. "வேறு சமயம் எப்பொழுது கிடைக்கும் சேந்தா? இந்தச் சிறைக்கூடத்திற்கு நம்மை மறுபடியும் அழைத்து வரப் போகிறார்களா?" என்று பதிலுக்கு இளைய பல்லவனும் கேட்டான்.

"திரும்பவும் இங்கு வர முடியாதது தங்களுக்கு வருத்தமாயிருக்கிறதா?" என்றான் சேந்தன், குரலில் ஏளனம் தொனிக்க.

"இல்லை... இல்லை... வருத்தமில்லை" என்று நகைத்தான் இளைய பல்லவன்.

"அப்படியானால் நான் போகிறேன், மஞ்சத்துக்கு."

"என்ன அங்கே அவசரம்?"

"இங்கே என்ன வேலை?"

"ஏற்கெனவேதான் சொன்னேனே குதிரைக் காவலர் போவதை வேடிக்கை பார்க்கலாமென்று."

"வேடிக்கை எனக்குத் தேவையில்லை."

"ஆனால் பேச்சுத் தேவையல்லவா?"

"என்ன பேச்சு?"

"அடுத்து நாம் என்ன செய்ய வேண்டும் என்பதைத் தீர்மானிக்க வேண்டாமா?"

இதைக் கேட்ட கூலவாணிகன், பல்லவனைச் சற்றே ஏறெடுத்து நோக்கினான். "சேந்தா! நான் சொல்வது புரியவில்லையா உனக்கு? மஞ்சத்தில் உட்கார்ந்து நாம் பேச முடியாது. இங்குள்ள காவலர்களில் நண்பர்களுமிருக்கலாம், விரோதிகளுமிருக்கலாம். ஆகவே நாம் தனித்துப் பேசக்கூடிய இடம் இந்தச் சாளர வாயில்தான். இது பிரமுகர்கள் சிறையாதலால் விசாலமாயிருக்கிறது.

இந்தச் சாளரத்துக்கும் இரும்புக் கதவும் கம்பிகளுமிருக்கும் இடத்துக்கும் இடையே பன்னிரண்டடிகளாவது இருக்கும்..." என்று சொல்லிக் கொண்டு போன இளைய பல்லவனை இடையே தடுத்த கூலவாணிகன், "ஆமாம் பிரபு! இருக்கும் இருக்கும்!" என்று சொல்லி ஆமோதித்துத் தலையையும் அசைத்தான்.

கூலவாணிகன் பேச்சின் குறுக்கே விழுந்ததால் ஒரு விநாடி பேச்சை நிறுத்திய கருணாகர பல்லவன், மேலும் பேசத் தொடர்ந்து, "ஆம் சேந்தா! பன்னிரண்டு அடிகளுக்குக் குறைவில்லை. நாம் இந்தச் சாளரத்தின் மூலம் வெளியே பார்த்துக்கொண்டு மெள்ளப் பேசினால் கதவுக்கு அப்புறமுள்ள காவலர் காதில் விழாது. தவிர பேசுவதும் புரியாது. நாம் ஏதோ வெளிப்புறத்தை வேடிக்கை பார்ப்பதாகவே நினைப்பார்கள். ஆகவே அப்புறமோ இப்புறமோ அசையாமல், வெளிப்புறம் பார்த்தே பேசு" என்று விவரித்துவிட்டு, "சேந்தா! இந்தப் பாலூர் துறைமுகத்தின் கோட்டை பலமானது. இயற்கை அரண்களும் இதற்கிருக்கின்றன. ஆனால் ஊருக்குள் இருக்கும் ஜனத்தொகை எப்படி?" என்று விசாரித்தான்.

இந்தக் கேள்வியும், கேள்வியை ஒட்டிய விசாரணையும் அனாவசியமாகப் பட்டதால், கூலவாணிகன் வெறுப்புடன் இதழ்களை மடித்து, பருமனான தன் சரீரத்தையும் ஒருமுறை நெளித்து, "எதற்கு இந்த ஆராய்ச்சி இப்பொழுது?" என்று வினவினான்.

"சொல், தேவையிருக்கிறது." கருணாகர பல்லவன் குரலில் கண்டிப்பு இருந்தது.

"மூன்றிலொரு பாகம் கலிங்கத்தவர். மற்ற இரண்டு பாகங்களில் தமிழரும், வேங்கி நாட்டவரும் சரி பாதி" என்று வினவினான் கூலவாணிகன்.

"இங்குள்ள படை எப்படி?"

"அதுவும் கலப்படம். கலிங்கரும், தமிழரும் வேங்கி நட்டவரும் இருக்கிறார்கள்."

"வணிகர்?"

"பெரும்பாலும் தமிழர். வேங்கி நாட்டவர் யாரு மில்லை. கலிங்கர் ஒரு சிலர்."

"அப்படியானால் கலிங்கத்தின் மிகப் பலவீனமான இடம் அந்த பாலூர்ப் பெருந்துறைதான்" என்றான் கருணாகர பல்லவன்.

கூலவாணிகன் வியப்பினால் விழித்தான். அந்த வியப்பின் விளைவாக ஓர் உண்மையும் சொன்னான்: "இளைய பல்லவரே! இந்த ஊரில் தமிழ் வணிகர் பெரும் பாலோர் என்பதைப் பற்றிப் பெருமைப்பட வேண்டாம். படையினரில் பெரும்பாலும் கலிங்கர்தான். ஒரு சிலர் தான், தமிழர்" என்று.

இளையபல்லவன் சற்று யோசித்துவிட்டு, "சேந்தா! ஒரு நாட்டின் சக்தி படைபலத்தை மட்டும் பொறுத்த தன்று. வாணிபத்தையும் பொறுத்தது. வணிகர் பெருகிய ஊரில் அவர்கள் சக்தி மிதமிஞ்சி நிற்கும். படையிலும் சில தமிழர் இருப்பதால், அவர்கள் உதவியும் தமிழ் வணி கருக்கு இருக்கும். இந்தக் கூட்டுறவுதான் பீமனுக்கு இந்த ஊரில் பெரும் பலவீனம். இந்தக் கூட்டறவால்தான் அநபாயர் சிறையிலிருந்து தப்பியிருக்கிறார். சிறைக்குள் ளிருக்கும் நமக்கும் செய்தியனுப்பியிருக்கிறார். நமக்கு உணவு கொண்டு வந்த வீரனைக் கவனித்தாயா?" என்று கேட்டான.

"இல்லை. அவனுக்கென்ன?"

"என் உணவை மஞ்சத்தில் வைத்தான்."

"ஆம்."

"உடனே திரும்பிப் போகவில்லை."

"அப்படியா?"

"ஆம், சற்று நின்றான். உணவு மேலிருந்த சீலையை உற்றுப் பார்த்தான். பிறகே சென்றான்."

பிரமிப்புத் தட்டிய விழிகளை இளைய பல்லவன் மீது திருப்பிய கூலவாணிகன், "இதை நான் கவனிக்க வில்லையே!" என்றான்.

"மனத்தில் சாவுக் கிலி பிடித்திருந்ததால் நீ எதையும் கவனிக்கவில்லை சேந்தா! அபாயத்திலிருப்பவன் மனத்தைத் தளரவிடக்கூடாது. மனத்தையும் கண்ணையும் காதையும் தீட்டி வைத்துக்கொண்டு சந்தர்ப்பத்தை எதிர்பார்த்திருக்க வேண்டும். நீ சோர்வடைந்து கிடந்தாய். ஆனால் நான் கவனித்தேன். கவனித்ததும் சீலைமீது கண்களை ஓட்டி னேன். சீலை மிக மெல்லியதாகையால் மறுபுறமிருந்த எழுத்து கள் தெளிவாகத் தெரிந்தன. சீலையை எடுத்து முடித்து வைத்துக்கொண்டேன்" என்ற இளைய பல்லவனை இடை மறித்த கூலவாணிகன், "அதனால்தான் தைரியமாக உணவருந்தினீர்களா?" என்று கேட்டான்.

இளையபல்லவன் பதிலுக்கு நகைத்தான். "இல்லை சேந்தா! எப்படியும் நான் உணவருந்தியிருப்பேன். இறப்பு எப்பொழுது வருமென்று யாரும் நிச்சயமாய்ச் சொல்ல முடியாது. ஆகவே, உயிருடனிருக்கும் வரையில் துணி வுடன் வழக்கப்படி வாழ்வதே அறிவாளிகளுக்கு அழகு" என்று கூறிய இளையபல்லவன், "அது கிடக்கட்டும் சேந்தா! இப்பொழுது நாம் கவனிக்க வேண்டியதெல் லாம், அநபாயர் உதவி எப்பொழுது வரும், எப்படி வரும், வந்தால் நாம் நடந்துகொள்ள வேண்டிய முறை என்ன என்பதுதான். உன் விடுதியில் பீமன் தனக்கு எல்லாம் தெரிந்தமாதிரி நடித்தான். ஆனால் அவனுக்குத் தெரிந்த உண்மை சொற்பம் என்பதை நான் தெரிந்துகொண்டேன்" என்றும் குறிப்பிட்டான்.

"எப்படித் தெரிந்து கொண்டீர்கள்?"

"பீமன் வாயிலிருந்தே."

"பீமன் வாயிலிருந்தா!"

"பீமன் வாயிலிருந்துதான். தூதுப் புறா விடப்பட்ட தால் நான் பிரமுகர் வீதியிலிருந்த வீட்டிலிருந்ததை ஊகித்ததாகச் சொன்னானல்லவா?"

"ஆம், சொன்னான்."

"ஆனால் தூதுப் புறா எனக்காக விடப்படவில்லை யென்பதை அவன் உணரவில்லை. குணவர்மனுக்கு விடப்பட்டது அந்தப் புறா."

"அப்படித்தான் இருக்க வேண்டும். நீங்கள் வந்தது அநபாயருக்கு எப்படித் தெரியும்?"

"உண்மையில் அப்பொழுது நான் அங்கிருந்தது அநபாயருக்குத் தெரியாது. ஆகையால் சந்தர்ப்பவசத்தால் என்னைப் பிடித்திருக்கிறான் பீமன். துறைமுகத்திலிருந்து என்னைத் துரத்தி வந்தவர்கள் நான் வெளிநாட்டுப் பிரமுகர் வீதியில் மறைந்துவிட்டதாகச் சொல்லியிருக் கிறார்கள். அங்கு ஒற்றர்களை நிறுத்தினான் பீமன். தூதுப் புறா ஒன்று பறந்ததாகச் செய்தி கிடைத்ததும் அது எனக்காகத்தான் விடப்பட்டதாக நினைத்தான். அநபாயர் தப்பிவிட்டார். நான் ஒரு விடுதியில் மறைந்திருக்கிறேன். அங்கு விடப்படுகிறது ஒரு புறா. எல்லாவற்றையும் இணைத்துப் பார்த்து, அநபாயரின் முத்திரை மோதிரத்தை அனுப்பி என்னை வஞ்சகமாக அழைத்து வந்துவிட்டான்."

இதைக் கேட்டதும் அதிர்ச்சியடைந்த கூலவாணிகன், "ஆம். சொல்ல மறந்துவிட்டேன், உங்களிடம். பீமன் என் பெட்டியைச் சோதனை செய்தபோது உங்கள் ஓலையுடன் அநபாயர் எனக்களித்திருந்த முத்திரை மோதிரத்தையும் வைத்திருந்தேன். அதையும் அவன் எடுத்துக்கொண்டான்" என்றான்.

"நீ சொல்லத் தேவையில்லை சேந்தா! பெரும் ஒற்றர்களிடம் ராஜாங்கக் காரியங்களைச் சாதிக்க ராஜவம்ச முத்திரை மோதிரங்களைக் கொடுக்கும் பழக்கம் உண்டு என்பதை நானறிவேன். ஆகவே உன் மாளிகையில் நீ இருந்த கோலத்தைக் கண்டதும் உண்மையை ஊகித்துக் கொண்டேன்" என்ற இளையபல்லவன், "ஆகவே சேந்தா! பீமனின் நடவடிக்கைகள் சந்தர்ப்பவசத்தாலேயே பயனடைந்திருக்கின்றன. பீமன் சிறந்த அறிவாளியாதலால் இந்த நிலைமையைத் தனக்கு அனுகூலமாகச் செய்துகொள்ளவே முயலுவான். ஆகவே உனக்கும் எனக்கும் இன்று விசாரணை இருக்காது" என்றான்.

இளையபல்லவன் சொற்களைக் கேட்ட கூலவாணிகன் மிதமிஞ்சிய பிரமிப்பை அடைந்தான். அத்துடன் திடீரென இளையபல்லவனை நோக்கியும் திரும்பினான். திடீரெனத் திரும்பி, "என்ன! என்ன சொல்கிறீர்கள்?" என்று வினவவும் செய்தான்.

"இன்று நமக்கு விசாரணை இருக்காது" உறுதியுடனும் திட்டவட்டமாகவும் வந்தது இளையபல்லவன் பதில்.

"ஏன்?" என்று மறுபடியும் வினவினான் கூலவாணிகன்.

"நீயும் நானும் முக்கியமல்ல பீமனுக்கு" என்று திட்டவட்டமாகக் கூறினான் இளையபல்லவன்.

"வேறு யார் முக்கியம்?"

"அநபாயர் முக்கியம்."

"உண்மைதான்."

"நம்மைக் கொல்வதால் பீமனுக்கு லாபம் இல்லை."

"ஏன்?"

"நம்மைக் கொன்றால் சிறந்த ஒரு வலையை இழப்பான் பீமன். புலி தப்பிவிடும்."

"நீங்கள் சொல்வது புரியவில்லை எனக்கு."

"நான் அநபாயனின் இணைபிரியாத் தோழன்" என்று சுட்டிக் காட்டிக்கொண்ட இளையபல்லவனது குரலில் பெருமிதம் மிதமிஞ்சி ஒலித்தது.

"உங்களை இரட்டையர் என்றுகூடச் சொல்வதுண்டு" என்று கூலவாணிகனும் ஒப்புக்கொண்டான்.

"ஆம் ஆம். அந்தப் பாக்கியம் எனக்குண்டு. ஆகவே என்னை அழித்தால் அநபாயரை இழுக்கும் காந்தத்தை இழப்பான் பீமன்."

கூலவாணிகன் முகத்தில் தெளிவுக்குறி படர்ந்தது. "உண்மைதான் இளையபல்லவரே! உம்மை வைத்து அநபாயரை இழுக்கப் பார்ப்பான் பீமன்" என்றான்.

இளையபல்லவன் சில விநாடிகள் ஏதோ யோசித்தான். "பீமன் எண்ணம் அப்படித்தானிருக்கும். அநபாயரை அழித்துவிட்டால் வேங்கி நாட்டு அரியணையில் அமர வேண்டிய அரசனை அழித்ததாகிவிடும். பிறகு வேங்கி நாட்டில் அரியணையில் போட்டி இருக்காது. சாளுக்கிய விஜயாதித்தன் தாயாதி எதிர்ப்பைப் பற்றி அச்சப்பட அவசியமில்லை. நாடு திடமாகிவிடும் அவனுக்கு. திடமான வேங்கி நாடு கலிங்கத்துக்கும் தமிழகத்துக்கும் இடையே இருப்பதால் கலிங்கத்துக்கு அது பெரும் அரண் போலாகும். அத்தகைய நிலையை ஏற்படுத்த அநபாயர் சிக்கவேண்டும். அநபாயரைப் பாலூரில் சாதாரணமாகப் பிடித்துவிட முடியாதென்பதைப் பீமன் அறிந்திருக்கிறான். அந்த வேங்கையைப் பிடிக்க என்னைத் தூண்டுதலாக உபயோகப்படுத்துவான். ஆகவே விசாரணை இன்று கிடையாது. தவிர விமோசனமும் இந்தச் சிறையிலிருந்து கிடைக்காது" என்றும் கூறினான்.

"அதென்ன அத்தனை திட்டமாகச் சொல்கிறீர்கள்?" என்று கேட்டான் கூலவாணிகன்.

"நாமிருப்பதால் இந்தச் சிறைக்கூடம் மிக ஜாக்கிரதை யாகக் கவனிக்கப்படும். அநபாயர் இங்குள்ள அவர் நண்பர்களை உபயோகப்படுத்தினால் உடனே சிறை செய்யப்படுவார்கள். இங்கிருந்து தப்ப ஏற்பாடு இருக்காது."

"எங்கிருந்து இருக்கும்? ஒருவேளை விசாரணை நடந்தால் நீதிமண்டபத்திலிருந்து..." என்று கேட்க முற்பட்ட கூலவாணிகனை இடைமறித்த இளைய பல்லவன், "அங் கிருந்தும் இருக்காது சேந்தா! நீதி மண்டபம் நான்கு சுவர் களுக்குள் அடங்கியது. அது பலமாகவும் காக்கப்பட் டிருக்கும். அங்கிருந்து நாம் தப்ப முடியாது. வெளிப் புறத்தில்தான் நமக்கு விமோசனம்" என்றான்.

"வெளிப்புறத்திலென்றால்?"

"நமக்கு மரணதண்டனை விதிக்கப்பட்டால் நீதி மண்டபத்திலிருந்து கொலைக்களத்துக்குச் செல்லும் வழியில் காப்பாற்றப்படலாம். சிறைத் தண்டனை விதிக்கப் பட்டால் சிறைக்கு மீண்டும் வரும்போது வழியில் மீட் கப்படலாம். வேறு இடமில்லை" என்று திட்டமாக அறிவித்த இளைய பல்லவன், "சேந்தா! இது அனைத்தும் உனக்கு எதற்காகச் சொல்கிறேன் தெரியுமா?" என்று கேட்டான்.

"தெரியாது" என்று பதில் சொன்னான் கூலவாணிகன்.

"அநபாயர் குறிப்பிட்டிருப்பதுபோல் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ள நீ த்யாராயிருக்க வேண்டும். எதற்கும் என்னைக் கவனித்துக் கொண்டிரு. தவிர, சிறையி லிருக்கும் வரையில் சந்தேகத்துக்கு இடம் கொடாமல் நடந்துகொள். பழையபடி திகிலுடனும், வெறுப்புடனும் நடந்துகொள். மகிழ்ச்சியிருந்தால் வெளிக்குக் காட்டாதே. நீதி மண்டபத்தைவிட்டுக் கிளம்பியதும் என்னையே கவனி. இனி நமக்குள் சம்பாஷணை எதுவும் கிடையாது" என்று முடிவாகச் சொல்லிய இளையபல்லவன், சாளரத்தை

விட்டு மீண்டும் அறையின் நடுவுக்கு வந்து மஞ்சத்தில் சாய்ந்து கொண்டான்.

புத்தி பெரிதும் குழம்பிக் கிடந்ததால் என்ன செய்வதென்பதை அறியாத கூலவாணிகன் ஏதேதோ யோசித்துக் கொண்டு பொழுதை ஓட்டினான். இளையபல்லவன் சொல்வதெல்லாம் நியாயமாகவும் காரணங்களை ஒட்டியதாகவும் இருந்தாலும், கூலவாணிகன் மனத்தில் பூரண திருப்தியில்லை. 'பீமன் இன்றே நீதி மண்டபத்தில் சந்திப்பதாகத்தானே சொல்லிப் போனான், வார்த்தை தவறும் வழக்கம் அவனுக்கில்லையே?" என்று எண்ணினான்.

ஆனால் விஷயங்கள் இளையபல்லவன் சொன்னது போலவே நடந்தன. அன்று முழுவதும் மட்டுமல்ல, அதற்கு மறுநாளும்கூட விசாரணை எதுவும் நடைபெறவில்லை. இருவரும் சிறையிலேயே அடைந்து கிடந்தார்கள். அந்த இரண்டு நாளும் இரண்டு யுகங்களாகக் கூலவாணிகனுக்குப் பட்டனவேயொழிய, இளையபல்லவனோ உண்பதையும் உடுப்பதையும் சிறிதும் குறைத்துக் கொள்ளாமல் சகல சௌகரியத்தையும் செய்துகொண்டான். மூன்றாவது நாள்தான் அவர்களிருவரையும் நீதிமண்டபத்திற்கு அழைத்துச் செல்லக் காவலர்கள் வந்தார்கள். அவர்களோடு உடனே புறப்பட மறுத்த இளையபல்லவன் தன் பதவிக்கும் வணிகப் பெருந்தகையின் அந்தஸ்துக்கும் தகுந்த ஆடைகள் அளிக்குமாறு கோரினான். அவர்கள் கொண்டு வந்த ஆடைகளைத் தானும் அணிந்து கூலவாணிகனையும் அணியச் சொல்லி காவலரைப் பின்தொடர்ந்தான்.

காவலர் ஒரு பெரிய மூடுவண்டியில் இருவரையும் ஏற்றி நீதி மண்டபத்திற்கு அழைத்துச் சென்றார்கள். நீதி மண்டபத்திற்குள் நுழைந்த கருணாகர பல்லவன் அந்த மண்டபத்தைச் சுற்றிலும் ஒருமுறை நோக்கினான். மண்டபம் பூராவும் ஜனங்கள் கூட்டம் மண்டிக் கிடந்தது.

காவல் மிகவும் பலமாக இருந்தது. ஜனங்களை இருபுறமும் ஈட்டிகளைக் கொண்டு அடக்கி வைத்த வீரர்களைத் தவிர யாரும் தப்ப முடியாதபடி அளவுக்குச் சற்று அதிகமாகவே காவல் இருந்தது அந்த நீதி மண்டபத்தில்.

மண்டபத்தைச் சுற்றுமுற்றும் பார்த்துக்கொண்டு நீதி ஸ்தானத்துக்கு அருகே வந்ததும் அந்த ஸ்தானத்தின் மீது கண்களை உயர்த்திய கருணாகர பல்லவன் சில விநாடிகள் ஸ்தம்பித்து நின்றான். அந்த ஸ்தானத்தில் அமர்ந்திருந்தது பீமனல்ல. கொடுமையிலும், தந்திரத்திலும் எடுத்த காரியத்தைச். சாதிப்பதிலும், பீமனைவிடக் கோடி மடங்கு உயர்ந்தவனும் தனது பரம விரோதியுமான மனிதன் உட்கார்ந்திருப்பதைக் கண்ட கருணாகர பல்லவனது நெஞ்சில்கூடச் சிறிது அச்சம் உதயமாயிற்று. அதனால் சிறிது சலனப்பட்ட கருணாகர பல்லவனது கண்களை, நீதி ஸ்தானத்தில் அமர்ந்திருந்தவனின் இரு கண்கள் கூர்ந்து கவனிக்கவும் செய்தன. பிரேதத்தின் கண்களைப்போல் பயங்கரமாயிருந்த அந்தக் கண்களுக்குச் சமமாக வெளுத்துக் கிடந்த மெல்லிய உதடுகளில் ஒரு சோரப் புன்னகை விரிந்தது. அந்தப் புன்னகையே தன் மரண தண்டனை என்பதைப் புரிந்துகொண்டான் கருணாகர பல்லவன்.



அத்தியாயம் 12

# அநபாய குலோத்துங்கன்

பிரேதத்தின் கண்களைப்போல் ஒளியிழந்து கிடந்தாலும், ஒளியிழந்த காரணத்தினாலேயே பயங்கரமாகத் தெரிந்த நீதிபதியின் கண்கள் தன்னை ஊடுருவிப் பார்ப்பதையும், அந்தப் பார்வையைத் தொடர்ந்து நீதிபதியுடைய வெளுத்த இதழிலே ஒரு புன்னகை விரிந்ததையும் கண்ட கருணாகர பல்லவனுக்குப் பல விஷயங்கள் குழப்பத்தை யளித்தாலும், தீர்ப்பு என்னவாயிருக்கும் என்பதில் மட்டும் எத்தகைய குழப்பமும் ஏற்படவில்லை. வட கலிங்கத்து மன்னனும் தனது ஜன்ம விரோதியான அனந்தவர்மன், தென்கலிங்கத்துக்கு எப்பொழுது வந்தான், என்ன காரணத்தை முன்னிட்டு வந்தான், பீமனோ அல்லது அவனது நீதிபதிகளோ அமர வேண்டிய இடத்தில் அவன் எதற்காக அமர்ந்திருக்கிறான் என்ற விவரங்கள் புரியவில்லையே தவிர, விசாரணை ஒரு கேலிக்கூத்தாகவே இருக்குமென்பதிலோ தன் தலையைச் சீவும்படி தீர்ப்புக் கூறப்படும் என்பதிலோ லவலேசமும் சந்தேகமில்லாதிருந்தது இளையபல்லவனுக்கு. அப்படி மரணத்தை எதிர் நோக்கி நிற்கும் தருவாயில் அச்சம் காட்டுவதோ, எதிரிக்குத் தான் தாழ்ந்தவனென்று பொருள்பட இடங் கொடுப்பதோ தகுதியற்றது என்ற காரணத்தால், அனந்த வர்மனின் புன்முறுவலைப் புரிந்துகொண்டதற்கு அத்தாட்சியாகத் தானும் ஒரு பதில் புன்முறுவலைக் கோட்டினான் கருணாகர பல்லவன். சோழ நாட்டின் மீதுள்ள பகை பெரும் பகையாக அனந்தவர்மனின் உள்ளத்தைச் சூழ்ந்து கொண்டிருந்ததால், தெளிவில்லாத உள்ளத்துடனும், துவேஷ புத்தியுடனுமே அன்று அவன் விசார

ணையை நடத்தினான். ஆனால் அவனைப் பாராட்டி ஒன்று மட்டும் கூறலாம். துவேஷத்தில் துளிகூட வெளிக் குக் காட்டாமல் நீதியை மட்டுமே கவனிப்பவன் போல் விசாரணையை நடத்தினான் அவன். சிறைப்பட்டிருந்தவர் களிடம் உண்மையாக அனுதாபம் கொண்டவன் போல் நடித்தான். மேலுக்கு எத்தனை கண்ணியமாக விசாரணை நடத்த முடியுமோ அத்தனை கண்ணியமாக நடத்தினான். நீதிக்கும் நேர்மைக்கும் புறம்பாக அன்று விதித்த தண்ட னைகள் அனைத்தையும் நீதியின் பெயராலும் நேர்மையின் பெயராலும் விதித்தான். அவன் நடத்திய விசாரணை களையும், விதித்த தண்டனைகளையும் கவனித்த கருணாகர பல்லவன், அந்த நீதி மண்டபத்தின் உயர்ந்த தூண்களை யும் பார்த்து, நீதிபதியையும் நோக்கி, 'இங்கு தூண்கள்தான் உயர்ந்திருக்கின்றனவே யொழிய நீதி தாழ்ந்துதான் கிடக்கிறது' என்று தனக்குள் பலமுறை சொல்லிக் கொண்டான்.

அன்று நீதிமண்டபத்தில் ஏராளமான தமிழர் சிறைப் பட்டு நின்றிருந்ததால் கருணாகர பல்லவன் கடைசி யிலேயே விசாரிக்கப்பட்டான். நடுப்பகல் வந்தபின்பே அவன் வழக்கு விசாரணைக்கு வந்தது. இத்தனை நேரம் கழித்து விசாரிக்க எதற்காக ஊருக்கு முன்பு தன்னை அழைத்து வந்தார்களென்று எண்ணிப் பார்த்த கருணாகர பல்லவன், கலிங்க விரோதிகள் எப்படி நடத்தப்படுவார் கள் என்பதைத் தனக்கு உணர்த்தவே அனந்தவர்மன் தன் விசாரணையைத் தாமதித்திருக்கிறான் என்பதை உணர்ந்து கொண்டான். சிறிது நேரத்திற்கெல்லாம் உயிரிழக்கப் போகிறவனையும் கடைசி வரையில் துன்புறுத்தவே அந்த நடவடிக்கை மேற்கொள்ளப்படுகிறதென்பதை அறிந்த இளையபல்லவன், அனந்தவர்மனுடைய குரூரத்தின் எல்லையைப் புரிந்துகொண்டான். இத்தகைய பல படிப் பினைகள் இளையபல்லவனுக்கு ஏற்படுவதற்கு முன்பாக,

அவனுக்குக் கொடுக்க வேண்டிய மட்டுமரியாதைகள் எதையும் குறைக்கவில்லை வடகலிங்கத்து மன்னன். தன்னெதிரில் கொண்டு வந்து நிறுத்தப்பட்ட இளைய பல்லவனை நோக்கி இளநகை புரிந்த அனந்தவர்மன், அவனுக்குப் பின்னாலிருந்த கூலவாணிகனைச் சில விநாடிகளே நோக்கிவிட்டு மீண்டும் இளையபல்லவன் மீது கண்களை நிலைக்கவிட்டான். அந்தப் பிரேதக் கண்களின் பார்வை அளித்த சங்கடத்திலிருந்து விடுவித்துக் கொள்ள அப்புறமும் இப்புறமும் பார்த்த இளைய பல்லவன் மீது மீண்டுமொரு புன்முறுவலை வீசிய அனந்தவர்மன், எதிரேயிருந்த காவலரைப் பார்த்து, "இளைய பல்லவருக்கு ஓர் ஆசனம் எடுத்துப் போடுங்கள். வெளிநாட்டுத் தூதர்கள் மரியாதைக்கு உரியவர்கள்" என்று கூறினான்.

அப்படிக் கூறிய அனந்தவர்மனின் குரலில் மிகுந்த நிதானமிருந்ததையும், குரலும் பலவீனமாகவே வெளிவந்ததையும், அப்படிப் பலவீனமாக வந்த குரலிலும் ஒரு கடூரமும் கம்பீரமும் விரவி இருந்ததையும் கருணாகர பல்லவன் கவனித்தான். தனக்குச் செய்யப்படும் அத்தனை மரியாதையும் காவுக்கு அனுப்பப்படும் ஆட்டுக்குப் பூசாரி செய்யும் மரியாதைப் போன்றது என்பதையும் சந்தேகமற உணர்ந்துகொண்ட கருணாகர பல்லவன், அடுத்து நடப்பவை என்னவென்பதைக் கவனிக்கலானான். அனந்தவர்மனின் உத்தரவுப்படி பெரிய ஆசனமொன்று கருணாகர பல்லவனுக்கு அளிக்கப்பட்டதும் விசாரணைகளைத் தொடங்கிய அனந்தவர்மன், முதன் முதலாக, வேவு பார்க்கும் குற்றங்கள் சாட்டப்பட்ட பல தமிழ் வணிகர்களையும் இதர பிரமுகர்களையும் தன் முன்பு கொண்டுவர உத்தரவிட்டான்.

சோழ நாட்டுத் திருமந்திர ஓலைக்காரன் போல் கலிங்கத்திலிருந்து நீதி நிர்வாக ஸ்தானிகன் குற்றச்சாட்டு

களைப் படிக்க, அனந்தவர்மன் கேள்விகளைக் கேட்டுத் தண்டனைகளை விதித்துக்கொண்டே போனான். குற்றச் சாட்டுகளெல்லாம் கிட்டத்தட்ட வேவு பார்ப்பது சம்பந்த மாக ஒரே மாதிரியாக இருந்ததையும், முக்கியமானவர்க் கெல்லாம் மரண தண்டனையும் மற்றவர்களுக்கெல்லாம் நீண்ட கால சிறைத் தண்டனையும் விதிக்கப்பட்டதையும் கண்ட கருணாகர பல்லவனுக்கு, அனந்தவர்மன் தமிழர் களிடம் விரோதத்தை வேண்டுமென்றே சம்பாதிக்க முயலு வதாகத் தோன்றியது. பலமான சோழப் பேரரசைத் தேக்கி நிறுத்தும் வழி இதுவல்லவென்பது இளைய பல்லவனுக்குத் தெரிந்திருந்ததால், மன்னன் சாட்டும் வஞ்சத்தால் கலிங்கத்து மக்கள் எத்தனை பேர் அழிவார்கள் என்று எண்ணி அவர்கள் நிலை குறித்து ஏங்கினான். ஆனால் அப்படி எந்த ஏக்கத்துக்கும் இலக்காகாத அனந்தவர்மன், இஷ்டப்படி தண்டனை விதித்துக் கொண்டே போனான்.

மற்றவர்களை விடுவிடு என்று விசாரித்துக் கொண்டு போன அனந்தவர்மன் கூலவாணிகனை விசாரிக்கும் சமயம் வந்ததும் சிறிது நிதானித்து, ஒருமுறை இளைய பல்லவனை நோக்கிவிட்டுக் கூலவாணிகனையும் நோக்கி னான். அதைத் தொடர்ந்து அந்தப் பிரேதக் கண்களில் சில விநாடிகளில் சிந்தனை படர்ந்தது. கடைசியாக ஏதோ முடிவுக்கு வந்ததற்கு அறிகுறியாகத் தன் தலையை ஒரு முறை அசைத்துவிட்டு, இளையபல்லவனை எழுந்து நிற்க ஆக்ஞாபித்தான். விசாரணையின் விளைவைப் பற்றி முன்னமே அறிந்துகொண்டிருந்த இளைய பல்லவன், மிகக் கம்பீரமாக எழுந்து, பாலூர்ப் பெருந்துறையின் அந்தப் பிரும்மாண்டமான மண்டபத்தில் நின்று, ஆடுகளை நோக்கும் பெரும் புலிபோல் தன் கண்களை ஒருமுறை நாற்புறமும் துழாவவிட்டான். பிறகு நீதிஸ்தா னத்திலிருந்த பகைவன்மீது ஈட்டிகளைப் போலப் பளிச் சிட்ட தன் கண்களை நாட்டினான்.

இரண்டு ஜோடிக் கண்களும் மீண்டுமொருமுறை கலந்தன. இரண்டிலுமிருந்த பகைமை அவற்றின் கொடு மையை அதிகப்படுத்திக் காட்டியது. அந்தப் பகைமை உள்ளூர இருந்தாலும் அமுதம் சொட்டும் குரலில் விசாரணையைத் தொடங்கிய அனந்தவர்மன், "இளைய பல்லவரே! நாமிருவரும் ஒருவரையொருவர் முன்பே அறிவோம்" என்றான்.

"நன்றாக அறிவோம்" என்ற இளைய பல்லவன் குரலில் இகழ்ச்சியொலி மண்டிக் கிடந்தது.

"நீதி அதிகாரி, குற்றவாளி என்ற இவ்வித உறவில் நாம் முன்பு சந்திக்கவில்லை" என்று சுட்டிக் காட்டினான் அனந்தவர்மன்.

"அப்பொழுதும்கூட கலிங்கத்துக்குத் தூதனாகத்தான் வந்தேன். அப்பொழுது அரசியல் கருத்து வேறுபாடு களிருந்தும் சிறை செய்யப்படவில்லை. அப்பொழுதைக்கு இப்பொழுது கலிங்கம் பெரிதும் முன்னேறியிருக்கிறது," என்று சர்வ சாதாரணமாகப் பேசிய கருணாகர பல்லவன், மெல்ல நகைக்கவும் செய்தான்.

அனந்தவர்மன் உதடுகளிலும் மீண்டும் புன்னகை விரிந்தது. "கலிங்கம் முன்னேறவில்லை. நீங்கள்தான் முன்னேறியிருக்கிறீர்கள்."

"விளங்கவில்லை எனக்கு."

"அன்று நீங்கள் வட கலிங்கத்துக்குத் தூதராக மட்டும் வந்தீர்கள். தூதருக்கான மரியாதை காட்டப்பட்டது. இன்று ஒற்றராக முன்னேறியிருக்கிறீர்கள். அன்று வட கலிங்கத்துக்கு வந்தபொழுது கருத்து வேறுபாடு காட்டினீர் கள். ஆனால் கலிங்கத்தின் காவலனை அவமதிக்கவில்லை. இன்று கருத்து ஒற்றுமை ஏற்படுத்திச் சமாதான ஓலை யுடன் வந்தீர்கள்; ஆனால் சுங்கச் சாவடியிலேயே தென் கலிங்க மன்னனை அவமதித்தீர்கள். எந்தத் துறையில்

நோக்கினும் தங்கள் தற்சமய விஜயம் பெரும் முன்னேற்றம்" என்று விளக்கினான் அனந்தவர்மன்.

பழைய விரோதத்தை மறக்காமலும், ஆனால் அதற்கும் தற்சமய விசாரணைக்கும் எந்தவிதச் சம்பந்தமுமில்லை என்பதைச் சுட்டிக் காட்டும் முறையிலும் அனந்தவர்மன் பேசியதைக் கேட்ட கருணாகர பல்லவன், அவனது புத்தி கூர்மையைப் பெரிதும் வியந்தான். குற்றங்களைக் கோவையாக ஜோடிப்பதிலும், நீதியைத் தவிர வேறெதுவும் கலிங்கத்தில் நடவாததுபோல் வெளி உலகத்துக்குக் காட்டுவதிலும் அனந்தவர்மனுக்கு இணை அனந்தவர்மனே என்பதைப் புரிந்துகொண்ட இளையபல்லவன், வெகு எச்சரிக்கையுடன் பதில்களைச் சொன்னான். "முன்னேற்றம் எனக்கு மட்டும் ஏற்படவில்லை மன்னவா! கலிங்கத்துக்கும் ஏற்பட்டுத்தானிருக்கிறது. தென் கலிங்கம் வட கலிங்கத்தோடு இணைந்து எத்தனை நாளாகிறது?"

"இணைந்ததாக யார் சொன்னது?" சர்வ சாதாரணமாக எழுந்தது அனந்தவர்மன் கேள்வி.

"இணையாவிட்டால் தென் கலிங்க மன்னர் உட்கார வேண்டிய இடத்தில் வட கலிங்க மன்னர் எப்படி உட்கார முடியும்?"

இதற்கு உடனே பதில் சொல்லாமல் ஏதோ யோசித்த அனந்தவர்மன் சில விநாடிகள் கழித்து, "ஆமாம்! நீங்கள் அறியக் காரணமில்லை. பேரரசன் கரவேலன் காலத்தில் ஒன்றாயிருந்த கலிங்கம் பிற்காலத்தில் இரண்டாகப் பிரிந்தது உண்மைதான். ஆனால் தென் கலிங்கம், வட கலிங்கத்தின் அதிகாரத்துக்கு உட்பட்டது. தவிர, சமீபத்தில் வட கலிங்கத்துக்கும், தென் கலிங்கத்துக்கும் ஓர் ஒப்பந்தமும் ஏற்பட்டிருக்கிறது ஒரு காரணத்தால்..." என்று விவரித்த அனந்தவர்மன், இளைய பல்லவனைக் கூர்ந்து நோக்கினான்.

"என்ன காரணம்?" என்று கேட்டான் இளைய பல்லவன்.

அதுவரையில் பளிச்சிடாத அனந்தவர்மனின் கண் கள் பளிச்சிட்டன. உணர்ச்சியில்லாத குரலில் உணர்ச்சி ஊடுருவிச் சென்றது. குருதியில்லாத வெளுத்த உதடுகளி லும் குருதி பாய்ந்தது. "சோழப் பேரரசின் பேராசை, விஸ் தரிப்புக் கொள்கை" என்று இரைந்தான் அனந்தவர்மன்.

சோழ நாட்டிலும் அவனுக்குள்ள வெறுப்பை பூர்ண மாக உணர்ந்துகொண்டான் கருணாகர பல்லவன். இருப்பினும் தான் உணர்ச்சி வசப்படாமல் சொன்னான்: "காரணம் அது, ஒப்பந்தம் எது?" என்று கேட்டான்.

"சோழப் பேரரசு தாக்கினால் தென் கலிங்கத்தை வட கலிங்கம் காப்பாற்றும். ஆகவே வட கலிங்கத்தின் உரிமை யைத் தென் கலிங்கம் ஏற்றிருக்கிறது. அதன் பாதுகாப்பு நீதி நிர்வாகம் எதிலும் வட கலிங்கம் தலையிடலாம். அந்த ஒப்பந்தத்தின் விளைவாகத்தான் இந்த ஸ்தானத்தில் நான் அமர்ந்திருக்கிறேன்" என்றான் அனந்தவர்மன், சட்டப்படி தனக்கு விசாரணை செய்யும் உரிமை உண்டென்று காட்ட.

இதைக் கேட்ட இளையபல்லவன் நகைத்தான். "உங்கள் உரிமையைப் புரிந்துகொண்டேன். தென் கலிங்கத் திற்கு என் அனுதாபங்கள் இருக்கட்டும்" என்றான் சிரிப் போடு சிரிப்பாக.

அனந்தவர்மன் கண்களில் கோபம் துளிர்த்தது. "அனுதாபம் எதற்கு?" என்று கேட்டான்.

"சோழ ஆதிக்கம் இங்கு ஏற்படவில்லை. தென் கலிங்கம்முறை தவறி நடக்காவிட்டால் ஏற்படவும் ஏற் படாது. ஆனால் வடகலிங்கத்தின் ஆதிக்கம் இப்பொழுதே ஏற்பட்டுவிட்டது. அது கிடக்க, ஆதிக்கத்திற்கு உட்படுவ

தென்றால் யார் ஆதிக்கத்திற்கு உட்பட்டாலென்ன?" என்று வினவினான் இளைய பல்லவன், இளநகை புரிந்து.

"சோழர் வேறு இனம்; கலிங்கம் வேறு இனம்."

"மாந்தர் அனைவரும் ஒரே இனம் என்று தமிழர்கள் நினைக்கிறார்கள். தவிர இன்னொரு நாட்டவரின் ஆதிக்கத்தைவிட ஓர் இனம் தன் இனத்தின்மீதே நடத்தும் ஆதிக்கம் மிகக் கொடுமையானது. சரித்திரம் இதற்குச் சான்று."

இதைக் கேட்ட அனந்தவர்மன் தனது ஆசனத்தில் நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டான். "சரித்திரம் இதுவரை காணாத புதிய சான்றுகளைக் கலிங்கம் அளிக்கும். இன்னொருவன் ஆதிக்கத்தைவிட இனத்தவன் ஆதிக்கம் மேம்பட்டது என்பதைக் கலிங்கம் உலகுக்கு புகட்டும். உங்களைப் போன்ற ஒற்றர்களால் நிரப்பப்பட்ட பாலூர்ப் பெருந்துறையை, வாணிபத்திலும் செல்வத்திலும் சிறந்த ஊராக மாற்ற நாம் முயலுவோம். அந்த முயற்சியின் முதல்படி இங்குள்ள தமிழ் ஒற்றர்களை விலக்குவது" என்று உஷ்ணத்துடன் சொற்களை உதிர்த்தான் அனந்தவர்மன்.

இளையபல்லவன் கண்களில் வீரச் சுடர் படர்ந்தது. பெயர் சொல்லியே வட கலிங்க மன்னனை அழைத்தான். "அனந்தவர்மரே! தென் கலிங்கத்துக்குத் தாங்கள் செய்யும் பாசாங்கால் தீமை விளைவிக்கிறீர்கள். தமிழர்களிடம் உமக்குள்ள நீண்டநாள் பகையைத் தீர்த்துக்கொள்ளத் தென் கலிங்கத்தையும் அதன் பெரிய துறைமுகமான இந்தப் பாலூர்ப் பெருந்துறைப் பட்டணத்தையும் கருவிகளாக உபயோகப்படுத்திக் கொள்கிறீர்கள். இங்கு இதுவரை நடந்த விசாரணையைக் கவனித்தேன். விசாரணை நடக்கவில்லை. வஞ்சம் தீர்த்துக் கொள்ளப்பட்டது. இது தென்கலிங்கத்துக்கு நன்மை பயக்காது. சோழர்களை அனாவசியமாக எழுப்புவது உறங்கும் புலியை எழுப்புவதாகும்.

அதன் பாய்ச்சலை வீணாக விலைக்கு வாங்கிக் கொள்ளா தீர்கள்" என்று பேசிய கருணாகர பல்லவன், மண்டபத்தில் சுற்றிலும் நின்ற மக்களை நோக்கித் தன் கையை ஒருமுறை நீட்டி, அனந்தவர்மனை நோக்கி, "இந்த மக்களையெல்லாம் வீணாகப் பலி கொடுக்க வேண்டாம். நான் இன்று கொண்டு வந்திருப்பது சமாதான ஓலை. நீட்டுவது சமாதா னத்தின் கரம். பற்றிக் கொள்ளுங்கள். ஒன்றி வாழலாம்" என்று இடிபோல் சொற்களை உதிர்த்தான்.

அனந்தவர்மன் முகத்தில் உணர்ச்சிகள் மங்கின. பழையபடி கல்லாகிவிட்டது அவன் முகம். மண்டபத்தி லிருந்த தென்கலிங்க மக்களிடம் காணப்பட்ட சலசலப்பை அவன் பிரேதக் கண்கள் கவனித்தன. உதடுகள் முன்னை விடச் சற்று அதிகமாக வெளுத்தன. சொற்கள் நிதானமாக, அழுத்தமாக உதிர்ந்தன. "இளைய பல்லவரே! நீர் இப் பொழுது பேசிய பேச்சுகள் சமாதானத்தை அளிப்பதற்கு அறிகுறியல்ல. சோழர்கள் பராக்கிரமத்தைக் குறிப்பிட்டு அச்சுறுத்துகிறீர்கள். அச்சுறுத்தலுக்குக் கலிங்கம் இடங் கொடாது. அச்சத்துக்குப் பணிந்து அடிமையாகாது. பெரிய வரலாற்றில் இடம் பெறும் மக்களின் பழக்கமும் அதுவல்ல. இத்தகைய பயமுறுத்தல்கள் உங்கள் சமாதான ஓலையின் போலித்தனத்தை நிரூபிக்கின்றன. உங்கள் ஓலையையும் படித்துப் பார்த்தோம். சமாதானத்துக்குச் சுங்கமாகக் கலிங்கத்தின் துறைமுகங்களைக் கேட்கிறது சோழ நாடு. துறைமுகங்களை இழந்தால் கலிங்கம் வாணிபத்தை இழக்கும். வாணிபத்தை இழக்கும் நாடு செல்வத்தை இழக்கும். செல்வத்தை இழக்கும் நாட்டில் வறுமை, அறியாமை, துன்பங்கள் தாண்டவமாடும். இதற்குக் கலிங்க மக்கள் சம்மதிக்கமாட்டார்கள்" என்று சொன்ன அனந்தவர்மனின் குரலை ஆமோதித்துப் பாலூர்ப் பெருந்துறை மக்களின் குரல்கள் பல, "சம்மதிக்க மாட்டோம்," "இவன் போலி," "கொல்லுங்கள் தமிழர்

களை" என்று எழுந்து மண்டபத்தின் சுவர்களில் தாக்கி எதிரொலி செய்தன.

சோழர்கள் கலிங்கத்தின் துறைமுகங்களைக் கேட்டது சொர்ண பூமியிடம் வர்த்தகம் நடத்தவேயொழிய, அரசியல் ஆதிக்க ஆசையால் அல்ல என்பதைக் கருணாகர பல்லவன் உணர்ந்தே இருந்தான். ஆனால் சாட்சியங்கள் அன்று அவனுக்கு எதிராகவும், பலமாகவுமிருந்தன. தான் எதைச் சொன்னாலும் நம்பாத அளவுக்கு அனந்தவர்மன் வழக்கை ஜோடித்து மக்களின் வெறியைக் கிளப்பி விட்டதைக் கண்ட கருணாகர பல்லவன், கோபம் உச்ச நிலையை எட்டியதால், சிவந்த கண்களுடனும், சற்றே துடித்த உதடுகளுடனும் இரைந்து பதில் சொன்னான், "அனந்தவர்மரே! நீங்கள் சொல்வதில் தினையளவும் உண்மையில்லை என்பதை உங்கள் மனம் அறியும். சோழர்களுக்கு ஆதிக்க நோக்கமிருக்கும் பட்சத்தில் இராஜேந்திர சோழதேவர் கங்கை கொண்ட காலத்திலேயே இடையிலிருந்த இந்தக் கலிங்கத்தை அடிமைப்படுத்தியிருக்கலாம். ஆனால் அப்படி எதுவும் செய்யவில்லை. சுதந்திரமாகவே இருக்கவிட்டார். ஏன்? ஆதிக்க ஆசை இல்லை. கலிங்கத்தை அடக்கச் சோழ நாட்டுக்கு இன்றும் பலமிருக்கிறது. பலத்தை உபயோகிக்கவில்லை. ஏன்? ஆதிக்க ஆசையில்லை. இத்தனை அத்தாட்சிகளிலிருந்தும் உமது மக்களிடையே வெறியைக் கிளறிவிட்டு தமிழர்கள் தலைகளைத் துண்டித்தும், தண்டித்தும் பல வழிகளில் கொடுமை செய்தும் போருக்கு அடிகோலுகிறீர். இன்று உங்களை எச்சரிக்கிறேன். வீணான விரோதத்தை வலுவில் சம்பாதிக்காதீர்கள். சம்பாதித்தால் லாபமில்லை. உங்களுக்குப் பெருநாசம்" என்று சீற்றத்துடன் கூறினான்.

இதைக் கேட்ட மண்டபத்திலிருந்த கலிங்க மக்கள் ஒருமுறை நடுங்கினார்கள். கருணாகர பல்லவனின் ஆவேசம் அவர்களைக் கிடுகிடுக்க வைத்தது. புலியைத் தட்டி எழுப்பினால் இப்படித்தானிருக்குமோ என்றுகூட நினைத்

தார்கள். அந்த நடுக்கமே அவர்களை மீண்டும் கூச்சலிடச் செய்தது. "அவனைக் கொல்லுங்கள்!" "கொண்டுபோங்கள் கொலைக் களத்துக்கு" என்ற கூச்சல்கள் எழுந்தன. அந்தக் கூச்சலை ஊடுருவிச் செல்லும் முறையில் அனந்தவர்மன் தீர்ப்புக் கூறினான்: "போலிச் சமாதான ஓலையைக் காட்டி இங்கு வேவு பார்க்க வந்த குற்றத்திற்காகவும், சுங்கச்சாவடி யில் தென் கலிங்கத்து மன்னனை அவதூறாகப் பேசியதற் காகவும், தென் கலிங்க வீரர்களில் சிலரைக் கொன்றதற் காகவும், உனக்கு மரணதண்டனை விதிக்கிறேன். இந்தக் கூலவாணிகனுக்கு விசாரணை தேவையில்லை. நீண்ட நாளாக அவன் ஒற்றனென்பதற்கு அத்தாட்சிகள் நிரம்ப இருக்கின்றன. ஆகவே அவனுக்கு மரணதண்டனை விதிக் கிறேன். நீங்களிருவரும் இங்கிருந்து நேராகக் கொலைக் களத்திற்கு அழைத்துச் செல்லப்படுவீர்கள். அங்கு எந்தக் கலிங்க மக்களுக்கு எதிராகச் சதி செய்தீர்களோ அந்தக் கலிங்க மக்களின் முன்பாக உங்கள் தலைகள் சீவப்படும்."

கொலைவாளின் கூர்மையைப் பழிக்கும் குரலில் இந்தத் தீர்ப்பைக் கூறி, கருணாகர பல்லவனைத் தன் பிரேதக் கண்களால் நோக்கிய அனந்தவர்மன், "அநபாயச் சோழன் தப்பிவிட்டானென்று நினைக்க வேண்டாம். சீக்கிரம் அவனையும் இங்கு கொண்டு வருவேன்" என்றும் சீறிச் சொற்களை உதிர்த்தான். அந்தச் சொற்களை உதிர்த்த உதடுகள் திடீரென வெளுத்தன. அசைவற்று நின்றன. "நீ கொண்டு வரத் தேவையில்லை அனந்தவர்மா! நானே வந்துவிட்டேன்" என்ற கணீரென்ற சொற்கள் அந்த நீதி மண்டபத்தை ஊடுருவிச் சென்று திடீரென பயங்கர அமைதியை நிலைநாட்டின. அனந்தவர்மன் கண்கள் வாயிலை அச்சத்துடன் நோக்கின. வாயிலை மறித்துக் கொண்டு தன்னந்தனியே நின்றிருந்தான், பிற்காலத்தில் குலோத்துங்கன் என்ற பெயருடன் சோழ அரியணையில் அமரவிருந்த அநபாய சோழன்.

அத்தியாயம் 13

# அபாயத்தை மறைத்த அழகு

**யா**ரும் தப்ப முடியாத பாலூர்ப் பெருந்துறைச் சிறையிலிருந்து எந்த அநபாயன் தப்பினானோ, எந்த அநபாயனை மீண்டும் சிறைப்பிடிக்க பாலூரின் படைப் பிரிவுகள் அந்தச் சிறு நகரத்தை நான்கு நாள்களுக்கு மேல் சல்லடைப் போட்டுச் சலித்தும் பயனற்று அலுத்துவிட்ட னவோ, எந்த அநபாயனை நீதி மண்டபத்துக்குக் கொண்டு வருவேன் என அனந்தவர்மன் அகந்தையுடன் கூறினானோ, அந்த அநபாயனுடைய குரல், "நீ கொண்டு வரத் தேவை யில்லை அனந்தவர்மா! இதோ நானே வந்துவிட்டேன்!" என்று நீதி மண்டபத்தை ஊடுருவிச் சென்றதும், மித மிஞ்சிய திக்பிரமைக்கு உள்ளாகி நீதி மண்டபத்தின் வாயிலை நோக்கிய பாலூர்ப் பெருமக்கள், அந்த வாயிலை அடைத்துக் கொண்டு நின்ற வாலிபன் தோற்றத்தையும் அவன் முகத்தில் மலர்ந்து கிடந்த மந்தகாசத்தையும் கண்ட தும் விவரிக்கவொண்ணா வியப்பையும் அடைந்தார்கள்.

சிங்கத்தின் வாய்க்குள் தானாகத் தலையை விடுபவன் போல், ஆயுதம் தாங்கிய கலிங்க வீரர்கள் நிரம்பியிருந்த அந்த நீதி மண்டபத்துக்குள் மிகத் துணிவுடன் நுழைந்த அந்த வாலிபச் சோழனின் கண்கள் மிக அலட்சியமாக அந்த மண்டபத்தை ஒருமுறை அளவெடுத்ததையும், பிறகு அனந்தவர்மனின் மேல் நிலைத்ததையும் கண்ட மண்ட பத்திலிருந்த மக்களும் வீரரும், அந்த வாள்கண்கள் ஆக்ஞை யிட சிருஷ்டிக்கப்பட்டனவேயொழிய அச்சத்துக்காகச் சிருஷ்டிக்கப்படவில்லை என்பதைப் புரிந்து கொண்டார் கள். உயரத்திலும், பருமனிலும் மரண தண்டனை விதிக்கப்பட்ட கருணாகர பல்லவன் போலவே இருந்த

அநபாயனுக்கு, இளையபல்லவனின் கன்னத்திலிருந்த வெட்டுக்காயத் தழும்பு இல்லாதிருந்ததால், அவன் முகம் குழந்தையின் முகம் போலவே இருந்ததையும், அந்தக் குழந்தை முகத்திலும் பருவ வயதுக்கான சிறு மீசை துளிர் விட்டிருந்ததையும், அதன் விளைவாக வதனத்தில் வீரக் களை பூரணமாகப் பொலிவு பெற்றுத் துலங்கியதையும் கண்ட மக்கள், நல்ல நெஞ்சுரமுள்ள ஒரு வாலிபன் முன்பு தாங்களிருப்பதை உணர்ந்தார்கள். அநபாய சோழனின் இடைக் கச்சையிலிருந்தது தொங்கிய நீண்ட வாள்கூட உருவப்படவில்லையென்பதையும் எந்த ஆயுதத்தையும் கையிலெடுக்காமலே அநபாயன் அந்த வாயிற்படியில் நின்றதையும் கண்ட அனைவரும், 'துணிவுக்கும் ஓர் எல்லையிருக்க வேண்டாமா?' என்று சற்று அவனைக் கடிந்து கொள்ளவும் செய்தார்கள்.

அநபாயன் வரவு கருணாகர பல்லவனுக்குக்கூட பெரும் அதிர்ச்சியைத் தந்ததென்றாலும், அநபாயன் அப்படி உதவி ஏதுமில்லாமல் தன்னந்தனியாக அந்த நீதி மண்டபத்துக்கு வந்தது சரியல்ல என்ற நினைப்பே அவன் சிந்தையில் அந்தச் சில விநாடிகளில் ஓங்கி நின்றபடி யால், அடுத்தபடி அநபாயனுக்கு என்ன தீங்கு நேருமோ என்ற திகிலுக்கே ஆரம்ப அதிர்ச்சி இடம் கொடுத்தது. வாளும், வேலும் தாங்கிய நூறு கலிங்க வீரர்களுக்கு மேலிருந்த அந்த மண்டபத்திலிருந்து அநபாயன் தப்புவதும் அத்தனை எளிதல்ல என்று தோன்றியது இளைய பல்லவ னுக்கு. அந்த இடத்தில் அநபாயனை எதிர்பார்க்கவும் இல்லை அவன். சிறையில் உணவுச்சீலைச் செய்தியைப் படித்ததும், 'ஒன்று சிறையிலிருந்து நீதி மண்டபத்துக்குப் போகும்போது மீட்கப்படுவோம். அல்லது நீதிமண்டபத்தி லிருந்து கொலைக்களத்துக்குப் போகும் வழியில் மீட்கப் படுவோம்' என்று திட்டமாக நம்பியதன்றி, கூலவாணிக னுக்கும் அதை எடுத்து ஓதியிருந்த இளையபல்லவன், தன் கணக்குத் தப்புக்கணக்காகி விட்டதையும், எந்த நீதி

மண்டபத்தை அநபாயன் அணுக முடியாதென்று அவன் நினைத்தானோ அந்த நீதி மண்டபத்துக்கே அநபாயன் வந்துவிட்டதையும் எண்ணிப் பார்த்து, 'எந்தத் துணிவுடன் இவர் இங்கு வந்தார்?' என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டு விடையேதும் தெரியாமல் விழித்தான்.

கருணாகரபல்லவனது எண்ணங்களும் நீதி மண்டபத்தில் குழுமியிருந்த மற்றவர் எண்ணங்களும் இவ்விதம் வியப்பிலும் குழப்பத்திலும் ஈடுபட்டிருந்த சில விநாடிகள், நீதி ஸ்தானத்தில் அமர்ந்திருந்த அனந்தவர்மனுக்குப் பெரும் திகிலையும் சங்கடத்தையும் அளித்ததால் அவனது உணர்ச்சிகள் கொந்தளித்து நின்றன. கொந்தளித்த உணர்ச்சி அலைகள் மோதும்போது முகமும் உதடுகளும் திடீரெனச் சிவந்தும், பின்வாங்கியபோது திடீரென வெளுத்தும் இரண்டு மூன்று முறைகள் மாறிமாறி பயங்கரத்துக்கும் பயத்துக்கும் அவன் மனம் இலக்காகியிருந்ததைக் குறிப்பிட்டன. கருணாகர பல்லவனை விடுவிக்க அநபாயன் கண்டிப்பாய் முயலுவான் என்பதை அனந்தவர்மன் அறிந்திருந்தாலும், அந்த முயற்சியை நீதிமண்டபத்துக்குள் வைத்துக்கொள்வான் என்பதை அவன் சிறிதும் எதிர்பார்க்காததால், கணீரென அநபாயனின் குரல் நீதி மண்டபத்தில் ஊடுருவிச் சென்றதும் அவன் சில வினாடிகள் சிலையென உட்கார்ந்துவிட்டான். பிறகு மெள்ளச் சமாளித்துக்கொண்டு, வீரர்கள் பக்கம் கண்களைச் செலுத்தினான். அந்தப் பார்வையின் பொருளைப் புரிந்து கொண்டு வீரர்கள் வாயிற்படியை நோக்கிக் காலடி எடுத்து வைக்கவும் முற்பட்டனர். மீண்டும் அதிகாரத்துடன் எழுந்த அநபாயனின் குரல் அந்த கால்களைக் கற்சிலைகளாக அடித்தன.

வீரர்கள் அசையுமுன்பாகவே, "இந்த மண்டபத்திலிருப்பவர்கள் யார் அசைந்தாலும் சரி, இருப்பிடத்தை விட்டு ஓர் அடி எடுத்து வைத்தாலும் சரி, அனந்தவர்மன்

அடுத்த விநாடி பிணமாகி விடுவான். கலிங்கத்துக்கு வேறு மன்னனைத் தேட வேண்டியிருக்கும்!" என்ற அநபாயனின் அதிகாரக் குரல் மறுபடியும் அந்த மண்டபத்தை ஊடுருவிச் சென்றது. அந்தக் குரலிலிருந்த திடத்தைக் கண்ட மக்கள் ஒருமுறை நடுங்கினர்; அசைந்த வீரர் அசைவற்று நின்றனர். தான் மரண தண்டனை விதிக்க வேண்டிய நீதி மண்டபத்தில் தனக்கே மரண தண்டனை விதிக்க அநபாயன் முற்பட்டதைக் கண்டு ஒரு விநாடி நடுங்கிய அனந்த வர்மன், வாயிற்படியில் மறுபடியும் தன் பிரேதக் கண்களை ஓட்டி அங்கு அநபாயன் ஆயுதமெதையும் உருவிப் பிடிக்காமல் வெற்றுக் கையுடனே நின்றதையும், அவனுக்குத் துணையாக யாருமில்லாததையும் கண்டு சற்றுத் தைரியம் கொண்டு, "வீணாக மிரட்டுகிறான். அஞ்சாதீர்கள்! நெருங்கிப் பிடியுங்கள் அவனை!" என்று கூவினான்.

மறுவிநாடி, பிரேதக் கண்கள் உள்ளடங்கின. அச்சத்தால் உதடுகள் மீண்டும் வெளுத்தன. திடீரென எழுந்த அநபாயனின் சிரிப்பொலி அந்தப் பெரும் நீதி மண்டபத்தின் சுவர்களில் தாக்கிப் பலவிதமாக எதிரொலி செய்ததால் தன்னை நோக்கி நூற்றுக்கணக்கான பேர்கள் நகைப்பது போன்ற பிரமை ஏற்பட்டது அனந்தவர்மனுக்கு. அநபாயனைச் சிறைச் செய்ய உத்தரவிட்டதும், கண்ணிமைக்கும் நேரத்தில் அவனுக்குப் பின்னால் நின்றிருந்த ஓர் உருவம் தன்னை நோக்கி, நாணில் ஊன்றி இழுக்கப்பட்ட பெரும் கணையும் வில்லுமாகக் காட்சியளித்ததைப் பார்த்த அனந்தவர்மன், உண்மையைப் புரிந்துகொண்டான். எதிர்பாராத விதமாக ஏற்பட்ட அந்த நிகழ்ச்சியால் நிலைமை புரியாதவர்களுக்கும் புரிய வைக்க அநபாயன் மீண்டும் பேசினான்: "புரிகிறதா அனந்தவர்மா? முன்னேற்பாடின்றி இந்த மண்டபத்துக்கு வர நான் முட்டாளல்ல. இதோ தொடுக்கப்பட்டிருக்கும் அம்பு நேராக உன் இதயத்துக்குக் குறி வைக்கப்பட்டிருக்கிறது. கணையின் நுனி நல்ல எஃகால் செய்யப்பட்டு விஷம் தோய்க்கப்பட்

டிருக்கிறது. அம்புக்கு வாயுவேகம் கொடுக்க அதன் அடிப் பாகத்தில் புறாவின் இறகுகள் பொருத்தப்பட்டிருக்கின்றன. இது எய்யப்பட்டால் உன் கதி என்னவாகுமென்பதை நான் சொல்லத் தேவையில்லை?" என்ற சொற்கள் அவன் முதலில் வெளியிட்ட சிரிப்பைத் தொடர்ந்து கடுமையாக வெளிவந்தன.

அன்று ஆச்சரியப்படுவதற்காகவே தாங்கள் அந்த நீதி மண்டபம் வந்ததாக மக்கள் நினைத்தார்கள். நாண் கயிற்றைக் காதுவரையில் இழுத்து அம்பைக் குறி வைத்து வில்லைத் தாங்கி நின்ற உருவத்தைக் கண்டதும், மண்ட பத்திலிருந்த வீரர்களும் மற்றவர்களும் அப்படியே வியப்பில் ஆழ்ந்தார்களானாலும், அந்த வியப்பு மற்ற எல்லோரையும்விட இளைய பல்லவனையே அதிகமாக ஆட்கொண்டது. வில்லேந்தி நின்றது நாணிழுக்கப்பட்ட வில்லைவிட வளைந்த புருவங்களையுடைய கடாரத்தின் இளவரசி காஞ்சனாதேவி. அவளது மலர்க்கரங்கள் வில்லேந்தி நின்ற உறுதியைக் கண்டு பெரிதும் வியப்பெய்தி னான் கருணாகர பல்லவன். அவன் உணர்ச்சிகளை அந்தச் சமயத்தில் தொட்டது காஞ்சனாதேவியின் இணை யற்ற அழகினால் ஏற்பட்ட ஆசையா, அவள் வில்லைப் பிடித்து நின்று காட்டிய தைரியத்தைக் கண்டு ஏற்பட்ட ஆச்சரியமா, அல்லது இத்தகைய அபாயமான பணியில் அவள் ஈடுபட்டுவிட்டாளே என்பதால் ஏற்பட்ட அச்சமா என்பது அவனுக்கே விளங்கவில்லை.

வில்லைப் பிடித்த இடது கரத்தின் விரல்கள் மடிந்து கிடந்த அழகும், நாணில் பொருந்தியிருந்த அம்பையும் நாணின் அந்தப் பகுதியையும் பிடித்து இழுத்துக் கொண்டு காதுக்கருகில் இருந்த கட்டை விரலும் ஆட்காட்டி விரலும் ஏதோ காதுக்குச் சேதி சொல்வது போலிருந்த கம்பீரமும், அவள் மலர்க்கண்கள் தன்னைக்கூட நோக்காமல் வாளின் நுனியையும் அனந்தவர்மன் மார்பையும் இணைத்துப்

பார்த்துக் கொண்டிருந்த திடமும், மார்புக்குக் குறுக்கே வருடிச் சென்ற நாண் கயிற்றின் கோலமும், இளைய பல்ல வன் இதயத்தைப் பலபடி அலைக்கழித்தன. அம்பெய்ய வந்த அந்தச் சமயத்திலும் அவள் கொண்டையைத் தூக்கி மிக இன்பமாக முடிந்திருந்ததையும், அந்தக் கொண் டையை அலங்காமல் நிறுத்த ஓர் ஆபரணம் அதைச் சுற்றி ஓடியதையும் கவனித்த கருணாகர பல்லவன், அவள் வாளெடுத்துச் சுழற்றினாலும் அந்தக் கொண்டை மயிர் அவிழ்ந்து விழுந்து அவளுக்குச் சங்கடம் விளைவிக்கா தென்பதைப் புரிந்துகொண்டான். முதல் நாளிரவு கட்டியதுபோல் அவள் சேலையை அன்று கட்டாமல், கால்களுக்கிடையே சுருட்டி வளைத்துக் கட்டியிருந்ததன்றி, இடையிலும் சல்லடத்தை வைத்துப் பிணைத்திருந்தாளா கையால் அவள் எத்தனை நேரம் வேண்டுமானாலும் எத்த கைய இடுக்கண்ணுமின்றிப் போராட முடியும் என்பதை யும் உணர்ந்துகொண்டான் இளையபல்லவன். அவள் இடையிலிருந்த நீண்ட வாளும் அவள் போர்ச் சன்னத் தைத் தெரியப்படுத்தியது. இருப்பினும் அவளிடம் முதல் நாளே ஏற்பட்டுவிட்ட விவரிக்க இயலாத ஓர் அன்பினால் அவள் நிலை பற்றி அச்சமே கொண்ட கருணாகர பல்லவன், சில விநாடிகள் மலைத்தே நின்றான். அந்த மலைப்பு மண்டபத்திலிருந்த மற்ற ம்க்களுக்கும் இருந்தது. ஆனால் அவர்களது மலைப்பின் காரணம் வேறு, அஸ்தி வாரம் வேறு. ஒரு பெண் இத்தனை அபாயத்தில் பிரவேசிக்கிறாளே என்பதால் ஏற்பட்ட மலைப்பு அது. 'அதுவும் எத்தனை அழகான பெண்! என்ன இளமை!' என்ற எண்ணங்களால் ஏற்பட்ட பரிதாபம் கலந்த மலைப்பு அது.

அந்த மலைப்பு அனந்தவர்மனுக்கும் ஏற்படத்தான் செய்தது. அத்தனை அழகிய துணிவுள்ள பெண் யாரா யிருக்கக்கூடும் என்று ஒரு கணம் எண்ணிப் பார்த்ததன்றி, 'கேவலம் ஓர் இளம் பெண்ணுக்கு விற்பயிற்சி எத்தனை

இருக்க முடியும்?' என்ற எண்ணமும் அனந்தவர்மனுக்கு ஏற்படவே, அவன் கண்களில் விபரீத ஒளியொன்றும் சுடர்விட்டது. அதன் காரணத்தை அநபாயன் புரிந்து கொண்டுவிட்டானென்பது அவனுடைய அடுத்த வார்த்தை களில் வெளியாயிற்று. "அனந்தவர்மா! இளம்பெண் என்ப தால் வாளின் குறி தவறுமென்று நினைக்காதே. இணை யிலா விற் பயிற்சியும், வாள் பயிற்சியும் உடையவள் காஞ்சனாதேவி. கடாரத்தின் மன்னர் குணவர்மனுக்குப் பிள்ளையில்லாததால் பெண்ணையே பிள்ளையாக வளர்த் திருக்கிறார். உடனே உன் வீரர்களை ஆயுதங்களைக் கீழே எறியச் சொல். இல்லையேல் இந்த விநாடியே அந்த வாள் உன் மார்பை நோக்கிப் பறக்கும். சீக்கிரம் உத்தர விடு!" என்று ஈட்டியின் முனையைவிடக் கூர்மையாகத் தொனித்த சொற்களை உதிர்த்தான் அநபாயன்.

அனந்தவர்மன், அநபாயனையும் பார்த்து, வில்லேந்தி நின்ற காஞ்சனாதேவியையும் பார்த்தான். அநபாயன் உத்தரவிட்ட நிலையிலும் அவன் இதழ்களில் தவழ்ந்த புன்னகை பயங்கரமாயிருந்ததென்றால், அதைவிட அச்சத்தை அளித்தது வில்லேந்திய ஏந்திழையின் கண் களில் கண்ட உறுதி. அந்த நிலையில் என்ன செய்வ தென்பதை அறியாமல் விழித்த அனந்தவர்மனை நோக்கிய அநபாயன், "விழித்துப் பயனில்லை அனந்தவர்மா! உத்தரவிடு. காலம் கடத்தினால் துணை வருமென்று கனவு காணாதே. இந்த மண்டபத்தைச் சுற்றிலும் பீமன் நிறுத்திய ஐம்பது வீரர்களையும் வெட்டிவிட்டோம். கலிங்கத்தின் படையில் பணி செய்யும் தமிழகத்தின் வீரரில் நூறு பேர்கள் இந்த மண்டபத்தைச் சூழ்ந்திருக்கிறார்கள். முன் னேற்பாடில்லாமல் நான் வந்திருப்பதாக மனப்பால் குடிக்காதே. உன் நன்மையை முன்னிட்டுக் கூறுகிறேன். உத்தரவிடு!" என்று கூற்றினும் கொடிய சொற்களைக் கொட்டினான்.

அடுத்த விநாடி, பலதரப்பட்ட ஒலிகளால் பாலூர் நீதிமண்டபம் பயங்கரமாக அதிர்ந்தது. அந்த நீதி மண்டபம் அநபாயனின் சொற்களால் அதிர்ந்ததா, அனந்தவர்மன் கத்தினானே, "ஏன் நிற்கிறீர்கள்? எறியுங்கள் ஆயுதங்களை!" என்ற அந்தக் கூச்சலால் அதிர்ந்ததா, வேல்களும் வாள்களும், 'கிணாங் கிணாங்' என்று எறியப் பட்டனவே, அந்த ஒலியால் அதிர்ந்ததா என்று அறியக் கூடாத நிலை ஏற்பட்டது. ஆயுதங்களின் வீழ்ச்சியே கலிங்கத்தின் வீழ்ச்சியோ என்று எண்ணுமளவுக்கு எதிரொலி கிளப்பிய அந்த நீதி மண்டபத்தில், அந்த எதிரொலியைக் கிழித்துக்கொண்டு கிளம்பிய அநபாய னின் குரல் திட்டமான உத்தரவுகளைக் கிடுகிடுவென்று பிறப்பிக்கத் தொடங்கியது. "காஞ்சனா தேவி! அனந்தவர் மன் மார்புக்குறியை விட்டுக் கணையை அகற்றாமல் நில்லுங்கள். கருணாகரா! ஏன் மலைத்து நிற்கிறாய்? கலிங்க வீரர்கள் எறிந்த ஆயுதங்களைத் திரட்டி அவர்கள் கைகளுக்கு எட்டாதபடி மண்டபத்தின் ஒரு மூலையில் கொண்டு போய் வை. பிறகு நீ மட்டும் புறப்பட்டு என் அருகில் வா. தண்டனை விதிக்கப்பட்ட தமிழர்களே! ஒவ் வொருவராகச் சீக்கிரம் வெளியே செல்லுங்கள். குழப்ப மில்லாமல் எங்களை நெறித்துத் தள்ளாமல் செல்லுங்கள். சேந்தா! நீயும் மற்றத் தமிழர்களுடன் சென்றுவிடு. வெளியே சென்றதும் தலைமறைந்துவிடு. பிறகு, சந்திப் போம். கலிங்க வீரர்களே! நின்ற இடத்தில் அசையாமல் நில்லுங்கள். அனந்தவர்மா! எந்தக் காரணத்தை முன் னிட்டும் நீதி ஸ்தானத்திலிருந்து அசையாதே!" என்று விடுவிடுவென்று ஆணைகளைப் பிறப்பித்தான் அநபாயன்.

அவன் ஆணைப்படி காரியங்கள் வெகு துரிதமாக நடந்தன. கூலவாணிகன் சேந்தன் காட்டிய வழியைப் பின்பற்றி, தண்டனையிடப்பட்ட மற்றத் தமிழர் தாங்கள் நிதானத்துடனும் குழப்பமில்லாமலும் நடந்துகொள்ள முடியும் என்பதைக் காட்டினார்கள். அவர்கள் வெளியேறி

யதும் கருணாகர பல்லவன் வீரர்களின் ஆயுதங்களை யெல்லாம் திரட்டி ஒரு மூலையில் வைத்துவிட்டுத் தனக்கு மட்டும் ஒரு வாளைக் கையில் எடுத்துக் கொண்டான். கலிங்க வீரர் அநபாயன் சொன்னபடி சிலையென நின்றனர். தன் கண் முன்பாகவே தான் இட்ட நீதி குலைந்து சிதறிப் போவதையும் தண்டனையடைந்த தமிழர் சுதந்திரத்துடன் ஓடிவிட்டதையும் பார்த்த அனந்தவர்மன் மனம் உடைந்து கண்களில் முன்னைவிடப் பிரேதக் களை அதிகமாகச் சொட்ட ஆசனத்தில் உட்கார்ந்திருந்தான். அந்த நிலையில் அவனிடம் விடை பெற்ற அநபாயன் சொன்னான்: "அனந்தவர்மா, வருகிறேன். பின்னால் ஒரு காலத்தில் நாம் முடியுமானால் போர்க்களத்தில் சந்திப்போம். ஓர் எச்ச ரிக்கை மட்டும் செய்கிறேன், உனக்கும் பீமனுக்கும். தமிழ் மக்களை இப்பொழுது துன்புறுத்துவது போல் இனி மேலும் துன்புறுத்தாதே. அப்படித் துன்புறுத்தியதாகத் தெரிந்தால் வெகு சீக்கிரம் பழிக்குப் பழி வாங்கியே தீருவேன்!" என்று கூறிவிட்டுக் காஞ்சனாதேவியை நோக்கி, "இளவரசி! நானும், கருணாகரனும் கதவுக்கு அப்புறம் சென்றதும் நீங்கள் மெள்ளப் பின்னடைந்து வாருங்கள்" என்று உத்தரவிட்டான்.

அப்படியே பின்புறமாகவே வெளியே நகர்ந்த மூவரும் வாயிற்படியைத் தாண்டியதும் சரேலென அந்த நீதி மண்டபத்தின் பெரும் கதவுகளை அநபாயன் சாத்திய தன்றி, தான் கொண்டு வந்திருந்த ஒரு பெரும் பூட்டையும் சாவியையும் இளையபல்லவனிடம் கொடுத்து, "கருணாகரா! இந்த நீதி மண்டபத்தைப் பூட்டிவிடு. நாம் சிறையிலிருந்தது போல் அனந்தவர்மனும் நீதி மண்டபத்தில் சில நாழிகை கள் சிறையிருக்கட்டும்" என்று கூறி நகைத்தான். அந்த நகைப்பில் கலந்துகொண்ட கருணாகர பல்லவனின் கரங்கள் வெகுவேகமாக வேலை செய்தன. நீதி மண்டபத் தைப் பூட்டிச் சாவியைத் தூரத்தில் எறிந்த கருணாகர

பல்லவனையும், வில்லை மீண்டும் தோளில் மாட்டிக் கொண்டு கணையை அம்பறாத் தூணியில் அடைத்து விட்ட அஞ்சன விழியாளையும் புரவிகளில் ஏறச் சொல்லித் தானும் ஒரு புரவிமீது பாய்ந்து, "உம் சீக்கிரம்!" என்று எச்சரிக்கை செய்து, கலிங்கத்தின் தமிழ் வீரர்கள் பின்தொடர அந்தப் பாலூர் நகர வீதிகளில் புழுதி மண் பறக்கச் சென்றான், துணிவில் இணையற்றவன் என்று பெயர் வாங்கிய அநபாயச் சோழன்.

கருணாகர பல்லவன் மனம் எங்கோ பறந்துகொண் டிருந்தது. பக்கத்தில் வந்த அஞ்சன விழியாளை அடிக்கடி பார்த்துக்கொண்டு எங்கே போகிறோமென்பதைக் கவனிக் காமலே புரவியில் அமர்ந்து சென்றான். அவன் கவனித்த தெல்லாம் காஞ்சனாதேவி திடமாய்ப் புரவியில் அமர்ந்தி ருந்ததையும், புரவியின் ஓட்டம் அசைத்துக் கொடுத்த அங்கலாவண்யங்களையும்தான். அவனும் அநபாயனும் அப்பொழுதிருந்ததோ அபாய நிலை. அந்த அபாயத்தை யும் அவன் மனத்திலிருந்து மறைத்தது அவள் அபார அழகு. அது காரணமாகப் போகுமிடத்தைக் கவனிக்காமல் மிக வேகமாகப் போய்க் கொண்டிருந்த புரவியைத் திடீரென நிறுத்த வேண்டிய நிலை வந்த பிறகே அவன் சுரணை அடைந்தான். அப்பொழுதுதான் பல தெருக் களைத் தாண்டித் தாங்கள் வந்துவிட்டதையும் நகரத்தின் தெற்குக் கோடியில் கோதாவரியின் ஓரமாக இருந்த கூட்டமான குடிசைகளுக்கருகில் புரவிகள் நிற்பதையும் உணர்ந்தான் இளையபல்லவன். மற்றவர்களோடு புரவியி லிருந்து கீழே குதித்த இளைய பல்லவன் அநபாயனை நோக்கி, "அநபாயரே! இங்கு மறைவதற்கு இடம் ஏது மில்லையே. இங்கு ஏன் வந்தோம்" என்று விசாரித்தான்.

"கருணாகரா! நாம் மறைய வேண்டிய இடம் வேறு, அந்த இடத்துக்கு இரவில்தான் செல்ல முடியும். அதுவரை

இங்குதான் தங்க வேண்டும்” என்று கூறிய அநபாயன் மற்ற குதிரை வீரர்களைப் பார்த்து, “வீரர்களே! உங்கள் உதவிக்கு நன்றி. நீங்கள் மீண்டும் உங்கள் இருப்பிடம் செல்லுங்கள். வேண்டுமானால் மறுபடியும் வழக்கப்படி செய்தி அனுப்புகிறேன்” என்று அவர்களுக்கு உத்தரவிட்டு அவர்களை அனுப்பிய பின்பு, “வா கருணாகரா! தேவி, வாருங்கள்” என்று இருவரையும் அழைத்துக்கொண்டு பக்கத்திலிருந்த ஒரு தோப்புக்குள் நுழைந்து அங்கிருந்த குடிசைகளில் ஒன்றை நாடிச் சென்றான். குடிசையை அடைந்ததும் கருணாகர பல்லவனையும் காஞ்சனாதேவி யையும் உள்ளே நுழையச் சொன்ன அநபாயன் மட்டும் குடிசைக்கு வெளியே சிறிது நேரம் ஏதோ யோசித்துக் கொண்டு நின்றான். பிறகு உள்ளே வந்து, “நாம் இரவு வரை இங்குதான் இருக்கும்படியிருக்கும்” என்றான்.

“பிறகு?” என்று கேட்டான் கருணாகர பல்லவன்.

“இந்த ஊரை விட்டுத் தப்பிச் செல்லும் வழி தேட வேண்டும்” என்று பதில் சொன்னான் அநபாயன்.

“இனிமேல்தான் வழி தேட வேண்டுமா?” என்று இளையபல்லவன் மட்டும் வினவினான்.

“ஆம். வழி தேடுவதற்கு ஒருவரை நியமித்திருக்கிறேன். அவர் வருவார் இன்றிரவு” என்று பதிலிறுத்தான் அநபாயன்.

இரவு அவர் வந்தார். வந்தவரோ வினோதமாயிருந் தார். தப்புவதற்கு அவர் சொன்ன திட்டம் அதைவிட வினோதமாயிருந்தது. ஆனால் அந்த இரவுக்கும் பிற்பகலுக் கும் இடையே இருந்த அரை ஜாம நேரம் ஆனந்த மாயிருந்தது இளையபல்லவனுக்கு. அபாயத்தை மறைக்கும் ஆற்றல் அழகுக்கு உண்டு என்பதை அவன் புரிந்து கொண்டான். அதைப் புரிய வைத்தாள் அவன் கூட இருந்த அஞ்சன விழியாள்.

அத்தியாயம் 14

# அழைப்பு

பாலூர் பெருந்துறையின் நீதி மண்டபத்திற்குள் பட்டப் பகலில் நுழைந்து தன்னையும் மற்றத் தமிழரையும் சிறைமீட்ட அநபாயச் சோழனின் அபரிமிதத் துணிவை எண்ணி எண்ணி வியந்தும் அந்த அமானுஷ்யமான சாதனையை அவன் எப்படிச் செய்ய முடிந்தது என்பதன் மர்மத்தை அறிய முடியாததால் குழம்பியும், அநபாய னுடன் .வந்த கடாரத்துக் கட்டழகி வில்லைப் பிடித்து நின்ற அழகையும், அழகெலாம் அசைய அசைய அவள் புரவியில் வந்த விந்தையையும் நினைத்ததால் ஆனந்தத் துக்கு அடிமைப்பட்டும், பலவித உணர்ச்சிகளுக்கு இலக் காகி ஏதும் பேசாமல் நகரத்தின் தெற்குக் கோடியில் கோதாவரியின் கரையருகே இருந்த குடிசைக் கூட்டத்துக்கு வந்து சற்றுச் சுரணையடைந்த இளையபல்லவன் அங்கு மறைந்து தங்க இடமேதும் இல்லாததைக் கண்டு, 'இங்கு எதற்காக வந்தோம்?' என்று ஆச்சரியப்பட்டு அதைப்பற்றி மாத்திரம் இரண்டொரு கேள்விகள் அநபாயனைக் கேட்டான். அந்தக் கேள்விகளுக்கு, "மறைய வேண்டிய இடத்துக்கு இரவில்தான் செல்ல முடியும்" என்று அநபாயன் பதில் சொன்ன பிறகு குடிசைகளுக்கு அப்பா லிருந்த தோப்புக்குள் தன்னையும், காஞ்சனா தேவியையும் அழைத்துச் சென்று ஒரு தனிக் குடிசையில் தங்களைத் தங்க வைத்ததும், தப்புவதற்கு வழி சொல்ல இரவில்

ஒருவர் வருவார் என்று கூறியதும் மிகமிக விந்தையா யிருந்தது இளைய பல்லவனுக்கு. அது தவிர, குடிசைக்குள் நுழையு முன்பாக ஆகாயத்தை நோக்கிக் கண்களை உயர்த்தி அநபாயன் ஆராய்ந்ததற்கும் காரணம் புரியாத கருணாகர பல்லவன் குடிசைக்குள் அநபாயன் நுழைந்ததும் முகத்தில் பல சிந்தனைகள் பாய்ந்தோட அவற்றால் சலனப்பட்ட கண்களுடன் அவனை ஏறெடுத்து நோக்கினான்.

கருணாகர பல்லவனின் கண்களில் தோய்ந்து கிடந்த சிந்தனைக் கடலின் ஆழத்தைப் புரிந்துகொண்ட அநபாய சோழன் சற்றே புன்முறுவல் செய்ததன்றி, "கருணாகரா! உன் உள்ளம் குழம்பிக் கிடக்கிறதை உன் கண்கள் காட்டு கின்றன. அப்படியென்ன குழப்பம் உனக்கு?" என்று கேட்கவும் செய்தான்.

அந்தக் கேள்வி பெரும் விசித்திரமாயிருந்தது இளைய பல்லவனுக்கு. பிற்காலத்தில் சரித்திரம் சொன்னாலும் நம்பத்தகாத அளவுக்குக் காரியங்களை அன்று சாதித்து, தன் மனத்தை மட்டுமின்றி, அனந்தவர்மன் இன்னும் ஆயிரக்கணக்கான பாலூர்ப் பெருமக்கள் முதலிய பலர் புத்தியையும் குழப்பிவிட்ட அநபாயன், அன்று செய்த தெல்லாம் சகஜமாக நடக்கக்கூடிய பணிபோல் பாவித் துப் பேசியதைக் கண்ட இளையபல்லவன் மிதமிஞ்சிய வியப்படைந்ததன்றி, "எனக்கு மட்டுமல்ல குழப்பம் அநபாயரே! உங்கள் இன்றைய செய்கை கலிங்கத்தையே குழப்பியிருக்கும். எல்லோருக்கும் பிரமிப்பையும் அளித் திருக்கும்" என்றும் கூறினான்.

அநபாயனின் உதடுகளில் விரிந்த புன்னகை, புலியின் கண்களைப் போல் பளிச்சிட்ட அவன் விழிகளிலும் துள்ளி விளையாடியது. அந்தப் புன்னகையைத் தொடர்ந்து வந்த பேச்சிலும் ஓர் அலட்சியம் இருக்கத்தான் செய்தது. "இதில் குழப்பத்திற்கோ பிரமிப்பிற்கோ என்ன இருக்கிறது

கருணாகரா? நமது மக்கள் அந்தமாக வதைக்கப்படு கிறார்கள். அவர்களைக் காப்பது எனது கடமை. என் ஆருயிர்த் தோழனைத் தீர்த்துக் கட்ட அனந்தவர்மனும் பீமனும் ஏற்பாடு செய்தார்கள். அந்த ஏற்பாட்டைக் குலைப் பது என் கடமை. சோழர்கள் உதவி நாடிக் கடாரத்தின் மன்னனும் இளவரசியும் இந்தத் துறைமுகத்தில் இறங்கி னார்கள். அவர்களைச் சோழ நாடு செல்லாமல் தடை செய்யவும் ஏற்பாடு நடந்தது. அந்த ஏற்பாட்டை உடைப் பது என் கடமை. இந்தக் கடமைகளைத்தான் செய்தேன். இதில் குழப்பத்திற்கு இடமில்லை. தவிர, கடமைகள் இன்னும் பூர்த்தியாகவுமில்லை" என்றான் அநபாயன், ஏதோ சாதாரண விஷயத்தைச் சொல்லுபவன் போல்.

கருணாகர பல்லவன் கண்கள் அநபாயனை நன்றாக ஆராய்ந்தன. குடிசையின் கூரையைத் தொட்டுவிடுவது போன்ற உயரத்துடனும், மந்தகாசம் தவழும் முகத்துடனும் நின்றிருந்த அவன் கம்பீரம் இளையபல்லவனின் இதயத் தில் பெருமிதத்தை விளைவித்ததென்றால், பெரிய காரியங் களைச் சாதித்த அவன் அவற்றைக் கடமையெனச் சாதா ரணமாகக் கூறியது அந்தப் பெருமிதத்தை ஆயிரம் மடங்கு உயர்த்தவே, 'இத்தனை சிறந்த கர்ம வீரனைப் பெற்ற தமிழ்த்தாய் சிறப்புடையவள்' என்று தாய்நாட்டையும் வாழ்த்தினான் கருணாகர பல்லவன். அப்படி இதயத் துக்குள் வாழ்த்திக்கொண்டு சொன்னான். "கடமைகளை நிறைவேற்றுவது காவலன் கடமைதான். ஆனால் அதை நிறைவேற்றிய முறைதான் குழப்பத்தைத் தருகிறது" என்று.

"குழப்பமென்ன அதில்!" அநபாயன் கேள்வி அனாயாசமாக எழுந்தது.

"பட்டப்பகலில் நீதி மண்டபத்திற்கு வந்தீர்கள்."

"விசாரணை பட்டப்பகலில்தானே நடந்தது?"

"உண்மை. ஆனால் நீதி மண்டபத்திற்குள் உங்களை நான் எதிர்பார்க்கவில்லை."

"வேறு எங்கு எதிர்பார்த்தாய்?"

"சிறையிலிருந்து நீதி மண்டபம் செல்லும்போது அல்லது நீதி மண்டபத்திலிருந்து கொலைக்களம் போகும் போது."

"ஏன் அப்படி?"

"சிறையில் காவல் அதிகம். அங்கிருந்து எங்களை மீட்க முடியாது. நீதி மண்டபத்திலும் காவல் அதிகம். அங்கிருந்தும் எங்களை மீட்க முடியாது. ஆகவே வெளியில் தான் மீட்பீர்கள் என்று நினைத்தேன்."

இதற்குப் பதில் சொல்லு முன்பு மெள்ள நகைத்தான் அநபாயன். அவன் நகைப்பைக் கண்ட இளையபல்ல வன் சற்றுக் கோபத்துடனேயே கேட்டான்: "ஏன் நகைக் கிறீர்கள் அநபாயரே?"

மீண்டும் நகைத்த அநபாயன், "கருணாகரா! கலிங்க மன்னர் இருவரும் இப்படியே நடந்துகொண்டு, சோழ நாடு கலிங்கத்தை ஒரு நாள் வெற்றி கொள்ள நேர்ந்தால், உன்னைத்தான் நான் கலிங்கத்தின் அரசபீடத்தில் உட்கார வைப்பேன்" என்று பதில் கூறினான்.

"ஏன் அத்தனை பெரிய பதவி எனக்கு?"

"உன் கருத்து கலிங்க மன்னர்கள் கருத்தை ஒத்திருக் கிறது. ஆகவே கலிங்கத்தை ஆள்வதற்கு அவர்களுக்கு அடுத்தபடி நீதான் தகுதி!"

"அப்படியா?" இளையபல்லவன் குரலில் கோபம் மண்டிக் கிடந்தது.

அந்தக் கோபத்தை அதிகரிக்க இஷ்டப்பட்டவன் போல் மீண்டும் சொன்னான் அநபாயன்: "நீ நினைத்தது

போல்தான் பீமனும் நினைத்தான், அனந்தவர்மனும் நினைத்தான்."

"அப்படி நினைப்பதுதானே இயல்பு?" இளைய பல்லவன் குரலில் உக்கிரம் ஏறிக் கொண்டிருந்தது.

அதைக் கவனிக்காமலே விளக்க முற்பட்ட அநபாயன், "இயல்பு அதுதான் கருணாகரா, அந்த இயல்பை உணர்ந்து அதை மீறி நடந்ததால்தான் உங்களை மீட்க முடிந்தது. காவலிருக்குமிடத்தில் அசிரத்தையிருப்பது இயல்பு. அந்த அசிரத்தையை நான் பயன்படுத்திக் கொண்டேன். நான்கு சுவர்கள் தங்களுக்குப் பெரும் பாதுகாப்பு என்று நினைப்பது மனித இயல்பு. ஆகவே சிறைக் கூடத்திலும் நீதிக் கூடத்திலும் நான் துணிவுடன் நுழையமாட்டேன் என்று அனந்தவர்மனும் பீமனும் நினைத்தார்கள். ஆகை யால் சிறைச்சாலையில் சிரத்தையற்று இருந்தார்கள். அங் கிருந்து நான் தப்பினேன். நீதி மண்டபத்தில் அசிரத்தையா யிருந்தார்கள். அங்கிருந்து உன்னைத் தப்புவித்தேன். பாலூர்ப் பெருந்துறையின் மக்கள் தொகையில் மூன்றி லொரு பங்கு தமிழர்கள். அவர்களில் பெரும்பாலோர் வணிகர்கள். சிலர் படைப்பிரிவிலுமிருக்கிறார்கள். சிலர் சுங்கச் சாவடியிலிருக்கிறார்கள். தமிழர்களைத் தவிர சில வேங்கி நாட்டாரும் படையில் சேர்ந்திருக்கிறார்கள். இந்தக் கோதாவரிக்கு அக்கறையிலிருக்கும் வேங்கி நாட்டு அரியணையில் இன்று விஜயாதித்தன் அமர்ந்திருக்கலாம். ஆனால் அதில் அமர வேண்டியவன் நானாகையால் இங்குள்ள வேங்கி நாட்டவரில் பலர் என்னிடம் பக்தி கொண்டவர்கள். ஆகவே பாலூரில் கலிங்க மன்னர்களை ஆதரிப்பவர்களை விட என்னை ஆதரிப்பவர்கள் தொகை அதிகம். ஜனத்தொகையில் மூன்றிலிரண்டு பங்கான வேங்கி நாட்டவரையும் தமிழரையும் ஒதுக்கிவிட்டால் மற்றவர் சிறுபான்மை. தவிர என்றாவது ஒருநாள் வேங்கி

நாட்டை என் வசப்படுத்த வேண்டுமானால் இங்குள்ள வேங்கி நாட்டவர், தமிழர் ஆகிய இருபாலர் உதவியும் எனக்குத் தேவையாயிருக்கும். அதனால்தான் அடிக்கடி சோழ நாட்டிலிருந்து இங்கு வருகிறேன். இங்கு வந்து போதிய பக்கபலத்தையும் திரட்டியிருக்கிறேன். இந்த அரசாங்கத்தின் ஒவ்வோர் இடத்திலும் என்னைச் சேர்ந்த வர்கள் இருக்கிறார்கள். சிலர் வணிகர், சிலர் படை வீரர், சிலர் மாலுமிகள். ஆனால் எல்லோரும் என் ஒற்றர்கள், பணத்தாலல்ல. என்னிடம் பக்தியால் கட்டுப்பட்டவர்கள். ஆகையால்தான் அவசியமான வீரர்களைத் திரட்டிக் கொண்டு உங்களை விடுவிக்க முடிந்தது-" என்று சொல்லிக் கொண்டு போனவனை இடைமறித்துக் கேட்டான் இளையபல்லவன், "அப்படியானால் நீதி மண்டபத்தைச் சுற்றிக் காவல் அதிகமில்லையா?"

"இருந்தது. ஆனால் இருந்தவர் கலிங்கப் படையி லுள்ள வேங்கி, தமிழ்நாட்டு வீரர்கள். அவர்களைக் காவலுக்கு அனுப்ப முன்னதாக ஏற்பாடு செய்தேன்" என்றான் அநபாயன் பதிலுக்கு.

"காவலரை அனுப்ப நீங்கள் ஏற்பாடு செய்தீர்களா" இளையபல்லவன் வியப்புடன் வினவினான்.

"காவலரை அனுப்பும் அதிகாரம் படைத்தவர், சேனாதிபதியைப்போல் அத்தனை அதிகாரம் படைத்த வரல்ல. இருப்பினும் ஒரு தமிழர் அந்த வேலை பார்க் கிறார்" என்று சுட்டிக் காட்டினான் அநபாயன்.

பாலூர்ப் பெருந்துறை உண்மையில் அநபாயச் சோழன் பாசறை என்பதை அறிந்துகொண்ட கருணாகர பல்லவன், அநபாயன் சிறையிலிருந்து தப்ப முடிந்ததற்கும் தூதுப் புறா மூலம் செய்தியனுப்ப முடிந்ததற்கும் காரணங் களைப் புரிந்துகொண்டான். நீதி மண்டபத்தைச் சுற்றி நின்ற காவலரே தாங்கள் தப்புவதற்கு உதவியாயிருந்ததால்

தான், தங்களைப் படையினர் யாரும் பின்தொடரவில்லை என்பதையும் உணர்ந்து கொண்டான். இத்தனை வசதிகளிருந்தாலும் அனந்தவர்மனும் பீமனும் கலிங்க வீரர்களைக் கொண்டு தங்களைப் பிடிக்கக் கண்டிப்பாய் முயல்வார்களென்பதையும், அடுத்த சில நாழிகைகளில் பாலூர் நகரம் பூராவும் பீமனுடைய வீரர்களால் சோதனையிடப் படுமென்பதையும் சந்தேகமற அறிந்தானாகையால் அநபாயனை நோக்கிக் கேட்டான்: "நமக்கு இங்கு என்ன துணையிருந்தாலும் கலிங்க அரசாங்கத்தின் பலம் நம்மைச் சும்மா விடுமா?"

"விடாது கருணாகரா! விடாது. அவசியமானால் பாலூருக்கு வடக்கேயுள்ள கலிங்கர் படைப் பிரிவும் இங்கே வரவழைக்கப்படும். ஆகையால்தான் இந்தத் தோப்புக்கு உங்களை அழைத்து வந்தேன். இங்கு உங்களை யாரும் தேடமாட்டார்கள். இங்கு இருப்பவர்களெல்லாம் தமிழகத்துப் பரதவர். இங்கு சோதனைக்கு வீரர்கள் வந்தால் உங்களை ஒளித்து வைக்கும் சக்தி இவர்களுக்கிருக்கிறது. இன்றிரவு எப்படியும் இந்தப் பாலூரை விட்டுக் கிளம்பிவிடத் தீர்மானித்திருக்கிறேன். அதற்கு வழி கண்டு பிடிக்க ஒருவரை நியமித்திருக்கிறேன். அவர் வருவார்" என்றான்.

"யாரவர்?" என்று கேட்டான் கருணாகர பல்லவன்.

"வெளி நாட்டவர். உனக்குத் தெரியாது அவரை. வந்த பின் அறிமுகப்படுத்தி வைக்கிறேன். அவர் வந்த பின்தான் நாம் வேறிடத்திற்குச் செல்ல வேண்டும்."

"எது அந்த இடம்?"

"அதையும் அவரே சொல்லுவார்."

அதைப்பற்றி மேலும் ஏதோ கேட்க முயன்ற கருணாகரனை, "பொறு கருணாகரா!" என்று ஒரே வார்த்தையில் பேச முடியாமல் அடித்த அநபாயன், ஏதேதோ யோசனை

களில் நீண்ட நேரம் ஆழ்ந்தான். பிறகு எதையோ திடீரென நினைத்துக்கொண்டு எழுந்து, "கருணாகரா! இன்னும் சில நாழிகைகளில் மாலை நெருங்கும். அதற்குள் நான் ஒரு முக்கிய அலுவலைக் கவனித்துக்கொண்டு வருகிறேன்" என்று சொல்லி, குடிசையை விட்டுப் புறப்பட்டு, அந்த அடர்த்தியான தோப்புக்குள் புகுந்து சில விநாடிகளில் மறைந்தான்.

அநபாயன் போக்கு ஒவ்வொன்றும் விசித்திரமா யிருந்தது இளையபல்லவனுக்கு. எதிரிகள் நாட்டில் வந்து அநபாயன் இஷ்டப்படித் திரிவதும் திடீரெனத் தோன்று வதும் மறைவதும் பெரும் வியப்பாயிருந்தது அவனுக்கு. 'பெரிய சாம்ராஜ்யத்தின் அரியணையில் இவரல்லவா அமர வேண்டும்?' என்று எண்ணினான். வீரராஜேந்திர ருக்குப் பதில், அநபாயர் மட்டும் சோழ அரியணையில் இருந்தால், தமிழர் பாலூரில் படுத்தப்பட்ட பாட்டுக்குக் கலிங்கம் படு தூளாக்கப்படும் என்பதை உணர்ந்தான். அத்தகைய ஒரு வசதி சோழ நாட்டுக்கு இல்லாததைக் குறித்துச் சிறிது வருந்தவும் செய்தான். வீரராஜேந்திரர் மகாவீரரானாலும் அவர் சமாதானத்தையே விரும்புபவர் என்பதையும், பிறர் வீணாகப் போரிட வந்த காரணத்தா லேயே அவர் பெரும் போர்களில் ஈடுபட்டு வெற்றிவாகை சூடினாரென்பதையும் உணர்ந்திருந்த இளையபல்லவன், போர் விருப்பமுள்ள அநபாயன் அரியணையில் இருந் திருந்தால் சோழ சாம்ராஜ்யம் எத்தனை விரிவடையும் என்று சிறிது பேராசையும் கொண்டான். இருப்பினும் அந்த எண்ணத்தை அடுத்த விநாடி அறுத்தெறிந்தான். 'சேச்சே! போரில் விளைவது நாசம். அது உதவவே உதவாது' என்று தனக்குள் சொல்லிக்கொண்டான்.

இப்படி எண்ணச் சூழலில் புதைந்து கிடந்த இருத யத்தை உடைத்தன அந்தக் குடிசையின் ஒரு மூலையி

லிருந்து எழுந்த, "அப்பா என்ன யோசனை! என்ன யோசனை!" என்று ஏளனச் சொற்கள். குயில் பேசத் துவங்கியது போல் எழுந்த குரலால் நனவுலகத்துக்கு வந்த கருணாகர பல்லவன், அப்பொழுதுதான் 'காஞ்சனா தேவியும் தானும் தனிமையிலிருப்பதை' உணர்ந்து குடிசை யின் மூலைக்குக் கண்களைத் திருப்பினான். வில்லையும் அம்பறாத் தூணியையும் இடைக் கத்தியையும் கழற்றி ஒரு மூலையில் வைத்துவிட்டு செவ்விய இதழ்களில் தவழ்ந்த இளநகையுடனும் முழந்தாள்களைக் கைகளால் சுற்றிக் கட்டிக் கொண்டாலும் மறையாத மன்மதாகாரத்துடனும் காட்சியளித்த காஞ்சனாதேவியைக் கண்ட கருணாகர பல்லவன் ஒரு விநாடி மூச்சை இழுத்துப் பிடித்துக் கொண்டான். பிறகு மெள்ளச் சொன்னான்: "மன்னிக்க வேண்டும், நீங்களிருப்பதை மறந்துவிட்டேன்" என்று.

"மறந்துவிட நியாயமிருக்கிறது" என்று சொல்லி நகைத்தாள் காஞ்சனாதேவி.

"நியாயமில்லை காஞ்சனாதேவி" என்று இளைய பல்லவனின் குரல் தன்னைத்தானே கண்டித்துக் கொள்வது போலிருந்தது.

"ஏன் நியாயமில்லை?"

"உயிரைக் காப்பாற்றியவர்களை மறப்பது நன்றி கொன்ற செய்கையல்லவா?"

"யார் உயிரைக் காப்பாற்றியது?"

"நீங்கள்தான் என் உயிரைக் காப்பாற்றினீர்கள்!"

"இல்லை இல்லை. அநபாயர் காப்பாற்றினார்."

"சரி... நீங்கள் துணை செய்தீர்கள்."

"அது துணை செய்ததாகாது."

"எப்படி ஆகுமோ?"

"சொற்படி நடந்ததாகும். அநபாயர் செயல் புரிபவர். நாம் கருவிகள். அவரிஷ்டப்படி இயங்குகிறோம். கருவி களைப் பாராட்டுபவர் உலகத்தில் உண்டா?"

அநபாய சோழனைப் பற்றி அவள் கொண்டிருந்த மதிப்பு கருணாகரனுக்கும் இருக்கத்தான் செய்தது. இருந்த போதிலும் அது அவள் வாயால் வந்தது சற்றுப் பொறா மையாகவே இருந்தது இளைய பல்லவனுக்கு. "உண்மை! உண்மை!" என்று அவன் சொன்ன பதிலைக் கேட்ட காஞ்சனாதேவி, அவன் குரலில் உற்சாகமில்லாததைக் கவனித்து அதன் காரணத்தையும் உணர்ந்து சற்று லேசாக நகைக்கவும் செய்தாள்.

அந்த நகைப்பொலி எத்தனையோ இன்பமாகத் தானிருந்தது. இருப்பினும் அநபாயனை அவள் பாராட்டி யதன் காரணமாக அந்த இன்பத்தை அனுபவிக்கச் சக்தி யில்லாதிருந்தது அவன் மனம். ஆகவே மேற்கொண்டு பதிலேதும் சொல்லாமல் தரையில் உட்கார்ந்து நிலத்தில் கண்களை ஓட்டினான். அந்த மௌனம் அளவுக்கு மீறி நிலைத்தது. குடிசையில் அந்த எழிலரசியுடன் தனிமையி லிருந்த சங்கடமும், தன்னைவிட அவள் அநபாயனைச் சிறப்பாக எண்ணிவிட்டாளோ என்ற இதய ஏக்கமும் இளைய பல்லவனைப் பல திசைகளில் இழுத்துக் கொண் டிருந்தாலும் மேலுக்குக் கல்லுப் பிள்ளையாரைப் போல் உட்கார்ந்திருந்தான் அவன்.

அவன் நிலையைப் புரிந்துகொண்ட காஞ்சனாதேவி யின் நிலையும் பெரிதும் சங்கடத்தில்தானிருந்தது. முதல் நாள் அறையில் ஏறிக் குதித்த சமயத்திலே அவனிடம் ஏற்பட்ட ஒரு நல்லெண்ணம் சென்ற இரண்டு நாள்களில் அன்பு என்று சொல்லும் அளவுக்குப் போய்க்கொண் டிருந்ததை அவள் உணர்ந்தாள். அது வெறும் அன்போடு நிற்காமல் உணர்ச்சிகள் அதை அதிகமாக முற்றவிட்டுக்

கொண்டிருந்ததை நினைக்க நினைக்க அவள் மதிவதனம் அந்தச் சமயத்தில் வெட்கத்தால் செம்பருத்தியின் நிறத்தை அடைந்தது. அந்த உணர்ச்சிகளிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ளப் பேச்சைத் துவக்கிய காஞ்சனாதேவி, "நீங்கள் என்ன பெண்ணா?" என்று மெல்லக் கேட்டாள்.

தலையைக் குனிந்தவாறே அவனும் கேட்டான்.

"ஏன்?"

"பின் எதற்காகத் தலையைக் குனிந்துகொண்டு உட்கார்ந்திருக்கிறீர்கள்?"

"யோசனையிலிருக்கிறேன்."

"யாரைப்பற்றி யோசனை?"

இதற்குப் பதில சொல்லவில்லை அவன். 'உன்னைப் பற்றித்தான் யோசனை!' என்று எப்படிச் சொல்லுவான்? அவன் பதில் சொல்ல முடியாதபடி கேள்வி கேட்டதை அவளும் உணர்ந்து கொண்டாளாதலால், அவள் மேற்கொண்டு கேள்வியும் கேட்கவில்லை, பதிலையும் எதிர்பார்க்கவில்லை. சிறிது நேரம் மௌனமாகவே உட்கார்ந்திருந்தாள். பிறகு எழுந்து குடிசையை விட்டு வெளியே சென்றாள். அவள் காலடி ஓசையைக் கேட்டதும் தலை தூக்கிய கருணாகர பல்லவன் பிரமிப்பில் ஆழ்ந்தான். அவன் கண்களுக்கெதிரே செக்கச் செவேலென்று வழவழத்துமிருந்த ஆடுசதைகளுடன் இரண்டு கால்கள் நடந்து சென்றன. அவற்றின் கணைக்கால்களில் ஆபரணம் ஏதுமில்லாதிருந்ததாலேயே அவற்றின் அழகும் பாதங்களின் அழகும் பன்மடங்கு விகசித்துக் கிடந்ததைக் கண்டன அவன் கண்கள். இளையபல்லவன் காஞ்சனா தேவி போகும் திக்கை நோக்கிச் சென்றான்.

அவள் நடந்த வேகம் அவள் பின்னழகைப் பல மடங்கு அதிகமாக எடுத்துக் காட்டியதைக் கண்ட கருணாகரபல்லவன் மனம் நிலைகுலையத் தொடங்கியது.

அந்த மோகன உருவத்தாள் கோதாவரியின் பிரவாகம் அலை மோதிக் கொண்டிருந்த இடத்தை அடைந்ததும் தன் கொண்டை ஆபரணத்தைக் கழற்றிக் கீழே போட்டு, குழலைப் பிரித்துவிட்டாள். பிறகு கோதாவரியின் புண்ணிய நீரில் இறங்கினாள்.

ஏதோ மந்திரத்தால் இயக்கப்பட்டவன் போல் நடந்து கோதாவரியின் கரையை அடைந்த கருணாகர பல்லவன் நதியில் கழுத்து மட்டும் ஆழ்ந்து கிடந்த அந்த நீர் மோகினியை நோக்கினான். கோதாவரிக்குள்ளிருந்து அப் பொழுதுதான் முளைத்தெழுந்த தாமரையைப் போல் தெரிந்த காஞ்சனாதேவியின் சொர்ண வதனத்தை இருட் டுக்கு முன்பு மிகச் செம்மையுடன் மிளிரும் அந்தி வேளை யின் செவ்விய கிரணங்கள் வருடிக்கொண்டிருந்தன.

சுமார் ஒரு நாழிகைக்குப் பிறகு அவள் ஆற்றிலிருந்து எழுந்து வெளியே வந்தாள். அவள் வெளிவந்த கோலத்தை மலைத்துப் பார்த்துக் கொண்டிருந்த இளைய பல்லவ னுக்கு அருகில் வந்த காஞ்சனாதேவி, "இளைய பல்லவரே! புரவி சவாரி செய்தபோது உடலெல்லாம் புழுதியாகி விட்டது. ஆகவே நீராடினேன். சற்று அப்புறம் இருங்கள். சேலையை உலர்த்திக்கொண்டு வருகிறேன்" என்று கூறி விட்டு ஒரு புதரின் மறைவுக்குச் சென்றாள்.

காற்று பலமாயிருந்ததால் அரை நாழிகைக்குள் நன்றாக உலர்ந்துவிட்ட சேலையைக் கட்டிக் கொண்டும் குழலை எடுத்துச் சொருக்குப் போட்டுக் கொண்டும், புதரி லிருந்து வெளிவந்த காஞ்சனாதேவி கரையில் கிடந்த சல்லடத்தையும் கொண்டை ஆபரணத்தையும் எடுத்துக் கொண்டு, "வாருங்கள்" என்று அவனை அழைத்துவிட்டு, தோப்புக்குள் முன்னால் நடந்தாள்.

தோப்பில் இருள் நன்றாகக் கவ்விவிட்டது. ஆங்காங் கிருந்த குடிசைகளில் தெரிந்த சிறு விளக்குகளின் அடை

யாளத்தைக் கொண்டு அவ்விருவரும் நடந்து சென்றார் கள். தோப்பிலிருந்து புஷ்பச் செடிகள் நானாவித புஷ்பங் களை மலரவிட்டு வாசனையை எங்கும் படரவிட்டுக் கொண்டிருந்தன. பக்கத்துச் செடியிலிருந்த புஷ்பக் கொத்து ஒன்றைக் கையில் ஒடித்து எடுத்துக்கொண்ட இளைய பல்லவன் குடிசை வாயிலுக்கு வந்ததும் காஞ்சனாதேவியை நோக்கினான்.

"சற்று இருங்கள். விளக்கை ஏற்றுகிறேன்" என்று உள்ளேயிருந்து வந்தது அவள் குரல்.

அதைக் கேட்டு வாயிலிலேயே நின்றவன் அடுத்த விநாடி குடிசைக்குள் விளக்கொளி வீசவே உள்ளே நுழைந் தான். விளக்குக்கு அருகே நின்று அதைத் தூண்டிவிட்டுக் கொண்டிருந்த காஞ்சனாதேவி விளக்கை மட்டுமல்ல, அவன் உணர்ச்சிகளையும் தூண்டினாள். அதன் விளை வாகத் துணிவுடன் அணுகி அவள் குழலில் தன் கையி லிருந்த மலர்க்கொத்தைச் செருகினான் இளைய பல்லவன். சிரித்துக்கொண்டு அவள் அவனை நோக்கித் திரும்பினாள்.



அத்தியாயம் 15

# கண்கள் பெற்ற பயன்

**கா**ஞ்சனாதேவியின் பூவிதழ்களில் கொஞ்சித் தவழ்ந்த புன்னகையையும், அஞ்சன விழிகள் அள்ளி வீசிய மிதமிஞ்சிய அழைப்பையும் கண்ட கருணாகர பல்லவனின் மனத்தில் எஞ்சியிருந்த கொஞ்ச நஞ்ச கட்டுப்பாடும் அரைகுறையாகத் திறந்திருந்த குடிசை வாயிலிலிருந்து வந்த கோதாவரியின் காற்றில் பறந்து போய்விடவே. அவன் உணர்ச்சிகள் அந்தக் கோதாவரியின் வெள்ளம் போலவே கட்டுக்கடங்காமல் பிரவாகிக்கத் தொடங்கியதால் அந்தப் பூவையின் குழலில் பூங்கொத்தைச் செருகிய வலது கை, புங்கொத்துப் பதிந்த இடத்திலேயே தங்கி விரல்களால் குழலைப் பிரித்தும், உள்நுழைந்தும் ஏதோ விஷமம் செய்து கொண்டிருந்தது. வில்லொத்த அவள் புருவத்தின் அடியில் விரிந்த மலரொத்த அவள் விழிகளில் மலர்ந்த மெல்லியல் பார்வையில் வசப்பட்டு நின்ற அவன் விழிகள், ஏதோ புதுமையைக் கண்டுவிட்டனபோல் சிறிது நேரம் அவற்றுடன் உறவாடினாலும், வேறு புதுமைகளையும் காண இஷ்டப்பட்டு, இந்தக் கண்களிலிருந்து அகன்று அவள் கன்னத்தை அடுத்திருந்த கழுத்தின் பின்புறத்திலும் மாறி மாறிப் பதிந்தன. தூண்டிவிட்ட விளக்கிலிருந்து எழுந்த பொன்னிற ஒளி, வெட்கத்தால் சிவந்து கிடந்த அவள் கன்னத்தில் பாய்ந்து அதன் மென்மையையும் வழவழப்பையும் அநேக ஆயிரம் மடங்கு அதிகமாக எடுத்துக் காட்டிக்

கொண்டிருந்ததைக் கண்ட இளைய பல்லவன், 'விளக்குத் தான் இவளுக்கு முதல் எதிரி' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான். கோதாவரியிலிருந்து வந்ததும் முதலில் குடிசைக்குள் நுழைந்த காஞ்சனாதேவி, "இருங்கள், விளக்கை ஏற்றுகிறேன்" என்று கூறித் தன்னை வாசலில் நிற்க வைத்ததில் அர்த்தம் ஏதுமில்லை என்றே நினைத் தான் அந்த வாலிபன். விளக்கு ஏதோ பெரும் பாது காப்புப்போல் அவள் நினைத்தது எத்தனை பிசகு என்பதை அந்த விளக்கின் பணியே அந்தச் சமயத்தில் விளக்குவதாக அவன் நினைத்தான். அவள் அவயவங்களின் அழகுகளைப் பற்றி அளவுக்கு அதிகமாக ஊகத்தை அளித்துத் தன்னைத் திணறவிடும் அந்த விளக்கு தனக்கு விரோதியா அல்லது திரியைத் தூண்டிய அந்த மோகன வல்லிக்கு விரோதியா என்பதை நிர்ணயிக்க முடியாத மோகன நிலையிலும் சில விநாடிகள் சிக்கினான் இளைய பல்லவன்.

விளக்கைப் பாதி மறைத்து இளையபல்லவனுக்கு முதுகைக் காட்டிக் கொண்டு நின்றிருந்த காஞ்சனா தேவியின் பின்புறக் கழுத்திலும் முதுகிலும் விளக்கொளி படவில்லைதான். ஆனால் இளையபல்லவன் மன ஒளி இவற்றின்மீது வீசி ஏதேதோ விவரிக்க இயலாத வியாக்கி யானங்களைச் செய்துகொண்டிருந்தது. இப்படி ஒளியில் தெரிந்த இடப்புறக் கன்னத்தையும் தோளையும் ஆராய்ந்த புறக்கண்களும் இருளில் பின்புற எழில்களை ஆராய்ந்த அகக் கண்களுமாகச் சேர்ந்து, இருளும் ஒளியும் பாதிப் பாதியுள்ள மனித வாழ்க்கையையே ஆராய்வது போன்ற பிரமையை இளைய பல்லவன் இதயத்தில் ஏற்படுத்திய தால் அவன் பெரும் மயக்கத்திலிருந்தான்.

அவள் விளக்கைத் தூண்டி விநாடிகள் பல ஓடித் தான்விட்டன. ஆனால் அப்படி ஓடின நேரம் தெரியாவிட் டாலும் அந்த நேரத்துக்குள் கணத்துக்குக் கணம் ஏற்பட்ட நிகழ்ச்சிகளில் சிக்கித் தன்னையே மறந்துவிட்டாள்

கடாரத்தின் கட்டழகி. விளக்கைத் தூண்டியதும் வெகு துரிதமாக இளையபல்லவன் தன்னை அணுகிப் பின்புறத்தில் நின்றதே பெரும் இன்பவேதனையை அளித்தது அந்தப் பேரழகிக்கு. அத்துடன் கையிலிருந்த பூங்கொத்தை அவன் தன் குழலில் சூட்டியதும் குழலுக்குள் அவன் விரல்கள் புகுந்து விஷமம் செய்ததும் அஞ்சன விழிகளைத் திருப்பினாள் அவள். அந்தப் பார்வையுடன் கலந்த இளையபல்லவன் பார்வை தன் விழிகளில் கூரிய ஈட்டிகள் போல் பாய்ந்து இதயத்தையே ஆராய்ந்துவிடுவன போலிருந்ததைக் கண்ட அவள் இதயம் பெரு வேகத்தில் அடித்துக் கொண்டது.

ஆனால் அந்த இருவரின் கண்ணியமான பரம்பரை பெரும் விபரீதத்தைத் தடுத்து நின்றது. பரம்பரைக் கண்ணியம் விபரீதத்தைத்தான் தடுக்க முடிந்ததேயொழிய பிரவாகிக்கும் அன்பைத் தடுக்க முடியாததால் இருவரும் நிலைகுலைந்த தன்மையிலேயே நின்றிருந்தார்கள். நிலை குலைந்த தன்மையைச் சீர்படுத்திக் கொள்ள முனையவும் செய்தார்கள். ஆனால் முனைந்தது முழுப் பலனை மட்டும் அளிக்கவில்லை. இளையபல்லவன் கண்களிலிருந்து தன் கண்களைக் காஞ்சனாதேவி விடுவித்துக் கொள்ளத்தான் செய்தாள். தலையைக்கூடத் தாழ்த்திக் கொண்டாள். ஆனால் உணர்ச்சிகளிலிருந்து விடுபட மட்டும் முடியாமல் திண்டாடினாள். பின்புறத்தில் அவளுக்குக் கண்கள் இல்லைதான். ஆனால் பின்புறத்தில் அந்தப் புருஷன் மிகச் சமீபத்தில் நின்றுகொண்டிருக்கிறான் என்ற நினைப்பே இன்ப ஜ்வாலைகளை அள்ளிக் கொட்டிக் கொண்டிருந்தது அவள் தேகத்தில். பின்புறத்தில் அவள் கண்கள் இல்லைதான். இருப்பினும் தன் சேலையுடன் அவன் அங்கியின் நுனி உராய்ந்ததைக்கூட அவள் உணர முடிந்தது. பின்புறத்தில் தனக்கும் அவனுக்கும் இடை வெளி இருந்ததை அவள் அறிந்துதானிருந்தாள். இருப்

பினும் அந்த இடைவெளி அதிகத் தைரியத்தைக் கொடுக்க வில்லை அவளுக்கு. சற்றுத் தவறினால் விழுவது பெரும் பாதாளம். அப்படித் தவறாவிட்டாலும் எந்த விநாடியில் தவறுவோமோ என்ற கிலி. அந்த நிலையில் தான் இருந்தாள் காஞ்சனாதேவி.

அந்த நிலை மட்டும் சாதாரண நிலையாயிருந்தால், அபாயம் மட்டும் சாதாரண அபாயமாயிருந்தால், அதி லிருந்து மனிதர் விலகுவதுண்டு. ஆனால் காதலின் அபாயம் மட்டும் விலகச் சந்தர்ப்பமளிக்கவில்லை. அபாயத்தை நோக்கிச் செல்லவே தூண்டுகிறது. அந்தத் தூண்டுதலினாலோ என்னவோ அவன் மார்பில் மெல்லச் சாய்ந்தாள் அந்தப் பூங்கொடி.

அவன் மார்பில் அவள் தலை சாய்ந்து கிடந்தது. இருவரும் நெருங்கிவிட்டதால் பாதாதிகேச பரியந்தம் ஏற் பட்ட ஸ்பரிச உணர்ச்சிகள் புதுப்புது இன்பக் கதைகளைச் சொல்லத் தொடங்கின. மனிதன் தோன்றிய கால முதல் ஏற்பட்ட கதைகள்தான் அவை. ஆனால் அவற்றைத் திரும்பத் திரும்பப் புதுக் கதைகள்போல் கேட்டுத் திருப்தி யடைவது மனித இயல்பாகிவிட்டது.

பழைய காவியங்கள் திகட்டுவதில்லை. புதுப்புதுக் கருத்துகள் தோன்றுவதால் காதல் காவியமும் அத் தன்மையதுதான். காவியம் பழையது. கருத்துகள் என்றும் புதியவை. காவியத்தை நுகரும் முறைகள் பழமைதான். ஆனால் அந்த நுகர்ச்சியில் என்றும் புதுமை தோன்றத் தான் செய்கிறது. மாயை என்பதற்குப் பொருள் சொல்ல வேண்டுமானால் இயற்கையின் இந்தக் காவியத்தைச் சுட்டிக்காட்டலாம். பழமையில் புதுமையைக் காட்டுவது மாயை. கண்ணை மறைக்கும் விந்தையல்லவா இது!

மாளிகையில் பிறந்து மாளிகையில் வாழ்ந்த அந்த இருவர் கண்களும் அந்தத் தருணத்தில் மறைந்தே கிடந்தன.

அவன் மார்பில் சாய்ந்து கிடந்த அவள் கண்கள் மூடியிருந்தன. அவள் அழகைப் பருகிக் கொண்டிருந்த அவன் கண்கள் திறந்திருந்தன. ஆனால் மூடிய விழிகளுக் கும் விழித்திருந்த விழிகளுக்கும் வித்தியாசம் ஏதுமில்லை. இரண்டுக்கும் பார்வையில்லை. உணர்ச்சிகளுக்குத்தான் பார்வை இருந்தது. பார்வை மட்டுமென்ன? பேசும் சக்தியு மிருந்ததால் அவை ஏதேதோ பேசிக்கொண்டிருந்தன. 'நான் ஆடை புனையும் அறைக்குள் வந்தாரே இந்தப் புருஷர் போயும் போயும்' என்று நினைத்த அவள் உள்ளுக் குள் நகைத்துக் கொண்டாள். 'சற்று முன்பு கோதாவரியில் நீராடிவிட்டு வந்தபோது எப்படி வெறித்துப் பார்த்தார்! சே! ஆண்பிள்ளைகளுக்கு மட்டும் வெட்கம் சிறிதும் கிடையாது' என்று கண்டிப்பதுபோல் கண்டித்துக் கொண் டாள். ஆனால் அது உண்மையில் கண்டனந்தானா என்பதில் பெரும் சந்தேகமிருந்தது அவளுக்கு.

காஞ்சனாதேவி மெள்ள நகைத்தாள். அந்த நகைப்பு கருணாகர பல்லவனை இக உலகத்துக்குக் கொண்டு வரவே மெள்ள அவன் கேட்டான், "ஏன் சிரிக்கிறீர்கள்?" என்று.

அவள் மீண்டும் நகைத்தாள். அந்த நகைப்பு அவனுக் குச் சற்றுக் கோபத்தைக் கொடுக்கவே, "பதில் சொல்லி விட்டு நகைத்தால் நன்றாயிருக்கும்" என்று கடுமையாகச் சொன்னான்.

மேல் ஸ்தாயியில் மிக மிருதுவாகச் சுண்டப்பட்ட வீணையின் நாதம்போல் வெளிவந்தது அவள் பதில், "பதில் சொல்லலாம்..." என்று.

"பின் ஏன் சொல்லவில்லை?" காதுக்குள் ரகசியமாக ஓதினான் அவன்.

அவன் மார்பிலிருந்த அவள் முகத்தாமரை அவன் முகத்தை நோக்கியது. "கேள்வி சரியில்லை" என்று உதடுகள் இருமுறை திறந்து மூடின.

"கேள்வி சரியில்லையா?"

"ஆம்."

"என்ன கேட்டேன்?"

"ஏன் சிரிக்கிறீர்கள் என்று கேட்டீர்கள்?"

"அதில் தவறென்ன?"

"சிரிக்கிறீர்கள் என்பதில் மரியாதை கலந்திருக்கிறது."

"ஏன் மரியாதை கூடாதா?"

"கூடும், மற்றக் காரியங்களிலும் மரியாதை காட்டப் பட்டால்."

"என்ன மரியாதைக் காட்டவில்லை நான்?"

"இந்த நிலை மரியாதைக்கு அறிகுறியா!"

"தேவி! நான்..."

"ஊஹூம். தவறு, தவறு" என்று சிரித்தாள் அவள்.

"காஞ்சனா!"

"அதுதான் சரி" என்றாள் அவள்.

"எது?"

"அழைத்த முறை."

அவன் புரிந்துகொண்டான். புரிந்தும் விழித்தான். "என்ன விழிக்கிறீர்கள்? இன்னும் புரியவில்லையா? கண்ணில்லையா உங்களுக்கு?"

"கண்கள் இருக்கின்றன. ஆனால் பயனில்லை."

"ஏன்?"

"உன்னைக் காண இந்த இரு கண்கள் போதா."

"நம் இருவர் கண்களும் பயன் அற்றவை" என்றாள் அவள்.

அவள் சொன்னதன் பொருள் வேறு; ஆனால் கிடைத்த பொருள் வேறு. ஏனென்றால் அத்தனை விளக்கொளியிருந்தும், குடிசைக் கதவின் மூலம் ஓசைப்படாமல் உள்ளே நுழைந்து கதவை மெள்ளச் சாத்திவிட்டு அதன் குறுக்கே உருவிய வாளும் கையுமாக நின்றுகொண்ட ஓர் உருவத்தை அந்த இருவருமே கவனிக்கவில்லை.



அத்தியாயம் 16

# அரபு நாட்டு அமீர்

**கா**தலின் பிணைப்பிலும் உணர்ச்சி வெள்ளத்திலும் சிக்குண்டு பூலோகத்தை அறவே மறந்து சொர்க்கலோகத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்த கடாரத்துக் கட்டழகியும், பல்லவ குல இளவலும் குடிசைக் கதவைத் திறந்து கொண்டு மனிதனொருவன் உள்ளே நுழைந்து கதவை மூடி உருவிய வாளும் கையுமாக நின்றதை அணுவளவும் கவனிக்காமல் ஒருவரையொருவர் மட்டுமே கவனித்த வண்ணம் நீண்ட நேரம் ஏதும் பேசாமல் நின்றிருந்தார்கள். அந்த நிலையில் காதல் அந்த இருவருக்கிடையே கிளப்பி விட்ட சங்கடத்தை விட அதைக் கவனித்த அந்த மூன்றாம் மனிதன் சங்கடம் பெரிதாயிருக்கவே, அவர்களைக் காதல் வானத்திலிருந்து பாலூர்ப் பெருந்துறை மண்ணுக்கு இழுக்க, அவன் பலமுறை தன் தொண்டையைப் பலமாகக் கனைத்தான். அந்தக் கனைப்பின் ஒலியால் இவ்வுலகத்துக்கு வந்துவிட்டாலும், இருந்த குடிசைக் கோடியை விட்டு மட்டும் நகராமல், குடிசைக் கதவுக்கருகே நின்ற அந்தப் புதுமனிதனை யாரென்று இருவரும் ஏறெடுத்து நோக்கினார்கள். வந்த மனிதனின் கோலமே பெரும் விந்தையாயிருந்ததைக் கவனித்த இளைய பல்லவன், அவன் எந்த நாட்டான் என்பதைக் கூட நிர்ணயிக்க முடியாமல் திணறினான். அவனது கொழுத்த கன்னங்களும், உதடுகளும் சிவந்த கண்களும் அவன் அராபியன் என்பதைத் தெளிவு படுத்தினவென்றாலும், நீளமாக இரு

பக்கத்திலும் வளர்ந்த உதடுகளின் கோடியில் நீளமாக மடிந்த மீசை மட்டும் சீனத்தவர் மீசையைப் போலிருந்தது. மேல் உடையும், கால் உறையும் அராபியர் அணிவதைப் போலிருந்தாலும், அவன் அணிந்திருந்த தொப்பி சதுர மாய்ச் சீனர்களின் தொப்பியைப் போலிருந்தது. சீனர் களைப்போல் அவன் குள்ளமில்லை. நல்ல உயரம், பருமன். அவன் இடைக்கச்சை மேல் நாட்டினர் அணியும் கச்சை யைப் போல் கெட்டித் தோலால் செய்யப்பட்டிருந்ததன்றி, அந்தக் கச்சையில் அவன் கையில் பிடித்திருந்த வாள் தொங்குவதற்கு அமைக்கப்பட்டிருந்த இடத்தைத் தவிர இன்னும் இரு குறுவாள்களைச் செருகிக் கொள்ளவும் இடமிருந்தது. பாதி சீனர் உடையிலும், பாதி அராபியர் உடையுமாகக் கலந்து அணிந்திருந்த அந்த மனிதனைச் சில வினாடிகள் ஆராய்ந்த இளைய பல்லவன், "யார் நீ? இங்கு எதற்கு வந்தாய்?" என்று வினவினான். அவன் கேள்வி யைத் தொடுத்த அந்த சில வினாடிகளில் காஞ்சனாதேவி சரேலெனப் பின்னுக்கு அடைந்து குடிசைக் கோடியில் சாத்தியிருந்த தனது வாளை எடுத்துக் கொண்டாள். அதைக் கண்ட அந்த மனிதன் பெரிதாக நகைத்தான்.

அந்த நகைப்பினால் கோபத்தின் வசப்பட்ட காஞ்சனாதேவி, "எதற்காக நகைக்கிறாய்?" என்று சீறினாள்.

"பெண்ணே! நீ வாளை எடுத்ததைக் கண்டு சிரித்தேன்" என்று அவன் கூறி மறுபடியும் ராக்ஷஸத் தனமாகப் பெரிதாக நகைத்தான்.

"உன் கை வாள் என் வாளைவிடப் பலமுள்ளதென்று நினைக்கிறாயா?" என்று அவள் வினவினாள் ஆத்திரத் துடன்.

"பலமுள்ளதுதான் பெண்ணே! ஆனால் அதற்காக நகைக்கவில்லை. உன்னையும் இந்தச் சிறுவனையும் கொல்ல நான் வாளைத் தூக்கிக் கொண்டு அங்கு வரத் தேவையில்லை. வந்து போராடவும் அவசியமில்லை.

நீங்கள் இதைவிட இன்னும் பத்து மடங்கு அதிகத் தூரத்தி லிருந்தாலும் என் கச்சையிலுள்ள இந்தக் குறுவாள்களை எடுத்தெறிந்தே மாய்த்துவிடுவேன்" என்று கூறித் தன் இடையிலிருந்த இரு குறுவாள்களையும் கையால் தட்டிக் காட்டினான்.

வந்தவனுடைய போர்த்திறமையைத் தீர்மானிக்கும் மனநிலையை அந்தச் சமயத்தில் பெற்றிராத இளைய பல்லவன் மட்டும் அதைப் பற்றிய ஆராய்ச்சியில் நுழை யாமல், "யார் நீ? இங்கு எதற்கு வந்தாய்?" என்று தன் முதல் கேள்வியை இரண்டாம் தரம் மிகப் பலத்துடனும் கண்டிப்புப் பெரிதும் தொனித்தக் குரலிலும் திருப்பினான்.

அந்தக் குரலில் இருந்த கண்டிப்பும், அதிகாரமும் வந்தவனுக்குச் சற்று எச்சரிக்கையை அளித்திருக்க வேண்டும். அதைக் கேட்டதும் அவன் முகத்திலிருந்து சிரிப்பு மறைந்து சிறிது குழப்பம் அதில் படரத் துவங்கியது. அந்தக் குழப்பம் குரலிலும் ஒலிக்கச் சொன்னான் அவன், "உண்மையில் அந்தக் கேள்வியை நான்தான் கேட்டிருக்க வேண்டும்" என்று.

கருணாகர பல்லவன் முகத்தில் வியப்பின் சாயை லேசாகப் படர்ந்தது. தானிருந்த குடிசைக்குள் ஓசைப் படாமல் நுழைந்ததன்றி, தன்னையே கேள்வி கேட்கவும் முனைந்த அந்த மனிதனை நன்றாக ஊன்றிக் கவனித் தான். அந்தப் பார்வையின் பொருளைப் புரிந்துகொண்ட அந்த மனிதன், "உங்கள் எண்ணம் புரிகிறது. நான் எப்படி உங்களைக் கேள்வி கேட்கலாம் என்று நினைக்கிறீர்கள். ஆனால் கேள்வி கேட்க எனக்கு உரிமை இருக்கிறது" என்று மீண்டும் கூறினான்.

கருணாகர பல்லவனின் ஆச்சரியம் அதிகமாகவே, "உரிமை இருக்கிறதா?" என்று அந்த ஆச்சரியம் குரலிலும் பிரதிபலிக்கக் கேட்டான்.

"ஆம். உரிமையிருக்கிறது" என்று திட்டமாகச் சொன்னான் அந்த மனிதன்.

"என்ன உரிமை?" அதுவரை மௌனமாயிருந்த காஞ்சனா தேவியும் ஒரு கேள்வியை வீசினாள்.

"சொந்தக்காரனுக்குள்ள உரிமை" என்றான் அந்த மனிதன்.

"அப்படியானால்..." என்று இழுத்தாள் காஞ்சனா தேவி.

"இந்தக் குடிசை என்னுடையது" என்று வாசகத்தை அந்த மனிதன் முடித்ததும், கருணாகர பல்லவனும் காஞ்சனாதேவியும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். பிறகு அந்த மனிதனை நோக்கிய கருணாகர பல்லவன், "நாங்கள் இங்கு பிற்பகலிலே வந்துவிட்டோம்" என்று சுட்டிக் காட்டினான்.

"மிகவும் சந்தோஷம்" என்று அந்த மனிதன் சொன்ன பதிலில் ஏளனமிருந்ததைக் கருணாகர பல்லவன் கவனிக்கத் தவறவில்லை. அதனால் சற்றுச் சீற்றத்துடன் கேட்டான், "அப்பொழுது நீங்கள் இங்கு இல்லையே" என்று.

"நான் இல்லாதது உங்களுக்குச் சௌகரியமாகப் போய்விட்டதென்பது புரிகிறது" என்றான் அந்த மனிதன்.

காஞ்சனாதேவியின் முகம் வெட்கத்தால் குப்பென்று சிவந்தது. தானும் இளைய பல்லவனும் இருந்த நிலையையே அவன் குறிப்பிடுகிறானென்பதைப் புரிந்துகொண்டதால் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டாள் அவள். இளைய பல்லவனுக்கும் அந்த மனிதன் பேச்சு சற்றுச் சங்கடத்தையே அளித்ததென்றாலும் அவன் அதைச் சமாளித்துக் கொண்டு, "நீங்கள் நினைப்பது தவறு. இந்தக் குடிசைக்கு நாங்களாக வரவில்லை" என்று தெரிவித்தான்.

"வேறு யார் அழைத்து வந்தார்களோ?"

"அதைச் சொல்ல முடியாத நிலையில் இருக்கிறேன்."

"சொன்னால் என்ன நடந்துவிடும்?"

"ஆபத்து நிகழலாம்."

"யாருக்கு?"

"என் நண்பருக்கு!"

இதற்கும் பதில் சொல்ல யோசித்தான் இளைய பல்லவன். 'இந்த நாட்டு அதிபர்களால் ஆபத்து என்று சொல்லலாமா? ஒருவேளை இவன் கலிங்க வீரர்களிடம் காட்டிக் கொடுத்துவிட்டால் என்ன செய்வது?' என்று சில விநாடிகள் சிந்தித்தான்.

அவன் சிந்தனையில் ஓடிய எண்ணங்களைப் புரிந்து கொண்ட அந்த மனிதன், "நீங்கள் யாரோ எனக்குத் தெரியாது. உங்களை நான் இங்கு எதிர்பார்க்கவில்லை. வேறு ஒரு நண்பரை எதிர்பார்த்து வந்தேன். அவருக்குப் பதில் நீங்கள் இங்கு இருக்கிறீர்கள். உங்களை அழைத்து வந்து என் குடிசையில் தங்க வைத்தவர் பெயரையும் சொல்ல மறுக்கிறீர்கள். அது கிடக்கட்டும். உங்கள் பெயரையாவது சொல்லலாமா?" என்று வினவினான்.

"என் பெயரையும் சொல்வதற்கில்லை" என்று அறிவித்தான் இளையபல்லவன்.

"அந்தப் பெண்ணின் பெயர்?" என்று கேட்டுச் சற்றுப் பதிலுக்கு நிதானித்த அந்த விந்தை மனிதன், "சரி, சரி, சொல்லமாட்டீர்கள். அதுவும் மர்மம். ஆனால் அந்த மர்மத்துக்குக் காரணம் தெரியும்" என்று கூறி இடி இடியென நகைத்தான்.

அந்த நகைப்பைக் கண்டு வெகுண்ட இளைய பல்லவன், "என்ன காரணத்தைத் தெரிந்துகொண்டு விட்டீர்?" என்று கேட்டான் குரலில் உஷ்ணம் பூரணமாகத் தொனிக்க.

"காரணம் எனக்கும் தெரியும், உங்களுக்கும் தெரியும். ஆனால் இது ஒன்றும் புதிதல்ல" என்று சொல்லி மீண்டும் நகைத்தான்.

"எது புதிதல்ல?" இளையபல்லவன் குரலில் உக்கிரம் உச்சியில் நின்றது.

"ரகசியக் காதல்" என்ற அந்த மனிதன் தன் பெரு உதடுகளில் புன்சிரிப்பைத் தவழவிட்டான்.

"யோசித்துப் பேசு."

"இதில் யோசிப்பதற்கு என்ன இருக்கிறது?"

யோசிப்பதற்கு ஒன்றுமில்லையென்பது இளைய பல்லவனுக்குப் புரிந்தேயிருந்தது. தாங்கள் இருந்த நிலையைப் பார்த்த எவரும் அந்தப் புது மனிதன் செய்த கற்பனையைத் தவிர வேறு கற்பனையில் ஈடுபட முடியா தென்பதைப் புரிந்துகொண்டான். அப்படி விஷயம் தெளிவாகப் புரியவே, சரியாகப் பதில் சொல்ல முடியாத காரணத்தால் இளையபல்லவன் இதய்த்தில் கோபமே பெரிதாக எழுந்து நின்றது. அந்தக் கோபத்தின் விளை வாகச் சரேலெனக் காஞ்சனாதேவியின் கையிலிருந்த கத்தியைத் தான் பிடுங்கிக்கொண்டு, "டேய், வாயை அடக்கிப் பேசு. இல்லையேல் வா அருகில்" என்று சொல்லிக்கொண்டு உருவிய வாளை நீட்டிக் கொண்டு சற்று முன்னேறினான்.

அந்த மனிதன் குடிசையின் கதவைவிட்டுச் சற்று அப்புறம் நகர்ந்தான். ஆனால் கையிலிருந்த வாளை அவன் நீட்டவில்லை. அதை இடது கைக்கு மாற்றிக்கொண்டு வலது கையைக் கச்சையிலிருந்த குறுவாளுக்காகக் கொண்டு சென்றான். அவனது சிவந்த பயங்கரக் கண்கள் சற்றே குறுகின. முகத்திலும் கண்களில் உதயமான பயங்கரச் சாயை படர்ந்தது. இதையெல்லாம் வினாடி நேரத்தில் கவனித்த இளையபல்லவன் புலிக் கண்கள் தனக்குச் சமதையான எதிரியைக் கண்டுவிட்ட சந்தோஷத்

தால் பளிச்சிட்டன. இந்த நிலை ஒரு வினாடி நீடித் திருந்தால், என்ன விளைவு ஏற்பட்டிருக்குமென்று சொல்ல முடியாது. அந்த விளைவைத் தடுக்கத் திடீரெனக் குடிசைக்கு வெளியே குதிரைகள் வந்து நிற்கும் காலடிகள் கேட்டன. "இந்தா, இந்தக் குதிரையைப் பிடித்து அந்த மரத்தில் கட்டு" என்று அதிகாரச் சொற்கள் குடிசையின் பயங்கர அமைதியை ஊடுருவிச் சென்றன. அடுத்த வினாடி குடிசைக் கதவைத் திறந்துகொண்டு உள்ளே நுழைந்த அநபாயன் அங்கிருந்த நிலையைக் கண்டு அப்படியே ஸ்தம்பித்து நின்றான்.

அநபாயனின் திடீர்ப் பிரவேசம் அந்தக் குடிசையி லிருந்த மூவரிடையும் பெருத்த மாறுதலை விளைவித்தது. இளையபல்லவன் வாளைச் சிறிது தாழ்த்தினான். வெட்கத் தால் வேறுபுறம் முகத்தைத் திருப்பிக்கொண்டு நின்ற காஞ்சனாதேவி சரேலெனக் குடிசையின் கதவை நோக்கித் திரும்பி அநபாயனை ஏறெடுத்து நோக்கினாள். அவளு டைய அந்தப் பார்வையில் பெரும் சாந்தியிருந்தது. ஏதோ பெரும் அபாயம் தடுக்கப்பட்டது என்பதற்கு அறிகுறியான அமைதியும் அதில் நிலவிக் கிடந்தது. ஆனால் குடிசைச் சொந்தக்காரன் போக்கு மிக விநோதமாயிருந்தது. அநபாய னைக் கண்டதும் சட்டென்று அவன் பெரிய வாள் கச்சையை நோக்கிப் பறந்து அதில் இணைந்தது. குறு வாளை எடுக்கப் போன வலதுகை துவண்டு தொங்கியது. பெட்டிப் பாம்பைப்போல் அடங்கிய அவன் பிரும் மாண்ட சரீரம் அநபாயனை நோக்கித் தலையையும் தாழ்த்தியது.

அநபாயன் அந்தப் பெரிய சரீரத்தின் முதுகில் செல்ல மாகத் தட்டிக் கொடுத்தான். பிறகு இளைய பல்லவனை நோக்கிவிட்டு அந்த மனிதனிடம் திரும்பி, "அமீர்! இதென்ன சண்டைக்கு ஆயத்தம்?" என்று வினவினான்.

அமீர் தன் சினக் குல்லாய் தரையில் தாழ அநபாயனை நோக்கி வணங்கிவிட்டுச் சொன்னான், "என் குடிசையில் தங்களை எதிர்பார்த்து வந்தேன். ஆனால் இவர்களிருந் தார்கள்" என்று.

"உனக்கு இவர்கள் அறிமுகமில்லை. இருந்தாலென்ன? யாரென்று கேட்டுத் தெரிந்து கொள்வதுதானே?" என்றான் அநபாயன்.

"வந்தவுடனே கேட்க முடியவில்லை" என்று பதில் சொன்ன அமீரின் உதடுகளில் நமட்டு விஷமம் தெரிந்தது.

"ஏன்?" என்று வினவிய அநபாயன் அமீரைவிட்டு இளைய பல்லவனையும் காஞ்சனா தேவியையும் நோக்கி னான். இளையபல்லவன் முகத்திலிருந்த சங்கடச் சாயை யும், காஞ்சனா தேவியின் முகத்தில் திடீரென மண்டி விட்ட குழப்பமும், குழப்பத்தைத் தொடர்ந்து சிவந்த கன்னங்களும் ஓரளவு கதையைச் சொல்லவே அநபாயன் முகத்தில் ஓரளவு வியப்பே விகசித்தது. வங்கக் கடலுக்கு அப்புறத்திலும் இப்புறத்திலும் இருக்கும் இரு நாடுகளைச் சேர்ந்த இருவர் திடீரெனச் சந்தித்து மூன்று நாள்களுக்குள் காதல் வலையில் கட்டுப்படுவது இயற்கையின் வன்மை யைச் சுட்டிக் காட்டுகிறதா, விதியின் வலிமையை வலி யுறுத்துகிறதா என்பதை நினைத்துப் பார்த்து விடை காணாத அநபாயன் இதழ்களில் மெல்லப் புன்முறுவல் தவழ்ந்தது. அதைத் தொடர்ந்து, "அப்படியா!" என்ற சொல்லும் வெளிவந்தது.

அந்த 'அப்படியா'வில் ஆயிரம் அர்த்தங்கள் தொனிப் பதை உணர்ந்த இளைய பல்லவனின் குழப்பமும் காஞ்சனா தேவியின் சங்கடமும் அதிகரித்து விட்டதையும், அவர்கள் கண்கள் நிலத்தில் தாழ்ந்து விட்டதையும் கண்ட அமீர், "ஆம்! அதனால்தான் வந்தவுடன் விசாரிக்க முடிய வில்லை. விசாரித்தபோது இவர்கள் பதிலும் சரியாகச்

சொல்லவில்லை. இவர்கள் பெயர்களையும் சொல்ல மறுத் தார்கள். இவர்களை அழைத்து வந்தவரின் பெயரையும் சொல்ல மறுத்தார்கள். போதாக்குறைக்கு அந்தப் பெண்ணும் வாளை எடுத்தாள். பிறகு அந்த வாளை அவர் பிடுங்கிக் கொண்டார். நானும்..."

"குறுவாளிடம் கையைக் கொண்டு போயிருப்பாய்" என்று அமீரின் வாசகத்தை அநபாயன் முடித்ததைக் கண்ட இளையபல்லவன், வியப்பின் எல்லையை எய்தி னான். அநபாயன் மேற்கொண்டு சொன்னது அந்த வியப்பை ஆயிரம் மடங்கு அதிகரிக்கவே செய்தது. "நல்ல வேளை அமீர்! குறுவாளை எடுக்காதிருந்தாயே! அதைக் கண்டாலே எனக்குப் பயம்" என்று கூறிய அநபாயன் மறுபடியும் அமீரின் முதுகில் தட்டிக் கொடுத்தான்.

அநபாயன் போக்கு எதுவும் பிடிபடவில்லை இளைய பல்லவனுக்கு. 'யார் இந்த அமீர்? இவன் எப்படிப் பரிச்சயம் அநபாயருக்கு. குறுவாளை எடுத்து வீசுவது பற்றிச் சற்றுமுன்பு அமீர் சொன்னதை, அநபாயரும் ஊர்ஜிதப்படுத்துகிறாரே,' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்ட இளையபல்லவன், அந்தக் கேள்விகளை நேரா கவே கேட்டுவிட இஷ்டப்பட்டு அநபாயனை ஏறெடுத்து நோக்கினான்.

இளையபல்லவன் மனத்திலோடிய எண்ணங்களை முகமே பிரதிபலித்திருக்க வேண்டும். அவையனைத்தையும் உள்ளங்கை நெல்லிக்கனி போல் அறிந்துகொண்ட அநபாயன், இளையபல்லவன் வாய் கேள்விகளைக் கேட்கு முன்பே பதில் கூறினான்: "கருணாகரா! அமீர் எனக்கு நீண்ட நாள் பழக்கமுள்ளவன். அவனை விடத் திறமை யும் எந்த அபாயத்தையும் சமாளிப்பதில் வல்லமைச்சாலியு மான ஒருவனைக் கண்டுபிடிப்பது அசாத்தியம். கப்ப லோட்டுவதிலும், கப்பல் போரிலும் இணையற்ற சாமர்த்திய முள்ளவன். இந்தக் கீழ்க்கடல் பிராந்தியம் முழுவதையும்

நன்கறிந்தவன். அரபு நாட்டிலிருந்து சீனநாடு வரை உள்ள துறைமுகங்கள் அனைத்தும் தெரியும் இவனுக்கு. நூறு அடிக்கு அப்பாலு முள்ளவர்களைக் குறுவாள் எறிந்து கொல்லுவதில் நிகரற்றவன். பார்ப்பதற்கு பளுவாயிருக்கும் இந்தத் தேகத்தைச் சண்டை சமயத்தில் பார்த்தால் ஆச்சரியப்படுவாய்; வாளிப்பான சரீரத்தைவிடச் சுறுசுறுப் பாய் வேலை செய்யும். இந்தப் பாலூர்ப் பெருந்துறையி லிருந்து நம்மைக் காப்பாற்ற வல்லவன் அமீர் ஒருவன் தான். அமீரிடம்தான் நம்மை ஒப்படைத்திருக்கிறேன்" என்று விளக்கினான் அநபாயன். "ஒன்று மறந்துவிட்டேன். அமீரின் தயவில்லாவிட்டால் தூதுப் புறா மூலம் நான் குணவர்மனுக்குச் செய்தியனுப்பியிருக்க முடியாது. புறா அமீருக்குச் சொந்தம்" என்று கூறினான் சோழர்குல இளவல்.

அமீரின் இந்தப் பிரதாப புராணத்தைக் கேட்ட இளையபல்லவன் சில விநாடிகள் பதிலேதும் சொல்ல வில்லை. பிறகு கேட்டான்: "நம்மைத் தப்புவிக்கும் பொறுப்பைப் பிற நாட்டார் ஒருவரிடம் ஒப்படைத்தி ருப்பதாகக் கூறினீர்களே, அவர் இவர்தானா?" என்று.

"ஆம்! அமீர் அரபு நாட்டைச் சேர்ந்தவன். சீன நாட்டில் அடிமையாக விற்கப்பட்டான். அங்கிருந்ததால் அந்த நாட்டுப் பழக்க வழக்கங்கள் கலந்துவிட்டன" என்று விளக்கிய அநபாயன், "அது மட்டுமல்ல கருணாகரா, யாரும் தப்பமுடியாத சீன அடிமைத்தளத்திலிருந்து தந்தி ரத்தால் தப்பி வந்திருக்கிறான். இப்பொழுதுகூட அமீரைப் பிடித்துக் கொடுப்பவர்களுக்குச் சீனாவில் ஆயிரம் பொற் காசுகள் பரிசு கிடைக்கும். ஆனால் அமீரைப் பிடிப்பது முடியாத காரியம்" என்று பெருமையுடன் சொல்லவும் செய்தான்.

அத்துடன் அமீரின் கதையை முடிக்க இஷ்டப்பட்ட அநபாயன், "கருணாகரா! அமீரின் கதையை முழுவதும்

சொன்னால் கேட்கத் தெவிட்டாது. இன்னொரு நாள் சொல்கிறேன். இப்பொழுது நாம் கவனிக்க வேண்டிய அலுவல் வேறு" என்று கூறிவிட்டு, "என்ன அமீர்! நரங்கள் தப்பிச் செல்ல வழி ஏதாவது கண்டுபிடித்தாயா?" என்று அமீரை நோக்கி வினவினான்.

"கண்டு பிடிக்காமல் வருவேனா?" என்றான் அமீர்.

"எந்த வழியில் தப்பலாம்?" என்று அநபாயன் விசாரித்தான்.

"நிலவழி முடியாது. பலமாகக் காக்கப்பட்டிருக்கிறது. நீர் வழிதான் சௌகரியம்."

"அதற்குத் திட்டமிருக்கிறதா?"

"இருக்கிறது."

"என்ன திட்டம்?"

"வந்தால் காட்டுகிறேன்."

"சரி, புறப்படுவோம்."

அநபாயனின் இந்தக் கட்டளையைத் தொடர்ந்து குடிசையிலிருந்தவர்கள் வெளியேறினார்கள். அமீர் அழைத்துச் சென்ற இடம் மட்டுமல்ல, அவன் விவரித்த திட்டமும் மிகப் பயங்கரமாக இருந்தது. ஆனால் அதை விட்டால் தப்ப வேறு வழியுமில்லையென்பதை அநபாயன் மட்டுமின்றி மற்றவர்களும் புரிந்துகொண்டார்கள்.

அத்தியாயம் 17

# புதிதாக வந்தவன்

**பா**லூர்ப் பெருந்துறையின் நிலவழிகள் பலமாகக் காக்கப்பட்டிருந்ததால் நீர்வழி ஒன்று மூலமே அநபாயச் சோழனும் அவன் நண்பர்களும் தப்ப முடியும் என்பதை எடுத்துச் சொன்னதன்றி, அவர்கள் தப்ப வேண்டிய முறை யையும் நிர்ணயித்துவிட்டதாகக் கூறிய அரபுநாட்டு அமீர், அவர்களைக் கோதாவரி ஆற்றங்கரைக் குடிசை யிலிருந்து அழைத்துச் செல்லுமுன்பு முன்னேற்பாடுகளை மிகுந்த எச்சரிக்கையுடன் செய்துகொண்டான். "சரி புறப் படுவோம்" என்று அநபாயன் கட்டளையிட்ட பின்பும் உடனே அதற்கு உடன்படாத அமீர், "சற்றுத் தாமதிக்க வேண்டும்" என்று கூறிவிட்டுக் குடிசைக்கு வெளியே சென்று சில விநாடிகளில் மூன்று பெரும் கறுப்புக் கம்பளங்களுடன் திரும்பி வந்து, "இதை ஆளுக்கொன்று எடுத்துத் தலையை முக்காடிட்டுக் கூடியவரை உடம்பை யும் மறைத்துக் கொள்ளுங்கள்" என்று கூறினான். அவன் சொன்னபடி அவர்கள் போர்த்திக் கொண்டதும் அநபாய னைப் பார்த்த அமீர், "அந்தப் பழைய நடை தங்களுக்கு ஏற்கெனவே பழக்கமானது. நான் சொல்லித்தர வேண்டிய தில்லை" என்று கூறிப் புன்முறுவல் செய்து, மற்ற இருவரை யும் நோக்கி, "இதோ பாருங்கள்! எனக்குப் பின்னால் நீங்களிருவரும் முதுகை வளைத்துத் தலை குனிந்து இப்படி அடக்கமாக அரை ஓட்டமும் அரை நடையுமாக வர

வேண்டும்" என்று சொல்லி அவர்கள் வரவேண்டிய முறையை விளக்க, தன் பெரும் சரீரத்தை வளைத்துத் தலையைக் குனிந்து கால்களைக் குறுக்கிக் குடிசையில் அப்படியும் இப்படியும் இரண்டு மூன்று முறைகள் ஓடியும் காட்டினான்.

அத்தனை பெரிய சரீரத்தைத் தூக்கிக்கொண்டு அமீர் ஓடியதே பெரும் விந்தையாயிருந்தது கருணாகர பல்லவனுக்கு. அப்படியிருக்க, அவன் தங்களையும் அப்படி ஓட வேண்டுமென்று வற்புறுத்தியது விந்தையின் எல்லையைத் தொடவே, கருணாகர பல்லவன் கேட்டான். "தங்கள் பின்னால் இப்படி ஓடுவதில் பயன் என்ன இருக்கிறது?" என்று.

அமீரின் கண்கள் மிகவும் விஷமத்துடன் கருணாகர பல்லவனை ஏறெடுத்து நோக்கியதன்றி உதடுகளும் விஷமத் துடனேயே சொற்களை உதிர்த்தன. "உயிர் காப்பாற்றப் படுவது போதிய பயன் அல்லவா?" என்று கேட்டான்.

அமீர் குடிசைக்கு வந்தது முதல் பேசிய பேச்சைக் கேட்டு வியப்பெய்தியிருந்த இளைய பல்லவனுக்கு அவன் கடைசியாகப் பேசிய பேச்சைக் கேட்டபோது வியப்புப் பன்மடங்கு அதிகமாயிற்று. காஞ்சனாதேவியின் காதல் வலையிலிருந்த சமயத்தில் சரேலெனக் கவனிக்கத் தவறிய பல விஷயங்களை அவன் கண்களும் செவிகளும் அதனின்று விடுபட்டதும் ஊன்றிக் கவனிக்கவே செய்தன. முதன் முதலாக இளைய பல்லவன் கவனித்தது அந்த அரபு நாட்டான் பேசிய தமிழ் மொழியின் தெளிவுதான். தமிழனாகப் பிறந்து தமிழ் நாட்டிலேயே வருடக் கணக்கில் வளர்ந்தவன் எத்தனை தூய்மையாகவும் சரளமாகவும் பேசுவானோ அத்தனைத் தூய்மையாகவும் சர்வ சகஜமா கவும் தமிழ் மொழியை அவன் கையாளுவதையும், அந்த மொழியின் நெளிவு சுளிவுகளைத் தெரிந்து விஷமத்தையும் கலந்து அவன் சொற்களை உதிர்ப்பதையும் கண்டு வியப்

பெய்திய இளையபல்லவன், "நீங்கள் தமிழகத்தில் இருந்திருக்கிறீர்களா?" என்று ஒரு கேள்வியைக் கேட்டு வைத்தான்.

"இல்லை, இருந்ததில்லை. ஏன் கேட்கிறீர்கள்?" என்று ஆச்சரியத்துடன் வினவிய அமீர், அந்த ஆச்சரியம் கண்களிலும் மலர ஒருமுறை இளைய பல்லவனை ஏறெடுத்து நோக்கினான்.

இதற்குக் கருணாகர பல்லவன் பதில் சொல்லுமுன்பு இடையே புகுந்து அநபாயனே பதில் சொன்னான், "அமீர்! உன் தமிழின் தூய்மை கருணாகரனைப் பிரமிக்க வைத்திருக்கிறது. வேறொன்றுமில்லை" என்று.

அதுவரை கருணாகர பல்லவன் பெயரைக்கூடக் கேட்காத அமீர், "இவர் பெயர் கருணாகரரா?" என்று வினவினான்.

"ஆமாம் அமீர்! இவர் எங்கள் நாட்டின் பெரும் அரச குலமொன்றில் பிறந்தவர்."

கருணாகர பல்லவன் அரசகுலத்தைச் சேர்ந்தவன் என்பதைக் கேட்டதும், சீனத்துக் குல்லாயுடன் தலையை ஒருமுறை தாழ்த்தி வணங்கிய அமீர், "வணக்கம் அரசே" என்று மிகப் பணிவுடன் சொற்களை உதிர்த்தான்.

"இவர் அரசரல்ல அமீர்" என்று திருத்திய அநபாயன் மெள்ளப் புன்முறுவல் செய்தான்.

அமீர் முகத்தில் குழப்பம் விரிந்தது. "அப்படியானால் யாரிவர்?"

"எங்கள் நாட்டில் பல்லவ குலம் என்றோர் அரச குலம் இருக்கிறது."

"உம்."

"அந்தக் குலத்து அரசரின் இளையவர் இவர்."

"இளவரசரா?"

"ஆமாம். அதுமட்டுமல்ல."

இதைக் கேட்டதும் ஏதோ வினாவை வீசுவதற்கு அறிகுறியாக மேலே எழுந்தன அமீரின் புருவங்கள். கண்களும் அநபாயன் முகத்தை நோக்கிக் கேள்விக் குறியை வீசின. அவன் கண்களில் கண்ட கேள்விகளைப் புரிந்துகொண்ட அநபாயன், "அமீர்! கருணாகர பல்லவர் தமிழகத்தின் பெரும் படைத்தலைவர்களில் ஒருவர். போரைவிட இவர் விரும்புவது எதுவுமில்லை. அப்பேர்ப் பட்டவர் சமாதானத் தூதராகப் பாலூர் வந்தார். இவர் வந்த வேளை கடைசியில் போர்தான் விளையும் போலி ருக்கிறது" என்று சொல்லி இதழ்களில் புன்முறுவலொன் றைப் படர விட்டதன்றி, "அமீர்! வந்தவுடன் இவர்களை உனக்கு நான் அறிமுகப்படுத்தி வைத்திருக்க வேண்டும். ஆனால் குடிசைக்குள் நுழைந்தபோது நிலைமை வேறு விதமாயிருந்ததால் அந்தப் பணியைச் செய்ய முடிய வில்லை. இப்பொழுது தெரிந்துகொள். கருணாகர பல்லவர் தமிழகத்தில் இணையற்ற படைத்தலைவர் மட்டு மல்ல. என் உயிர் நண்பருங்கூட. அதோ நிற்கும் அந்த எழிலரசி கடாரத்தின் இளவரசி. உன்னிடம் ஒப்படைத்தி ருக்கிறேனே ஒருவர், அவருடைய மகள்" என்று தெளிவாக அறிமுகப்படுத்தவும் செய்தான்.

அநபாயன் இப்படி விளக்கிச் சொல்லியதால் ஓரளவு தெளிவடைந்த அமீர், அந்த இருவருக்கும் மீண்டும் தலை தாழ்த்தி, "அப்படியா! மிக்க மகிழ்ச்சி" என்று கூறியதோடு நில்லாமல், "கடாரத்து இளவரசி முன்பே தமிழ்நாடு வந்திருக்கிறார்களா?" என்றும் வினவினான்.

"இல்லை இல்லை. இன்னும் தமிழ்நாட்டில் அடி யெடுத்து வைக்கவில்லை. இனிமேல்தான் போகவேண்டும், அதுவும் உன் தயவால்" என்றான் அநபாயன்.

"தயவு என்று தாங்கள் சொல்வது தவறு. அடிமையைக் கட்டளை இடுவதுதான் முறை" என்று பணிவுடன் சொன்ன அமீர், "நான் தவறாக நினைத்துவிட்டேன் அநபாயரே! இவர்களுக்கு நீண்டநாள் பரிச்சயமிருக்க வேண்டுமென்று நினைத்தேன். அதனால்தான் இளவரசி முன்பே தமிழகம் வந்திருக்கிறார்களா என்று கேட்டேன்" என்று சமாதானம் கூறி விஷமப் புன்னகை செய்த அமீரைச் சுட்டுவிடுவன போல் நோக்கின கருணாகர பல்லவனின் ஈட்டி விழிகள். அவன் சொற்களைக் கேட்ட காஞ்சனாதேவியின் அஞ்சன விழிகள் நிலத்தை நோக்கின. அந்த நிலையை நீண்ட நேரம் நிலைக்க விடுவதால் ஏற்படக்கூடிய சங்கடத்தைப் புரிந்துகொண்ட அநபாயன் அமீரைச் சரேலென மறித்து, "அமீர்! காஞ்சனாதேவியால் கருணாகரர் கலிங்கத்தின் காவலரிடமிருந்து காக்கப் பட்டார். ஆகையால் நன்றியின் விளைவாக இருவருக்கும் நட்பு புலப்பட்டது. தவிர, இருவரும் கலிங்கத்தின் மன்னர்களான அனந்தவர்மன், பீமன் இவர் பகைக்கு இலக்காகி ஆபத்தில் சிக்கியவர்கள். ஆபத்து நட்பின் நெருக்கத்தை ஏற்படுத்துகிறது இயல்பல்லவா?" என விளக்கினான்.

இந்த விளக்கத்திலும் சரி, அதற்கு முன்பு அமீருடன் நடந்த சம்பாஷணையிலும் சரி, அநபாயன் தன்னை மிகுந்த மரியாதையுடன், 'கருணாகரர்' என்றும், 'இளைய பல்லவர்' என்றும், 'இணையற்ற படைத்தலைவர்' என்றும் அழைத்ததைக் கவனித்து அதை ரசிக்க முடியாத இளைய பல்லவன், மீண்டும் சம்பாஷணை தன்னையும் காஞ்சனா தேவியையும் சுற்ற முயல்வதைக் கண்டு அதைத் தடுக்கும் நோக்கத்துடன், "அநபாயர் இந்த அடிமைக்கு அளவுக்கு மீறிய மரியாதையைக் காட்டுவது அழகல்ல" என்று சற்றுக் கோபத்துடன் சொன்னான். அந்தக் கோபத்தின் காரணம் அநபாயனுக்குப் புரிந்திருந்ததால் அவன் சற்று இரைந்தே

நகைத்துவிட்டுச் சொன்னான், “கருணாகரா! உன்னை மரியாதையாக அழைக்க வேண்டுமென்ற காரணத்தால் அந்த மரியாதையைக் காட்ட வில்லைதான். புதிதாக அமீ ரிடம் அறிமுகப்படுத்தி வைக்க வேண்டிய அவசியம் நேர்ந்ததால் உன் குலப் பெயர், பதவி முதலியவற்றைக் குறிப்பிட வேண்டியதாயிற்று” என்று.

இதற்கு ஏதோ பதில் சொல்ல வாயெடுத்த கருணாகர பல்லவனைத் தன் கையை உயர்த்தி மீண்டும் தடை செய்த அநபாயன், “இப்பொழுது நீங்களிருவரும் அறிமுகமாகி விட்டதால் என் மனப்பளு பெரிதும் இறங்கிவிட்டது. நம்மை அமீர் கண்டிப்பாகத் தமிழகம் அனுப்பிவிடுவான். அமீரின் தூய தமிழைக் கண்டு நீ வியந்ததைப் புரிந்து கொண்டேன் கருணாகரா! ஆனால் அமீரை நன்கு அறிந்தவர்களுக்கு அதில் வியப்பு ஏதுமிருக்காது. அமீர் ஒரு விந்தை மனிதன். அவனுக்குப் பல மொழிகள் தெரியும். சீனமொழி தெரியும். சொர்ண பூமியையும் அதை அடுத்த தீவுகளிலும் வழங்கும் மொழிகள் பலவும் தெரியும். பாதி வடமொழி பாதி தென் மொழியும் கலந்த கலிங்கத்தின் புதுமொழியும் தெரியும். அரபு மொழி தாய் மொழி. ஆனால் யவனர் மொழியைத் திறமையுடன் பேசுவான். ஏற்கெனவே சொன்னேன் உனக்கு, அரபு நாட்டிலிருந்து சீனா வரையிலுள்ள துறைமுகங்கள் அவனுக்குத் தெரியும் என்று. துறைமுகங்கள் மட்டுமல்ல, ஆங்காங்குள்ள மக்களின் மொழிகளும் தெரியும். மொழிகள் மட்டுமல்ல, ஒவ்வொரு துறைமுகத்திலும் இரண்டொரு அந்தரங்க நண்பர்களுமிருக்கிறார்கள். இந்தப் பாலூர்ப் பெருந்துறை யில் இவன் கையாட்கள் முக்கியமான பல இடங்களில் பரவிக் கிடக்கிறார்கள். ஆகவே இவன் தூய்மையாகத் தமிழ் பேசுவதைப் பற்றி வியப்படையாதே. அது மட்டு மல்ல, அரும்பெரும் காரியங்களை இவன் சாதித்தாலும் வியப்படையாதே. மற்றவர்களுக்கு அசாதாரணமானது

அமீருக்குச் சர்வ சாதாரணம்" என்று கூறியதன்றி அமீரின் முதுகில் மீண்டும் செல்லமாகத் தட்டிக் கொடுத்தான்.

அநபாயன் வார்த்தைகள் கருணாகர பல்லவனுக்கும் காஞ்சனாதேவிக்கும் மென்மேலும் ஆச்சரியத்தையே அளித்தன. அரபு நாட்டான் ஒருவனிடம் அநபாய சோழன் கொண்டுள்ள நம்பிக்கையைக் கண்டு பெரிதும் வியப்பெய்திய அவ்விருவரும் ஒருவரையொருவர் சில விநாடிகள் பார்த்துக்கொண்டனர். ஆனால் அமீரின் கண்கள் அதற்குப் பிறகு யாரையும் பார்க்கும் சக்தியை இழந்தன. அநபாயன் புகழ்ச்சிச் சொற்கள் அவனுக்குப் பெரும் சங்கடத்தையும் குழப்பத்தையும் அளித்திருந்தன. ஒரே ஒருமுறை மட்டும் கண்களை உயரத் தூக்கி அநபாய னைப் பார்த்துவிட்டு மீண்டும் நிலத்தைச் சில விநாடிகள் கவனித்த அமீர், அந்தச் சங்கடத்தைப் போக்கிக் கொள்ளவோ என்னவோ துரிதமாகச் செயலில் இறங்கி, "கருணாகர பல்லவரே! தேவி! நான் முதலில் காட்டியபடி போர்வையை நன்றாக இழுத்துப் போர்த்திக் கொண்டு என் பின்னால் முதுகைக் கூனிப் பாதி ஓட்டமும் நடையு மாக வாருங்கள்" என்று கூறிப் புறப்பட ஆயத்தமானான்.

அமீர் சொன்னபடி எதற்காகக் கூனிக் குறுகி ஓட வேண்டுமென்று புரியாததால் அதை மட்டும் கேட்க முற்பட்ட இளையபல்லவன், "ஏன் அப்படி ஓட வேண்டும்?" என்று வினவினான்.

"அரபு நாட்டு வர்த்தகர்களின் அடிமைகள் ஓடும் முறை அது. நான் முன்னால் செல்ல நீங்கள் கம்பளம் மூடி ஓடி வந்தால் என் அடிமைகளில் மூவர் என்னைப் பின் தொடருவதாக இந்த நகர மக்களும் கலிங்க வீரர்களும் நினைப்பார்கள். தோப்பு முகப்பைத் தாண்டியதும் நீங்கள் அந்த முறையைப் பின்தொடர்ந்தால் போதும். இப் பொழுது சாதாரணமாகவே செல்லலாம்" என்று அமீர் விளக்கிவிட்டுக் குடிசைக் கதவைத் திறந்துகொண்டு

அவர்களை உடன்வர சைகை செய்து வெளியே சென்றான். அவன் கூறியபடியே அநபாயன், கருணாகரன், காஞ்சனாதேவி மூவரும் தலையிலிருந்து கால்வரை முக்காடிட்ட கம்பளங்களுடன் குடிசையை விட்டு வெளியே வந்து அமீரைப் பின்பற்றிச் சென்றார்கள்.

இரவு நன்றாக ஏறிவிட்டதால், தோப்பில் பயங்கர இருள் சூழ்ந்து கொண்டது. அந்த இருளை இன்னும் அதிகப் பயங்கரமாக அடிக்கச் சற்று தூரத்தே இருந்த கோதாவரியின் பிரவாகமும் கடலும் சேரும் இடம் பெரும் இரைச்சலைக் கிளப்பிவிட்டுக் கொண்டிருந்தது. நல்ல ஸ்வரத்துடன் கூவும் பட்சிகள் அந்தத் தோப்பிலிருந்தும், அவை அதிகமாகச் சப்திக்காமல் ஏதோ ஓரிரு ஆந்தைகள் மட்டும் அலறியது பயங்கரத்தை உச்சிக்குக் கொண்டு போயிருந்தது. அந்த இருட்டையும் பயங்கரத்தையும் சிறிதும் லட்சியம் செய்யாமல் அமீர் சர்வ சகஜமாக அந்த அடர்ந்த தோப்பில் நடந்து சென்றான். அசையக்கூட முடியாத பிரும்மாண்டமான சரீரத்தைத் தாங்கிய அமீர் நடந்த வேகம் இளைய பல்லவனைப் பெரும் ஆச்சரியத்தில் அமிழ்த்தியது. அவ்வப்பொழுது பின் வருபவர்களை அமீர் பார்வையிட்டபோது அத்தனை இருட்டிலும் காட்டுப் பூனையின் கண்களைப்போல் பளிச்சிட்ட அமீரின் விழிகளைக் கண்ட இளையபல்லவன் காட்டுப் பூனைகளுக்குள்ள தந்திர நடையும் திருப்பமும் அமீரின் கால்களிலிருந்ததைக் கண்டு, 'அநபாயர் நட்புக் கொண்டிருப்பது சாதாரண மனிதனையல்ல' என்று தனக்குள்ளே சொல்லிக் கொண்டான்.

அமீர் வழிகாட்டி முன்செல்ல, அவனுக்குப் பின்னால் அநபாயன் செல்ல, அநபாயனுக்குப் பின்னால் இளைய பல்லவனும் காஞ்சனாதேவியும் அக்கம் பக்கத்தில் நடந்தார்கள். அமீரின் நடை வேகம் அதிகமாயிருந்ததால் சில சமயங்களில் காஞ்சனாதேவி இஷ்ட விரோதமாக அரை

ஓட்டமும் அரை நடையுமாகவே செல்ல வேண்டி யிருந்தது. அப்படி மற்றவர்களைப் பிடிக்கச் சற்று துரித நடையைக் காட்டியபோதெல்லாம் அவள் அழகிய சரீரம் பக்கத்தே நடந்த இளையபல்லவன் உடலுடன் மோதியது. அக்கம் பக்கத்திலிருப்பவர்களே சரியாகத் தெரியாத அந்த இருட்டில், முன்னே செல்பவர்கள் பின்னே வருபவர் களைப் பார்க்க முடியாதென்ற தைரியத்தில் காஞ்சனா தேவியின் இடது கையும் கருணாகர பல்லவனின் வலது கரமும் அடிக்கடி ஒன்றுபட்டு ஒன்றுபட்டுப் பிரிந்து கொண்டிருந்தது. அந்த அசாதாரண இருட்டு, அவர்கள் இருந்த அபாய நிலை, இந்த இரண்டையும் லவலேசமும் நினைத்துப் பார்க்காமல் ஏதேதோ எண்ணங்களில் உள்ளங் களை அலையவிட்டுக் கொண்ட அந்த இருவரையும் திரும்பிப் பாராமலே தீவிரமாகத் தோப்பில் நடந்து சென்றான் அமீர்

தோப்பின் பெருமரங்கள் இலைகளை நிரம்ப உதிர்த் திருந்ததால் பாதை மெத்து மெத்தென்றே இருந்ததென்றா லும் இரண்டொரு சுள்ளிகள் கால்கள் இடறி வருத்தவே செய்தன. அப்படிப் பாதங்களில் சுள்ளிகள் தட்டுப்பட்ட சமயங்களில் காஞ்சனாதேவியைச் சட்டென்று தன்னை நோக்கி இழுத்துக் கொண்டு நடந்தான் இளையபல்லவன். காஞ்சனாதேவியின் பஞ்சுப் பாதங்களுக்கு அந்தச் சுள்ளிகள் தைத்தது பெரும் வேதனையாக இருந்தது. அந்தத் துன்ப வேதனை அதிகமா அல்லது இளைய பல்லவன் அதைச் சாக்கிட்டுத் தன்னை வலது கையால் இழுத் தணைத்த இன்ப வேதனை அதிகமா என்பதை ஊகிக்க முடியவில்லை கடாரத்துக் கட்டழகிக்கு. அப்படித் துன்ப மும் இன்பமும் கலந்ததால் ஏற்பட்ட விநோத உணர்ச்சி களுக்கு இலக்காகிக் கொண்டே நடந்தாள் அவள்.

நெடுந்தூரத்திற்கு ஒரு தடவை குறுக்கிட்ட ஓரிரு குடிசைகள் வீசிய தீபங்களின் சிற்றொளியில் மட்டும் சற்று

நிதானப்பட்ட அந்தக் காதலரிருவரும் மற்ற சமயங்களில் உள்ளக் கிளர்ச்சியுடனேயே அமீரைப் பின்பற்றினர். அப்படி ஒரு நாழிகை நடந்து சென்றதும் தோப்பின் முனை வந்துவிடவே அமீர் சரேலெனத் திரும்பி, "இன்னும் சிறிது தூரம் நாம் பாலூரின் சிறு வணிகர் வீதியில் நடக்கும் படியிருக்கும். நான் சொன்னது நினைப்பிருக்கட்டும்" என்று கூறி, தோப்பைக் கடந்து வீதிக்குள் நுழைந்தான்.

அமீர் அந்த வீதிக்குள் நுழைந்ததுமே தனது கம்பளத் தைப் பலமாக இழுத்து முகம் தெரியாமல் முக்காடிட்டுக் கொண்ட அநபாயன் குனிந்து, நடையும் ஓட்டமுமாகச் செல்லத் துவங்கினான். அவன் காட்டிய முறையை மற்ற இருவரும் பின்பற்றவே மூன்று அடிமைகள் பின்னால் ஓடி வரச் செல்லும் பெரு வணிகனென அமீர் அந்த வீதியில் நடந்து சென்றான். வீதியின் வீடுகளில் தீபங்கள் அப்பொழுது நன்றாக எரிந்துகொண்டிருந்தன. அடிமை களுடன் சென்ற அமீரைப் பலரும் விசாரிக்க ஆரம்பித் தார்கள். அவர்களுக்கெல்லாம் தகுந்தபடி பதில் சொல்லிக் கொண்டும் பெரிதாக இடி இடியென அடிக்கடி நகைத்துத் தன் மகிழ்ச்சியைக் காட்டிக்கொண்டு சர்வசகஜமாக அமீர் சொன்னானாலும் அவன் கண்கள் மட்டும் அக்கம் பக்கத்தை மிகக் கூர்மையுடன் ஊடுருவி நோக்கிக் கொண் டிருந்தன. சில நிமிடங்களுக்கொருமுறை அந்த வீதியிலும் கலிங்கத்தின் காவல் வீரர்கள் புரவியில் அமர்ந்து சென்று கொண்டிருந்தார்கள்.

அவர்களுக்கும் அடிக்கடி தலைவணங்கியும் தன் இரு கரங்களையும் உயர்த்தி உயர்த்தி மரியாதையைக் காட்டிக் கொண்டும் அடிமைகளையும் தனது தடித்த குரலால் அடிக்கடி விரட்டியும் நடந்து சென்ற அமீர் அந்தச் சிறுவணிகர் வீதியிலிருந்து பெரு வணிகர் வீதிக்குள் திரும்பினான். அந்த வீதியைக் கடந்ததும் கருணாகர பல்லவன் ஓரளவு பிரமிப்பையடைந்தானானாலும் அதை

வெளிக்குக் காட்டாமல் உள்ளத்தில் மட்டும் பெரும் சந்தேகத்துடன் நடந்து சென்றான். அந்தப் பெரு வணிகர் வீதியை ஒருமுறை வலம் வந்த அமீர் மீண்டும் சிறு வணிகர் வீதியை நோக்கித் திரும்பியது இன்னுமதிக வியப்பை அளித்தது இளைய பல்லவனுக்கு. 'எதற்காக இந்த அமீர் திரும்பத் திரும்ப வீதிகளைச் சுற்றுகிறான்' என்று தன்னைத்தானே கேட்டுக்கொண்ட இளைய பல்லவன் விடை காணாமல் தவித்தான். அவன் தவிப் பைப் பற்றிச் சிறிதும் கவலைப்படாத அமீர் ஆங்காங்கு ஒவ்வொரு வீட்டுக்கெதிரில் நின்று குரல் கொடுத்து உள் ளிருந்த வர்த்தகர்களைக் கூப்பிட்டு ஏதோ வர்த்தக சம்பந்தமாக வெவ்வேறு மொழிகளில் பேசிவிட்டு நடந்தான். இப்படி நடந்து மீண்டும் சிறுவணிகர் வீதியி லிருந்து ஒரு வீட்டுக்கெதிரில் வந்ததும், "உம், போங்கள் உள்ளே" என்று இரைந்த குரலில் கூவினான் பின்னால் வந்த மூவரையும் நோக்கி.

மூவரும் அந்த விடுதிக்குள் நுழைந்தனர். அந்த விடுதிக்குள் நுழைந்ததும் கதவைத் தாளிட வேண்டா மென்று அங்கிருந்த அடிமைகளைக் கண்களாலேயே எச்சரித்த அமீர், அநபாயனையும் மற்ற இருவரையும் அந்த விடுதிக்குள் அழைத்துச் சென்றான். அந்த விடுதி வெளிப் பார்வைக்குக் குறுகலாயிருந்தேயொழிய உள்ளே பல கட்டுகளை உடையதாகவும் விசாலமாகவும் இருந்தது. இரண்டு மூன்று கட்டுகளைத் தாண்டியதும் அங்கிருந்த அடிமைகளில் ஒருவனை விளித்த அமீர், "அவர் வந்து விட்டாரா?" என்று வினவினான்.

"வந்துவிட்டார்" என்று பதிலிறுத்தான் அடிமை.

"எங்கிருக்கிறார்?" என்று மீண்டும் வினவினான் அமீர்.

"தங்கள் அறையில்" என்றான் அடிமை.

இதைக் கேட்ட அமீர், அநபாயனை நோக்கித் திரும்பி, மகிழ்ச்சி ததும்பும் விழிகளை அவன்மீது நிலைக்க விட்டு, "அநபாயரே! நமக்கு அதிர்ஷ்டம்தான். அவர் இத்தனை சீக்கிரம் வருவார் என்று நான் நினைக்க வில்லை" என்று கூறி உள்ளே நடந்தான். அநபாயன் ஏதோ புரிந்ததற்கு அறிகுறியாகத் தலையை அசைத்துவிட்டு அமீரைத் தொடர்ந்து சென்றான். ஏதும் புரியாமலே மற்ற இருவரும் முன்னே சென்றவர்களைத் தொடர்ந்தனர். இன்னும் இரண்டு கட்டுகளைத் தாண்டிய பின்பு தனது அறையை அடைந்த அமீர், மற்றவர்களை முன் செல்லச் சைகை காட்டித் தான் மட்டும் கடைசியில் நழைந்தான். அங்கு காத்திருந்த மனிதன் வந்தவர்களைக் கண்டதும் முதலில் சந்தேகத்துடன் விழித்தான். கடைசியில் நுழைந்த அமீரைக் கண்டதும் அவன் முகத்தில் சந்தேகச் சாயை மறைந்து இதழ்களில் புன்முறுவலொன்று படர்ந்தது. அமீரின் உவகை கட்டுக்கடங்காததாயிற்று. அந்த மனிதனைக் கண்டதும் ஏதோ பெரும் புதையலைக் கண்டுவிட்டவன் முகம்போல் பிரமிப்பும் உவகையும் திருப்தியும் கலந்து ஜொலித்தது அமீரின் முகம். அவன் கண்களில் மகிழ்ச்சி வெள்ளம் கரை புரண்டு ஓடியது.

அத்தியாயம் 18

# சீன சோதிடம்

சிறு வணிகர் வீதியிலிருந்த தனது பெரு விடுதியின் நான்காவது கட்டின் உட்புற அறைக்குள் நுழைந்த அரபு நாட்டு அமீர் அங்கு தனக்காகக் காத்திருந்த அந்தப் புது மனிதனைக் கண்டதும் மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கி, "வரவேண்டும்; வரவேண்டும். நீங்கள் இந்த ஊருக்கு வந்து வருஷங்கள் இரண்டாகின்றன. ஏதோ எங்களைப் பிடித்த நல்ல காலம் இந்தச் சமயத்தில் நீங்கள் இந்தத் துறை முகத்தில் காலடி வைத்திருக்கிறீர்கள்" என்று முகமன் கூறி வரவேற்றதன்றி, பின்புறம் திரும்பி அநபாயனை நோக்கி, "அநபாயரே! நான் கூறிய நண்பர் இவர்தான். இவர் நினைத்தால் முடியாத காரியம் உலகத்தில் கிடையாது. நேற்றுக் கடற்கரைக்குப் போயிருந்தபோது தற்செயலாக இவரைச் சந்தித்தேன்" என்று அநபாயனுக்கு வந்த மனிதனை அறிமுகப்படுத்தினான். பின்பு பின்னால் வந்த மற்ற இருவரையும் பார்த்து, "இனி அந்த அடிமை வேடக் கம்பளங்கள் தேவையில்லை. எடுத்துவிடலாம். எல்லோரும் சற்றுச் சௌகரியமாக உட்கார்ந்துகொள்ளலாம்" என்று கூறி, அங்கிருந்த ஆசனங்களையும் மற்றவர்களுக்குச் சுட்டிக் காட்டினான்.

அமீரின் வீட்டு வெளிப்புறத்தைப் பார்க்கும் யாரும் அத்தகைய ஓர் அறை அந்த வீட்டிற்குள் இருக்க முடியும் என்று சொப்பனமும் காண முடியாத அளவுக்கு

அத்தனை பெரியதாயிருந்ததன்றி, சிறந்த மஞ்சங்களும், படாடோபத்தைக் குறிக்கும் பல்வேறு பொருள்களும் நிரம்பியதால் ஏதோ ஒரு சிற்றரசனின் அந்தரங்க அறை போலவே அது துலங்கியதைக் கண்ட கருணாகர பல்லவன், அமீர் பெரிய நுழைநரியென்பதைப் புரிந்து கொண்டான். அது மட்டுமல்லாமல் தாங்கள் தாண்டி வந்த முதல் மூன்று கட்டுகளிலும் பலப் பலவிதமான வணிகப் பொருள்களும் பெரிய பெரிய மரப் பெட்டிகளும் பொதி மூட்டைகளும் நிரம்பிக் கிடந்ததையும் ஏராளமான அடிமைகள் சதா அப்புறமும் இப்புறமும் நடமாடிக் கொண்டிருந்ததையும் கவனித்திருந்த கருணாகர பல்லவன், முன்னால் பார்ப்பதற்கு மிகச் சிறிதாகத் தெரியும் அந்த வீடு உண்மையில் ஒரு பெரும் வர்த்தகசாலை என்பதை யும் சந்தேகமற அறிந்துகொண்டான். தவிர முகப்பில் சிறியதாயிருந்த வீடு உள்ளே போகப் போகக் கட்டுக்குக் கட்டு விரிந்து நான்காவது கட்டு மிகப் பெரியதாயிருந்த படியாலும், முதல் மூன்று கட்டுகளில் சதா அடிமைகளின் நடமாட்டம் இருந்ததாலும் நான்காவது கட்டில் எது நடந்தாலும் கண்காணிப்பது நடவாத காரியமென்ப தையும் தெரிந்துகொண்ட கருணாகர பல்லவன், 'இந்த அமீரின் நட்பு அநபாயருக்கு எப்படிக் கிடைத்தது?" என்று தனக்குள் எண்ணமிட்டான். அந்த எண்ணச்சூழலில் சிக்கிய வண்ணமே அமீர் காட்டிய மஞ்சமொன்றில் அமர்ந்து புதிதாக வந்த மனிதனை நோக்கித் தன் கண் களை உயர்த்தினான்.

அந்த மனிதனின் சின்னஞ்சிறிய கண்களும், தட்டை முகமும் சப்பை மூக்கும் அகன்று தடித்த உதடுகளும் லேசாக மஞ்சளோடிய சரும நிறமும், 'ப' என்ற எழுத்தைக் கவிழ்த்து எழுதியதுபோல் தெரிந்த மீசையும் அவன் சீன நாட்டவன் என்பதைத் தெளிவுபடுத்தின. சீன இனத்தைச் சேர்ந்ததால் மிகவும் குள்ளமாக இருக்க வேண்டிய அந்த

மனிதன் அதிகக் குள்ளமாயிராமல் சுமாரான உயரத்துட னிருந்ததால், சில சமயங்களில் புகாருக்கு வரும் வட சீனாவின் மங்கோல் ஜாதியும் சீனமும் இணைந்த இரட்டை ஜாதி வகையைச் சேர்ந்தவனாயிருக்கலாம் என்று நிர்ணயம் செய்தான் இளைய பல்லவன். வந்த மனிதன் கைகள் பார்வைக்கு மெல்லியவையாயிருந்தாலும் எலும்புகளும், நரம்புகளும் வயிரம் பாய்ந்த நல்ல உறுதி யையும் பலத்தையும் காட்டியதைக் கண்டு அந்த மனிதன் பெரு வீரனாயிருக்க வேண்டுமென்பதையும் உணர்ந்து கொண்டான். எல்லாவற்றையும் விட இளையபல்லவன் கவனத்தைப் பெரிதும் கவர்ந்தவை அந்த மனிதனின் சின்னஞ்சிறிய கண்கள். மஞ்சள் நிறக் கன்னத்துக்கு நேரே மேலே தெரிந்த அந்த இரு சிறு கண்களும் மிகக் கூர்மை யான ஈட்டி முனைகளைப் போல் பளிச்சிட்டதன்றிப் பார்ப்பதற்கு அழகாகவும் இருந்தன. ஆனால் கண்களில் துளிர்த்த அழகு பயங்கர அழகாயிருந்தது. நம்பத்தகாத அளவுக்கு வஞ்சகம் கலந்த அழகாகத் தோன்றியது இளைய பல்லவனுக்கு.

இத்தனைக்கும் அந்த மனிதனின் ஆராய்ச்சி இளைய பல்லவன் ஆராய்ச்சியைப்போல் நீண்ட நேரம் பிடிக்காமல் விநாடி நேரத்தில் முடிந்துவிட்டதையும், சற்றே அப்புறமும் இப்புறமும் திரும்பி உள்ளே நுழைந்தவர்கள் அனைவரை யும் அந்தக் கண்கள் அளவெடுத்து ஒரு முடிவுக்கு வந்து விட்டதையும் அநபாயன் கவனித்தான். அந்தப் புது மனிதன் அதிகமாக நம்பத் தகுந்தவன் இல்லை யென்றாலும் தங்களைப் பாலூர்ப் பெருந்துறையிலிருந்து வெளியேற்ற அவனைவிடச் சிறந்த ஒரு மனிதனைக் கண்டு பிடிப்பது கஷ்டமென்பதையும் புரிந்துகொண்ட அநபாயன், அந்தச் சீனனைவிடத் துரிதமாகத் தனது ஆராய்ச்சியை முடித்துக்கொண்டு அமீரை ஏறெடுத்து நோக்கினான். தன்னுடன் வந்த மூவரையும் உட்காரச்

சொல்லிவிட்டு சீனனையும் அமரச் சொன்ன அமீர், தான் மட்டும் ஆசனத்தில் அமராமல் மற்றவர் முகங்களை உற்று நோக்கி அவர்கள் உள்ளத்தில் ஓடிய எண்ணங்களைப் புரிந்து கொண்டானானாலும் அதை வெளிக்குக் காட் டாமல், அநபாயனை நோக்கி, "அநபாயரே! இவரை நீங்கள் அறியமாட்டீர்கள். இவர் என் குருநாதர்" என்று அந்தச் சீனனுக்கும் தனக்குமுள்ள உறவை விளக்கினான்.

இதைக் கேட்ட அந்தச் சீனன் தன் முகத்தில் எந்தவித உணர்ச்சியையும் காட்டாமல் தலை தாழ்த்தி அநபாய னுக்கு வணக்கம் செலுத்தினான். அநபாயனும் பதிலுக்குத் தலை தாழ்த்தி வணங்கினானானாலும் அவன் முகத்தில் வியப்பின் குறி பெரிதும் படரலாயிற்று. வந்த மனிதன் எத்தனை அசகாய சூரனாயிருந்தாலும் அவன் வயதில் தன்னையும் கருணாகரனையும் விடக் கொஞ்சமே அதிக மென்பதையும், அப்படியிருக்கப் பாதி வயதைத் தாண்டி யுள்ள அமீருக்கு அவன் எந்தவிதத்தில் குருவாயிருக்க முடியுமென்பதையும் அறியாததால் அந்த வியப்பு குரலி லும் பாயக் கேட்டான், "இவர் உன் குருவா?" என்று.

அநபாயன் வியப்பைக் கவனிக்கத் தவறாத அமீர், "வியப்படையக் காரணமிருக்கிறது அநபாயரே! இந்த வாலிபர் எப்படி எனக்கு குருவாயிருக்க முடியும் என்று எண்ணுகிறீர்கள். வயதைக் கண்டு இவரை எடை போடாதீர்கள். முதிர்ச்சி அனுபவத்திலிருக்கிறது" என்றான்.

"எதில் அனுபவம் இருக்கு?" என்று சம்பாஷணைக் குள் புகுந்தான் கருணாகர பல்லவன்.

"மரக்கலப் போரில் இவரிடம்தான் நான் மரக்கலம் ஓட்டும் பயிற்சியையும், மரக்கலங்களைப் போரில் நடத்தும் முறைகளையும் பயின்றேன்" என்றான் அமீர்.

"எப்பொழுது பயின்றாய் அமீர்?" என்று அநபாயன் வினவினான்.

“சீன நாட்டில் அடிமையாயிருந்தபோது” என்று பதிலளித்தான் அமீர்.

“இவருக்கு அப்பொழுது வயது என்ன இருக்கும்?” இப்படி எழுந்தது கருணாகர பல்லவனின் கேள்வி.

“சுமார் பதினைந்து இருக்கலாம்” அமீரின் பதில் திட்டமாக வெளிவந்தது.

‘அமீர் உண்மையைத்தான் சொல்லுகிறானா? அல்லது ஏதாவது கதை திரிக்கிறானா? பதினைந்து வயது சிறுவனாவது, மரக்கலம் நடத்துவதாவது! நடக்கிற காரியமா?’ என்று உள்ளுக்குள்ளேயே எண்ணமிட்ட அநபாயனின் முகத்திலிருந்தே விஷயத்தைப் புரிந்துகொண்ட அமீர், தொடர்ந்து சொன்னான்: “அநபாயரே! இந்த வாலிபன் இந்த இளவயதில் மரக்கலத்தை நடத்தும் திறமை வாய்ந்திருப்பதைக் கண்டு பிரமிக்க வேண்டாம். சின்னஞ்சிறு வயதிலிருந்தே சீனத்துக் குழந்தைகள் நாட்டுக்குத் தேவையான தொழில்களிலெல்லாம் பயிற்சியளிக்கப்படுகிறார்கள். வயது வந்த மாலுமிகள் எட்டு பத்து வயதுச் சிறுவர்களைத் தங்களுடன் படகுகளில் ஏற்றிக்கொண்டு பெரும் அலைகளும் சுழல்களும் உள்ள சீனக்கடலில் ஓடுவதை நீங்கள் இன்றும் பார்க்கலாம். அந்தச் சிறுவர்கள் படகுகளைச் செலுத்துவதும் சீனக் கடலில் சர்வசாதாரணக் காட்சி. இருபது வயதுக்குள் திறமையுள்ள மாலுமிகளாகத் திகழும் கடலோடிகள் சீனாவில் மிக அதிகம். அத்தகைய மாலுமிகளில் தலை சிறந்தவர் என் நண்பர். பத்து வருடங்களுக்கு முன்பு நான் சீன நாட்டு வர்த்தகனிடத்தில் அடிமையாயிருந்த போது என்னை விலைக்கு வாங்கியதன்றி, தமது மரக்கலத்தில் என்னை ஏற்றிச் சென்று மரக்கலமோட்டும் பயிற்சியையும் அளித்தார். இந்த வயதிற்குள் அவர் செய்துள்ள வாணிபம் பலத்தது. இவர் செய்துள்ள கடற்போர்கள் பல. இந்த அடிமை அவற்றில் பங்கு கொண்டிருக்கிறேன். இவர் பெயரை அறியாத

கடலோடி அரபு நாட்டிலிருந்து சீனம் வரை யாருமே இல்லை."

இந்த வார்த்தைகளை உணர்ச்சி ததும்பப் பேசினான் அமீர். அந்தச் சீனநாட்டவன் கதையை அவன் சொல்லிக் கொண்டுபோன சமயத்தில் அவன் பயங்கரமான விழிகள் கிட்டத்தட்ட கண்ணீர் மல்கும் நிலையை அடைந்து விட்டதையும் குரல்கூட அதிகம் தழுதழுத்து விட்டதையும் கவனித்த அநபாயனும், கருணாகர பல்லவனும், காஞ்சனா தேவியும்கூட அவன் உள்ள நெகிழ்ச்சியையும், சீன நாட்டவனிடம் அவனுக்கிருந்த பக்தியையும் கண்டு பிரமிப்படைந்தார்கள். இத்தனைக்கும் அந்தச் சீனத்தான் முகத்தில் மட்டும் உணர்ச்சி ஏதுமில்லை. ஏதோ சாதாரண விஷயம் பேசப்படுவதுபோல் அதைப்பற்றிச் சிறிதும் சட்டை செய்யாத அந்த முகத்திலிருந்த சிறிய கண்கள் மட்டும் விஷமத்துடன் இருமுறை அசைந்தன. மிக மெல்லியதாய் இருக்கிறதோ அல்லவோவென்று சந்தேகப் படும்படியாய் இருந்த அவன் புருவங்களிரண்டும் சிறிது சுருங்கின. மேற்கொண்டு ஏதோ சொல்லப்போன அவரை ஏதும் பேச வேண்டாமென்பதற்கு அறிகுறியாக அவன் மெல்லிய வலது கரம் எழுந்து தடை செய்தது. "என் புராணம் போதும் அமீர். நாம் செய்ய வேண்டியது என்ன வென்பதைப் புரிந்துகொள்வோம்" என்று அதிகாரத் தோரணையில் சொற்களை அவன் உதடுகள் உதிர்த்தன.

அதற்கு மேலும் பேசாதிருப்பது மரியாதைக்கு அறி குறியாகாது என்று நினைத்த அநபாயன், "சீனத்தில் இந்த வயதில் இத்தனை சிறந்த மாலுமியிருப்பது மகிழ்ச்சியைத் தருகிறது. தங்கள் புராணத்தை அமீர் சொன்னதில் தவறு இல்லை. புராணம் சுவையாகத்தானிருக்கிறது" என்றான்.

சீனத்தான் இதழ்களில் புன்முறுவல் படர்ந்தது. "சுவைகள் பலதரப்பட்டவை. அவற்றைச் சுவைக்கும் சமயங்கள் தனித்தனி" என்றான் அவன்.

அவன் பேச்சுத்திறமை பெரும் வியப்பைத் தந்தது மற்றவர்களுக்கு. சீனத்தான் நுண்ணறிவு மிகச் சிறந்தது என்ற முடிவுக்கு வந்த அநபாயனும், இளையபல்லவனும் ஒருவரையொருவர் சில விநாடிகள் பார்த்துக் கொண்ட னர். அந்தப் பார்வையைக் கவனித்த சீனனின் இதழ்களில் ஏற்கெனவே இருந்த புன்முறுவல் இன்னும் அதிகமாகப் படர்ந்தது. "உரையாடலில் வல்லவனாயிருக்கிறானே, செயலில் எப்படியோ என்ற சந்தேகம் போலிருக்கிறது உங்களுக்கு" என்று சொல்லி மெள்ளச் சிரிக்கவும் செய்தான் சீனன்.

"அப்படி நினைக்கவில்லை நாங்கள்" என்றான் இளையபல்லவன்.

"ஏன்?" சீனன் கேள்வி மீண்டும் திடமாக எழுந்தது.

"எதற்காக நினைக்க வேண்டும்?" என்று பதிலுக்குக் கேள்வியை வீசினான் இளையபல்லவன்.

"சீனத்தில் நாங்கள் வாய்ச்சொல் வீரரை மதிப்ப தில்லை. செயல் வீரரைத்தான் மதிப்போம்."

"ஏன், இரண்டிலும் வல்லவர்கள் கிடையாதா?"

"அநேகமாகக் கிடையாது. அதிகமாகப் பேசுபவன் எந்தச் செயலையும் திறமையுடன் செய்ய முடியாது. செயல் குறையும்போதுதான் நாக்கு நீளுகிறது."

"அப்படியா?"

"ஆமாம். எங்கள் நாட்டில் தொழில் செய்யும் குழந்தை கள் தொழில் புரியும் சமயங்களில் பேசினால் உடனே தண்டிப்போம். நான் மரக்கலப் பயிற்சி பெற்றபோது அலுவல் சமயத்தில் ஓரிரு வார்த்தைகள் பேசியதற்காகப் பலமுறை சவுக்கடி பட்டிருக்கிறேன். பயிற்சி சமயத்தில் அலுவல்மீது மட்டுமே நாங்கள் கண்ணும் கருத்துமாயிருக்க வேண்டும். இது எங்கள் தலைவர்கள் விதிக்கும் விதி."

சீனன் வார்த்தைகள் திடமாகவும் பெருமையுடனும் வெளிவந்தன. தனது நாட்டின் பயிற்சி முறைகளைப் பற்றி அவன் கொண்டிருந்த அசாத்திய மதிப்பையும் அவன் சொற்கள் சந்தேகமின்றிச் சுட்டிக்காட்டின. தமிழகமும் பாரதமும் சீனநாட்டின் அளவுக்கு உயர்ந்து ஏழ் கடல் களிலும் தனது கீர்த்தியைப் பரப்ப வேண்டுமானால் மரக்கலப் பயிற்சியிலும் தொழில் புரிவதிலும் அவர்களுக் குள்ள வெறி நமது மக்களுக்கும் அவசியம் என்று அநபாயன் எண்ணினான். என்றாவது சோழ அரியணை யில் தான் ஏறும்பட்சத்தில் ராஜராஜனும், ராஜேந்திரனும் நிறுவிய கடற்படையைப் பத்து மடங்கு பலமுள்ளதாக்கி, அவற்றைக்கொண்டு சீனநாட்டிலும் வெற்றிக்கொடி நாட்ட வேண்டும் என்ற ஆசையும் அவன் உள்ளத்தில் படரவே அவன் கண்கள் தமிழக விஸ்தரிப்பின் சாம் ராஜ்யக் கனவில் சஞ்சரித்தன.

அநபாயன் கண்களில் விரிந்த கனவின் உண்மைக் கருத்து அந்தச் சீனன் சிந்தைக்கு நிமிட நேரத்தில் புலப் பட்டுவிட்டதால் அவன் அநபாயனை அதிசயத்துடன் நோக்கிவிட்டுச் சொன்னான், "உங்கள் கனவு பலித்தால் நாட்டுக்கு நல்லது" என்று.

அந்த வார்த்தைகளால் கனவுத் திரையைக் கிழித்துக் கொண்ட அநபாயன் கேட்டான், "என்ன சொல்கிறீர்கள்?" என்று.

"உங்கள் கண்களில் கனவு விரிந்ததைக் கண்டேன்" என்றான் சீனன்.

"என்ன கனவு?"

"சாம்ராஜ்யக் கனவு."

"நான் ஏன் கனவு காண வேண்டும்?"

"நீங்கள் அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களா யிருப்பதால்."

“நான் அரச குடும்பத்தைச் சேர்ந்தவனென்று யார் சொன்னது உங்களுக்கு?”

“முகம் சொல்லுகிறது.”

“முகத்தில் எழுதி ஒட்டியிருக்கிறதா?”

“எழுதி ஒட்டவில்லை. ராஜ களை இருக்கிறது. முகத்தில் சிந்தனை நரம்பு ஒன்று குறுக்கே ஓடுகிறது.”

“நீங்கள் சொல்வது விளங்கவில்லை” என்றான் அநபாயன்.

சீனன் ஆசனத்திலிருந்து எழுந்தான். “விளங்கச் சொல்கிறேன் கேளுங்கள். ஏதோ நான்கு பேர்களைப் பாலூரிலிருந்து தப்புவித்து அழைத்துப் போகவேண்டு மென்று அமீர் சொன்னான். சரியென்று ஒப்புக்கொண் டேன். ஒப்புக் கொண்ட சமயத்தில் அந்த நான்கு பேரில் மூவர் அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களாயிருப்பவர் களென்பதை நான் உணரவில்லை. உங்கள் மூன்று பேரைத்தான் குறிப்பிடுகிறேன். ஏனென்றால் நான்காவது பெயரை நான் இன்னும் பார்க்கவில்லை. அவரும் அரச குடும்பத்தைச் சேர்ந்தவராயிருக்கலாம். ஆனால் நீங்கள் மூவரும் அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்... ஆனால்...” என்று ஏதோ சோதிடம் சொல்வது போல் சொல்லிக் கொண்டு போனவனைத் தடுக்க அநபாயன் ஆசனத்தி லிருந்து எழுந்தான். “எழுந்திருக்க வேண்டாம். உட்காருங் கள். எனக்கு மிக விளக்கமாகப் புரிகிறது. நீங்கள் மூவரும் அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். ஆனாலும் மற்ற இரு வருக்கும் அரசு பெறும் ராசி முகத்தில் இல்லை. உங்கள் முகத்தில் குறுக்கே ஓடும் அந்தப் பச்சை நரம்பு ஒரு காலத்தில் பெரும் அரசை நீங்கள் ஏற்பீர்கள்; உங்களிடம் அந்த அரசு விரியும் என்பதைச் சுட்டிக் காட்டுகிறது. ஆம், திட்டமாகச் சுட்டிக் காட்டுகிறது. சந்தேகமேயில்லை” என்று கூறிய சீனன், அநபாயனை ஊடுருவிப் பார்த்தான்.

அவன் சொற்களால் வியப்படைந்த அநபாயன், ஆசனத்தைவிட்டுத் திடீரென எழுந்து அமீரை நோக்கி னான். "அமீர்! இவர் யார்? பெயரென்ன?" என்று வினவினான் குரலில் சந்தேகம் ஒலிக்க.

அவர் பெயரைச் சொன்னான். பெயரைச் சொன் னானா? அல்லது இடியைத்தான் எடுத்து வீசினானா? இடியைத்தான் வீசி இருக்கவேண்டும். அமீரின் பதிலைக் கேட்ட மற்ற மூவரும் விவரிக்க இயலாத அத்தனை அதிர்ச்சியை அடைந்தனர். எந்தச் சமயத்திலும் எந்தச் சந்தர்ப்பத்திலும் எந்த அபாயத்திலும் அதிர்ச்சியடையாத அநபாயனே அந்தப் பெயரைக் கேட்டு அதிர்ச்சி யடைந்தான்.

அத்தியாயம் 19

# கனவில் கதை

மூன்றே எழுத்துகள் கொண்ட அந்தச் சீனக் கடலோடியின் பெயரை அரபு நாட்டு அமீர் உச்சரித்த மாத்திரத்தில், அந்த அறையில் தங்களிடையே உதிர்ந்தவை மூன்று எழுத்துகளா அல்லது மூன்று நெருப்புத் துண்டங்களா என்பதை நிர்ணயிக்க முடியாமல் பெரும் பிரமிப்பை அடைந்த மற்ற மூவரும், தங்களைப் பாலூர்ப் பெருந் துறையிலிருந்து தப்புவிக்க இந்த மனிதனைத் தவிர அமீருக்கு வேறு யாரும் கிடைக்கவில்லையா என்ற நினைப்பால் ஓரளவு சீற்றமும் அடைந்தனர். அந்த மூன்று எழுத்துகளை அமீர் அன்றுதான் உச்சரித்தானென்றாலும், அந்த எழுத்துகள் துறைமுகங்களுள்ள எந்த நாட்டுக்கும் புதிதல்லவாகையால் அந்த எழுத்துத் தொடரைப் பெயராகத் தாங்கியுள்ள மனிதனின் பிரபாவம் சென்ற சில ஆண்டுகளாக வெளிநாடு சென்று வந்த சகல மாலுமிகள் வாயிலும் சதா புகுந்து புறப்பட்டுக் கொண்டுதானிருந்தது. வெளிநாடு சென்று வந்த தமிழகத்தின் வணிகர் சிலர் அந்தப் பெயரைப் பயத்துடன் உச்சரித்தனர். மற்றும் சிலர் அதைப்பற்றிப் பெருமையுடன் கதைகள் பல சொன்னார்கள். ஆனால் அத்தனை கதைகளிலும் வீரத்துடன் குரூரச் செயல்களும் கலந்தே கிடந்தன. வேறு பலருக்கு அந்த மூன்று எழுத்துப் பெயருடையவன் புரியாத புதிராயிருந்தான். ஆனால் திட்டமாகப் புரிந்த விஷயம் ஒன்று இருந்தது. அவன் எதற்கும் அஞ்சாநெஞ்சம் படைத்த பெரும் கடற் கொள்ளைக்காரன் என்பதுதான் அது.

ஆகவே அகூதா* என்ற மூன்றெழுத்துச் சொல்லை அரபு நாட்டு அமீர் அந்த இரவில் உதிர்த்ததும் மற்ற மூவருக்கும், பிரமிப்பும் திகைப்பும் ஓரளவு சீற்றமும் ஏற்பட்டதில் ஆச்சரியமில்லையல்லவா ?

அரபுநாட்டு அமீர் தனது பெயரை உச்சரித்த மாத்திரத்தில் மற்ற மூவர் முகத்திலும் தெள்ளெனப் பிரதிபலித்த உணர்ச்சிகளை அகூதாவின் சிறு ஈட்டி விழிகள் வினாடி நேரத்தில் கவனித்து விட்டனவாகையால் அவன் கண்களில் விஷமச் சிரிப்பின் சாயை லேசாகப் படர்ந்ததென்றாலும், இதழ்கள் மட்டும் அந்தச் சிரிப்பை தினையளவும் காட்டவில்லை. மற்றவர்களின் ஆரம்பக் குழப்பம் அடங்கச் சற்று நேரம் அளித்துவிட்டு அவன் பேச ஆரம்பித்த சமயத்திலும் அவன் சொற்கள் எந்தவித உணர்ச்சியுமின்றிச் சர்வ சாதாரணமாக வெளிவரத் தொடங்கின. "என் இந்த உடல் உங்களுக்கு அறிமுகமில்லையென்றாலும் என் பெயர் ஏற்கெனவே அறிமுகமாயிருப்பதாகத் தெரிகிறது" என்று மிகவும் சகஜமாகப் பேசினான் அந்தச் சீனக் கடலோடி.

பாதி கேள்வி போலும் பாதி ஏதோ விஷயத்தை அறிவிப்பது போலும் அகூதாவின் உதடுகளிலிருந்து உதிர்ந்த அந்தச் சொற்களுக்குக் கருணாகர பல்லவனோ காஞ்சனாதேவியோ பதில் சொல்லும் திறனை இழந்திருந்தார்களென்றாலும் எந்தச் சந்தர்ப்பத்திலும் வெகு சீக்கிரம் உணர்ச்சிகளை அடக்கிக்கொள்ளும் திறன் வாய்ந்த அநபாயன் மட்டும் அவனை ஒருகணம் தன் சீரிய விழிகளால் ஏறெடுத்து நோக்கிவிட்டு, "தங்களுக்கு அது வியப்பாயிருக்கிறதா?" என்று ஒரு கேள்வியை வீசினான்.

* அகூதா ஒரு சரித்திரப் பாத்திரம். கடற்படை, தரைப்படை இரண்டையும் நடத்துவதில் பிரசித்தி பெற்றவன். தார்த்ததிகள் வமிசத்தின் கிளையொன்றைச் சேர்ந்தவன். பிற்காலத்தில் சீனாவில் சொந்த 'அரசை ஸ்தாபித்தவன். – Outlines of Chinece History by Liung Bing.

சீனக் கடலோடியின் சின்னஞ்சிறு கண்களில் கேள்விக்குறி எழுந்ததன்றி, "எது வியப்பாயிருக்கிறதா என்று கேட்கிறீர்கள்?" என்று உதடுகளிலிருந்தும் கேள்வியொன்று உதிர்ந்தது.

"உங்கள் பெயர் எங்களுக்கு ஏற்கெனவே அறிமுகமாயிருப்பதை," என்று அநபாயன் விளக்கினான்.

"இல்லை. வியப்பாயில்லை. சில வருடங்களாக எனக்கு எதுவும் வியப்பை அளிப்பதில்லை" என்று பதில் கூறினான் அகூதா.

இந்தப் பதில் அநபாயனுக்கு ஆச்சரியத்தை அளித்ததால் அவன் மறுபடியும் கேட்டான், "ஏன் வியப்பு என்ற உணர்ச்சி மீதே உங்களுக்கு வெறுப்பு ஏற்பட்டு விட்டதா?" என்று.

அகூதாவின் பதில் அநபாயனுக்கு மட்டுமின்றி, கருணாகர பல்லவனுக்கும் காஞ்சனாதேவிக்கும் கூட மேலும் மேலும் வியப்பையே விளைவித்தது. ஏதோ பெரும் காவியத்தை எழுதுபவன்போல் பேசினான் அந்தச் சீனக் கடலோடி. "உணர்ச்சிகளின் மீது வெறுப்பு ஏற்படுவது சாத்தியமில்லை. வெறுப்பே உணர்ச்சியின் சாயை. வியப்பு மற்றொரு சாயை. இப்படிச் சாயைகள் பல, பொறிகள் பல, உணர்ச்சியின் அலைகளில் உண்டு; அவற்றை நிறுத்த முடியாது. கடலின் அலைகளையும் நிறுத்த முடியாது. ஆனால் அந்த அலைகளில் மூழ்காதிருக்கலாம்" என்று கூறினான் அகூதா.

அகூதாவின் திட்சண்யமான அறிவையும் தெளிவான சிந்தனையைப் பேசுவதில் இருந்த சாமர்த்தியத்தையும் கவனித்த மற்ற மூவரும் ஆச்சரிய அலைகளில் மேலும் ஆழ்ந்து போகவே செய்தனர். அந்த அலைகளிலிருந்து முதலில் மீண்ட அநபாயன் சொன்னான், "நீங்கள் பேசுவது காவியம் போலிருக்கிறது" என்று.

"உணர்ச்சியிலிருந்து காவியம் உதிக்கிறது. உண்மையிலிருந்து உணர்ச்சி உதிக்கிறது. உண்மையைச் சொன்னேன். அது உங்களுக்குக் காவியம் போலிருக்கிறது" என்றான் அகூதா.

"என்ன உண்மையைச் சொன்னீர்கள்" என்று வினவினான் அநபாயன்.

"வியப்பை நான் உதறி வருஷங்கள் பல ஆகின்றன என்று சொன்னேன், அது உண்மை."

"ஏன் அதை உதறினீர்கள்?"

"உலகம் உதற வைத்தது."

"உலகமா!"

"ஆம். உலகம்தான் நம்மை நல்லவனாகவும், கொடியவனாகவும் ஆக்குகிறது. உலகத்தின் சில பகுதிகளில்தான் கடற்கொள்ளைக்காரனாக மதிக்கப்படுகிறேன். சில பகுதிகளில் நிலப்போரில் நிகரற்றவனாக மதிக்கப்படுகிறேன். சில பகுதிகளில் தெய்வமாக மதிக்கப்படுகிறேன். சில பகுதிகளில் பிசாசாக மதிக்கப்படுகிறேன். இப்படிப் பலவகை மதிப்பீடுகள் என்னைப் பற்றி ஏற்பட்டிருக்கின்றன. இப்படிப் பல வகையாக மனிதர்கள் பேசுவதை நான் செல்லுமிடங்களில் கேட்கிறேன். இந்த நானாவகை மதிப்பீடுகள் முதலில் சற்று வியப்பை அளித்தது உண்மை. ஆனால் காலமும் அனுபவமும் அந்த வியப்பை அகற்றி விட்டன" என்று அகூதா ஏதோ தன் சரித்திரத்தை விவரமாகச் சொல்லுவதுபோல் பேசினான்.

அவன் சொற்களைக் கேட்ட அநபாயன் தன் ஆசனத்திலிருந்து சற்றே எழுந்து எதிரே அமர்ந்திருந்த அந்தச் சீனக் கடலோடிமீது தன் கண்களைச் சிறிது நேரம் நிலைக்கவிட்டான். "உலகம் உங்களைப் பலபடி மதிப்பீடு செய்வது எனக்குத் தெரியாது. உங்களைப் பெரும் கொள்ளைக்காரரர் என்று மட்டும் எங்கள் நாட்டு வணிகர்

சொல்கிறார்கள். உங்களைப் பற்றிப் புகாரிலும், நாகப்பட்டி னத்திலும், ஏன் இந்தப் பாலூரிலும்கூட அத்தகைய வதந்தி தான் உலாவுகிறது. அதை நீங்கள் மறுக்கிறீர்களா?" என்று கேட்கவும் செய்தான் அநபாயன்.

அகூதாவின் இதழ்களில் வெறுப்புக் கலந்த இகழ்ச்சி நகையொன்று படர்ந்தது. "வதந்திகளை மறுக்க வேண்டி யது அவசியமா?" என்று வினவினான் அகூதா, அந்த இகழ்ச்சி குரலில் ஒலிபாய.

"ஆதாரமற்று இருந்தால் அவசியமில்லை" அநபாயன் பதிலில் உறுதி கலந்திருந்தது.

சீனக் கடலோடியின் சின்னஞ்சிறு கண்கள் பளிச் சிட்டன. "நான் கொள்ளைக்காரன் என்பதற்கு ஆதாரம் இருக்கிறதா தங்களிடம்?" என்று விஷமம் பூரணமாகத் தொனித்த குரலில் வினவினான் அகூதா,

அநபாயன் உடனே அந்தக் கேள்விக்குப் பதில் சொல் லாமல் இளைய பல்லவனையும் காஞ்சனா தேவியையும் ஒரு வினாடி பார்த்தான். பிறகு அமீரின் முகத்தை அவன் கண்கள் ஆராய்ந்தன. மூன்றாவதாக அவன் அகூதாவைக் கூர்ந்து நோக்கிவிட்டுச் சொன்னான்: "அகூதா! நீங்கள் யாரென்பதை நிர்ணயிக்கவோ, உங்களைப் பற்றித் தீர்ப்புச் சொல்லவோ நான் முற்படுவதாக நினைக்க வேண்டாம். ஆனால் பெரும் பொறுப்பு என்மீது சுமந்து கிடக்கிறது. அந்தப் பொறுப்பு என்னைப் பற்றியதல்ல. இதோ உட் கார்ந்திருக்கும் என் நண்பன் இளைய பல்லவனைப் பற்றியதுமல்ல. அது இளைய பல்லவனுக்குப் பக்கத்தில் அமர்ந்திருக்கும் கடாரத்து இளவரசியையும் அமீரின் பாதுகாப்பிலிருக்கும் அவள் தந்தையையும் பொறுத்தது. கடாரத்தின் அரச குடும்பத்தைச் சேர்ந்த காஞ்சனா தேவியும் அவள் தந்தையும் சோழநாட்டு உதவி நாடி இங்கு வந்திருக்கிறார்கள். அவர்களை இங்கிருந்து சோழநாடு கொண்டு சேர்ப்பது என் கடமை. ஆகவே அவர்களைச்

சோழநாடு கொண்டு செல்ல வேண்டுமானால் யாரிடம் ஒப்படைக்கலாம் என்பதைத் தீர்மானிப்பது என் கடமை யாகிறது..."

இப்படி வாக்கியத்தை முடிக்காமல் அநபாயன் விட்டு விட்டதைக் கவனித்த அகூதா அதன் காரணத்தைச் சந்தேகமறப் புரிந்துகொண்டு விட்டதால், "ஏன் அரை குறையாக முடிக்கிறீர்கள். மேலே சொல்லுங்கள்" என்று தூண்டினான்.

அநபாயன் மேலும் சொன்னான்: "அகூதா! நாங்க ளிருக்கும் அபாய நிலை எங்களுக்குத் தெரியும். எங்களைத் தப்புவிக்க நீங்கள் முன்வந்ததை பீமனோ அனந்தவர் மனோ அறிந்தால் உங்கள் உயிருக்குத் திங்கு நேரிடும் என்பதும் எங்களுக்குத் தெரியும். உயிரைத் திருணமாக மதித்து நீங்கள் எங்களுக்கு உதவ வரும்போது உங்களை எடை போடுவது நியாயமல்ல. இருப்பினும் சோழநாட்டு இளவரசன் என்ற முறையில் எனக்கு ஏற்பட்டுள்ள பொறுப்பை நான் கழிக்க முடியாது. ஆகையால்தான் யோசிக்கிறேன். உங்களைப் பற்றிய வெறும் வதந்திகளை மட்டும் நம்பி நான் யோசிக்கவில்லை. உங்களைப் பற்றிய பல விஷயங்கள் எனக்குத் தெரியும். ஆகையால் தீவிர யோசனைக்கும் ஓரளவு பயத்துக்கும் இடமிருக்கிறது."

தன்னைப் பற்றிய சந்தேகங்கள் இத்தனை அநபாய னுக்கும் மற்றவர்களுக்கும் ஏற்பட்டிருப்பதை உணர்ந்தும் முகத்தில் புன்சிரிப்பைத் தவிர எந்தவித உணர்ச்சியையும் காட்டாத அகூதா, "என்னைப் பற்றி வேறு பல விஷயங் களும் தெரியுமா உங்களுக்கு" என்று கேட்டான் விஷமத் துடன்.

"தெரியும்" என்ற சொல் அநபாயன் வாயிலிருந்து மட்டுமின்றி கருணாகர பல்லவன் வாயிலிருந்தும் ஏக காலத்தில் வெளிவரவே, இளையபல்லவன் மீதும் கண் களைத் திருப்பிய அகூதா, "மிக்க மகிழ்ச்சி, மகிழ்ச்சி"

என்று சொல்லித் தலை தாழ்த்தினான். அவன் தங்களுக்கு உபசார வார்த்தை சொல்லுகிறானோ அல்லது தங்களைப் பார்த்து நகைக்கிறானோ என்பதை அறிந்துகொள்ள முடியாத அநபாயனும் கருணாகர பல்லவனும் சில விநாடிகள் மௌனம் சாதித்தாலும் பிறகு மௌனத்தை இருவருமே கலைத்து ஒருவர் மாற்றியொருவர் பேச முற்பட்டார்கள்.

"நீங்கள் பிறந்த இடம் சீனாவிலுள்ள சங்கரி நதி தீரம்" என்றான் அநபாயன்.

"நூ சென் என்ற மங்கோலிய வகுப்பைச் சேர்ந்தவர்கள்" என்றான் இளையபல்லவன்.

"கிதான், கின் வகுப்பினர் பலரை நீங்கள் சிறை பிடித்துக் கொண்டு போய்ச் சித்திரவதை செய்திருக்கிறீர்கள்" என்று அநபாயன் கூறினான்.

"அவர்களிருப்பிடங்களைக் கொள்ளையடித்து, பெண்களையும் குழந்தைகளையும் சிறைபிடித்துக் கொண்டு போயுமிருக்கிறீர்கள். அவர்களில் பலரை அழித்துமிருக்கிறீர்கள்" என்று இளையபல்லவன் விளக்கினான்.

"இத்தகைய உங்களிடம் எப்படிக் கடாரத்து இளவரசியையும் அரசரையும் ஒப்படைப்பேன்?" என்று வினவிய அநபாயன் மேலும் ஏதோ சொல்லப் போனதும் இடி இடியென்று கலந்தொலித்த அமீரின் சிரிப்பும் சீனக் கடலோடியின் சிரிப்பும் அந்த அறையை கிடுகிடுக்க வைத்தன. அந்தச் சிரிப்பினால் வெகுண்ட அநபாயன், "ஏன் சிரிக்கிறாய் அமீர்?" என்று கூறினான் அமீரை நோக்கி, தீவிழி விழித்து.

அநபாயன் சீறியதால் திடீரெனச் சிரிப்பை நிறுத்திக் கொண்ட அமீர் சொன்னான், "சிரித்தது தவறுதான்" என்று. அத்துடன் நிறுத்தாமல், "நீங்கள் என் குருநாதரைக் கொள்ளைக்காரனென்று கூறியதற்கு உண்மையில்

எனக்குக் கோபம்தான் வர வேண்டும். அதற்குப் பதில் சிரிப்பு வந்தது தவறுதான்" என்று கூறினான்.

தனது சொல் அமீருக்குப் பெரும் ஆத்திரத்தை அளித் திருப்பதை உணர்ந்துகொண்ட அநபாயன் கேட்டான், "நாங்கள் சொன்னதில் தவறு ஏதேனும் இருக்கிறதா?" என்று.

இதற்கு அமீர் பதில் சொல்லுமுன்பு சீனக் கடலோடி இடையே புகுந்து, "விவரங்களில் அதிகத் தவறு இல்லை. விளக்கத்தில்தான் இருந்தது" என்றான்.

"விவரம் வேறு, விளக்கம் வேறா?" என்று இகழ்ச்சி யுடன் வினவினான் அநபாயன்.

"ஆம். விவரம் விஷயத்தைக் குறிக்கும். விளக்கம் அதற்கு வியாக்கியானத்தைக் குறிக்கும்" என்று பதில் கூறினான் அகூதா.

"உங்களைப் பற்றிய என் முடிவு தவறு என்கிறீர்களா?" என்று கேட்டான் அநபாயன்.

"தவறுதான். முற்றிலும் தவறு. சந்தேகமென்ன?" என்று அநபாயனை என்றும் எதிர்த்துப் பேசாத அமீரே சொற்களைக் காரசாரமாக உதிர்த்தான்.

இதைக் கேட்டதும் அமீர் பக்கம் திரும்ப முயன்ற அநபாயனைக் கையைச் சற்றே உயர்த்தித் தடுத்த அகூதா, "சோழ நாட்டு இளவரசே! பெரும் நாடுகளின் அல்லது பெரும் மனிதர்களின் சரித்திரங்கள் வல்லவர்களால் எழுதப் படும்போதே தவறுகள் பல புகுந்து கொள்கின்றன. அப்படியிருக்க வணிகர்கள் மூலம் உங்களுக்குக் கிடைத்த தகவல்களைக் கொண்டு நீங்கள் எப்படி எடை போட முடியும்? ஒருகாலும் முடியாது. எடைபோட முயல்வது தவறும் ஆகும். நான் பெரும் அக்கிரமக்காரன், கொள்ளைக் காரன் என்ற வதந்தி ஒருபுறமிருக்கட்டும். அப்படியானால் இந்த அமீரை நான் ஏன் அடிமைத் தளையிலிருந்து

மீட்க வேண்டும்? எதற்காக மரக்கலப் போர்ப் பயிற்சி அளிக்க வேண்டும்? அமீரால் என் நாட்டுக்கோ, என் குலத்துக்கோ, என்ன பயன்? சற்று யோசித்துப் பாருங்கள்...” என்று சொல்லி அநபாயனைத் தனது சிறு விழிகளால் கூர்ந்து நோக்கினான். அந்தக் கண்களை நிர்ப்பயமாகச் சந்தித்த அநபாயனின் விழிகளில் சந்தேகத்தின் சாயை சிறிது படரலாயிற்று. ‘ஆமாம்! பெரும் கொள்ளைக் காரனான அகூதா எதற்காக அமீரிடம் இத்தனை பரிவு காட்ட வேண்டும்? கருணையற்ற உள்ளத்தில் ஒருவனிடம் மட்டும் எப்படிக் கருணை பிறக்கும்?’ என்று தன்னைத் தானே கேட்டுக் கொள்ளவும் செய்தான்.

அவன் முகத்தில் விரிந்த சந்தேகச் சாயையைக் கண்ட அகூதா மெள்ளப் புன்முறுவல் செய்துவிட்டுச் சொன்னான்: “பார்த்தீர்களா, சோழர்குல இளவரசே! அமீர் ஒரு சிறு உதாரணம். அதைச் சொன்னதுமே தங்கள் மனத்தில் என்னைப்பற்றிய வதந்திகள் சரியா, அல்லவா வென்ற சந்தேகம் எழுந்துவிட்டது. ஆகவே ஒரு மனிதனை வதந்தி களைக் கொண்டு எடை போடக் கூடாது. அதுவும் பின்னால் அரசாளப் போகும் நீங்கள் எடை போடக் கூடாது” என்று.

அநபாயனின் புருவங்கள் மெள்ள நுதலின் மேற் புறத்தை நோக்கி எழுந்தன. “நான் அரசாளப் போகி றேனா?” என்றும் வியப்புடன் வினவினான்.

“நீங்கள் மட்டுமல்ல; நானும் அரசாளப் போகிறேன்” என்றான் அகூதா.

“என்ன அப்படித் திட்டமாய்ச் சொல்கிறீர்கள்?” என்று கேட்டான் அநபாயன்.

“அநீதிகளிலிருந்து புது அரசுகள் எழுகின்றன” என்றான் அகூதா.

சொன்னதன் பொருளை அகூதாவே விளக்கினான். விளக்க விளக்க வியப்பே மேலிட்டது மற்றவர்களுக்கு. கனவில் கதை கேட்பதுபோல் அவன் சொல்வதை அவர்கள் கேட்டனர். சோழ, கலிங்க நாடுகளின் பிற்காலத்தை அத்தனைத் தெளிவாக அந்த நாட்டவராலேயே வர்ணிக்க முடியாது என்பதை அவர்கள் சந்தேகமறப் புரிந்து கொண்டனர். அப்படிப் புரிந்துகொண்டதால் சீனக் கடலோடியிடம் இருந்த சந்தேகம் பறந்து பெரும் மதிப்பும் நம்பிக்கையுமே ஏற்பட்டன அவர்களுக்கு.



அத்தியாயம் 20

# புலியிடம் வேதாந்தம்

அந்தியிலிருந்து பல அரசுகள் எழுகின்றனவென்ற பெரும் சித்தாந்தத்தைச் சர்வ சகஜமாகச் சொன்ன சீனக் கடலோடி அதன் பொருளை விளக்க முற்பட்டதும் அவன் சின்னஞ்சிறு கண்கள் பெரும் ஒளியைப் பெற்று ஜொலிக்கத் தொடங்கிவிட்டதையும், அந்த ஜொலிப்பில் பெரும் கனவும் தெள்ளிய சிந்தனையும் கலந்துறவாட முற் பட்டு விட்டதையும், விழிகளில் விரிந்த கனவு சொற் களிலும் ஓரளவு ஒளிவிட்டதையும் கண்ட அநபாயனும் மற்ற இருவரும், அவன் பேச ஆரம்பித்த சில விநாடி களுக்குள்ளேயே தாங்கள் ஒரு கொள்ளைக்காரன் முன்பு இருக்கிறோம் என்ற எண்ணத்தை அறவே அகற்றிக் கொண்டதல்லாமல், வரலாற்றில் நிரந்தரமான இடம் பெறப் போகும் ஒரு மாவீரன் முன்னிருக்கும் மனோ நிலையும் அடைந்தனர். பேச்சைத் துவங்கிய சில விநாடி களுக்குள்ளேயே தானிருக்கும் சூழ்நிலையையும், ஏன் அருமை நண்பனான அமீரையும்கூட மறந்து பின் வர இருக்கும் வரலாற்று உலகில் சஞ்சரிக்க ஆரம்பித்தான் அந்தச் சீனக் கடலோடி. அவன் அப்படிச் சஞ்சரிக்க ஆரம்பித்ததை அவன் முகமும் கண்களும், சில விநாடி களுக்கொருமுறை யோசனையால் சுளித்த மெல்லிய புருவங்களும் சந்தேகத்துக்கிடமின்றி நிரூபித்தன.

பேசுவதற்கு முன்பு ஏற்கெனவே ஆசனத்திலிருந்து எழுந்துவிட்ட அந்தச் சீனக் கடலோடி இரண்டு விநாடி

கள் மட்டும் தன் முகத்தைத் தொங்கப் போட்டுக்கொண்டு சிந்தனையிலும், சிந்தனையின் விளைவாக ஏற்பட்ட மௌனத்திலும் ஆழ்ந்துவிட்டுப் பிறகு பேச்சைத் துவங்கிச் சொன்னான்: “ஆம். அநீதிகளிலிருந்துதான் புது அரசுகள் பிறக்கின்றன. புது அரசுகள் என்ன, பழைய அரசுகளும் அப்படித்தான் பிறந்தன. அரசுகள் உதித்ததற்கு அநீதியே அஸ்திவாரம். அரசோ, அரசனோ இல்லாமல் மக்கள் வெறும் கூட்டங்களாகத்தான் முதலில் வாழ்ந்தார்கள். அப்பொழுது மக்களுக்குத் தேவை குறைவாயிருந்தது. தேவை குறைவாயிருந்ததால் திருப்தியிருந்தது. திருப்தி யிருந்ததால் சண்டையில்லை, சச்சரவில்லை, அமைதி யிருந்தது. மனிதன் மெள்ள மெள்ளத் தேவையை அதிகப் படுத்திக் கொண்டான். அதிகத் தேவை அதிருப்தியைத் தந்தது; அதிருப்தி அசூயையைத் தந்தது. அசூயை சர்ச்சை யைத் தந்தது. அதை விலக்கி அமைதியாக வாழ்க்கை நடத்த மனிதக் கூட்டங்களுக்குத் தலைவன் அவசியமா யிற்று. அந்த அவசியம் தலைவனைச் சிருஷ்டித்தது. ஆரம் பத்தில் தலைவன் தேவைக்கும் கூட்டத்தின் தேவைக்கும் வித்தியாசமில்லாதிருந்தது. காலம் வித்தியாசத்தை விரிய வைத்தது. தலைவன் அரசனானான். அரசுக்குத் தனி அலங்காரங்கள் ஏற்பட்டன. தனி அந்தஸ்து ஏற்பட்டது. அத்தகைய அரசனைக் காப்பதற்கு மக்களின் ஒரு கூட்டம் தேவைப்பட்டது. அது படை என்று பெயர் பெற்றது. இப்படி ஏற்பட்ட அரசர்கள் பொதுப் பணியைத் தனித்தனி சொந்த நாடுகளாகப் பிரித்துக் கொண்டனர். இப்படிப் பிரிந்த நாடுகளில் வளர்க்கப்பட்ட சுயநலம் (இதற்குத் தேசபக்தி என்பது தற்காலப் பெயர்) நாடுகளை மோத வைத்தது. அரசர்கள் பேச்சாளர்களானார்கள். இப்படி அதிருப்தி, அசூயை, தனிப்பட்ட நபர்கள் இழைத்த அநீதி அரசுகளாகவும் பேரரசுகளாகவும் வளர்ந்தன. அந்த அரசுகளிற் சில மறைவதற்கும் சில உறைவதற்கும் அநீதி

களே காரணமாயின. உதாரணமாக உங்கள் நாட்டையே எடுத்துக் கொள்ளுங்கள். இதைப் பரதகண்டம் என்று சொல்கிறார்கள். பரதன் என்ற அரசன் ஆண்டபோது இது ஒரே அரசாக இருந்தது. இப்பொழுது சேர, சோழ, பாண்டிய, கலிங்க, சாளுக்கிய நாடுகளாகப் பலபடி பிரிந்து விட்டது. அந்த நாடுகளும் அக்கம் பக்கத்தில் ஒற்றுமை யுடன் வாழ முடியவில்லை. வேங்கி நாட்டு அரியணையில் அமரவேண்டிய அநபாயர் இன்று மணிமுடியற்ற நாடோடியாகப் பாலூரில் திரிகிறார். பல போர்களைச் செய்ததால் போரில் சலிப்புற்றிருக்கும் வீர ராஜேந்திர சோழர் வேங்கியில் தலையிடாமல் அங்குள்ள அநீதியை அனுமதிக்கிறார். அந்த அநீதி காலக்கிரமத்தில் தமிழக மக்களிடையும், வேங்கி மக்களிடையும் கசப்பை உண்டு பண்ணும். காலம் அந்தக் கசப்பைப் பெரும் கனலாக்கும். அந்தக் கனல் வேங்கியிலுள்ள இந்த அரசை மாற்றிப் புது அரசை நிறுவும். அநபாயர் கண்டிப்பாய் மன்னனாவார், வேங்கிக்கு மட்டுமல்ல, தமிழகம் முழுவதற்குமே..."

இந்த இடத்தில் அநபாயன் ஏதோ சொல்லக் குறுக் கிட்டான். அவனைப் பேச வேண்டாமென்று சைகை யாலேயே தடை செய்த அகூதா மேலும் சொன்னான்: "குறுக்கிடாதீர்கள். குறுக்கிட்டால் என் சிந்தனை ஓட்டம் அறுபட்டுவிடும். நான் சொல்வதில் சந்தேகம் வேண்டாம். உங்கள் முகத்தின் குறுக்கே ஓடும் அந்தப் பச்சை நரம்பு பெரும் சாம்ராஜ்யாதிபதியைக் குறிக்கிறது. இரண்டு மூன்று நாடுகளின் ஆதிக்கமில்லாமல் யாரும் சாம்ராஜ் யாதிபதியாக முடியாது. வீரராஜேந்திரருக்கு அடுத்தபடி சோழ வேங்கி நாடுகளை நீங்கள் கண்டிப்பாக ஆளுவீர்கள். அது மட்டுமல்ல. இந்தக் கலிங்கத்தின் பிற்காலமும் உங்கள் கைகளில்தான் இருக்கிறது. நான் ஏதோ சந்தையில் சோதிடம் சொல்பவனைப்போல் உளறுவதாக நீங்கள் நினைக்கலாம். இல்லை இல்லை சூசகங்களை நிகழ்ச்சி

களைப் பார்த்தே முடிவுகளைச் சொல்கிறேன். சீனக் கடலிலிருந்து எரித்திரியக் கடல் வரை சஞ்சரித்திருக்கும் நான் பல நாடுகளின் சரித்திரங்களைக் கவனித்திருக்கிறேன். எல்லா நாடுகளின் கதையும் இதுதான். எங்கும் அநீதியைச் சிலர் தூண்டுகிறார்கள். அந்த அநீதிக்கு உட்பட்ட மக்கள் முதலில் துவளுகிறார்கள், பிறகு எழுச்சியடைகிறார்கள். அதன் பலன் பழைய அரசின் வீழ்ச்சி, புது அரசின் உதயம். எங்கும் இதே கதை. பாலூரிலும் சென்ற இரண்டு நாள்களாக இந்தக் கதையைத்தான் காண்கிறேன். தமிழர்கள் அனாவசியமாகத் துன்புறுத்தப்படுகிறார்கள். பலர் சிறையிலிருக்கிறார்கள். இன்னும் பலருக்குக் கசையடி கிடைக்கிறது. சிலர் வெளிநாட்டு மரக்கலங்களுக்கு அடிமைகளாக விற்கப்பட்டிருக்கிறார்கள். என்னிடம் அப்படி இருவர் இன்றுதான் விற்கப்பட்டிருக்கிறார்கள். நல்ல விலை கொடுத்து வாங்கியிருக்கிறேன். என் மரக்கலத்தின் துடுப்புகளைத் துழாவ அவர்களிருவரும் உதவுவார்கள். அதில் ஒருவனுக்கு ஏற்கெனவே மரக்கலம் ஓட்டும் பயிற்சியும் இருக்கிறது. ஆனால் விலை மட்டும் சற்று அதிகந்தான். ஒவ்வொரு தமிழனுக்கும் நூறு பொற்காசுகள் கொடுத்தேன். இதிலிருந்து உங்களுக்கு என்ன ஏற்படுகிறது?" என்று கேட்டுச் சற்றுப் பேச்சை நிறுத்தினான் அகூதா.

அதுவரை கனவில் சரித்திரக் கதையைக் கேட்பது போல் கேட்டுக் கொண்டிருந்த மூவருக்கும் அக்கதையின் கடைசிப் பகுதியைக் கேட்டதும் பெரும் சீற்றமே ஏற்பட்டது. அந்தச் சீற்றத்தை வெளிப்படையாகக் காட்டிய கருணாகர பல்லவன், "என்ன ஏற்படுகிறது? நீங்கள் உண்மையில் கொள்ளைக்காரர் என்றுதான் நினைத்திருந்தோம். இப்பொழுது அடிமை வியாபாரி யென்றும் ஏற்படுகிறது" என்றான்.

"வேறு எந்தவித செய்கையைத்தான் கொள்ளைக் காரனிடம் எதிர்பார்க்க முடியும்" என்று கிள்ளைக் குரலில் விஷமத்தையும் கலந்து உதிர்த்தாள் காஞ்சனாதேவி.

இத்தனைக்கும் அகூதாவின் முகத்தில் எந்தவிதக் கோபமோ வெறுப்போ உதயமாகவில்லை. அவன் கண்கள் இளைய பல்லவனையும் கடாரத்துக் கட்டழகியையும் இகழ்ச்சியுடன் பார்த்தன. "அந்த இரு தமிழர்களையும் நான் ஏன் வாங்கினேன் தெரியுமா?" என்று வினவினான் அகூதா, இளைய பல்லவனை நோக்கி.

"நீங்களே விளக்கலாம்" என்றான் இளைய பல்லவன் பதிலுக்கு.

"இருவரையும் இன்று மாலை வர்த்தகசாலைக்கு நடுவிலுள்ள கொடிமரங்களில் கட்டி ஆளுக்கு நூறு கசையடி கொடுக்க இந்த நாட்டு அதிகாரிகள் உத்தரவிட்டிருந்தார்கள். அந்த நூறு கசையடி கிடைத்திருந்தால்..." என்று ஆகூதா வாசகத்தை முடிக்காமல் விட்டான்.

"இருவரும் மூர்ச்சையாகிப் பிறகு ரணஜன்னி கண்டு இறந்திருப்பார்கள்" என்று அச்சத்துடன் கூறிய காஞ்சனா தேவி, தன் அழகிய பெரிய விழிகளை அகூதாமீது நிலைக்கவிட்டாள்.

"அத்தகைய சாவு எப்படியிருக்குமென்று உங்களுக்குத் தெரியாது. கசையடியின் தன்மையும் உங்களுக்குத் தெரியாது. எனக்குத் தெரியும். இதோ பாருங்கள்" என்ற அகூதா சரேலெனத் தன் மேலங்கியை நீக்கிச் சுழன்று முதுகுப்புறத்தை அவர்களுக்குக் காட்டினான்.

அந்த முதுகுப்புறத்தைக் கண்ட மூவரும் மூச்சை இழுத்துப் பிடித்துக் கொண்டனர். பட்டை பட்டையாகப் பல கசையடிகளின் தழும்பு அந்த முதுகை விகாரமாக அடித்திருந்தது. அந்த முதுகைக் கண்ட மற்ற மூவர் உணர்ச்சிகள் எப்படியிருந்தாலும் அமீரின் ராட்சஸ

விழிகளில் மட்டும் கண்ணீர் ஆறாகப் பிரவாகித்தது. குழந்தை போல் விக்கி விக்கி அழுதான் அமீர்.

அவன் விக்கல் காதில் விழவே சட்டென்று அங்கியை மூடி முதுகை மறைத்து அமீரைத் தன் ஒரு கையால் அணைத்துச் சமாதானப்படுத்திய அகூதா மற்றவர்களை நோக்கித் தன் விழிகளைத் திருப்பி, உங்களைவிடக் கசையடிகளின் தன்மை எனக்கு நன்றாகத் தெரியுமென்பதைப் புரிந்து கொண்டீர்களல்லவா? இன்னும் புரிந்துகொள்ளுங்கள். எந்தக் குற்றம் செய்ததற்காகவும் இந்தக் கசையடிகளை நான் பெறவில்லை. இவையும் அநீதியின் விளைவு. என் கதையை உங்களுக்கு முழுவதும் சொல்ல நான் இஷ்டப்படவில்லை. அதற்கு அவசியமுமில்லை. ஆனால் எங்கு அநீதியின் கரம் நீள்கிறதோ, எங்கு மாந்தர் துன்புறுத்தப்படுகிறார்களோ அங்கு நானிருந்தால் நான் வாளாவிருப்பதில்லை. அநீதிக்கு உட்பட்டவர்களை மீட்க முயலுகிறேன். அப்படி மீட்ட பலர் என்னிடம் அடிமைகளாயிருக்கிறார்கள். சாதாரணமான அடிமைகளல்ல. எனக்காக உயிரையும் கொடுக்கக் கூடியவர்கள். அமீரைக் கேட்டால் விவரமாகச் சொல்லுவான். இதிலிருந்து உங்களைத் தப்புவிப்பதில் எனக்குள்ள அக்கறையையும் ஓரளவு ஊகித்துக் கொள்ளலாம். நான் அநீதியை எங்கு கண்டாலும் களையத் தீர்மானித்திருக்கிறேன்" என்று கூறிய அகூதாவின் குரலில் உறுதி பூரணமாகத் தொனித்தது. அந்த உறுதியுடனேயே அவன் பேச்சைத் தொடர்ந்து, "அந்த அநீதியை நான் இங்கு காண்கிறேன், அநபாயரே! இந்தக் கலிங்கத்தில் தமிழர்கள் படும் பாடு உங்களையும் உங்கள் படைத்தலைவரையும் கொதிக்க வைத்திருக்கிறது. அந்தக் கொதிப்பு ஒருநாள் போராக மாறும். இந்தக் கலிங்கத்தில் பெருநாசம் ஏற்படும். ஏன் தெரியுமா?" என்று கேட்டான்.

"சொல்லுங்கள்" என்ற அநபாயன் குரலில் ஆச்சரியத்தின் சாயை மண்டிக்கிடந்தது.

"ஓர் அநீதியிலிருந்து இன்னோர் அநீதி விளைகிறது" என்றான் அகூதா.

"அநீதிக்குப் பதில் அநீதி செய்வது தமிழர் பழக்க மல்ல" என்றான் அநபாயன்.

"மனிதர் பழக்கம்" என்று உறுதியுடன் கூறினான் அகூதா.

"மனிதத் தன்மை வேறு."

"உண்மை. ஆனால் அது சமயத்தில் கைகொடுப்ப தில்லை. அறிவு நல்லது. ஆனால் அது சமயத்தில் வெறியாக மாறுகிறது. அந்த வெறிக்குக் காரணங்களைக் கூறுகிறோம். பழி வாங்குதல் மனித சுபாவம். பழி வாங்க லாம். வாங்க வேண்டியதுதான். ஆனால் கருணையைச் சற்று அதில் கலந்துகொள்ள வேண்டும். என் வழி அதுதான்."

"உங்கள் வழியா?"

அதையும் விளக்க முற்பட்ட அகூதா, "ஆம் அநபாயரே! நீங்களும் உங்கள் நண்பர் படைத்தலைவரும் என்னைப் பற்றி வணிகரிடம் விசாரித்த விஷயங்களைச் சொன்னீர்களல்லவா? அதில் சில சரி, சில தவறு" என்றான்.

"எது சரி? எது தவறு?" கருணாகர பல்லவன் கேட்டான் சற்றுக் குழப்பத்துடன்.

"நான் பிறந்த இடம் சீனாவிலுள்ள சங்கரி நதிதீரம் என்று சொன்னீர்கள்."

"ஆம்."

"அது சரி, அதில் தவறில்லை. ஆனால் நான் நூசென் என்ற மங்கோலிய வகுப்பைச் சேர்ந்தவன் என்று சொன்னீர்களே அது தவறு."

"தவறா?"

"ஆம், முற்றிலும் தவறு. உங்கள் நாட்டு வணிகர்கள் அரையும் குறையுமாகச் சொல்வதையெல்லாம் நீங்கள் பிரமாணமாக மதிக்கிறீர்கள். உங்கள் நாட்டைப் பற்றி எனக்கு ஓரளவுதான் தெரியும். எங்கள் நாட்டைப் பற்றியும் உங்கள் வணிகருக்கு ஓரளவுதான் தெரியும். உதாரணமாக, சீனா என்று எங்கள் நாட்டுக்கு ஏன் பெயர் வந்தது தெரியுமா?" என்று வினவினான் அகூதா.

"ஏன்?" என்று வினவினான் இளையபல்லவன்.

பதில் சொல்லத் துவங்கிய சீனக் கடலோடியின் சிறு விழிகளில் அன்பின் சாயை விரிந்தது. "உலகத்தின் மிகச் சிறந்த நாடுகளில் எங்கள் நாடு ஒன்று. மக்கள் மிகவும் நல்லவர்கள். சில வேளைகளில் தலைவர்கள் சிலர் ஏற்படுகிறார்கள். தங்கள் சுயநலத்திற்கு மக்களைத் தூண்டுகிறார்கள். சீனா! சீனா! பெயரே பட்டு மாதிரியிருக்கிறதல்லவா. •ட்ஸின் என்றால் பட்டு. எங்கள் நாடு பட்டு உற்பத்தியில் உலகத்திலேயே சிறந்தது. அதனால் ட்ஸின் நாடு பட்டு நாடு என்ற ஒரு பெயர் உண்டு. தவிர சுமார் 13 நூற்றாண்டுகளுக்கு முன் ட்ஸின் என்ற அரச குலம் ஆசியாவின் கிழக்குப் பகுதி முழுவதையும் ஆண்டு வந்தது. அதனால் அந்தக் குடும்பம் அரசாண்ட பகுதியை பாரத நாட்டுக் கடலோடிகள் சீனாவென்றும், அராபியர் ஸின் என்றும், யவனர்கள் சினாய் என்றும் அழைத்தார்கள். ஆனால் உங்கள் கடலோடிகள் அளித்த பெயர்தான் நிலைத்தது. அந்தச் சீனாவில் நூசென் என்ற இனத்தில் நான் பிறந்தேன் என்று சொன்னீர்கள். அது சரி. ஆனால் மங்கோலியரின் கிளை அது என்று சொன்னீர்களே, அது தவறு. மங்கோலியர்கள் காட்டுமிராண்டிகள், நாகரீக மற்றவர்கள். நூசென் அந்த வகுப்பின் கிளையல்ல. நாகரீகமுள்ள தார்த்தார் இனத்தின் கிளை. எங்களுக்கு

• Conquest by Man - by Paul Herman Page, 149

அந்த மங்கோலியரும், நீங்கள் சொன்ன கிதான், கின் வகுப்பினரும் இழைத்த அநீதியால் நான் கொள்ளைக் காரனானேன்."

"உம்" என்ற குரல் மட்டும் அநபாயனிடமிருந்து எழுந்தது.

"மங்கோலியர், கிதான், கின் இனத்தவர் மூர்க்கர்கள்; மனிதத் தன்மையில்லாதவர்கள். அவர்கள் அடிக்கடி வடக்கிலிருந்து கூட்டம் கூட்டமாக வந்து என் வகுப்பினரை நாசம் செய்தார்கள். பெண்களைக் கற்பழித்தார்கள். குழந்தைகளைக் கொலை செய்தார்கள். அந்த அநீதிகளிலிருந்து நான் எழுந்தேன். என் மக்கள் எழுந்தார்கள். பதிலுக்கு அவர்கள் பெண்களையும் குழந்தைகளையும் நாங்கள் சிறை பிடித்தோம்."

"அநீதிக்குப் பதில் அநீதி செய்ய தமிழர் விரும்புவதில்லை" என்றான் அநபாயன்.

"நாகரீகமுள்ள யாரும் விரும்புவதில்லை. ஆனால் விருப்பத்துக்கும் நீதிக்கும், நேர்மைக்கும் மாறாக நடக்க வேண்டிய சமயங்கள் சரித்திரங்களில் ஏற்படுகின்றன. மங்கோலிய கிதான், கின் இனத்தவர்களுக்கு நீதியின் சொல் புரியாது. வாளின் பதில் ஒன்றுதான் புரியும். ஆகையால்தான் அவர்களைச் சிறை பிடித்தேன். அவர்கள் இல்லங்களைச் சூறையாடினேன். அதனால் தூரத்திலிருக்கும் நீங்கள் என்னை இகழலாம். என் மக்கள் என்னை இகழ்வதில்லை. உங்கள் நாட்டுப் பழமொழியொன்றைக் கேட்டிருக்கிறேன். புலியிடம் வேதாந்தம் பேசிப் பயனில்லையென்று சொல்கிறார்கள். நாகரீக மற்றவர்களுக்கு வாள் ஒன்றுதான் பதில் சொல்ல முடியும்" என்று திட்டமாக அறிவித்தான் அகூதா.

அவன் சொன்னதில் உண்மைகள் பல இருப்பதை உணர்ந்தான் அநபாயன். அகூதாவை எத்தனை பிசகாக

மதிப்பிட்டுவிட்டோம் என்பதையும் புரிந்து கொண்டதால் தன் பெருந்தன்மையைக் காட்ட முற்பட்ட அநபாயன் ஆசனத்தினின்றும் எழுந்திருந்து, "சீனர் தலைவரே! உங்கள் சரிதம் என் மனத்தைத் தொடுகிறது. உங்களிடம் எங்களை ஒப்படைத்துக் கொள்கிறேன். ஆனால் ஒரு வேண்டுகோள்" என்றான்.

"சொல்லுங்கள் அநபாயரே!" என்றான் சீனக் கடலோடி.

"நீங்கள் விலைக்கு வாங்கிய இரு தமிழர்களையும் எங்களுடன் அனுப்ப வேண்டும். நீங்கள் செலுத்திய பொற் காசுகளை..." அநபாயனை இடைமறித்த அகூதா, "வேண் டாம், தரவேண்டாம். அவர்களைக் கூடவே அழைத்து வந்திருக்கிறேன். இதோ வரவழைக்கிறேன்" என்றபடி சீன பாஷையில் ஏதோ சில வார்த்தைகளைக் கூறினான்.

அடுத்த விநாடி வெகு வேகமாக அந்த அறையை விட்டு வெளியே நடந்த அமீர், சில விநாடிகளுக்கெல்லாம் அந்த இரு தமிழருடன் திரும்பி வந்தான். வந்த தமிழர் மட்டுமல்ல உள்ளே இருந்தவர்களும் ஒருவரைப் பார்த்து ஒருவர் பிரமித்து விழித்தனர். உண்மையில் சீனக் கடலோடி பெரும் மந்திரவாதியாகத்தானிருக்க வேண்டு மென்று இளையபல்லவன் நினைத்தான். அநபாயன் அப்படி நினைக்கவில்லை. அகூதாவுக்குத் தாங்கள் எத்தனை தூரம் கடமைப்பட்டு விட்டோம் என்ற பெரும் சுமைதான் அநபாயனின் இதயத்தில் ஏறிக்கொண்டது.



அத்தியாயம் 21

# பூர்வாங்கம் ஒரு கதை

சீனக் கடலோடியின் இதழ்களிலிருந்து சிதறிய இரண்டொரு சீனச் சொற்களைக் கேட்டதுமே வெகு துரிதமாக வெளியிலோடிய அரபு நாட்டு அமீர் இரண் டொரு விநாடிகளுக்கெல்லாம் அழைத்து வந்த இரண்டு தமிழர்களைக் கண்டதும், அறையிலிருந்த அநபாயன், இளையபல்லவன், காஞ்சனாதேவி ஆகிய மூவரும் பிரமிப் பின் எல்லையை எய்திய காரணத்தாலும், வந்த தமிழர் களும் வியப்பின் வரம்பை எட்டிவிட்டதால் திருதிரு வென விழித்து வாயடைத்து நின்றதாலும், சில விநாடிகள் அந்த அறையில் மௌனமே நிலவிக் கிடந்தது. பாலூர்ப் பெருந்துறையின் மூன்று நாள் நிகழ்ச்சிகளில் சிக்கிய அந்த ஐவரும் தாங்கள் இப்படி எதிர்பாராத விதமாகத் திடீரென அரபு நாட்டு வணிகனான அமீரின் உள்ளறையில் கூடும் சந்தர்ப்பம் ஏற்படுமென்றோ, அந்தச் சந்தர்ப்பமும் ஒரு சீனக் கொள்ளைக்காரனால் கிடைக்குமென்றோ தினை யளவும் நினைக்காததால் அவர்கள் மனங்களில் பற்பல விதமான எண்ணங்கள் பாய்ந்து பெரும் ஆறுகளாக ஓடிக் கொண்டிருந்தன. அந்த எண்ணங்களுக்கு உடனடியாக உருக்கொடுத்து, சொற்களை உதிர்க்கும் சக்தியை அந்த ஐவருமே இழந்திருந்ததைக் கவனித்ததால், ஏற்கெனவே முகத்தில் தவழ்ந்து கிடந்த புன்னகை நன்றாக விகசிக்கும் படி தன் இதழ்களை விரிவடையச் செய்த சீனக்

# கடல் புறா 21 சாண்டில்யன்







பூர்வாங்கம்
ஒரு கதை

கூடலோடியே மெள்ள உரையாடலைத் துவங்கி, "இந்த இரு தமிழரையும் உங்களுக்கு அறிமுகம் செய்துவைக்கும் பாக்கியம் எனக்கில்லை என்பதை உணர்ந்து கொண்டேன். அதுவும் ஒரு காரியத்திற்கு நல்லதுதான். அபாயமான பணிகளில் ஈடுபடும்போது, அதில் ஈடுபடுபவர்களுக்கு முன் பரிச்சயம் இருந்தால் அதுவே ஒரு பெரும் பலம்" என்று கூறி அநபாயனையும் மற்ற இருவரையும் தன் சிறு விழிகளால் நோக்கினான்.

அநபாயனோ இளைய பல்லவனோ இதற்குப் பதில் சொல்லாமல், வந்த இரு தமிழர்களையும் உற்று நோக்கியதி லேயே சில விநாடிகள் முனைந்ததல்லாமல் பிறகு பேசத் துவங்கிய போதும், அகூதாவிடம் பேச்சுக் கொடுக்காமல் அந்த இரு தமிழர்களிடம் சம்பாஷணையைத் தொடங் கவும் செய்தார்கள். முதன் முதலில் பேசத் துவங்கிய சோழர்குல இளவல், "வியப்பைத் தரும் சந்திப்பு இது" என்றான் அந்த இரு தமிழரையும் நோக்கி.

அநபாயன் பேசத் துவங்கிய பின்பும் பேசும் திறனை இழந்திருந்த தமிழர் இருவரும், பதில் சொல்லத் திராணி யில்லாத காரணத்தால், 'ஆம்' என்பதற்கு அறிகுறியாகத் தலையை மட்டும் அசைத்தனர்.

அடுத்து எழுந்த அநபாயன் சொற்களில் கருணை யோடு சீற்றமும் சிறிது கலந்தொலித்தது. "நீங்கள் கலிங்கக் காவலரிடமிருந்து விடுதலையடைந்து வந்திருப்பது எனக்குப் பெரும் மகிழ்ச்சியை அளிக்கிறது" என்று கூறிய போது அவன் குரலில் கனிவும் கனலும் கலந்து கிடந் தாலும் சொற்களை உதிர்த்து மூடிய அவன் உதடுகளில் மட்டும் கடுமை தெளிவாகத் தெரிந்தன.

அநபாயன் சொற்களில் கலந்தொலித்த மாறுபட்ட உணர்ச்சிகளால் ஓரளவு சுரணை பெற்ற அந்த இரு தமிழர்களில் ஒருவன், "இளவரசர் மகிழ்ச்சியில் ஓரளவு

வருத்தமும் கலந்திருப்பதாகத் தெரிகிறது" என்று மிகத் தாழ்மையாகவும், அந்தத் தாழ்மையிலும் சற்று ஏளனம் கலந்த தொனியிலும் பதில் சொன்னான்.

அந்தத் தமிழன் சொன்ன பதில் காஞ்சனாதேவிக்கோ அமீருக்கோ வியப்பாயிருந்திருக்கலாம். ஆனால் அந்தத் தமிழனை நன்கு அறியும் வாய்ப்புப் பெற்ற அநபாய னுக்கோ ஒரு இரவில் சில நிமிஷங்களே அறியும் வாய்ப்பை அடைந்திருந்த இளையபல்லவனுக்கோ எந்தவித வியப்பை யும் கொடுக்காததால் இருவரும் அவனைச் சற்றுக் கோபத் துடனேயே நோக்கினர். அந்தத் தமிழனிடம் அநபாயன் கொண்ட கோபத்திற்கும் இளைய பல்லவன் கொண்ட சீற்றத்துக்கும் பெருவித்தியாசமிருந்தது. அநபாயன் கொண்ட சினம் பாலூர்ப் பெருந்துறையை விட்டுக் கடாரத்து இளவரசியையும் அவள் தந்தையையும் காப்பாற்றி, சோழ நாடு அனுப்புவதைப் பொறுத்திருந்ததால், அத்தகைய பொறுப்பில் பங்குகொள்ள வேண்டிய இரு தமிழரும் அஜாக்கிரதையால் எதிரிகளிடம் சிக்கிக் கொண்டார்களே என்ற நினைப்பால் அவன் உள்ளம் பொங்கிக்கொண் டிருந்தது. ஆனால் இளையபல்லவன் கோபமோ, பாலூர்ப் பெருந்துறையில் தான் கால்வைத்த நாளன்றே துணிவைப் பெரிதும் காட்டிய அந்தச் சுங்க அதிகாரி, அந்தத் துணிவையும் இடக்காகப் பேசும் தன்மையையும், தான் அடிபணிய வேண்டிய அநபாயனிடமே காட்டுகிறானே என்ற எண்ணத்தால் கிளைத்தெழுந்தது. அதன் விளைவாக உக்கிரமான பார்வையொன்றைச் சுங்க அதிகாரிமீது வீசிய இளையபல்லவன், "தமிழகத்தின் குடிமகனான நீர் இளவரச ரிடம் பேச வேண்டிய முறை இது அல்ல" என்றான் குரலில் அந்த உக்கிரம் ஊடுருவி ஒலிக்க.

இளையபல்லவன் சீற்றமும், பேச்சும் கோபத்தை விளைவிப்பதற்குப் பதிலாக சுங்க அதிகாரிக்குச் சிரிப் பையே கொடுத்தாலும், அதை அவன் வெளிக்குக் காட்டா

மல், "சோழ நாட்டுக் குடிமகன் இப்பொழுதும் சீன நாட்டு அடிமை" என்று கூறித் தன் உண்மை நிலையை மிகுந்த விஷமத்துடன் இளைய பல்லவனுக்கு நினைப்பூட்டினான்.

இதைக் கேட்டதும் இளையபல்லவன் கோபம் அத்து மீறிக் கொண்டிருப்பதைக் கடைக்கண்ணால் கவனித்த அநபாயன்,• அவனைப் பேசாமலிருக்கும்படி சைகை செய்துவிட்டுச் சுங்க அதிகாரியை நோக்கி, "கண்டியத் தேவரே! உம்மையும் இந்தக் கூலவாணிகன் சேந்தனையும் இங்கு சந்தித்ததில் எனக்கேற்பட்டுள்ள வியப்பின் காரணம் உமக்குப் புரிகிறதா, இல்லையா?" என்று சற்றுக் கடுமையுடன் வினவினான்.

"இளவரசருக்கு இந்தச் சந்திப்பால் உண்டாகக் கூடிய வியப்பும் வருத்தமும் என்னைவிட வேறு யாருக்குப் புரியும்?" என்று கேட்டான் சுங்க அதிகாரியான கண்டியத் தேவன் பதிலுக்கு.

"எங்கள் விடுதலைக்கு மூன்று பேர்களைத்தான் முக்கியமாக நம்பியிருந்தேன்" என்று அநபாயன் மீண்டும் உணர்த்தினான்.

"தெரியும்," இந்த ஒற்றைச் சொல்லிலும் விளக்கத்தைக் காட்டினான் சுங்க அதிகாரி.

"அரபு நாட்டு அமீர் மூலம் இந்தப் பாலூரை விட்டு வெளியேறத் திட்டமிட்டுவிட்டுப் பிறகு உங்களை வர வழைக்கலாமென்றிருந்தேன்" என்றான் அநபாயன்.

"இப்பொழுது அந்தச் சிரமம் தங்களுக்கில்லை. நாங்களே வந்துவிட்டோம், ஆனால் ஒரு வித்தியாசம்" என்றான் கண்டியத்தேவன்.

"என்ன வித்தியாசம்?"

"உங்கள் விடுதலைக்கு எங்கள் கையை எதிர்பார்த் தீர்கள். ஆனால் இப்பொழுது எங்கள் விடுதலைக்கு

உங்கள் கையை எதிர்பார்க்கிறோம். நிலைமை தலைகீழாக மாறிவிட்டது."

"என் சொற்படி நடந்திருந்தால் இந்த நிலை ஏற்பட்டிருக்காது."

"உங்கள் சொற்படிதான் நடந்தோம்."

"நான் வழக்கமாகச் சந்திக்கும் இடத்தில் சந்தித் தீர்களா?"

"அதே இடத்தில்தான். சிறைக்குப் பின்புறமிருக்கும் அந்தச் சிறு வீட்டில்தான் சந்தித்தோம். ஆனால் அங்கு நாங்கள் மட்டும் சந்திக்கவில்லை."

"வேறு யார் சந்தித்தது?"

"பீமனும் எங்களைச் சந்தித்தான்."

இதைக் கேட்டதும் அநபாயன் புருவங்கள் வியப்பால் சற்றே மேல் நோக்கி எழுந்தன. "என்ன, பீமனா!" என்ற கேள்வியில் அந்த வியப்பின் ஒலி பலமாகப் பரவி நின்றது.

சுங்க அதிகாரி அநபாயனை நோக்கித் தலைதாழ்த்தி விட்டுச் சொன்னான்: "ஆம், அநபாயரே! பீமன் எங்க ளுக்கு முன்னதாக அந்தச் சிறு வீட்டிற்குள் காத்திருந்தான். நாங்களிருவரும் அந்த விடுதிக்குள் நுழைந்ததுமே வீரர் களைவிட்டு எங்களை சிறை செய்தான். எந்தெந்த இடங் களை ரகசிய இடங்களாக இந்த ஊரில் நாம் நினைத் திருந்தோமோ, அந்த இடங்களெல்லாம் இப்பொழுது பீமன் வசத்திலிருக்கின்றன. இதோ இருக்கும் கூலவாணிகர் மாளிகையை நமது ரகசிய இடமாக வைத்திருந்தோம். அந்த ரகசியம் அம்பலமாகி விட்டது. அவர் மாளிகை கைப்பற்றப்பட்டது. அவரும் ஒற்றராகச் சிறை செய்யப் பட்டார். வெளிநாட்டுப் பிரமுகர் வீதியில் குணவர்மரைத் தாங்கள் தங்க வைக்கச் சொன்ன விடுதியிலும் இப் பொழுது கலிங்க வீரர்கள் நிறைந்திருக்கிறார்கள். சிறைக் குப் பின்னாலிருக்கும் அந்தப் பழைய சிறு வீட்டையும்

என்னையும் பீமன் புரிந்துகொள்ளவில்லையென்று நினைத்தேன். அதுவும் தவறாகிவிட்டது. இந்தப் பாலூரிலுள்ள நமது ஒற்றரில்லங்களெல்லாம் இப்பொழுது கலிங்கத்து வீரர் வசமிருக்கின்றன. மற்றும்..."

"மற்றுமென்ன? சொல்லும் மேலே" அநபாயன் குரல் வறண்டு கிடந்தது.

"நீதி மண்டபத்திலிருந்து இளைய பல்லவரையும் மற்றத் தமிழரையும் நீங்கள் விடுவித்து வந்தீர்களல்லவா!"

"ஆம்."

"அதற்குப் பிறகு எந்தத் தமிழ் வீரனும் இந்தப் பாலூரின் கோட்டை வாயில்களில் காவல் செய்ய அனுமதிக்கப்படவில்லை.

இதைக் கேட்டதும் இளையபல்லவன் தன் ஆசனத்திலிருந்து பெரும் சீற்றத்துடன் எழுந்தான். அவனது ஈட்டிக் கண்கள் அநபாயனை ஒரு விநாடி நோக்கின. "அப்படியானால், பாலூரிலுள்ள தமிழ் வீரர்களை நாம் திரட்டி, கோட்டை வாயில்களில் பொருதி வெளியேறினாலென்ன?" என்று வினவினான்.

கண்டியத்தேவன் இளைய பல்லவனை நன்றாக ஏறெடுத்து நோக்கினான். "செய்யலாம். செய்வது சாத்தியமும்கூட. ஆனால் அதன் விளைவுகள் பயங்கரமாயிருக்கும்" என்றும் சொன்னான்.

"என்ன விளைவுகள்?"

"இப்பொழுது பாலூரில் தமிழர் ஓரளவுதான் துன்புறுத்தப்படுகிறார்கள். பெரும்பாலோர் மீது கண்காணிப்புதான் நடக்கிறது. என்னைப்போல் தீவிரமாக வேவுத் தொழில் ஈடுபடுபவர்மீதுதான் கடுமையான நடவடிக்கை எடுக்கப்படுகிறது. இதற்குக் காரணம் இந்தப் பாலூரின் ஜனத்தொகை அமைப்பு, படைப் பகுதிகளின் அமைப்பு. பாலூரில் மூன்றிலொரு பங்கு தமிழர்

இருக்கிறார்கள். படைப் பிரிவும் அந்தக் கணக்கில் தானிருக்கிறது. படையை முழுவதும் விரோதித்துக் கொள்வது பலனளிக்காது என்பதைப் பீமனும் அனந்த வர்மனும் உணர்ந்திருக்கிறார்கள். படையிலிருக்கும் தமிழர் புரட்சி செய்தால் பாலூரில் உண்டாகக்கூடிய நிலைமை யும் அவர்களுக்குத் தெரியும். அந்தப் பயம் அவர்கள் கொடுஞ்செயல்களைத் தேக்கியிருக்கிறது. தமிழ்ப் படைப் பிரிவை நாம் திரட்டி, கோட்டைக் காவலை உடைக்க முயன்றால் அடுத்து வருவது இரண்டு நாள் பாலூர்ப் போர். பிறகு சோழர் கலிங்கர் போர். இதற்கிடையே தமிழர்கள் பெருநாசம். நால்வர் விடுதலைக்காக இந்த நிலைமையை நாம் சிருஷ்டிப்பதானால் நீங்கள் சொல்லும் திட்டத்தை நாம் கடைப்பிடிக்கலாம்" என்றான் சுங்க அதிகாரி.

மேற்கொண்டு ஏதோ பேச முயன்ற இளைய பல்லவ னைத் தன் பார்வையொன்றினாலேயே தடை செய்த அநபாயன், சுங்க அதிகாரியை நோக்கி, "முடியாது, முடி யாது. அந்தத் திட்டத்தை நாம் கடைப்பிடிக்க முடியாது. சோழநாட்டுக்கும் கலிங்கத்துக்கும் போர் நிகழ்வதானால் அதற்குக் காரணம் நாமாக இருக்கக் கூடாது. போரைத் தூண்டும் பொறுப்பு பீமனுக்கும் அனந்தவர்மனுக்குமே இருக்கட்டும்" என்று கூறினான். பிறகு சற்று நிதானித்து விட்டு, "அப்படியானால் எந்தக் கோட்டை வாசல் மூலமும் வெளியேற முடியாதா? பலவீனமான காவல் எங்கும் இல்லையா?" என்றும் வினவினான் சுங்க அதிகாரியை நோக்கி.

சுங்க அதிகாரி சொன்னான்: "அநபாயரே! இந்தப் பாலூர்ப் பெருந்துறையில் நான் அறியாத இடமோ வீரர் களோ கிடையாதென்பது தங்களுக்குத் தெரியும். இந்தக் கூலவாணிகர் இங்கு வருவதற்கு வெகுநாள்களுக்கு முன் னிருந்தே பாலூரின் சுங்கச்சாவடியில் மேலுக்கும் உண்மை

யில் சோழநாட்டு அலுவலுக்கும் நான் பணி புரிந்து வருவது தங்களுக்குத் தெரியும். ஆகவே, உள்ள நிலை மையை உள்ளபடி சொல்கிறேன். நாம் எந்தெந்த இடங் களை ரகசியமென்று வைத்திருந்தோமோ அந்த இடங்க ளெல்லாம் கலிங்க வீரர்கள் கையிலிருக்கின்றன. அங்கு நாம் நிறுத்தியிருந்த புரவிகள் வணிகப் பொருள்களை ஏற்றிச் செல்லும் வண்டிகள் அனைத்தும் கலிங்கத்தின் குதிரை சாலைகளுக்கும், வாகனக் கூடங்களுக்கும் பறந்து விட்டன. அது தவிர உங்கள் நால்வரைப் பற்றிய அடை யாளங்களும், ஒவ்வொரு கோட்டை வாயில் காவலருக்கும் விவரமாக எடுத்துச் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆகவே, நீங்கள் நால்வரும் தனித்தனியாகச் சென்றாலே கோட்டை வாயில்களைக் கடப்பது கஷ்டம். நால்வரும் சேர்ந்து சென் றால் கண்டிப்பாய்க் கடக்க முடியாது. நிலமார்க்கமும் அறவே அடைக்கப்பட்டு விட்டது. நிலவழியில் கோட்டை யைக் கடந்தாலும், அதற்கப்பால் ஒரு காதத்துக்கு வரிசையாக உள்ள சுங்கச் சாவடிகளில் ஏதாவதொன்றில் கண்டிப்பாய்ச் சிறைப்படுவீர்கள். கடலில் மட்டும் சுங்கச் சாவடிகளை ஏற்படுத்த முடியாது. கடலை அடைந்து விட்டால் தப்பலாம். ஆனால் கடலுக்குச் செல்லும் வாயில்களில் கடுமையான காவலும் சோதனைகளும் இருக்கின்றன. அமானுஷ்யமான அதி யுக்தியான ஏதாவ தோர் அற்புதத் திட்டம் இருந்தாலொழிய இந்த ஊரை விட்டு நாம் வெளியேற முடியாதென்று நினைக்கிறேன். "இதைச் சொல்லி முடித்த சுங்க அதிகாரி உள்ள நிலையை நினைத்துச் சோகப் பெருமூச்சு ஒன்றும் விட்டான்.

சுங்க அதிகாரியின் விவரணத்தைக் கேட்டதும் தீவிர சிந்தனையில் ஆழ்ந்தான் அநபாயன். இளைய பல்லவ னுக்கு மட்டும் சுங்க அதிகாரி அளவுக்குமீறி அபாயத்தை எடுத்துச் சொல்வதாகத் தோன்றியதால், "நாம் அனாவசிய மாக அஞ்சுகிறோமென்று நினைக்கிறேன். நம்மைப்

பிடிக்கப் பீமன் வலை விரித்திருக்கலாம். ஆனால் அதை நீக்கவோ அல்லது அறுக்கவோ நமக்குச் சக்தியில்லையா என்ன?" என்று சீறினான்.

அநபாயன் கண்கள் இளைய பல்லவனை நோக்கிக் கடுமையுடன் திரும்பின. "கருணாகரா! கண்டியத் தேவரை நீ சரியாக அறியமாட்டாய். ராணுவ தந்திரத்தில் இணையற்றவர். நகரங்களில் கேந்திரங்களை அறிவதில் பிரசித்தி பெற்றவர். நிலைமை அபாயம் என்று அவர் சொன்னால் நிலைமை அபாயந்தான். பீமனையும் பாலூர்த் துறைமுகத்தையும் அவரைவிட அறிந்தவர்கள் வேறு யாரும் கிடையாது. தப்புவது அசாத்தியம் என்று அவர் சொன்னால் அது அசாத்தியம்தான்" என்றான் திட்டமாக.

"அப்படியானால் நாம் கையைக் கட்டிக் கொண்டு அமீரின் இல்லத்திலேயே இருக்க வேண்டியதுதானா?" என்ற இளைய பல்லவனின் குரலில் இகழ்ச்சி பலமாகத் தொனித்தது.

இளையபல்லவன் குரலில் தொனித்த இகழ்ச்சியை அநபாயன் கவனிக்கவே செய்தான். இருப்பினும் அதைப் பொருட்படுத்தாமல், "அசாத்தியம் என்ற சொல் என் அகராதியில் இல்லை. கருணாகரா. இதில் சம்பந்தப் பட்டிருப்பது நாம் இருவர் மட்டுமானால் இங்கு உட்கார்ந் திருப்பதைவிட எத்தகைய அபாயமுள்ள திட்டத்திலும் ஈடுபடலாம். ஆனால் கடாரத்தின் மன்னர் குலத்தின் நலன் இதில் சம்பந்தப்பட்டிருக்கிறது. ஆகவே, நல்ல, கூடிய வரையில் வெற்றி தரக்கூடிய திட்டத்தை நாம் வகுக்க வேண்டும்" என்று கருணாகர பல்லவனை நோக்கிக் கூறிவிட்டு, அந்த அறையிலிருந்த மற்றவர்கள் மீதும் கண்களைத் திருப்பி, "உங்கள் யாருக்காவது ஏதாவது வழி புலப்படுகிறதா?" என்று வினவினான்.

யாரும் பதில் சொல்லவில்லை. நிலைமையின் நெருக்கடி அவர்கள் வாயை அடைத்திருந்தது. "நாம்

தப்பத் திட்டம் வகுக்கக்கூடியவர்கள் இங்கு யாருமே இல்லையா?" என்று கடைசியாகச் சலித்துக் கொண்டான் அநபாயன்.

அதுவரை நடந்த சம்பாஷணையில் பங்கு கொள்ளாத அகூதா அநபாயனை இடைமறித்துக் கூறினான், "இத்தகைய சமயத்தில் சரியான திட்டத்தை வகுக்கக் கூடிய திறமை இங்கு ஒருவருக்குத்தான் உண்டு" என்று.

"யாரது?" அநபாயனும் இளைய பல்லவனும் ஏக காலத்தில் கேள்வியைத் தொடுத்தார்கள்.

சீனக் கடலோடி மெள்ள நகைத்தான். அவனது சின்னஞ்சிறு ஈட்டி விழிகள் அமீரை நோக்கித் திரும்பின. ராட்சஸனைப் போலிருந்த அமீர் வெட்கத்தால் மிகவும் சங்கடப்பட்டான். தலையை இருமுறை அப்படியும் இப்படியும் ஆட்டிக் குழைந்து மற்றவர்களை நோக்கினான்.

கொள்ளைக்காரனான சீனக் கடலோடி அமீரைப் பற்றிச் சிறப்பித்துச் சொல்லியது மற்றவர்களுக்கு வியப்பா யிருந்ததேயொழிய அநபாயனுக்குச் சிறிதும் வியப்பில்லை. "உனக்கு ஏதாவது யோசனையிருந்தால் சொல் அமீர்" என்று கேட்டான் அநபாயன்.

"ஒரு சிறு திட்டத்தை இந்த ஏழை ஏற்கெனவே வகுத் திருக்கிறேன்" என்று மிகுந்த பணிவன்புடன் சொன்னான் அமீர்.

"என்ன திட்டம் அமீர்?" என்று அநபாயன் ஆவலுடன் வினவினான்.

"அதற்குப் பூர்வாங்கம் ஒரு கதை" என்று அமீர் கதையையும் துவக்கினான். திட்டத்தையும் சொன்னான். இரண்டுமே பெரிய விந்தையாயிருந்தன கேட்டவர்களுக்கு. விந்தையில் பேராபத்தும் துணிவும் கூடக் கலந்திருந்தன.

அத்தியாயம் 22

# காந்தம் இழுக்கிறது

சோழ சாம்ராஜ்ய பீடத்தில் அமரக்கூடியவனும் இணையற்ற துணிவும், வீரமும் கொண்டவனுமான சோழர் குல இளவலான அநபாயனும், இளவயதிலேயே பல போர்களில் வெற்றி வாகை சூடியதால் எதிரிகள் மறைவிலும் அச்சத்துடன் பெயரை உச்சரிக்கும் கீர்த்தி வாய்ந்த கருணாகர பல்லவனும், ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தின் விதியை நிர்ணயிக்கக் கடாரத்திலிருந்து வந்திருந்தவளும், தந்தையைப் பிரிந்து தன்னந்தனியாக மற்ற ஆண்களின் மத்தியில் உட்கார்ந்திருந்த அந்தச் சமயத்திலும் சிறிதும் குழப்பத்தையோ பயத்தையோ காட்டாதவளும் கட்டழகுக் கன்னியுமான காஞ்சனாதேவியும், ராஜ தந்திரத்திலும் பிற நாடுகளின் நகர அமைப்புகளையும் போர் பொறிக் கூடங் களை அறிவதிலும் நிகரற்றவனென்று அநபாயனாலேயே போற்றப்பெற்ற பாலூர்ப் பெருந்துறைச் சுங்க அதிகாரி கண்டியத்தேவனும் குழுமியிருந்த அந்த இடத்தில், அவர் களுக்கெல்லாம் விமோசனத்தை அளிக்க வழி சொல்லக் கூடியவன் தான் ஒருவனேயென்று சீனக் கடலோடியான அகூதா சுட்டிக் காட்டியதுமே, மிதமிஞ்சிய வெட்கத் தாலும், சங்கடத்தாலும், திண்டாடிய அரபு நாட்டு அமீர் அநபாயனே தன்னை நேரிடையாக யோசனை கேட்டதும், விவரிக்க இயலாத இன்ப வேதனையை அடைந்தான். அதன் விளைவாகத் தன் பிரும்மாண்ட மான சரீரத்தைச் சற்றுக் குறுக்கியும், திருப்பியும் அவஸ் தைப்பட்டதன்றி, தன் பெருவழிகளை அவர்களை நோக்கிச் சுற்றவிட்டபோது, ஓரளவு அச்சத்துடனும்,

சஞ்சலத்துடனுமே அவர்களைக் கவனித்தான். முன்னேற் பாடாகத் தான் திட்டத்தை வகுத்துவிட்டுச் சீனக் கடலோடியான தன் குருநாதர் உட்பட அந்தப் பிரமுகர் களையெல்லாம் வீண் தர்க்கத்தில் நீண்ட நேரம் நிலைக்க விட்டது பற்றி அவர்கள் தவறாக ஏதாவது எண்ணி விட்டால் என்ன செய்வதென்ற பயம் அவன் இதயத்தில் ஏற்பட்டது. அதைத் தவிர, திட்டமும் பெரும் வீரர்கள் விரும்பி ஒப்புக்கொள்ள முடியாத திட்டமாயிருந்ததால், அதை எப்படிச் சொல்வதென்ற அச்சமும் அவனுக்கு உண்டாகவே அவன் அதைப்பற்றி ஆரம்பத்தில் நேரடி யாகப் பிரஸ்தாபிக்காமல் சுற்றி வளைத்தே விவரிக்கத் தொடங்கினான்.

திட்டத்தை விவரிக்கு முன்பு அவன் அடைந்த சங்க டங்களும் அவற்றின் காரணங்களும் சீனக் கடல் வீரனான அகூதாவுக்கு மிகவும் தெளிவாகத் தெரிந்ததால் அவன் அமீரை நோக்கி, "இதில் சங்கடமோ வெட்கமோ அடைய வேண்டிய அவசியம் ஏதுமில்லை அமீர். நிலைமை அபாய மானது. பெரும் அரசுகளை நிர்வகிக்க வேண்டியவர்களின் நலன் சம்பந்தப்பட்டிருக்கிறது. ஆகவே திட்டத்தின் முடிவு நற்பலனைத் தருமானால் அதன் மார்க்கங்களைப் பற்றியோ முறைகளைப் பற்றியோ நாம் அதிகமாகக் கவனிக்க வேண்டியதில்லை" என்று கூறிவிட்டுத் தன் கருத்துக்கு ஆதரவிருக்கிறதா என்பதை அறிய அநபாயனையும் இளைய பல்லவனையும் நோக்கினான்.

அமீரின் திட்டத்தையோ திட்டம் நிறைவேற்றப் படுவ தற்கான முறைகளையோ அறியாத அநபாயரின் முகத் திலோ கருணாகரனின் பார்வையிலோ அதற்கு எந்த விதமான பதிலும் கிடைக்காவிட்டாலும், திட்டமான எதிர்ப்பு காஞ்சனாதேவியிடமிருந்து வரவே எதற்கும் கலங்காத அகூதாவே சிறிது கலக்கம் கொண்டான். அதுவரை நடந்ததையெல்லாம் பார்த்துக்கொண்டும்

சொல்லப் பட்டதையெல்லாம் செவி மடுத்துக் கொண்டும் முகவாய்க் கட்டையில் ஒரு கரத்தை ஊன்றி, சிரத்தை சற்றே ஒருக்களித்து. தன் அஞ்சன விழிகளை அகல விரித்து உட்கார்ந்திருந்த காஞ்சனாதேவி, "முடிவு மட்டும் முக்கிய மல்ல சீனத் தலைவரே, முறைகளும் முக்கியம். தவறான முறைகளைக் கொண்டு சாதிக்கப்படும் முடிவுகள் இறுதி யில் விபரீத விளைவையே கொடுக்கும்" என்று தன் அழகிய உதடுகளை மெள்ளத் திறந்து சொற்களை மிக இன்பமாக உதிர்த்தாள்.

அத்தனை நாழிகையாக உதிர்ந்த ஆண் மக்களின் கரகரத்த கடுமையான குரல்களுக்குப் பரிகாரம் செய்யும் பாணியில் இன்ப நாதம்போல் திடீரென அறைக்குள் உருவாகிய அந்தக் கிள்ளைக் குரலைக் கேட்டதும், அறையி லிருந்த அனைவரும் அது வந்த திசையில் கண்களைத் திருப்பினர். மற்றவர்களுக்கெல்லாம் சற்றுப் பின்னடைந்து இளைய பல்லவனுக்கு அடுத்தபடி லேசாக ஒதுங்கிக் கடைசியில் உட்கார்ந்திருந்த காஞ்சனா தேவியின் கண் களில் ஆழ்ந்த சிந்தனை தெரிந்ததை மற்றவர்கள் கண்கள் பார்க்கவே செய்தன. அந்த ஆழ்ந்த சிந்தனையால் அந்தக் கண்கள் மயக்கம் தரும் பார்வையொன்றை வீசினாலும் அந்த மயக்கத்தினூடே ஒரு தெளிவும் உறுதியும் சென்று கொண்டிருந்ததைக் கவனித்தான் சீனக் கடலோடியான அகூதா. அப்படிக் கவனித்ததால் அந்தப் பெண்ணிடம் அவனுக்கு முதலில் ஏற்பட்ட அன்பு பல மடங்கு பெருகியதன்றி, அமீரின் திட்டத்தில் ஏதோ ஒப்புக்கொள்ள முடியாத ஓர் அம்சம் கலந்திருப்பதை அவள் புரிந்து கொண்டு விட்டாளென்பதையும் அவன் அறிந்து கொண் டதால், அவளது கூரிய அறிவை எண்ணிப் பெரிதும் வியந்தான். மேலே அவள் பேசப் பேச அந்த வியப்பும் அவள்மீது அவனுக்கு ஏற்பட்ட மதிப்பும் வளர்ந்து கொண்டே போயின. அந்தச் சம்பாஷணைத் தொடருக்கு

அவனே வித்திட்டான். ஏனென்றால் ஆரம்பக் கருத்து அவனுடையதாயிருந்தது. அந்தக் கருத்தைக் காஞ்சனா தேவி வெட்டிப் பேசிவிட்டதால், அதை விளக்குவதும் அவள் சந்தேகத்தை நிவர்த்திப்பதும் அவன் கடமையா யிற்று. ஆகவே அவள் ஆட்சேபணைக்குப் பதில் கூற முற்பட்ட சீனக்கடலோடி சொன்னான், "தேவி! முறைகள் தவறா சரியா என்பது சந்தர்ப்பங்களைப் பொறுத்தது," என்று.

காஞ்சனாதேவியின் அழகிய விழிகள் சிறிதும் அச்ச மின்றி கொள்ளைக்காரனென்றும், கொடுமையின் அவதார மென்றும், பெயர் பெற்ற அகூதாவை நன்றாக ஏறெடுத்து நோக்கின. "சந்தர்ப்பங்களைப் பொறுத்து மட்டும் முறை களைக் கையாளுவது தவறு, சீனத் தலைவரே!" என்று அவள் திட்டமாகக் கூறினாள்.

அகூதாவின் சின்னஞ்சிறு ஈட்டி விழிகளில் ஆச்சரியம் மேலும் படர்ந்தது. காஞ்சனாதேவியின் தைரியத்தைப் பற்றி அவன் உள்ளத்தில் பெரும் பக்தியும் உண்டாயிற்று. 'இவள் கடாரத்தை மட்டுமல்ல. ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத் தையே அரசாளத் தகுந்தவள்' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான் அகூதா. அவள் பேச்சுக்கு அவன் பதில் சொன்னபோது, அவன் குரலிலும் அந்தப் பக்தி விளக்க மாகத் தெரிந்தது. "சந்தர்ப்பங்கள் தாமாகவே முறைகளைச் சிருஷ்டிக்கின்றன தேவி!" என்றான் சீனக் கடலோடி.

"தவறு சீனத் தலைவரே! சந்தர்ப்பங்கள் நம்மைச் சூழ்ந்து கொள்கின்றன. நாம் அவற்றிலிருந்து விடுவித்துக் கொள்ளப் பார்க்கிறோம். ஆகவே விடுவித்துக்கொள்ள முறைகளை நாம்தான் வகுக்கிறோம். சந்தர்ப்பங்களல்ல வகுப்பது" என்றாள் காஞ்சனாதேவி உறுதியுடன், சற்றே தன் பூவிதழ்களை மடித்து.

"நான் அப்படி நினைக்கவில்லை தேவி. சந்தர்ப்பங்கள் தான் முறைகளை வகுக்க நம்மைத் தூண்டுகின்றன. அது

மட்டுமல்ல, பழைய வழிகள் அடைபடும்போது புது வழி களுக்கும் முறைகளுக்கும் கோடி காட்டுவதும் சந்தர்ப்பங் கள்தான்," என்ற அகூதா மேலும் விவரிக்கத் தொடங்கி, "நான் அமீரிடம் அறிந்த விஷயங்கள் சரியானால், உண்மை நிலை இதுதான். நீங்களும் உங்கள் தந்தையும் இளைய பல்லவரும் அமைதியான பாலூர்ப் பெருந்துறையை நாடி வந்தீர்கள். ஆனால் உங்களை எதிர்நோக்கி நின்றது அமைதியுள்ள பாலூர்ப் பெருந்துறையல்ல. உங்களை நசுக்கிவிடத் தீர்மானித்துள்ள கடுமையான கலிங்கத்தின் கடல்வாசல். சூழ்நிலை விபரீதமாயிருந்தது. சந்தர்ப்பங்கள் மாறுபட்டிருக்கின்றன. தூதர் என்ற முறையில் நாகரிகமாக வரவேற்கப்பட வேண்டிய கருணாகர பல்லவர், வாள் முனையில் வரவேற்கப்பட்டார். இளவரசராக, அரச விருந்தினராக, அரண்மனையிலிருக்க வேண்டிய அநபாயர், ஊரில் தலைமறைவாகத் திரிந்து அவ்வப் பொழுது தலையை நீட்டுகிறார். இரண்டு கப்பல்களுடன் வர்த்தக நிமித்தமாகப் பாலூர் வந்த நான் வாணிபத்தை முடித்துக்கொண்டு எந்தவிதக் கஷ்டமுமில்லாமல் நங் கூரத்தை நீக்கிக் கடலில் செல்லலாம். ஆனால் அமீரைத் திடீரென்று கடற்கரையில் சந்திக்கும் சந்தர்ப்பம் கிடைக் கிறது. அந்தச் சந்தர்ப்பம் திருடனைப்போல் இங்கு வந்து ரகசிய யோசனையில் உங்களுடன் கலந்துகொள்ளும் வாய்ப்பை அளித்திருக்கிறது. பெரும் ராஜ குடும்பங்களைக் காப்பாற்றும் பொறுப்பு அநபாயரைப் போலவே எனக்கும் ஏற்பட்டிருக்கிறது. ஆகையால் எதையும் நாமாகத் தீர்மானித்துவிட முடியாது. நமது இஷ்டப்படி காரியங்கள் நடக்கவும் முடியாது. சந்தர்ப்பங்களையொட்டி முறைகளை வகுப்பதுதான் விவேகம். அந்த விவேகம் அமீருக்கு உண்டு. ஏதோ சங்கடமான முறையை வகுத்திருக்கிறான் அமீர். அதனால்தான் சங்கடப்படுகிறான்" என்று கூறிவிட்டு, அமீரை நோக்கித் திரும்பி "எதுவாயிருந்தாலும் பாதக மில்லை. சொல் அமீர்" என்று அமீரை ஊக்கவும் செய்தான்.

அமீர் தன் பெருவிழிகளால் அநபாயன் முகத்தையும் இளையபல்லவன் முகத்தையும் சில விநாடிகள் துழாவி விட்டுப் பிறகு காஞ்சனாதேவியை நோக்கிச் சொன்னான். "இளவரசி! என் திட்டமோ அதன் முறைகளோ உங்க ளுக்குத் திருப்தியில்லாவிட்டால் வேண்டாமென்று தள்ளிவிடலாம். ஆனால் என் திட்டத்தைவிட வேறு வழி யில்லை யென்று எனக்குத் தோன்றுகிறது. ஊர் நிலைமை உங்களுக்கு இப்பொழுது புரிந்திருக்க வேண்டும். அதைக் கண்டியத்தேவர் மிகத் தெளிவாக எடுத்துச் சொல்லி விட்டார். இந்த நிலையில் பாலூரில் எந்த இடத்திலும் நீங்கள் தலையைக் காட்ட முடியாது. காட்டினால் தப்பிச் செல்லவும் முடியாது."

அமீரின் இந்த வார்த்தைகளுக்குப் பிறகு அந்த அறையில் அமைதியே நிலவியது. அமீர் மேற்கொண்டு என்ன சொல்லப் போகிறான் என்பதை அனைவரும் எதிர்பார்த்து நின்றார்கள்.

அவன் தொடர்ந்தான்: "அம்மணி! இதோ இருக்கும் அகூதா, அநபாயர், இளையபல்லவர் இவர்கள் மூவரின் வீரத்தில் மட்டுமல்ல, உங்கள் வீரத்திலும் எனக்குச் சந்தேகம் சிறிதும் இல்லை. அநபாயர் இளையபல்லவர் இவர்கள் வீரச் செயல்களைப்பற்றி இந்தப் பாலூரிலும் பல கதைகள் உலாவுகின்றன. இருவரையும் தமிழர்கள் தெய்வங் களைப்போல் பாவிக்கிறார்கள். அகூதாவின் வீரத்தை நான் நேரிடப் பார்த்திருக்கிறேன். உலகத்தின் மாபெரும் வீரர்களில் என் குருநாதர் ஒருவர். கடலில் இவருடைய ஒரே மரக்கலம் சீன அரசாங்கத்தின் பல மரக்கலங்களை ஒரேசமயத்தில் முறியடித்து ஓடச் செய்திருப்பதை நான் இந்த என் இரு கண்களாலும் கண்டிருக்கிறேன். உங்கள் வீரத்தைப் பற்றி நான் என்ன சொல்ல? அநபாயருக்கு அருகில் நாண் இழுத்து நின்று அனந்தவர்மனையே அச்சுறுத்திய உங்கள் செய்கை இன்று பிற்பகலே பாலூரில்

தியாகப் பரவிவிட்டது. இத்தனை வீரம் பொருந்திய உங்கள் அனைவருக்கும் சிறிதும் வீரமற்ற ஏன் கோழைத் தனமாகக்கூடத் தோன்றக்கூடிய ஒரு திட்டத்தைச் சொல்வேனானால், அதற்குக் காரணம் உங்கள் வீரத்தி லுள்ள அவநம்பிக்கையல்ல, உங்கள் நலனில் எனக்குள்ள அக்கறை; உங்களை எப்படியாவது இந்தப் பாலூரிலிருந்து காப்பாற்ற வேண்டும் என்ற எனது ஊக்கம்..." என்று அமீர் மேலே சொல்லாமல் சிறிது தடுமாறினான்.

அவன் எதையோ சொல்ல சங்கடப்படுகிறானென் பதை அறிந்துகொண்ட அநபாயன், "பயப்பட வேண் டாம், எதுவாயிருந்தாலும் சொல் அமீர். ஏற்றுக்கொள் வதும், கொள்ளாததும் எங்களைப் பொறுத்தது" என்று அமீருக்குத் தைரியத்தைச் சற்று புகட்டினான்.

சற்று தைரியமடைந்த அமீர், அநபாயனை நோக்கி, "அநபாயரே! இளைய பல்லவரையும் கடாரத்து அரசர், இளவரசி, இவர்களையும் தப்புவிக்கத் தாங்கள் திட்ட மிடச் சொன்னபோதே ஊர் நிலையைக் கவனித்தேன். மிகவும் பயங்கரமாயிருந்தது. நேர் வழியில் இங்கிருந்து தப்ப முடியாதென்பதைப் புரிந்துகொண்டேன். மிகவும் திண்டாடினேன். தத்தளித்தேன். கடைசியில் ஒரு முடி வுக்கு வந்தேன்" என்றான்.

"என்ன முடிவுக்கு வந்தாய் அமீர்?" என்று வினவி னான் அநபாயன்.

"இந்த ஊரில் என் வியாபாரத்துக்கு ஒரு முற்றுப் புள்ளி வைத்துவிடுவதென்று முடிவு கட்டிவிட்டேன்" என்றான் அமீர்.

சர்வசாதாரணமாகத்தான் அமீர் அந்த வார்த்தை களைச் சொன்னான். ஆனால் அதன் விளைவு என்ன வென்பதைப் புரிந்து கொண்டதால் அந்த அறையிலிருந்த மற்றவர்கள் திகைப்பும் ஆச்சரியமும் கலந்த உணர்ச்சி

களுக்கு வசப்பட்டனர். அநபாயனுக்கும் சீனக் கடலோடிக்கும் மட்டும் நண்பனும், தங்களை முன்பின் அறியாதவனுமான அந்த அரபு நாட்டு வணிகன் பாலூரில் பல வருஷங்களாக நிறுவி வளர்த்த வாணிபத்தை ஏறக்கட்டுவதென்றால் காரணம் தங்கள் நல்வாழ்வாகத்தானிருக்க வேண்டுமென்பதைப் புரிந்துகொண்ட காஞ்சனா தேவியும், இளைய பல்லவனும் திகைப்பு ஆச்சரியம் இவற்றுடன் மதிப்பும் கொண்ட பார்வையை அவன்மீது வீசினார்கள். அத்தகைய பெரிய தியாகம் நியாயமற்றது என்பதை உணர்ந்த இளைய பல்லவன், தன் ஆசனத்தை விட்டுச் சரேலென எழுந்தான். "நியாயமில்லை வணிகரே! இது நியாயமில்லை. எங்களுக்காக உங்கள் வாழ்வை நாசப்படுத்திக் கொள்வது நியாயமில்லை" என்று சற்று இரைந்தே அமீரை நோக்கிக் கூறவும் செய்தான்.

அமீரின் சிவந்த பெருவிழிகள் கம்பீரமாக இளைய பல்லவனை ஏறெடுத்து நோக்கின. "இதில் நியாயப் பிசகான காரியம் ஏதுமில்லை இளைய பல்லவரே!"

"எங்களைக் காப்பாற்ற உங்கள் வாணிபத்தை ஏறக்கட்டுவது நியாயமல்ல" என்று மீண்டும் வலியுறுத்தினான் இளையபல்லவன்.

"ஆம், நியாயமல்ல" என்று காஞ்சனாதேவியும் சம்பாஷணையில் கலந்துகொண்டாள்.

"எனககும் அப்படித்தான் தோன்றுகிறது" என்று அநபாயனும் தன் கருத்தைத் தெரிவித்தான்.

இந்தச் சொற்களைக் கேட்டதும் சங்கடத்தால் அதுவரை குறுகியிருந்த அமீரின் சரீரம் பெரிதாக நிமிர்ந்தது. அவன் கண்களில் பெருமை விரிந்தது. "இன்று கிடைத்த இந்தச் சொற்களுக்கு இதைப்போல் பத்துமடங்கு வர்த்தகத்தையும் நான் ஏறக்கட்டுவேன்" என்று பெருமிதத்துடன்

கூறிய அமீர் மேலும் சொன்னான்: "இளைய பல்லவரே! என் வாழ்க்கையில் சிறுமையையும் பார்த்திருக்கிறேன்; பெருமையையும் பார்த்திருக்கிறேன்; கஷ்டத்தையும் பார்த்திருக்கிறேன்; மற்றவர்கள் காணாத, காண முடியாத சுகத்தையும் பார்த்திருக்கிறேன். நான் இழந்த செல்வமும் சம்பாதித்த சொத்தும் நிரம்ப உண்டு. நான் எதையுமே லட்சியம் செய்வதில்லை. அரபுநாட்டுச் சீமான் குடும்பத்துச் செல்லப் பிள்ளையாகத்தான் பிறந்தேன். என்னிடமே அடிமைகள் நூற்றுக்கணக்கில் இருந்தார்கள். ஆனால் நானே அடிமையாகும் காலம் வந்தது. வாணிபத்துக்கு என் மரக்கலத்தில் சென்ற நான் இதே வங்கக் கடலில் சொர்ண பூமிக்கு அருகில் கொள்ளைக்காரர்களால் சிறை பிடிக்கப் பட்டுச் சீனாவில் அடிமையாக விற்கப்பட்டேன். பிறகு, மீட்கப்பட்டேன் குருநாதரால். மரக்கலப் பயிற்சி அளிக்கப் பட்டேன். இவரால் இங்கும் வந்தேன். அவர் உதவியால் இங்கும் என் வாணிபம் பெருகுகிறது. இங்குள்ள பெரு வணிகர் எல்லோரையும்விட என் வாணிபம் பெரிது" என்ற அமீர் இடையே பேச்சை நிறுத்திக் கூலவாணிகனைச் சுட்டிக்காட்டி, "இவருக்கு என்னைத் தெரியாது. இவரை எனக்குத் தெரியும். இவர் வாணிபத்தைவிடப் பலமடங்கு பெரிது என் வாணிபம். இருந்தும் இந்தச் சிறு வணிகர் வீதியில் வெளியே சிறிதாகத் தெரியும் இந்த இல்லத்திலிருக்கிறேன். இங்கிருந்தே வாணிபம் செய்கிறேன். என் வாணிபத்தின் மொத்த அளவு இந்தப் பாலூரிலுள்ள மற்ற எல்லா வணிகர்களுடைய வாணிபத்தைவிட அதிகம். இங்கும் எனது அடிமைகள் இருப்பதை நீங்கள் உள்ளே வரும்போது கண்டிருக்கலாம். ஆம், எனக்குச் செல்வமும் அடிமைகளும் அதிகம். ஆனால் அந்தச் செல்வங்களையும் விருதுகளையும் நான் பொருட்படுத்தியதில்லை. இருவர் நட்பு எனக்கு ஆயுளில் கிடைத்தது. அதுதான் எனக்குப் பெரும் செல்வம்" என்றான்.

இப்படிச் சொல்லிவிட்டுத் தன் பார்வையை அகூதா மீதும், அநபாயன் மீதும் திருப்பிய அமீர், “இந்த இருவரும் உலகத்தின் மகா புருஷர்கள். இவர்கள் நட்பு எனக்குக் கிடைத்ததுதான் பெரும் செல்வம். ஆகவே என் வாணிபத்தையோ, அதனால் வரும் செல்வத்தையோ நான் ஒரு பொருட்டாகப் பாவிக்கவில்லை. அகூதாவும் அநபாயரும் தனது அன்பு எத்தன்மையது என்பதை உணர்த்தினார்கள். அதன் தன்மையை நீங்கள் அறிய முடியாது. ஆகவே இந்த வாணிபத்தை ஏறக்கட்டுவதால் நான் பெரும் தியாகம் செய்வதாக நினைக்க வேண்டாம். இது நான் அநபாயர் அன்புக்கு அளிக்கும் சிறு காணிக்கை. இந்த ஏழையை அவர் நேற்று நாடி வந்தபோது இந்த முடிவுக்கு வந்து விட்டேன். அதுவும் குருநாதரைச் சந்தித்ததும் அந்த முடிவு உறுதிப்பட்டுவிட்டது. உண்மையில் பார்க்கப் போனால் இதில் தியாகம் எதுவுமில்லை. சுயநலமே இருக்கிறது. என் திட்டம் நிறைவேறிய பின் நான் இந்த ஊரில் இருக்கவும் முடியாது. ஆகையால் வேறு வணிகருக்கு இந்தக் கடையை விற்றுவிட்டேன்” என்று கூறிய அமீர், சரேலென்று அகூதாவின் பக்கம் திரும்பி, “குருநாதரே! அது மட்டுமல்ல, காந்தம் என்னை இழுக்கிறது” என்றான்.

அதைச் சொன்ன அவன் கண்களில் பெரு ஒளி வீசுவதை அநபாயனும் மற்றவரும் கண்டனர். அதைக் கேட்ட அகூதாவின் கண்களிலும் அதே ஒளி படர்ந்ததையும் அநபாயன் கவனித்தான். அந்த ஒளியால் விகசித்த முகத்துடனும் ஈட்டிபோல் ஜொலித்த விழிகளுடன் புன் முறுவல் தவழ்ந்த வதனத்துடன் தலையை அசைத்து ஆமோதித்த அகூதா, “இனி நீ சொல் கதையை அமீர்” என்று கூறினான்.

அமீர் தொண்டையைக் கனைத்துக்கொண்டு கதையைத் துவங்கினான்.

அத்தியாயம் 23

# விடுதலைக்கு வழி

அமீரின் சொற்களிலிருந்து எது வெளியானாலும் ஓர் உண்மை மட்டும் தெள்ளென விளங்கியது இளைய பல்லவன் உள்ளத்துக்கு. எந்தத் தியாகத்தையும் தான் செய்யவில்லையென்பதைக் காரணங்களைச் சுட்டிக் காட்டி அமீர் வலியுறுத்தினாலும் அந்தக் காரணங்கள் வெறும் போலிக் காரணங்கள் என்பதையும், அநபாய னிடம் கொண்டுள்ள சொல்லவொண்ணா அன்பினாலும், மதிப்பினாலும் இத்தகைய இணையில்லாத் தியாகத்தைச் செய்ய அமீர் தீர்மானித்திருக்கிறானென்பதையும் இளைய பல்லவன் சந்தேகத்துக்கு இடமின்றிப் புரிந்துகொண்டான். ஒரு மனிதன் தான் வெகு காலமாகக் கட்டிப் பெருக்கிய வாணிபம், வீடு வாசல், பொருள் அனைத்தையும் துறந்து ஊரை விட்டே வெளியேறுவதென்றால் அந்தத் தியாகம் சாமான்யமானதல்ல வென்பதை அறிந்துகொள்ள கண நேரம் கூடப் பிடிக்கவில்லை பல்லவ குலத்தின் அந்தப் பெருமகனுக்கு. கோதாவரியின் ஆற்றங்கரைக் குடிசையி லிருந்து மாறு வேடமணிவித்துத் தங்களைப் பாலூரின் பெரு வீதிகளில் பகிரங்கமாக அழைத்து வந்த அமீர் உண்மையில் இஷ்டப்பட்டால், கலிங்க அதிகாரிகள் கண் களில் மண்ணைத் தூவுவது பிரமாதமான காரியமல்ல வென்றும் இளையபல்லவன் எண்ணினான். சிறு வணிகர் வீதியில் வெளிப்பார்வைக்குச் சிறியதாகவும் உட்கட்டுகள்

பெரிய அளவிலுமுள்ள வீட்டை அமைத்து, கலிங்கர் அறியாமல் வருடக் கணக்கில் பெருவாணிகம் செய்தும் சிறு வாணிகனாகவே வேஷம் போட்டு வரும் அமீருக்குத் தங்களைத் தப்புவித்த பின்பும் கலிங்க வீரரை ஏமாற்றுவது அப்படி அசாதாரணமான காரியமல்லவென்று நினைத் தான் இளையபல்லவன். அவன் செய்யும் தியாகமெல்லாம் அநபாயருக்காக என்பதில் தினையளவும் கருணாகர பல்லவனுக்குச் சந்தேகமில்லாததால் பெருவியப்பும் அடைந்தான் அவன். மனிதர்களைச் சந்தித்த மாத்திரத்தில் அவர்கள் மனங்களைக் காந்தம்போல் இழுக்கக்கூடிய பெரும் சக்தி அநபாயருக்கு எங்கிருந்து வந்தது என்று சிந்தித்தான். மனிதர்கள் உடல், பொருள், ஆவியைத் துறப்பதற்குச் சமமான அன்பை வித்திடக்கூடிய திறன் வாய்ந்த அநபாயர், சோழர் அரியணையில் அமர்ந்தால் தமிழகத்தின் சிறப்பு எத்தனை ஓங்கும் என்பதை எண்ணிப் பார்த்து மேலும் மேலும் பிரமிப்பே அடைந்த கருணாகர பல்லவன், "காந்தம் என்னை இழுக்கிறது" என்று அமீர் சொன்னதைக் கேட்டதும் அந்தக் காந்தம் அநபாயனாகத் தானிருக்க வேண்டும் என்று தீர்மானித்தான்.

ஆனால் அந்தத் தீர்மானத்துக்குக் குறுக்கே சந்தேக மொன்றும் புகுந்துகொண்டது. 'காந்தம் என்று அமீர் கூறியது அநபாயனையென்றால், அவன் கண்களில் அத்தனை தூரம் புத்தொளியொன்று பிறப்பானேன்? அவன் அந்தச் சீனக் கடலோடியை நோக்குவானேன்? ஏதோ புரிந்ததற்கு அறிகுறியாக அந்தக் சீனக் கடலோடி தலையை 'அசைப்பானேன்?' என்றெல்லாம் எண்ணிப் பார்த்த இளைய பல்லவன், தான் ஆராய்ந்துணர முடியாத வேறு ஏதோ பலத்த அபிலாஷையொன்று அமீரின் உள்ளத்தில் உலாவுகிறது என்று திட்டமான முடிவுக்கு வந்தான். ஆனால் அந்த அபிலாஷை எதுவாயிருக்கக் கூடும் என்பதைப்பற்றி மட்டும் அவனுக்கு விளக்கம்

கிடைக்கவில்லையாகையால் அவன் நின்ற நிலையிலேயே அநபாயன்மீது கண்ணைத் திருப்பிக் கண்கள் மூலமே கேள்வியொன்றையும் வீசினான்.

அந்தச் சமயத்தில் அநபாயன் முகத்திலும் சிந்தனை பலமாகப் பரவிக் கிடந்தது. கிட்டத்தட்ட கருணாகர பல்லவன் உள்ளத்தே எழுந்த கேள்விகளைப் போன்ற கேள்விகளே அவன் சிந்தனையிலும் எழுந்துலாவிக் கொண்டிருந்தன. 'காந்தம் என்னை இழுக்கிறது என்று எதைக் குறிப்பிட்டான் அமீர்? அதைக் கேட்டதும் அகூதா ஏன் தலையசைத்தான்!' என்பது அவனுக்கும் சந்தேகத்தை அளித்ததால், "இனி நீ சொல் கதையை, அமீர்" என்று அகூதா உத்தரவிட்டு அமீர் கதையைத் துவங்கத் தொண்டை யைக் கனைத்துக் கொண்டதும் அவனைக் கதையைத் துவங்கவிடாமல் தடுத்த அநபாயன், "உன்னை இழுக்கும் காந்தம் எது அமீர்?" என்று கேள்விக்கணை ஒன்றைத் தொடுத்தான் இடையே.

கதையைத் துவங்க முயன்ற அமீர், தனது நாவில் உதயமான சொற்களைச் சரேலெனத் தேக்கிக் கொண்டு புத்தொளியில் ஜொலித்த தன் கண்களை அந்த அறை யைச் சுற்றிலும் ஒருமுறை ஓடவிட்டு, அநபாயன் கேட்ட கேள்வி அங்கிருந்த ஒவ்வொருவர் முகத்திலிருந்தும் புறப் படுவதைக் கவனித்தான். அந்தப் பார்வைகளில் சந்தேகம் துளிர் விடுவதையும் அவன் புரிந்துகொண்டதன்றி அதன் காரணத்தையும் ஓரளவு ஊகித்துக் கொண்டானாதலால் அகூதாவிடம் திரும்பி, இதழ்களில் புன்முறுவலொன் றையும் கொட்டினான். அத்துடன், "நான் சொல்வதை இவர்கள் யாரும் நம்பவில்லை" என்றும் சீனக் கடலோடி யிடம் சுட்டிக் காட்டினான்.

அமீரின் சொற்களை ஆமோதிக்கும் வகையில் தலையை அசைத்த அகூதா, "இவர்கள் நம்புவது கஷ்டம். சந்தர்ப்பங்கள் அப்படியிருக்கின்றன. தவிர, இவர்கள்

காந்தத்தின் சக்தியை அனுபவிக்காதவர்கள்” என்று பதிலும் சொன்னான். இந்தச் சில வார்த்தைகளை உதிர்த்த அகூதாவின் சொற்களில் அன்பு கனிந்து கிடந்தது. அது அமீரிடம் ஏற்பட்ட அன்பா? அல்லது காந்தம் என்று சொல்கிறார்களே அதன் நினைப்பில் ஏற்பட்ட கனிவா? விடை சொல்ல முடியாத அளவுக்கு அந்தக் கொள்ளைக் காரன் குரலும் குழைந்து கிடந்தது.

காந்தம் எதுவாயிருந்தாலும் அதை நினைத்த மாத்தி ரத்தில் அந்தக் கொள்ளைக்காரன் குரலில் குழைவையும் கண்களில் பேரொளியையும் வரவழைக்கக் கூடிய சக்தி அதற்கிருந்ததை அறிந்த அநபாயன் மிகவும் வியப்பெய் தினானாகையால், “எங்களுக்குக் காந்தத்தின் அனுபவ மில்லாதிருக்கலாம், அனுபவமிருப்பவர்கள் விளக்கலா மல்லவா?” என்று வினவினான்.

அந்த வினாவைக் கேட்டதும் சற்றே சங்கடப்பட்ட அமீர், “விளக்குவது அவசியமா?” என்று வினவினான்.

“மிகவும் அவசியம்” என்று திட்டமாகக் கூறினான் அநபாயன்.

“அநபாயரே! நான் சொன்னதில் நம்பிக்கையில்லையா உங்களுக்கு?” என்று மீண்டும் கேட்டான் அமீர்.

அநபாயன் விழிகள் அமீரின் மீது அன்பு வெள்ளத் தைச் சொரிந்தன. “எங்கள் நிலைமை உனக்கு விளங்க வில்லையா அமீர்? நாங்கள் அரசகுலத்தில் பிறந்தவர்கள். சில சம்பிரதாயங்களுக்கும் நல்லுணர்ச்சிக்கும் அடிமைப் பட்டவர்கள். உன்னை நாசம் செய்து ஆபத்திலிருந்து தப்பு வதை நல்ல ரத்தமுள்ள மன்னர்குலத் தோன்றல் எவன் தான் ஒப்புக்கொள்வான்? உன் வாணிபத்தை ஒழித்து உன்னை நாடு கடத்தி நாங்கள் தப்ப இஷ்டப்படவில்லை அமீர். நீ தியாகம் செய்யவில்லையென்று சொல்லுகிறாய். அது உண்மையல்ல. இதைவிடப் பெரும் தியாகத்தை

உலகத்தில் யாரும் செய்ய முடியாது. என்னிடம் அன்பி னால் இந்தத் தியாகத்தை நீ செய்ய முன் வந்திருக்கிறாய். இதை நீ மறுத்தால் நானோ கருணாகரனோ, காஞ்சனா தேவியோ எப்படி ஒப்புக்கொள்ள முடியும்? முடியாது, ஒருகாலும் முடியாது" என்ற அநபாயன் பேச்சிலும், அன்பு வெள்ளம் கரை புரண்டு ஓடியது.

"அமீரின் பெருவிழிகளில் நீர் மெல்லத் திரண்டது. பின்புறமாகத் தலையைத் திருப்பிப் பக்கத்தில் தொங்கிக் கொண்டிருந்த அங்கியின் பகுதியை எடுத்துக் கண்களைத் துடைத்துக் கொண்டான். பிறகு மீண்டும் திரும்பி அநபாயனை நோக்கிக் கேட்டான், "நீங்கள் இந்த பாலூர் வராதிருந்து நான் என் குருநாதரை மட்டும் சந்தித் திருந்தால் என்ன நடந்திருக்குமென்று நினைக்கிறீர்கள்?" என்று.

"என்ன நடந்திருக்கும்?" என்று அநபாயனும் பதிலுக்குக் கேட்டான்.

"நான் சொன்னால் நம்பமாட்டீர்கள். என் குருநாத ரைக் கேளுங்கள்" என்றான் அமீர்.

அகூதாவின்மீது தன் விழிகளைத் திருப்பினான் அநபாயன். அகூதாவின் சிறுவிழிகளில் ஆரம்பத்திலிருந்த புத்தொளியே பரவிக் கிடந்தது. அநபாயன் விழிகளில் தொனித்த கேள்விக்குப் பதில் சொல்லிய அவன் குரலிலும் பெருத்த உறுதியிருந்தது. "அப்பொழுதும் இந்த வாணிகம் விற்கப்பட்டிருக்கும்" என்று திட்டமாகக் கூறினான் அகூதா.

"ஏன்?" என்று குறுக்கிட்டான் இளையபல்லவன்.

"காந்தம் இழுத்திருக்கும்" இன்னும் அதிகத் திட்டமாக வந்தது அகூதாவின் பதில்.

"என்ன காந்தம் அது?" என்று மறுபடியும் கேட்டான் இளையபல்லவன்.

அகூதாவின் சொற்கள் நிதானமும் உவகையும் கலந்து ஒலித்தன. "கடலெனும் காந்தம்" என்ற அகூதா மிகுந்த பெருமையுடன் அமீரைப் பார்க்கவும் செய்தான்.

"கடலெனும் காந்தமா!" இளையபல்லவன், அநபாயன் இருவருமே ஏககாலத்தில் வியப்புடன் கேள்வியை வீசினார்கள்.

அந்தக் கேள்விகள் ஏககாலத்தில் எழுந்ததையோ, அவற்றில் விவரிக்க இயலாத வியப்பு தொக்கியிருந்த தையோ, சிறிதும் கவனிக்காமல் சொற்களை மட்டும் காதில் வாங்கிக் கொண்ட அந்தச் சீனக் கடலோடி, தன் சிறு விழிகளை அவர்கள்மீது சில விநாடிகள் நிலைக்க விட்டான். பிறகு அறையில் இரண்டு விநாடிகள் அப்படி யும் இப்படியும் உலாவினான். கடைசியாக நின்ற தோரணையிலேயே தனக்கருகேயிருந்த மஞ்சத்தின் முகப்பில் கைகளைச் சுற்றி அணைத்து முதுகை லேசாகக் கூனி மற்றவர்களை நோக்கினான். அவன் கண்களில் பெரும் கனவு படர்ந்தது. கனவைத் தொடர்ந்து உதிர்ந்த வார்த்தைகளிலும் கனவில் பேசும் மனிதன் நிலைமையே நிலவிக் கிடந்தது. "ஆம், கடலெனும் காந்தம்தான். சிலர் உள்ளங்களைப் பொன் கவர்கிறது. மற்றும் சிலர் உள்ளங் களை மண் கவர்கிறது. வேறு சிலர் உள்ளங்களைப் பெண் களின் விழிகள் கவர்கின்றன. இவை அனைத்துக்கும் மேலாக ஒரு காந்தம் இருக்கிறது. அதுதான் இந்த மாநிலத் தைச் சூழ்ந்திருக்கும் பெரும் கடல். மாலுமிகளின் மனத்தை அது கவர்வதுபோல் வேறு எதுவும் கவர்வது கிடையாது. நிலையுடனிருக்கும் மண்ணில் வாழ்பவன் மண்மீது வைக்கும் ஆசையைவிட, நிலையற்றுச் சதா சலனப்படும் கடலின்மீது ஆசை வைக்கிறான் மாலுமி. அதன்மீது ஆடும் மரக்கலம் மாலுமிக்கு உயிர். நான் சொல்வது உங்களுக்குப்

புரியாது. எந்த மனிதனாவது மாலுமியாக வாழ்க்கையைச் சில வருஷங்கள் நடத்திவிட்டால் அவனை மீண்டும் கடலெனும் காந்தம் இழுத்தே செல்லும். மாலுமிகளின் சரித்திரத்தைக் கவனியுங்கள் அநபாயரே! உங்கள் நாட்டின் மேல்புறத்துக்கும் எகிப்துக்கும் கடல் வழிகளை முதலில் கண்டுபிடித்த யவன ஹிப்பலாஸ் ஆயுள் முழுவதையும் மரக்கலத்தில் ஏன் கழித்தான்? அவனுக்கு யவன நாட்டில் பெண்டில்லையா, பிள்ளையில்லையா, நிலமில்லையா? இருந்தது அநபாயரே! இருந்தது. அவன் பெருங்குடிமகன். ஆனால் மீண்டும் மீண்டும் கடலின் கவர்ச்சி அவனைக் கட்டி இழுத்தது. தன் மரக்கலத்தில் எரித்திரியக் கடலில் ஓடினான். அலைகளையும் புயல்களையும் எதிர்த்தான். சாகரத்தின் ஆபத்துகளே ஓர் இன்பமாயிற்று அவனுக்கு. பாரதத்துக்கும் எகிப்துக்கும் மூன்று கடல் வழிகளை வகுத்தான். மரக்கலமே அவன் வீடாயிற்று. கடல் அலையே அவன் வாழும் நிலமாயிற்று. இந்தக் கீழ்த் திசையைத்தான் எடுத்துக் கொள்ளுங்கள். யவனனான அலெக்ஸாண்டர் பாரதத்தின் கீழ்த் துறைமுகங்களுக்கும், சொர்ண பூமிக்கும் சாவகத்தின் தீவுக்கும் மூன்று வழிகளை வகுத்தான். இந்தக் கடல் பிராந்தியத்தின் அபாயங்கள் உங்களுக்குத் தெரியாது. இன்றும் புகாரிலிருந்தும், *குருலாவிலிருந்தும் நாகையிலிருந்தும் மரக்கலங்கள் பாலூர் வந்தே கீழ்திசை செல்கின்றன. ஏன்? நேர்கிழக்கு வழியில் கடல் சுழல்களும், பேரலைகளும் கடும் புயல்களும் உண்டு. அந்த வழியிலும் மாலுமிகள் சிலர் செல்கிறார்கள். மாலுமி வாழ்க்கையை ஒருமுறை நடத்தியவனுக்குக் கடலின் ஆபத்துகளே பேரின்பம். நீங்கள் சொர்ண பூமியின் ஜலசந்தியின் பெரும் அலைகளையும் அங்கு எழும் பெரும் உப்பங்காற்றையும் அனுபவிக்க வேண்டும். அப்பொழுது தெரியும்."

* குருலா என்பது காரைக்கால்.

அகூதாவை இடைமறித்த அமீர், "சொர்ண பூமியின் துறைமுகங்கள் எத்தனை அழகு வாய்ந்தவை குருநாதரே! அங்கெல்லாம் எத்தனை சாந்தமானது கடல். ஆனால் பிறகு சீனக்கடலுக்குப் போய்விட்டாலோ கடலரசனுக்குத் தான் எத்தனைச் சீற்றம்! மரக்கலத்தின் பக்கப் பலகையில் நின்றால் வாரியடிக்கும் அலை நீர்த்துளிகள் எத்தனை இன்பம், எத்தனை இன்பம்!" என்று கூவினான். அகூதா வின் கண்களைப் போலவே அவன் கண்களிலும் கனல் விரிந்து கிடந்தது. அந்தச் சமயத்தில் அந்த இருபெரும் மாலுமிகளும் அந்த அறையையும், ஏன் தங்கள் அனை வரையுமே மறந்துவிட்டதையும், இருவரும் சீனக் கடலில் சஞ்சரிக்க ஆரம்பித்துவிட்டதையும், சந்தேகமற உணர்ந்து கொண்ட அநபாயன், மனித உணர்ச்சிகளை அத்தனை தூரம் கவரக்கூடிய கடலைப் பற்றிச் சற்றுப் பொறாமையும் கொண்டான். அதுவரை அமீரைத் திறமையுள்ள மாலுமி என்று மட்டுமே நம்பியிருந்தான் அநபாயன். அவன் கடலிடம் காதல் வெறி கொண்ட உலகத்தின் மிகச் சிறந்த கடலோடிகளில் ஒருவனென்பதையும் அன்றே புரிந்து கொண்டதால் சொல்லவொண்ணா ஆச்சரியத்துக்கும் உள்ளானான்.

அகூதாவின் பேச்சைக் கேட்கக் கேட்கக் கடலில் மரக் கலத்தில் ஓடுவது போன்ற உணர்ச்சிகளைப் பெற்றதால் இருப்பிடத்தை அறவே மறந்த அமீர் சில விநாடிகள் பேசாமலிருந்தான்.

பிறகு கடலைவிட்டு நிலத்தில் காலடி எடுத்து வைத்து, "உண்மை இதுதான் அநபாயரே! உங்களுக்கு மண்ணாசை யிருப்பதுபோல் எனக்குக் கடலாசை. இந்த ஊரில் வாணிபம் நடத்திய நாள்களில் எத்தனை நாள் கடலோரத் தில் உட்கார்ந்திருப்பேன்! எத்தனை நாள் கடலின் பரந்த நீரையும் அதற்கப்பால் உள்ள நிலங்களையும் நோக்கி யிருப்பேன்! எத்தனை நாள் கடல் வாழ்க்கையை நினைத்

துப் பெருமூச்செறிந்திருப்பேன் என்பது உங்களுக்குத் தெரியாது. உங்களைத் தப்புவிக்க நீங்கள் வழி கேட்டதும் சற்றுத் திணறினேன். ஆனால் குருநாதரைக் கண்டேன். திட்டம் விநாடி நேரத்தில் உருவாயிற்று. உங்களை, ஏன், என்னையும் வெகு சுலபமாக இந்த ஊரிலிருந்து வெளி யேற்றிவிட முடியும். சற்று இப்படி வாருங்கள்" என்று கூறிய அமீர் மற்றவர்களைத் தன்னைத் தொடரும்படி சைகை செய்துவிட்டு அறையை விட்டு வெளியே நடந் தான். மற்றவர்களும் அவனைத் தொடர்ந்து சென்றார்கள். அந்த வீட்டின் மற்றொரு கட்டையும் தாண்டிக் கடைசிக் கட்டுக்கு வந்த அமீர் அந்தக் கட்டின் இறுதியிலிருந்த வாயிற்படியைச் சுட்டிக் காட்டினான். பிறகு பக்கத்தி லிருந்த ஒரு பெரும் அறையைச் சரேலெனத் திறந்தான். "இதோ நம் விடுதலைக்கு வழி. ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு" என நான்கு பெரும் பிசாசுகளைக் கையால் சுட்டி எண்ணியும் காட்டினான்.

அதற்குமேல் யாருக்கும் விளக்கம் தேவையில்லா திருந்தது. திட்டமும் கதையும் தெளிவாகப் புரிந்தது மற்றவர்களுக்கு. திட்டம் புரிந்தது; அது விடுதலைக்கு நிச்சயம் வழியென்றும் புரிந்தது. ஆனால் அந்த வழியை ஒப்புக்கொள்வதா என்ற நினைப்பால் பெரும் சீற்றமே ஏற்பட்டது மற்றவர்களுக்கு. சீறும் வழிகள் பல திரும்பின அரபு நாட்டு அமீரின்மீது.

அத்தியாயம் 24

# நீர்க்குடங்கள் நான்கு

சிறு வணிகர் வீதியிலிருந்த தன் வீட்டுக் கடைக் கட்டின் பெரும் அறையொன்றைச் சரேலெனத் திறந்து 'விடுதலைக்கு இதோ வழி'யென அமீர் சுட்டிக்காட்டிய நான்கு பெரும் பிசாசுகளைக் கண்டதும் திட்டமும் வழியும் தெள்ளெனப் புரிந்துவிட்டதன் விளைவாக அநபாய னுக்கும் அவனைச் சேர்ந்த மற்றவர்களுக்கும் சந்துஷ் டிக்குப் பதிலாகச் சீற்றமே பெரிதும் ஏற்பட்டதால் கனல் கக்கும் விழிகள் பல அமீரின்மீது திரும்பினவென்றாலும், அமீர் மட்டும் அந்த விழிகளை ஏறெடுத்துப் பார்க்காம லும், தன் விழிகளை எதிரே அறையின் பெரும் பாகத்தை அடைத்து நின்ற அந்த நான்கு பிசாசுகளின் மீதே நாட்டிக் கொண்டும் நீண்ட நேரம் நின்றான். அந்தப் பிசாசுகளைப் பார்க்கப் பார்க்க அவன் ஓரளவு இருந்த இடத்தையும் சூழ் நிலையையுங்கூட மறந்துவிடவே அவன் விழிகளில் பெரிய அன்பும் ஆர்வமும் துளிர்விட்டதன்றி அந்தப் பிசாசு களைப் பற்றி அவன் விளக்க முற்பட்டபோது, குரலிலும் அந்த அன்பும் ஆர்வமும் தொனிக்கவே செய்தன.

"அநபாயரே! இளையபல்லவரே! பிசாசுகளைப் போல் பயங்கர உருவங்கள் தீட்டப்பட்ட காரணத்தா லேயே பிசாசுகளே எதிரே நிற்பது போன்ற பிரமையும் அச்சத்தையும் அளிக்கும் இந்த நான்கும் மண்ணால் செய்யப்பட்ட குடங்கள்தான். ஆனால் பாலூரிலுள்ள அத்தனைப் பொன்னையும் கொட்டிக் கொடுத்தாலும் இந்தக் குடங்கள் அகப்படுவது கஷ்டம். தலையை வெளியே நீட்டும் கொட்டை எடுத்தெறியப்பட்ட முந்திரிப்பழம்

போல் அடியில் சற்றுக் குறுகலாகவும் இடையே பெரிதாக புடைத்தும் கழுத்தில் வளைவுக்காகச் சிறிது குறுகிய போதிலும் பெரும் வாய்களுடன் உங்கள் முன்பு தோற்ற மளிக்கும் இந்த நீர்க்குடங்கள் நான்கும், உலகத்தின் ஒரே இடத்தில்தான் கிடைக்கின்றன. அந்த இடம்தான் சீனா. பார்ப்பதற்கு உலோகத்தால் செய்யப்பட்டவை போல் தெரியும் இந்தப் பெருங்குடங்கள் உண்மையில் மண் குடங்கள். சீனத்தின் உயர்ந்த மண்ணிலே செய்யப்பட்ட தால் சாதாரணமாக உடையாதவையும் மிகவும் கடின மானவையும், முந்திரிப் பழம் போலவே செவ்விய வர்ணம் பூசப்பட்டதாலும் பிசாசுகள் போன்ற பல உருவங்கள் அந்தச் சிவப்பு வர்ணத்தின்மீது வெள்ளைக் கோடுகளாக இழுக்கப்பட்டிருப்பதாலும் பார்ப்பதற்கு மிக பயங்கரத் தோற்றத்தை அளிக்கக் கூடியவையுமான இந்த மண் குடங் களில்தான் சீனர்கள் தங்கள் கப்பல்களில் பயணத்துக்கு நீர் சேகரித்து வைக்கிறார்கள். இந்த நீர்க்குடங்களின் விலை அதிகமாகையால் இவற்றைச் சாதாரண மரக்கலச் சொந்தக்காரர்கள் வாங்குவதில்லை. பெரும் வணிகரும் தனிகரான மாலுமிகளுமே வாங்க முடியும். மரக்கலங் களில் நீர் எடுத்துச் செல்ல இந்த மண் குடங்களைவிடச் சிறந்த பாண்டங்கள் உலகத்தில் வேறெந்த நாட்டிலும் கிடையாது. அரபு நாட்டு மரக்கலங்களில் மரக்குடங்களில் நீர் சேகரித்து வைக்கப்படுகிறது. தமிழகத்தின் மரக்கலங் களில் யவனர் மரக்கலங்களைப் போல் உலோகங்களால் செய்யப்பட்ட தவலைகளில் குடிநீர் எடுத்துச் செல்லப்படு கிறது. ஆனால் அவையனைத்தும் இரண்டாம் பக்ஷம். ஏன் தெரியுமா?" என்று கனவில் பேசுபவன் போல் பேசிய அமீர் கனவில் கேள்வி கேட்பவன் போலவே கேட்டான்.

அவன் மனம் கனவுலகில் சஞ்சரித்துக் கொண்டிருக் கவே யாரிடமிருந்தும் பதில் வராது போனாலும் பதில் வந்ததாகப் பாவித்துக் கொண்டு அந்தப் பதிலுக்குப் பதில்

சொல்லும் முறையில் மேற்கொண்டு விவரிக்கவும் தொடங்கி, "சொல்கிறேன் கேளுங்கள். யவனர் மரக்கலங் களிலும் தமிழகத்தின் மரக்கலங்களிலுமுள்ள குடங்கள் செம்பு அல்லது பித்தளையினால் செய்யப்பட்டவை. உலோகத்தில் வைக்கப்படும் நீர் காலக்கிரமத்தில் பாதிக்கப் படுகிறது. உலோகத்தின் அடியில் பலப்பல விதமான வண்டல்கள் சீக்கிரம் தேங்குகின்றன. ஆகவே அந்த மரக் கலங்கள் இரண்டு மாதங்களுக்கொருமுறை ஏதாவது ஒரு துறைமுகத்துக்கு நீர் சேகரிப்பதற்கே செல்ல அவசியம் ஏற்படுகிறது. அரபு நாட்டு மரக்கலங்களில் நீர்க்குடங்கள் மரத்தால் செய்யப்பட்டவையாகையால் உலோகத் தவலை களைவிட அவை சிறந்தவை. ஆனால் மரத்தில் நீரின் சம்பந்தத்தால் சீக்கிரம் பாசி பிடிக்கிறது. அதிக நாள் பாசியிருந்தால் குடிநீரில் ஒருவித வேகம் வருகிறது. ஆகவே மூன்று மாதங்களுக்கு ஒரு முறையாவது அரபு நாட்டுக் கப்பல்கள் ஏதாவது ஒரு துறைமுகத்தில் குடிநீர் சேகரிக்கத் தங்கும். ஆனால் இந்த மண் குடங்களை உடைய சீன மரக் கலங்களுக்கு அத்தகைய கஷ்டங்கள் ஏதுமில்லை. இவற்றில் சேகரிக்கப்படும் குடிநீர் ஒரு வருஷமானாலும் கெடாம லிருக்கும். குடிநீருக்காக எந்தச் சீனக் கப்பலும் துறைமுகங் களை நாடுவதில்லை. ஒரே சமயத்தில் குறைந்த பட்சம் ஆறு மாதங்களுக்கு வேண்டிய குடிநீரைச் சீனக் கப்பல் களில் பார்க்கலாம். நானும் என் குருநாதரும் சீனஅரசினர் கப்பல்களுடன் போர் செய்த காலங்களில் நீர் சேகரிப்ப தற்கு எந்தத் துறைமுகத்தையும் நாடியது கிடையாது. தென் சீனாவில் எங்கள் துறைமுகத்தில் இந்தக் குடங்களில் பிடிக்கும் நீரே தேவைக்குப் போதுமானது! இப்பொழுது கூட குருநாதரின் மரக்கலம் ஒவ்வொன்றிலும் இம்மாதிரி குடங்கள் ஐம்பதுக்கு மேல் இருக்கும். ஆகையால்தான் எனக்குத் துணிவு ஏற்பட்டது. குருநாதரைக் கேட்டேன், மகிழ்ச்சியடைந்தேன்" என்ற அவன் சொற்களில் உவகை பெரிதும் துள்ளி நின்றது.

அவன் வார்த்தைகளில் தொனித்த ஆனந்தம், சிவந்த வர்ணத்தின்மீது வெள்ளைக் கோடுகளில் பல்லை இளித்த பயங்கர உருவங்கள் தீட்டப்பட்டிருந்ததால் பிசாசுகளைப் போலவே காட்சியளித்த அந்த நீர்க்குடங்களைப் பற்றிய விவரங்களைச் சொன்னபோது அவன் குரலில் எழுந்த உணர்ச்சி, வேகம் இவ்விரண்டையும் அநபாயன் கவனிக்கவே செய்தானென்றாலும் அமீர் சொல்வதைச் சொல்லி முடிக்கட்டுமென்று பொறுமையோடிருந்தான். அதிகப் பொறுமையில்லாத கருணாகர பல்லவன் மட்டும், அமீரின் கனவில் குறுக்கிட்டு, "அமீர்! உங்களுக்குக் குரு நாதரைக் கண்டதும் ஆனந்தம், நீர்க்குடங்களை நினைத்ததும் ஆனந்தம். இன்னும் எதெதில் ஆனந்தம் இருக்கிறது?" என்று கோபத்தால் கடுமை பெரிதும் கலந்து நின்ற சொற்களை உதிர்த்தான்.

நீர்க்குடங்களின்மீது நாட்டிய கண்களை நாட்டியபடி இளைய பல்லவனைத் திரும்பிப் பாராமலே, "எனது உயிர்த் தோழர், தமிழகத்தின் பிற்காலப் பேரரசர் அநபாயரையும் அவரைச் சேர்ந்தவர்களையும் தப்ப வைப்பதிலிருக்கிறது. மூன்றுக்கும் பெரும் சம்பந்தம் இருக்கிறது" என்றான் அமீர்.

அவன் சொன்னதன் பொருள் திட்டவட்டமாக விளங்கவில்லையாதலால், அதற்கு விளக்கம் கேட்க இடையே பாய்ந்தது ஒரு குரல். "எந்த மூன்றுக்கும் சம்பந்தம்?" என்று இயற்கையாகக் கடுமையில்லாத குரலில் சற்றே கடுமையை வரவழைத்துக் கொண்டு காஞ்சனா தேவி கேள்வியொன்றைத் தொடுத்தாள்.

அமீர் மெள்ளத் தலையைத் திருப்பி, காஞ்சனா தேவியின் கண்களோடு தன் கண்களை ஒரு விநாடி சந்திக்கவிட்டான். பிறகு சொன்னான், "குருநாதரைச் சந்தித்தது, சீனநாட்டு நீர்க்குடங்கள் என்னிடமிருந்தது, அநபாயர் இந்த ஏழையின் உதவியை நாடியது, இந்த

மூன்றிலும் எனக்கு ஆனந்தம். மூன்றுக்கும் நெருங்கிய தொடர்பு இருக்கிறது."

"என்ன தொடர்பு?" என்று மீண்டும் கேட்டாள் காஞ்சனாதேவி.

அமீர், காஞ்சனாதேவியையும் பார்த்து நீர்க்குடங் களையும் பார்த்தான். பார்த்தது மட்டுமின்றி அந்தக் குடங் களை நோக்கிக் கையை நீட்டி, "இளவரசி! இந்தக் குடங் களை நான் ஏன் வாங்கினேன் தெரியுமா?" என்றொரு கேள்வியையும் கேட்டான்.

"எனக்கெப்படித் தெரியும்?" என்றாள் காஞ்சனாதேவி அவன் கேள்வியில் அதிகச் சிரத்தை காட்டாமலே.

ஆனால் நீர்க் குடங்களை மீண்டும் நோக்கிய அமீரின் கண்களிலோ சிரத்தையும், கனிவும் மிதமிஞ்சிப் பரந்து நின்றன. "இந்த நீர்க்குடங்களை நான் வாங்கியபோது இவை உங்களைத் தப்ப வைக்கும் என நான் கனவுகூடக் காணவில்லை. இந்த நில வாழ்க்கையில் சலித்ததால் நீர் வாழ்க்கையை மேற்கொள்ள இவற்றை வாங்கினேன். கடலெனும் காந்தம் என்னை இழுத்ததால் என் வாணி பத்தை ஏறக்கட்டிவிட்டு ஒரு மரக்கலம் வாங்கித் திரை கடலோடத் திட்டமிட்டேன். அந்தத் திட்டத்தின் முதல் படியாக இவற்றை வாங்கினேன். குருநாதரிடம் மரக்கலப் பயிற்சியை அடைந்த பிறகு வாணிபம் செய்வதாயிருந்தால் தரை வாணிபம் வேண்டாம். அலைகடலில் ஓடி மரக் கலத்தின் மூலம் வாணிபம் புரிவோம் என்ற ஆசை ஏற்பட் டது. அந்த ஆசையைப் பூர்த்தி செய்துகொள்ள பாலூர் வந்தேன். வாணிபத்தைப் பெருக்கினேன். சென்ற வருடமே வாணிபத்தை ஏறக்கட்டி மரக்கலம் வாங்கி நீரின் மேல் நடந்திருப்பேன். ஆனால் கடலைப்போலவே மற்றொரு காந்தம் என்னைப் பற்றிக் கொண்டது. இந்தப் பாலூரிலே..." என்று சொல்லிக்கொண்டே போன அமீர் சற்று நின்று அநபாயரைத் திரும்பி நோக்கினான். "அது இந்தக்

காந்தம்தான். இவர் நட்பில் சிக்குண்டேன். பாலூரில் தமிழருக்குத் தொண்டு புரியத் தீரமும் சாகசமும் நிறைந்த செயல்களில் இவர் ஈடுபட்டதைக் கண்டு முதலில் வியப்பின் வசப்பட்டேன். பிறகு இவர் அடிமையாகவே ஆகிவிட்டேன். இவர் மூலம்தான் இப்பொழுது இந்த அடிமைத்தளையும் போகிறது. ஆனால் அந்த அடிமைத் தளை எத்தனை இன்பமானது!" என்று சொல்லிப் பெரு மூச்சும் விட்ட அமீர் திடீரெனத் தன்னைத் திடப்படுத்திக் கொண்டு, "அந்த நட்பு அவர் விடுதலைக்கு மட்டுமல்ல, அவர் நண்பர்கள் விடுதலைக்கும் மார்க்கம் கேட்டது. சமயத்தில் குருநாதரும் வந்தார். என்னிடமும் சந்தர்ப்ப வசத்தால் நீர்க்குடங்கள் இருந்தன. விதி எப்படித்தான் காரியங்களை நடத்திக் கொள்கிறது பாருங்கள்! குருநாதர் இல்லையேல் இந்த நீர்க்குடங்களால் எந்தப் பயனும் இல்லை. ஏனென்றால் இத்தகைய நீர்க்குடங்கள் சீனக் கப்பல்களுக்காக ஏற்பட்டவை. வேறு கப்பல்களில் இவற்றை ஏற்றச் சொன்னால் நமது திட்டம் அம்பலமாகி விடும். ஆகவே குருநாதரைக் கண்டதும் மகிழ்ச்சியடைந் தேன். அவர் மரக்கலத்துக்கு நீர் சேகரிக்கும் பாவனையில் அவர் மரக்கலத்தின் ஐந்தாறு குடங்களை ஊருக்குள் கொண்டு வருவது, போகும்போது குடங்களை மாற்றி விடுவது, அல்லது கூடச் சேர்த்துவிடுவது, சில குடங்களில் நீர், சில குடங்களில் மனிதர்! யார் கண்டுபிடிக்க முடியும்? குருநாதர் வந்ததால் குடங்களுக்குப் பயன் பிறந்தது. குடங் களுக்குப் பயன் பிறந்ததால் அநபாயருக்கு நான் உதவ முடிந்தது. மூன்றுக்கும் சம்பந்தம் கேட்டீர்களே, புரிகிறதா தேவி?" என்று கேட்கவும் செய்தான்.

காஞ்சனாதேவிக்கு மட்டுமென்ன மற்றவர்களுக்கும் திட்டம் தெளிவாகத்தான் புரிந்திருந்தது. எதிரே பயங்கர மாக உயரமாக நின்ற நீர்க்குடங்களைக் கவனித்த அநபாயன், 'இந்த நீர்க்குடம் ஒவ்வொன்றிலும் மனிதர்

எழுந்து நின்றாலும் தலை வெளியே தெரியாது. விந்தை யான திட்டம்!' என்று தனக்குள்ளேயே சொல்லிக் கொண் டான். "அமீர் சொல்லுவதுபோல் இந்த நீர்க்குடங்களில் ஒளிந்து சென்றாலும் இவற்றைப் பாலூர் சுங்க அதிகாரி கள் சோதிக்க மாட்டார்கள் என்பது என்ன நிச்சயம்?" என்று தன்னைத்தானே கேட்டுக் கொள்ளவும் செய்தான் சிறிது சந்தேகத்துடன்.

அநபாயன் மனத்திலோடிய எண்ணங்களை அமீர் புரிந்துகொண்டிருக்க வேண்டும். ஆகவே அவன் சொன் னான்: "இந்த நீர்க்குடங்களையும் சுங்க அதிகாரிகள் சோதிக்கலாமென்று நினைக்கிறீர்கள். ஆனால் நீர்க் குடங்கள் சுங்கச் சாவடிக்குச் செல்லவேண்டிய அவசிய மில்லை."

"ஆம் அவசியமில்லை" என்று அதுவரை மௌனமா யிருந்த சுங்க அதிகாரி கண்டியத்தேவனும் சொன்னான்.

"உண்மையாகவா?" என்று இடையே புகுந்து கேட்டான் இளையபல்லவன்.

"ஆம் இளைய பல்லவரே! மரக்கலங்களுக்குச் செல்லும் நீர்க்குடங்களைச் சாதாரணமாகச் சோதிப்பதில்லை. குடி நீருக்குத் தீர்வை போடும் அளவுக்குக் கலிங்கம் இன்னும் உயரவில்லை" என்றான் கண்டியத்தேவன்.

"இருக்கலாம். ஆனால் இன்றைய சூழ்நிலையில் அவர்கள் நீர்க்குடங்களையும் சோதிக்க மாட்டார்க ளென்று எப்படிச் சொல்ல முடியும்?" என்று மீண்டும் வினவினான் இளையபல்லவன்.

"சொல்ல முடியாது" என்று ஒப்புக்கொண்ட கண்டியத்தேவன், "நில மார்க்கங்களை அடைந்துவிட்ட பீமனும் அனந்தவர்மனும் உங்களை நீர் வழியிலும் தப்ப விடமாட்டார்கள். இத்தனை பெரிய நீர்க்குடங்கள் வண்டியில் போய் நீர்க் கரையில் படகுகளில் ஏற்றப்படு முன்பு சோதிக்கப்படலாம். அப்படிச் சோதிக்கப்பட்டால்

அதில் ஆபத்து இருக்கத்தான் செய்யும்" என்று வலியுறுத்தினான்.

"ஆபத்து இரு வகையானது" என்று சுட்டிக் காட்டினான் இளையபல்லவன்.

நீர்க்குடங்கள்மீது கண்களை நிலைக்க விட்டு மற்றவர்களுக்கு முதுகைக் காட்டிக் கொண்டு நின்ற அமீர் சரேலெனத் திரும்பி, இளையபல்லவனை, "ஆபத்து இரு வகைப்பட்டதா?" என்று ஆச்சரியத்துடன் வினவினான்.

"ஆம் அமீர். இருவகைப்பட்டது" என்று உறுதியுடன் கூறிய இளையபல்லவன் குரலில் வெறுப்பும் மண்டிக் கிடந்தது.

"எனக்குப் புரியவில்லை இளைய பல்லவரே" என்றான் அமீர்.

"புரியச் சொல்லுகிறேன், கேளுங்கள் அரபுநாட்டு வணிகரே. உமது திட்டத்தில் உயிரைப் பற்றிய ஆபத்து ஒன்று. ஆனால் அதைவிட நாங்கள் பெரிதாக மதிக்கும் மானத்தைப் பற்றிய ஆபத்து ஒன்று. ஆக இரண்டு ஆபத்துகள் இருக்கின்றன. உயிரைப்பற்றி நாங்கள் கவலைப் படவில்லை. ஆனால் மானம், அதன் கதை வேறு" என்று உஷ்ணத்துடன் கூறிய இளையபல்லவன், "நீர்க்குடங்களில் நாங்கள் பதுங்கிச் சென்று சுங்க அதிகாரிகளிடம் அகப்பட்டுக் கொண்டால் பீமன் கையில் உயிர் போகும். ஆனால் மக்கள் கண்ணெதிரில் மானம் போய்விடும். உயிருக்காகக் குடங்களில் பதுங்கிய வீரர்கள் எனக் கலிங்கத்தின் நாவலர் கவிதைகளைப் பொழிவார்கள். சரித்திரத்தில் நாங்கள் பெறும் இடம்..." என்று கூறி, பேச்சை முடிக்காமலே விட்டான். உள்ளெழுந்த கோபம் அவன் நாவைக் கூடக் கட்டியிருந்தது. அவன் குரலிலிருந்த சீற்றம் காஞ்சனாதேவியின் கண்களிலும் தெரிந்தது.

ஆனால் அந்தச் சீற்றத்தைச் சிறிதும் லட்சியம் செய்யாத அமீர் சொன்னான்: "தவறு, இளைய பல்லவரே, தவறு. தந்திரத்தால் தப்புவதை வீரத்தில் கண்ணியக் குறைவென்று சரித்திரத்தில் யாரும் கூறியதில்லை. எங்கள் நாட்டிலிருந்த பேரரசனான 'கான்' மாளிகைக்குள் புரட்சி வீரர்கள் குடங்களில் பதுங்கிச் சென்று அரசனை வெற்றி கண்டதாகப் பழங்கதை இருக்கிறது. இந்த வீரர்களைப் பேடிகளென்று சரித்திரம் கூறவில்லை. பதுங்கித் தப்பிச் சென்ற வீரர் கதைகள், மாறுவேடம் பூண்டு மாவீரர் தப்பிய கதைகள் சரித்திரத்தில் பல உண்டு. அரக்கு மாளிகையிலிருந்து சுரங்க வழியில் தப்பி வேதியர் வேடம் தாங்கி மறைந்துறைந்ததாக மாவீரர் ஐவரைப் பற்றி உங்கள் மகாபாரதமும் கூறுகிறது. அவர்களைக் கோழைகளாகப் புராணமோ சரித்திரமோ கூறவில்லை. பதுங்குவதும் மறைவதும் தவறல்ல. புலி பதுங்குவது பாய்வதற்காக. பதுங்கும் புலியைக் கோழையென்று யாரும் சொல்வதில்லை" என்றான் அமீர் திட்டமாக.

"அப்படிப் பதுங்கித் தப்ப நான் இஷ்டப்படவில்லை" என்றான் இளையபல்லவன்.

"எனக்கும் இஷ்டமில்லை" என்றாள் காஞ்சனாதேவி.

அமீரின் பெருத்த உதடுகளில் புன்முறுவல் தவழ்ந்தது. "இந்தத் திட்டத்தில் ஆபத்தில்லை. வீரமில்லையென்று நினைக்கிறீர்கள். ஆனால் பேராபத்து இருக்கிறது. அதைச் சொன்னால் புரியும் உங்களுக்கு. கேளுங்கள்." என்று ஆபத்தையும் விளக்கினான் அமீர். அவன் விளக்கத்தைக் கேட்டதும், ஆபத்து பலத்த ஆபத்துதான் என்பதை இளையபல்லவன் புரிந்துகொண்டான். அந்த ஆபத்தில் தங்களுக்கு உயிர் போகவும் கூடும் என்பதும் அவனுக்குப் புரிந்திருந்தது. வாளுக்கு நிரம்ப வேலை இருக்கத்தான் செய்தது அமீர் திட்டத்தில். ஆனால் திட்டம் சிறிது தவறினால்? காத்திருந்தது பெரும் படுகுழி!




அத்தியாயம் 25

## வீரர்கள் திட்டம்

சீனத்து மரக்கல நீர்க்குடங்களில் அநபாயன், இளையபல்லவன், காஞ்சனாதேவி, குணவர்மன் ஆகிய நால்வரையும் பதுங்க வைத்துத் துறைமுகம் கொண்டு சேர்த்து, அங்கிருந்து மரக்கலம் மூலம் சோழநாடு அனுப்பி விட அமீர் இட்ட திட்டம் வீரர் ஏற்க முடியாத பெரும் கோழைத் திட்டமாக ஆரம்பத்தில் இளைய பல்லவனுக் குத் தோன்றியதென்றாலும், அந்தத் திட்டத்தையும், சூழ்ந்து நின்ற ஆபத்தையும அமீர் விளக்கியதும் அது அத்தனை தூரம் கோழைத் திட்டமல்ல என்பதையும் தனது வீரமும் வாளின் லாகவமும் அதில் பெரிதும் சோதிக்கப்படும் என்பதையும் இளையபல்லவன் இறுதியில் புரிந்து கொள்ளவே செய்தான். அப்படிப் புரிந்துகொண்டதால் அந்தத் திட்டத்தின் மூலம் தனக்கு ஏற்படக்கூடிய ஆபத்தைப் பற்றி அவன் சிறிதும் பொருட்படுத்தவில்லை யென்றாலும், அந்தத் திட்டத்தின் விளைவாகக் காஞ்சனா தேவிக்கு ஏற்படக்கூடிய கொடிய ஆபத்தைப் பற்றி உள்ளுக்குள் லேசாக நடுங்கவும் செய்தான் சோழர்களின் படைத்தலைவன். இத்தனை ஆபத்து சூழ்ந்திருந்த அந்தத் திட்டத்தைத் தீவிர சிந்தனைக்குப் பின்பே அமீர் வகுத் திருக்கிறானென்பதும் அதைவிடச் சிறந்த ஒரு திட்டத்தைப் பாலூரின் அந்தச் சூழ்நிலையில் வேறு யாரும் வகுக்க முடியாதென்பதும் புலனாயிற்று அந்த வாலிப வீரனுக்கு.

அமீர் திட்டத்தை நிறைவேற்ற வேண்டிய முறைகளை விளக்க முற்பட்டது முதலே அதில் கலந்து கிடந்த பல ஆபத்துகளையும் புரிந்துகொண்ட இளையபல்லவன், அமீரின் சொற்களைக் குருவிடம் பாடம் கேட்கும் சீடன் போல் மிகுந்த எச்சரிக்கையுடனும் கவனத்துடனும் கேட்டான்.

"இந்தத் திட்டத்தில் ஆபத்தில்லை. இது கோழையின் திட்டம் என்று நினைக்கிறீர்கள் இளைய பல்லவரே! நன்றாகக் கேளுங்கள் நான் சொல்வதை!" என்று கூறி அறையைப் பெரிதும் அடைத்து நின்ற அந்த நான்கு நீர்க் குடங்களையும் காட்டி, "இந்த நீர்க் குடங்களின் பரிமா ணத்தைப் பாருங்கள். இந்த ஒவ்வொரு குடத்தையும் உள்ளே நீரோ வேறு பொருளோ இன்றித் தூக்குவதற்குக் குறைந்த பட்சம் நான்கு ஆட்கள் தேவை. அதில் ஒரு மனிதரையும் பதுங்க வைத்தால் ஆறு ஆட்கள் இல்லாமல் தூக்க முடியாது. ஆகவே இந்த நான்கு குடங்களில், உங்களையும், அநபாயரையும், கடாரத்து அரச குலத்தார் இருவரையும் பதுங்க வைத்தால் வண்டியில் இவற்றைத் தூக்கிவைப்பதற்கும் இறக்குவதற்கும் இருபத்து நான்கு அடிமைகள் தேவையாயிருக்கும். அது மட்டுமல்ல. இந்த நீர்க்குடங்கள் நான்கை மட்டும் நாம் கொண்டுபோக முடியாது. இவற்றுடன் குருநாதர் மரக்கலத்திலிருந்து வரும் இன்னும் ஐந்தாறு குடங்களையும் கலக்க வேண்டும். சில குடங்களில் நீர், சில குடங்களில் மனிதர், இப்படிக் கொண்டு போனால்தான் இடையே சோதனையிருந் தாலும் நீரிருக்கும் குடங்களைக் காட்டி, காவலாளிகளை ஏமாற்றப் பார்க்கலாம். அப்படிக் குருநாதரின் மரக்கலக் குடங்கள் ஆறும் சேர்ந்தால் அவற்றைத் தூக்க ஐம்பது அடிமைகளுக்கு மேல் தேவையாயிருக்கும். ஆக மொத்தம் பத்து நீர்க்குடங்களைத் தூக்கிவைத்து இறக்க சுமார் ஐம்பது அடிமைகள் படைசூழ வண்டியைக் கடற்கரைக்குக்

கொண்டு போனால் சும்மா இருக்கச் சுங்க அதிகாரிகள் என்ன முட்டாள்களா?" என்று கேட்டான் அமீர் இளைய பல்லவனை நோக்கி.

மரக்கலங்களுக்கு நீர் சேகரிக்கும் முறைகள் எதையும் அறியாத இளையபல்லவன், "மனிதர் மறைந்திருந்தாலும் இல்லாவிட்டாலும் அக்குடங்களைத் தூக்கவும் இறக்கவும் ஆட்கள் தேவைதானே?" என்று வினவினான் பதிலுக்கு.

"தேவைதான் இளையபல்லவரே! ஆனால் அத்தனை அடிமைகளை யாரும் நகரத்திலிருந்து ஊர்வலமாகக் கடற் கரைக்கு அழைத்துப் போவது கிடையாது. கடற்கரையோர மாகப் படகுகள் தரையில் இழுக்கப்பட்டுள்ள இடங்களில் இவற்றை இறக்கவும், படகுகளில் ஏற்றவும் சுங்க அதிகாரி கள் நிரம்ப ஆட்களை நிறுத்தியிருக்கிறார்கள். அவர்கள் ஊழியத்துக்குப் பணம் கொடுப்பதுதான் நமது பொறுப்பு. அவர்களை விட்டு வேறு ஆட்களை அமர்த்தும் பழக்கம் கிடையாது. அப்படி அமர்த்தினால் ஆட்களுக்குள் சண்டை ஏற்பட்டுவிடும்" என்று விளக்கினான் அமீர்.

அமீரின் இந்தப் பதிலைக் கேட்டதும் உள்ள நிலையை மெள்ளப் புரிந்துகொள்ளத் துவங்கிய இளையபல்லவன், "அப்படியானால் நாம் யாரையும் இங்கிருந்து துணை கொண்டு செல்ல முடியாதா?" என்று வினவினான்.

"முடியாது இளையபல்லவரே! முடியாது! நீர்க் குடங்களைத் தவிர மேற்கொண்டு ஐந்தாறு பேர்களை அழைத்துச் செல்லலாம். அவர்களில் ஒருவன் வண்டி யோட்டலாம். இருவர் பின்பக்கம் உட்கார்ந்து குடங்கள் உருண்டு விடாதபடி பாதுகாக்கலாம். மீதியிருக்கும் அடிமைகள் மூவர் வண்டிக்கு முன்னும் பின்னும் ஓடலாம். இதுவே அதிகம். இதுவே அதிகாரிகளுடைய சந்தேகத்தை வளர்க்கும்."

"ஆறு பேர்கள் போனால் கூடவா?"

"ஆம் இளையபல்லவரே! வண்டியுடன் ஆட்கள் ஓடும் பழக்கம் பாலூரில் கிடையாது. வண்டி ஓட்டுபவர், சரக்குகளைப் பாதுகாப்பவர் இவர்கள்தான் போவது வழக்கம். மற்ற எல்லாப் பணிகளுக்கும் சுங்கச் சாவடிக் கருகிலும் கடற்கரையோரத்திலும் ஏராளமான ஆட்க ளிருக்கிறார்கள்."

"ஆகவே யாரும் வண்டியுடன் வரமுடியாது."

"முடியாது. நான்கூட வர முடியாது. வர்த்தகப் பொருள் அனுப்பும் வணிகர் தங்கள் வண்டிகளை எதிர் பார்த்துச் சுங்கச் சாவடியிலோ கடற்கரையோரத்திலோ காத்திருப்பார்களே தவிர வண்டியுடன் ஓடமாட்டார்கள்."

"அப்படியானால் நீங்கள்..."

"நீர்க்குடமொன்றில் பதுங்கி வரவேண்டும் அல்லது வண்டியை ஓட்டிக்கொண்டு வரவேண்டும். இரண்டா வது பணியைத்தான் நான் செய்ய உத்தேசம்?" என்று கூறிய அமீர், "சற்று இப்படி வாரும்" என்று இளைய பல்லவனையும் மற்றவர்களையும் அழைத்துக் கொண்டு ஏற்கெனவே திறக்கப்பட்ட கொல்லைப்புறக் கதவு வழியாக வெளியே சுட்டிக்காட்டி, "அதோ அந்த வண்டி யைப் பாருங்கள்" என்றான்.

நீண்டதாக இருபுறங்களிலும் பெரும் மரச் சட்டங்கள் அடிக்கப்பட்டு மேற்புறம் திறந்து கிடந்த அந்த வண்டியில் அச்சு, இரிசி முதலியன மிகவும் பலமாயிருந்ததைக் கண்ட இளையபல்லவன், 'பத்துப் பதினைந்து நீர்க்குடங்களை மட்டுமென்ன, இன்னும் அதிக பாரத்தையும் இந்த வண்டி தாங்கும்' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான். நீர்க் குடங்கள் திடமாகத் தங்குவதற்காக வண்டியின் பக்கப் பகுதிகளில் பெரும் பிணைக் கயிறுகள் இருந்ததையும் கண்ட கருணாகர பல்லவன் முன்னேற்பாடுகளை அமீர் அப்பழுக்கின்றிச் செய்திருப்பதை உணர்ந்தான்.

அந்த வண்டியைச் சுட்டிக்காட்டி, "இதைப் பாருங்கள்" என்று மற்றவர்களுக்குக் கூறிய அமீர் அவர்கள் அதை நன்றாகப் பார்க்கச் சற்று அவகாசம் கொடுத்து விட்டுப் பிறகு சொன்னான்: "இளைய பல்லவரே! அநபாயரே! நான் சொல்வதைக் கவனமாகக் கேளுங்கள். என் திட்டம் இம்மியளவும் தவறாமல் நிறைவேறுவதைப் பொறுத்திருக்கிறது நமது உயிர், சோழ நாட்டின் பிற்காலம், ஸ்ரீவிஜயத்தின் நற்காலம் இவையனைத்தும். இந்த வண்டி நல்ல கட்டுடையது. பெரும் கனப்பொருள்களை ஏற்றிச் செல்ல அச்சிலும் பூட்டுகளிலும் இருப்புப் பாளங்களையும் பாய்ச்சியிருக்கிறேன். சீனத்து நீர்க்குடங்கள் இருபதைக் கூட இதில் ஏற்றலாம். ஆனால் நமது திட்டத்துக்குப் பத்துக் குடங்களை ஏற்றினால் போதும். பத்துக் குடங் களில் நான்கு குடங்கள் நடுவண்டியில் வைக்கப்படும். மற்றவை அவற்றைச் சுற்றிலும் இருக்கும். நடுவிலுள்ள நான்கு குடங்களில் அநபாயர், குணவர்மர், இளைய பல்லவன், காஞ்சனாதேவி ஆகியவர்கள் இருக்கவேண்டும். மற்றக் குடங்களில் நீர் இருக்கும். குடங்கள் ஆடாமல் அசையாமல் இருப்பதற்காகப் பிணைக் கயிறுகளால் பிணைக்கப்படும். நான் வண்டியின் முகப்பில் உடகார்ந்து மாடுகளை ஓட்டுவேன். உங்களைச் சேர்ந்த மற்ற இருவர், அதாவது கண்டியத்தேவரும், கூலவாணிகரும் என் அடிமைகளின் உடைகளில் வண்டியின் பின்புறம் அமர்ந்து, நீர்க்குடங்களைப் பாதுகாப்பார்கள்..."

இப்படிச் சொல்லிக்கொண்டே போன அமீர், சற்றுப் பேச்சை நிறுத்தி மற்றவர்களைத் திரும்பிப் பார்த்தான். அந்தத் திட்டத்தைக் கேட்டுக் கொண்டவர்கள் முகத்தில் ஈயாடவில்லை. அமீர் தன் உயிரை இந்தத் திட்டத்தின் மூலம் பணயம் வைக்கிறான் என்பது மற்றவர்களுக்குச் சந்தேகமறத் தெரிந்தது. எந்த இடத்திலாவது காவலருக்குச் சந்தேகமேற்பட்டு வண்டி நிறுத்தப்பட்டால், முதல் பலி

அமீர்தான் என்பதையும், அப்படி அமீர் சிக்கும் பட்சத்தில் அவனுக்கு ஏற்படக்கூடிய கதி அதோ கதிதானென்பதையும் உணர்ந்துகொண்டதால் மற்றவர்கள் யாரும் எந்தப் பதிலுமே சொல்லவில்லை. அப்படிப் பதில் சொல்லாவிட்டாலும், அவர்கள் முகபாவத்திலிருந்தே அவர்கள் உள்ளூர ஓடிய எண்ணங்களைப் புரிந்துகொண்ட அமீர், "இப்படி என் சாரத்தியத்திலும், கூலவாணிகர், கண்டியத்தேவர் பாதுகாப்பிலும் செல்லும் வண்டி முதன் முதலில் பாலூர் கிழக்குக் கோட்டை வாசலில் காவலரால் நிறுத்தப்படும். காவலர் யாருக்கும் இதுவரை என்மீது எந்தச் சந்தேகமும் கிடையாது. என்னைப் பார்த்ததும் வண்டியைப் போகவிடுவார்கள். அப்படிப் போகவிட்டால் அடுத்தபடி நமக்கு ஏற்படக்கூடிய ஆபத்து வழியில் எதுவுமில்லை. கடற்கரையில் அலைகள் தரையைத் தொடுமிடத்தில்தான் உண்டு. ஒருவேளை என்மீது அவர்களுக்குச் சந்தேகம் ஏற்பட்டு..." என்று சொல்லிக்கொண்டு போன அமீரின் பேச்சை இடைமறித்த இளையபல்லவன், "கண்டிப்பாய்ச் சந்தேகம் ஏற்படும்" என்றான்.

அமீர் தன் பெருவிழிகளை இளையபல்லவன் மீது ஆச்சரியத்துடன் திருப்பினான். "ஏன் ஏற்பட வேண்டும்?" என்று கேட்கவும் செய்தான்.

"உங்களைப்போல் தனிகரான வணிகர் வண்டியோட்டுவது அவர்களுக்கு விந்தையாயிருக்காதா?" என்று வினவினான் பல்லவன்.

"இருக்காது இளையபல்லவரே. ஒருகாலும் இருக்காது. பலமுறை எனது வண்டிகளை, நானே ஓட்டிக் கொண்டு சுங்கச் சாவடி சென்றிருக்கிறேன். எளிய வாழ்க்கையில் சில அனுகூலங்கள் உண்டு என்று அரபு நாட்டுப் பழமொழியொன்று சொல்லுகிறது. அத்தகைய வாழ்க்கையை நான் கடைப்பிடிக்கிறேன். பலமுறை என் ஆட்களுடன் வணிகப் பொதிகளை நானே இறக்கியும் இருக்கிறேன். அந்த

விஷயத்தில் யாரும் சந்தேகப்பட மாட்டார்கள். அதில் இல்லை ஆபத்து" என்றான் அமீர்.

"வேறு எதில்?" என்று இளையபல்லவன் சந்தேகத்துடன் வினவினான்.

"சோதனையில். சாதாரணமாக என் வண்டிகளை யாரும் சோதனை செய்வதில்லை. சுங்கக் காவலரையும் கிழக்குப்புறக் கோட்டைக் காவலரையும் நான் அவ்வப்பொழுது கவனித்துக் கொள்கிறேன். கலிங்கத்தின் ஊழல் இந்த விஷயத்தில் எனக்குப் பெரிதும் உதவியிருக்கிறது. சாதாரண நாள்களாயிருந்தால் நிச்சயமாக இந்தத் திட்டத்தை நான் நிறைவேற்றியிருப்பேன். ஆனால் இன்று பாலூர் குழப்பமான நிலைமையிலிருக்கிறது. காவல் பலமாயிருக்கிறது. முதன் முதலில் கோட்டை வாசலிலேயே வண்டி சோதிக்கப்படலாம். சோதிக்கும் முறை தெரியுமா?"

"சொல்லுங்கள்."

"நீர்க்குடங்களைக் காவலர் கழிகளால் தட்டிப் பார்ப்பார்கள். நீர் இருக்கும் குடங்களின் சத்தம் வேறு. அப்படி அவர்கள் வித்தியாசத்தைக் கண்டு பிடித்துவிட்டால் நாம் உடனே நடவடிக்கை தொடங்க வேண்டும்!"

"என்ன நடவடிக்கை?"

"அருகிலிருக்கும் காவலரை நான் என் சிறு கத்திகளை வீசிக் கொன்றுவிடுவேன். நான் எச்சரிக்கைக் குரல் கொடுத்ததும் குடங்களிலிருந்து நீங்கள் எழுந்து மற்றக் காவலர்களில் இரண்டொருவரை வெட்டிவிட்டுக் கடற்கரை நோக்கி ஓடவேண்டும். மடக்கப்பட்டால் போரிட வேண்டும். ஒன்று தப்புவோம்; இல்லையேல் மடிவோம்."

இதைக் கேட்ட மற்றவர் மௌனமாயிருந்தனர். அமீர் மேற்கொண்டு சொன்னான்: "கீழ்க் கோட்டை வாசலில் சோதனை நடக்காமல் தப்பி, கடற்கரையோரம் சென்றால் அங்கு எனது குருநாதரின் படகு நமக்காகக்

காத்திருக்கும், நீர்க்குடங்கள் இறக்கப்பட்டதும் குடங்களை இறக்க ஆட்களை அழைக்கக் கூடாது. குடங்களிலிருந்து நீங்கள் வெளிவந்து படகில் ஏறிவிட வேண்டும். அங்குள்ள சுங்க அதிகாரிகள் ஒருவேளை நம்மைக் கண்டு கொண்டால் அங்கும் சண்டையிருக்கும். படகில் ஏறிய பிறகும் நமக்குப் பாதுகாப்பு இல்லை. சுங்கக் காவலரின் படகுகள் நமது படகை உடனடியாகத் தொடரலாம். தொடர்ந்து கொண்டே அம்புகளை எய்யலாம், வேல்களையும் வீசலாம். அவற்றிலிருந்து பிழைத்து நமக்குப் படகின் துடுப்புகளை வேகமாகத் துழாவித் தப்பினால், பிறகு கஷ்டமில்லை." இதைச் சொன்ன அமீர், "திட்டம் சரிதானா குருநாதரே?" என்றும் வினவினான்.

"இந்த ஊர் உள்ள சூழ்நிலையில் இதைவிடச் சிறந்த திட்டத்தைத் தயாரிக்க முடியாது. ஆபத்து நிரம்பியது தான். இரண்டு இடங்களில் சோதனையும் சண்டையும் எற்படுகிறது. இருப்பினும் வேறு வழியில்லை. ஆனால் அமீர்! இவர்கள் இந்தத் திட்டத்தை ஒப்புக்கொள்வது கஷ்டம்?" என்றான் சீனக் கடலோடி.

"ஏன்?" என்று கேட்டான் அமீர்.

"அதோ அவர்கள் முகங்களைப் பார். அநபாயர், இளையபல்லவர், காஞ்சனாதேவி மூவர் முகங்களும் வீரக் களை சொட்டும் முகங்கள். நீர்க்குடத்தில் பதுங்க அவர்கள் ஒப்புக் கொள்ளமாட்டார்கள்" என்றான் அகூதா.

"வேறு வழி?" கவலையுடன் எழுந்தது அமீரின் கேள்வி.

"நீர்க் குடங்களில் காஞ்சனாதேவியும் அவர் தந்தையும் நான் விடுதலை செய்த இந்த இரு தமிழரும் பதுங்கி வரட்டும். நீ வண்டியை ஓட்டு. அநபாயரும், இளைய பல்லவரும் உன் அடிமைகளைப் போல் மாறு வேடம் பூண்டு வண்டியின் பின்புறத்தில் உட்கார்ந்து வரட்டும்.

போரிட வேண்டியிருந்தால் இவர்கள் உடனடியாக வாளை உருவிக் காவலரைத் தாக்க முடியும். இது வீரர்கள் திட்டம். இதற்கு அவர்கள் மறுப்புக் கூறமாட்டார்கள்" என்றான் அகூதா.

அகூதாவின் திட்டத்தைக் கேட்ட அநபாயனும், இளைய பல்லவனும் அதை உடனே ஒப்புக்கொண்டார்கள்!"

"ஏன்? நானும் என் தந்தையும் மட்டும் கோழைகளா?" என்று கேட்டுத் தன் இடையிலிருந்த வாளையும் தட்டிக் காட்டினாள் காஞ்சனாதேவி.

அகூதாவே அவளுக்குச் சமாதானம் சொன்னான். "தேவி! உங்கள் வீரத்தைப் பற்றி நான் சந்தேகப்படவில்லை. அன்று நீதி மண்டபத்தில் நீங்கள் செய்த சாகசச் செயலைக் கண்டு பாலூர் அதிசயப்பட்டுக் கொண்டிருக்கிறது. நான் இங்கு வரும்போதே மக்கள் அதைப்பற்றி வழி நெடுகப் பேசிக்கொண்டிருந்தார்கள். ஆகவே, மற்றவர்களைவிட உங்களைத்தான் அதிகமாகக் காவலர் தேடுவார்கள். காவலர் தீவட்டியைத் தூக்கிப் பிடித்துச் சோதனை செய்தால் நீங்கள் என்னதான் மாறுவேடமணிந்தாலும் உங்கள் கண்கள் உங்களைக் காட்டிக் கொடுத்துவிடும். உங்கள் கண்களே உங்களுக்குப் பெரும் விரோதி" என்று சொல்லி நகைத்த அகூதா, "பெண்கள் மறைவிலிருப்பதும் தவறல்ல தேவி. அதுமட்டுமல்ல, நீங்கள் கடல் கடந்து சோழர் உதவி நாடி வந்திருப்பதை இவர்கள் பேச்சிலிருந்து புரிந்து கொண்டிருக்கிறேன். ஆகவே உங்களைப் பத்திரமாகச் சோழ நாடு சேர்ப்பது இவர்கள் பொறுப்பு. அது மட்டுமல்ல. யாராவது நீர்க்குடங்களில் பதுங்கவேண்டும். எல்லோரும் மாறுவேடமணிந்து கும்பலாக வண்டியில் போக முடியாது. சற்று நீங்கள் விட்டுக் கொடுங்கள் இந்த வீரர்களுக்காக" எனறு இளையபல்லவனையும் அநபாயனையும் சுட்டிக் காட்டினான்.

காஞ்சனாதேவி முதலில் ஒப்புக்கொள்ளாவிட்டாலும் இளையபல்லவன் மெள்ள ஒப்புக்கொள்ள வைத்தான்.

அபநாயன் கேட்டான், "நாம் எப்போது புறப்பட வேண்டும்?" என்று.

"நாளை இரவு."

"ஏன் நாளை இரவு?"

"நாளைக்குப் பௌர்ணமி முடிந்து நான்காவது நாள் எட்டு நாழிகைக்குப் பிறகுதான் நிலவு புறப்படும். அது வரை இருட்டு இருக்கிறது. இருட்டு நமது திட்டத்துக்குப் பெரிதும் உதவும்" என்றான் அமீர்.

"ஆமோதிப்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தான் அநபாயன். அதற்குமேல் பேச எதுவுமில்லாமற் போகவே அவர்களிடம் விடை பெற்றுக் கொண்டு அகூதா வெளியே சென்றான். அவர்கள் படுக்கத் தனித்தனி அறைகளை ஒதுக்கிய அமீர் மேற்கொண்டு தனது அலுவல்களைக் கவனிக்க வெளியே சென்றான். இரவின் ஜாமம் வெகு வேகமாக ஓடிக் கொண்டிருந்தது. தனக்கு ஒதுக்கப்பட்ட அறையில் தீவிர சிந்தனையுடன் பஞ்சணையொன்றில் படுத்துக் கிடந்தாள் காஞ்சனாதேவி. அவள் அஞ்சன விழிகள் மூடிக் கொண்டிருந்தனவேயொழிய அவள் மனத்தின் சஞ்சல விழிகள் மூடாததால் வேதனையுடன் படுத்திருந்தாள் அவள். உள்ளம் எங்கோ ஓடிக்கொண்டிருந்ததால் அறையில் நிகழ்ந்த எதையும் அவள் கவனிக்கச் சக்தியற்றவளானாள். அப்படிக் கவனித்திருந்தால் மெள்ள சாளரத்தின் மூலம் ஏறிக் குதித்து ஓசைப்படாமல் சுவரோரமாகப் பதுங்கிப் பதுங்கி அவள் பஞ்சணையை ஓர் உருவம் அணுகிக் கொண்டிருப்பதை அவள் உணர்ந்திருக்க மாட்டாளா என்ன?




அத்தியாயம் 26

# அமைதியும், அபாயமும்

பௌர்ணமி கழித்து மூன்று பகல்கள் பறந்துவிட்டதால் ஆறு நாழிகைகளுக்குப் பின்பே வான விளிம்பில் தலை நீட்டிய சற்றே தேய்ந்த வெண்மதி, இரவு பெரிதும் ஏறிவிட்ட அந்தச் சமயத்தில் சஞ்சலத்தின் வசப்பட்டுப் பஞ்சணையில் கிடந்த கடாரத்தின் அஞ்சுகத்தைக் காண அஞ்சிய காரணத்தால், தன் கிரணங்களால் அந்த அறைச் சாளரத்தின் கட்டைமீது மட்டும் மெள்ளத் தொட்டு ஏறித் திருடன் போல் உள்ளே நோக்க முயன்று கொண்டிருந்தான். கட்டிலில் கிடந்த அந்தக் கட்டழகியை அந்தத் திருட்டு மதி காணும்படி விடக்கூடாதென்று திட்டமிட்டுச் சாளரத்தின் மேற்புறத்தில் தொத்தி ஏறிய பூங்கொடியொன்று சாளரத்தை அரைப்பாகம் மறைத்துவிட்டதன்றி, தொங்கிய தன் கரங்களால் சாளரக் கட்டையில் பாய்ந்திருந்த வெள்ளிக் கிரணங்களையும் அகற்றிவிட அப்படியும் இப்படியும் அசைந்துகொண்டிருந்தது. அந்தக் கொடியின் மனநிலையைப் புரிந்துகொண்டது போல் சற்று தூரத்திலிருந்த பெரிய இலவ மரமொன்றும் அதற்குத் துணை செய்ய இஷ்டப்பட்டுத்தன் இலைகளைக் கொண்டு சந்திரன் சிருஷ்டியைப் பெரிதும் தடுத்ததல்லாமல், கடற்காற்றில் இலைகளைச் சலசலக்க விட்டு அறையில் துயின்ற பூங்கொடியின் சஞ்சல நிலை தனக்கும் புரிகிறதென்பதைப் புலப்படுத்திக் கொண்டு நின்றது. அத்தனை இயற்கைப் பாதுகாப்பை மீறி அறையின் சாளரத்தில் ஏறிக் குதித்து உள்ளே நுழைந்த அந்தத் திருடன் யாரென்பதைச்

சந்தேகத்துடன் பார்ப்பது போல் அந்தி வேளையிலே விகசித்துவிட்ட கொடியின் மலர்கள் சில தங்கள் பூங்கண் களை அகல விரித்து உள்ளே எட்டிப் பார்த்தன.

சாதாரணமாக இயற்கையின் கவர்ச்சி எழிலில் இத யத்தைப் பறிகொடுக்கும் இயல்பு வாய்ந்த காஞ்சனா தேவி மட்டும் அந்த இரவு நேரத்தில் தூங்காவிட்டாலும் அஞ்சன விழிகளைச் சிறிதும் திறக்காமலும் இயற்கை அழகுகளை அள்ளிப் பருகாமலும் செயலற்ற வண்ணமே பஞ்சணையில் படுத்துக் கிடந்தாள். உடல் செயலற்றுக் கிடந்ததேயொழிய உள்ளம் செயலற்றிருக்காமல் பலப்பல எண்ண அலைகளில் புரண்டு கொண்டிருந்ததால் புறக் கண் விழிக்காவிட்டாலும் அகக்கண் பெரிதும் விரிந்து மனம் எடுத்துக்காட்டிய காட்சிகளையெல்லாம் கண்டு கொண்டிருந்தன. அந்தக் காட்சிகளில் இன்பமும் துன்ப மும், காதலும் கலையும், வீரமும் கோரமும், கோபமும் சுபமும், எல்லாமே கலந்து கிடந்ததால் பாபத்தாலும் புண்யத்தாலும் சமவலிமையுடன் இழுக்கப்படும் ஆத்மா வின் நிலையற்ற தன்மையிலிருந்து அவள் மனம் கடா ரத்தின் பெரிய ஆசார வாசல்களும் ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத் தின் அகண்டமும் அவள் மனக்கண் முன்பு எழுந்ததால் அவள் இதயத்தில் பெருமிதம் சில விநாடிகள் தாண்டவ மாடியது. பின்பு தாயாதியான ஜெயவர்மனின் அநீதிகளை யும், சாம்ராஜ்ய பீடத்தில் அமரவேண்டிய தன் தந்தையும் தானும் ஒரு சிறு வணிகனின் தயவுக்கு ஏங்கி நிற்கும் நிலைக்கு வந்துவிட்டதையும் எண்ணி ஏக்கத்துக்குச் சில விநாடிகள் இலக்காகியது அவள் இதயம்.

அப்படி ஏங்கி நிற்பது தாங்கள் மட்டுமல்லவென்ற நினைப்பும், எந்தச் சோழ சாம்ராஜ்யத்தின் உதவியை நாடி வந்தோமோ அந்தச் சோழ சாம்ராஜ்ய பீடத்தில் ஒருநாள் அமரக்கூடிய இளவலும் அவன் படைத்தலைவரும் கூடத் தங்கள் நிலையிலேயே இருக்கிறார்கள் என்பதால் ஏற்பட்ட

எண்ணமும், அவள் உள்ளத்திலே எள்ளத்தனை சாந்தியை யும் ஏற்படுத்தியது. அந்த எள்ளத்தனை சாந்தியில் கலந்து கிடந்த படைத்தலைவன் முகம் அவள் மனக்கண் முன் எழவே அவள் இதயத்தில் இன்பம் வெள்ளமெனப் புரண் டது. அவள் நரம்புகள் ஒவ்வொன்றிலும் காதல் சுவை யோடி முகத்திலும் படர்ந்து, முகத்தில் ஒரு தெளிவையும் சந்துஷ்டியையும் நிலவ வைத்ததால் அவள் மிதமிஞ்சிய சாந்தியாலும் ஆனந்தத்தாலும் பெருமூச்சு விட்டாள். அதுவரை செயலற்றுக் கிடந்த அவள் கையும் பஞ்சணை யில் எதையோ தேடுவதுபோல் தேடி, தேடிய பொருள் அகப்பட்டதால் அதைப் பலமாகப் பிடித்துக்கொண்டது. அப்படிப் பிடித்துக்கொண்டதன் விளைவாக அவள் உணர்ச்சிகள் திடீரெனக் கொந்தளித்து எழவே அவள் துடித்துப் பஞ்சணையில் எழுந்து உட்கார முற்பட்டாள். ஆனால் அவள் இருளில் தேடிப் பற்றிய ஆடவனின் கரம் அவளை எழுந்திருக்கவொட்டாமல் தடுத்ததன்றி, "அஞ்ச வேண்டாம், நான்தான்" என்ற சொற்களும் அவள் காதில் ஒலித்தன.

உள்ளத்தின் எழுச்சியாலும் உணர்ச்சிகளின் தூண்டுத லாலும் அவள் கனவில் தேடிய கை நனவில் கிடைத்த தானாலும், அப்படிக் கையைப் பற்றிப் பஞ்சணையில் தன் அருகில் உட்கார்ந்திருந்தவன் தன் உள்ளத்தையெல்லாம், கொள்ளை கொண்ட இளைய பல்லவனேயென்றாலும் அஞ்ச வேண்டாம் என்ற சொற்கள் உண்மையில் அவள் அச்சத்தை அறவே வெட்டிவிடுவதே நியாயமென்றாலும், அந்த நியாயத்திற்குப் புறம்பாகவே நடந்துகொண்ட அவள் மனம் உண்மையில் அவள் சிந்தையில் அச்சத்தையே விளைவித்ததால் சில விநாடிகள் என்ன செய்வதென்று அறியாமல் அவள் பஞ்சணையில் படுத்தே கிடந்தாள். நள்ளிரவில் ஓர் ஆடவன் கள்ளத்தனமாய்த் தன் கட்டிலின் முகப்பில் உட்கார்ந்திருப்பது எத்தனை முறைகேடு,

எத்தனை விபரீதம் என்பதை நினைத்ததால் அவள் மனத்தின் சஞ்சலம் எத்தனையோ மடங்கு அதிகமாகவே, சஞ்சலத்தைக் குறிக்கும் பெருமூச்சு ஒன்றையும் விட்டாள் அவள். அந்தச் சஞ்சலத்தோடும் அச்சத்தோடும் சில விநாடிகள் மௌனமாகப் படுத்துக் கிடந்த அந்த அஞ்சன விழியாள் தன் நெஞ்சத்தில் அத்தனை சஞ்சலத்தையும் அச்சத்தையும் மீறி இன்பமான ஒரு கள்ளத்தனமும் ஊடுருவி நிற்பதை உணர்ந்து, கூடிய வரையில் நெறியைத் தகர்த்து எறிய உணர்ச்சிகள் எத்தனைத் துணை செய்கின்றன என்பதை எண்ணி இயற்கையின் சக்தியைக் குறித்துப் பெரிதும் வியந்தாள்.

அவளுக்குச் சஞ்சலம் இருந்தது கடந்த நிகழ்ச்சிகளைப் பற்றி. கள்ளத்தனம் இருந்தது உள்ளத்திலோடிய எண்ணங்களின் விளைவாக. வியப்பு இருந்தது — எண்ணங்களைத் தடுக்க முடியவில்லையே என்ற காரணத்தால். ஆனால் இத்தனையையும் மீறிய வெட்கமொன்று அவளை அழுத்திக் கொண்டதே, அது எதனால்? இந்தக் கேள்வியை அவள் தன்னைத்தானே இரண்டு மூன்று முறை கேட்டுக் கொண்டாள். உடனே விளங்கவில்லை அவளுக்கு. விளங்கியபோது தைரியமும் அடைந்தாள். பெண்களின் வெட்கம்தான் பெண்களின் நெறியைப் பாதுகாக்கும் பலத்த இரும்புக் கவசம் என்பதைப் புரிந்துகொண்டாள் காஞ்சனாதேவி. 'வெட்கம் பயத்தை அளிக்கிறது. பயம் நெறியைக் காக்கிறது. இவை இரண்டும் இல்லாததால்தான் ஆடவர் சீக்கிரம் நெறி குலைந்து விடுகிறார்கள். இவை இரண்டும் இருப்பதால் பெண்கள் தங்களைப் பாதுகாத்துக் கொள்கிறார்கள்' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டே காஞ்சனாதேவி இளையபல்லவன் கையிலிருந்து தன் கையை மெள்ள விடுவித்துக்கொண்டு பஞ்சணையில் எழுந்து உட்கார்ந்துகொண்டாள்.

அவள் கையைத் தன் கையிலிருந்து திருகி விடுவித்துக் கொண்டதையும் சரேலெனப் படுக்கையில் எழுந்து முழந்தாள்களைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்துவிட்டதை யும் கண்ட இளையபல்லவன் அவளைச் சில விநாடிகள் உற்று நோக்கினான். எட்ட இருந்த சாளரத்தைத் தொட்டு நின்ற வெண்மதிக் கரங்கள் உள்ளே முழுவதும் பாய வில்லையென்றாலும் அரைகுறை வெளிச்சத்தை அந்த அறைக்குள் வீசியதால் மங்கலமான மங்கல ஒளி அறையில் பரவி நின்றது. அப்படிப் பரவி நின்ற ஒளியில் காஞ்சனா தேவியின் மதிவதனம் தெளிவாகப் புரியா விட்டாலும், அந்தத் தெளிவற்ற தன்மையிலும் அது தனி அழகு வாய்ந்திருந்ததையும் தெளிவாகப் பார்க்க முடியாத தன்மையிலேயே அதில் பெரும் மர்மமும் கலந்திருந்ததை யும், அந்த மர்மமே தன் உள்ளத்தை ஆட்டி அலைக் கழிப்பதையும் உணர்ந்தான் இளையபல்லவன். மங்கல மான வெளிச்சத்தில் லேசாகத் தெரிந்த காஞ்சனாதேவி அவன் கண்களுக்கு மெல்லிய ஒளித் திரைக்குப் பின் வீற்றிருந்த தெய்வீக மங்கை போலவே காட்சியளித்தாள். 'தெய்வீகமான எதுவும் முழுதும் கண்களுக்குப் புலப்படுவ தில்லை; அப்படிப் புலப்படாத காரணத்தாலேயே அதில் மர்மம் கலக்கிறது. அப்படித் துளிர்விடும் மர்மமே அதனிடம் ஆசையைத் தூண்டுகிறது. இது இயற்கையின் விசித்திரம்' என்று எண்ணினான் இளையபல்லவன்.

இத்தகைய எண்ணங்களால் நீண்ட நேரம் மௌனமே சாதித்த இளைய பல்லவனிடம் மனம் பாகாய் உருகிய காரணத்தால் மெல்லக் காஞ்சனாதேவியே உரையாட லைத் தொடங்கி, "இரவு மிகவும் ஏறிவிட்டது" என்றாள்.

"ஆம்" ஏதோ பதில் சொல்ல வேண்டுமென்பதற்காகப் பதில் சொல்லுவது போலிருந்தது இளையபல்லவன் குரல் ஒலி.

"இந்த வீட்டில் நிசப்தம் நிலவிக் கிடக்கிறது" என்று தொடர்ந்தாள் காஞ்சனாதேவி, அவனுக்குக் கேட்கும் படியாக மிக மெல்லிய குரலில். மனம் சஞ்சலப்பட்டிருந்ததால் வேறு யாரும் அந்த அறையில் இல்லையென்ற உணர்ச்சிகூட இல்லை அவளுக்கு.

"ஆம்" இளையபல்லவன் பழைய பதிலையே சொன்னான்.

"எல்லோரும் உறங்கியிருக்க வேண்டும்" என்று சுட்டிக் காட்டினாள் அவள். 'நீங்கள் மட்டும் ஏன் உறங்கவில்லை' என்ற கேள்வி அவள் பேச்சில் மறைந்து கிடந்தது.

அந்த மறைபொருளைப் புரிந்துகொள்ளாதவன் போல் பதில் கூறிய இளையபல்லவன், "ஆம். எல்லோரும் உறங்கி விட்டார்கள், இருவரைத் தவிர!" என்றான்.

"யா்ர் அந்த இருவர்?" என்று வினவினாள் காஞ்சனா தேவி.

"நம்மைத் தப்புவிக்கும் பொறுப்பு வாய்ந்த இருவர்."

"யாரைச் சொல்கிறீர்கள்?"

"அநபாயரையும் அமீரையும்தான் சொல்கிறேன்."

"இருவரும் என்ன செய்கிறார்கள்?"

"வெளியே சென்றுவிட்டார்கள்."

"இந்த இரவிலா!"

"ஆம்."

"எந்த இடத்துக்கு?"

"என்னிடம் சொல்லவில்லை."

"நீங்கள் கேட்கக்கூடாதா?"

"கேட்கச் சந்தர்ப்பமில்லை."

"ஏன் சந்தர்ப்பமில்லை?"

"எல்லோரும் படுக்கச் சென்றோமல்லவா?"

"ஆம்."

"அவர்களும் படுக்கச் செல்வதாகப் பாசாங்கு செய் தார்கள். சிறிது நேரத்திற்கெல்லாம் அமீரும் அநபாயரும் என்னுடைய அறைக்கு எதிர் அறையிலிருந்து வெளியே வந்தார்கள். ஏதோ ரகசியமாகப் பேசிக்கொண்டார்கள். பிறகு அடிமேலடி வைத்துச் சத்தம் போடாமல் வாயிலை நோக்கி நடந்தார்கள். சில விநாடிகளில் வாயிற் கதவு திறந்து மூடும் சத்தம் கேட்டது" என்று விளக்கினான் இளையபல்லவன்.

இந்த மர்மத்தின் காரணம் விளங்காததால் காஞ்சனா தேவி மீண்டும் மௌனம் சாதித்தாள். பிறகு வாய்விட்டுத் தன் சந்தேகத்தைக் கேட்கவும் செய்தாள், "இளைய பல்லவரே! நாம் அனைவரும் ஒரே நிலையில்தானே இருக்கிறோம்?" என்று.

"ஆம்" என்று ஒப்புக்கொண்டான் இளைய பல்லவன்.

"அநபாயருக்குக் கலிங்கத்தில் உள்ள ஆபத்து நமக்கும் உண்டு."

"உண்டு."

"அப்படியிருக்க நம்மிடம் சொல்லிச் சென்றால் என்ன? எதற்காக இத்தனை மர்மமாகச் செல்ல வேண்டும்?"

"அதுதான் எனக்கும் புரியவில்லை. ஆனால் ஒன்று நிச்சயம்."

"எது?"

"தகுந்த காரணமில்லாமல் அநபாயர் எந்தக் காரியத்தையும் செய்யமாட்டார்."

"அது சரி. ஆனால் பாலூரில் அவருக்கு ஆபத்து காத்திருக்கிறதே?"

"ஆம். தலைபோகும் ஆபத்து."

"அப்படியிருக்க உங்களைத் துணைகொண்டு செல்லலாமே."

"துணையைத்தான் அழைத்துச் சென்றிருக்கிறாரே."

"யார், அமீரா?"

"ஆம்."

"உங்களைவிட அமீர் பெரும் துணையா?"

"அப்படித்தான் அநபாயர் நினைக்க வேண்டும்" இதைச் சொன்ன இளையபல்லவன் குரலில் துயரம் ததும்பி நிற்பதைக் கவனித்தாள் கடாரத்தின் இளவரசி. அதன் காரணமும் அவளுக்குத் தெள்ளென விளங்கவே செய்தது. பல போர்களிலே தோளுடன் தோளுராய்ந்து நின்ற அருமை நண்பனைவிட அரபுநாட்டு அமீரை ஏன் பெரிதாக நினைக்கிறார் அநபாயர் என்பதை நினைக்க நினைக்க அவளுக்கும் வேதனையாகவே இருந்தது. அந்த வேதனையும், வேதனையால் இளையபல்லவனிடம் ஏற்பட்ட கருணையும் அவள் கையிலொன்றை மீண்டும் நீட்டி, சற்று எட்டி உட்கார்ந்திருந்த அந்தப் பல்லவ இளவரசனின் கையைச் சிறைப்படுத்தச் செய்தன. அப்படித் தன்னை நாடிவந்த பூங்கரத்தை வேதனையின் விளைவாகச் சற்று அழுத்தவே பிடித்தான் இளைய பல்லவன். அது வரை விலகியே உட்கார்ந்திருந்த காஞ்சனாதேவி அவனை அணுகி உட்கார்ந்தாள். அவளுடைய அஞ்சன விழிகள் துயரம் தோய்ந்த அவன் முகத்தை ஏறெடுத்து நோக்கின. "உங்கள் உள்ளத்தின் வேதனை எனக்குப் புரிகிறது" என்று மெள்ள வார்த்தைகளை உதிர்க்கவும் செய்தாள் அவள்.

சோழர் படைத் தலைவனும் மகா வீரனுமான கருணாகர பல்லவனின் மனம் அந்தச் சமயத்தில் பெரிதும் வேதனையில் சிக்கிக் குழம்பிக் கிடந்ததால் அவன்

பதிலேதும் சொல்லவில்லை. பெருமூச்சொன்றுதான் பதிலாக வெளிவந்தது.

"வீணாக வருந்தாதீர்கள்" என்று சமாதானப்படுத்த முயன்றாள் காஞ்சனாதேவி.

துயரத்துடன் ஒலித்தன இளையபல்லவன் சொற்கள். "வீண் வருத்தமல்ல தேவி" என்றான் அவன்.

"அநபாயர் அமீரைத் துணைகொண்டு செல்லக் காரணமிருக்கும்" என்றாள் காஞ்சனாதேவி.

"இத்தனை நாள் அவர் என் துணையைத் தவிர வேறு துணையை நாடியதில்லை" என்று சுட்டிக் காட்டினான் இளையபல்லவன்.

"சோழநாட்டில் அது சரி, இப்பொழுதுள்ள காலதேச வர்த்தமானங்கள் வேறல்லவா?"

"வேறுதான். போகிற இடத்தை, அலுவலை என்னிடம் சொன்னால் என்ன?"

"நீங்கள் உறங்கிவிட்டதாக நினைத்திருக்கலாம்."

"எழுப்ப உரிமையில்லையா இளவரசருக்கு?"

"உண்டு, உண்டு" என்று கூறிய காஞ்சனாதேவி மேற் கொண்டு என்ன சொல்வதென்று அறியாமல் சில விநாடி கள் தத்தளித்தாள். பிறகு கேட்டாள், "ஆமாம். நீங்கள் எதற்கு வந்தீர்கள் இங்கு?" என்று.

"அமைதியை நாடி வந்தேன்" என்றான் இளைய பல்லவன்.

அவன் சொன்னது நன்றாகப் புரிந்தது அவளுக்கு. அவன் கைகளை இறுகப் பிடித்துக்கொண்டாள் அவள். அதில் ஓரளவு அமைதி ஏற்பட்டது இளையபல்லவனுக்கு. ஆனால் அமைதியை நாடிய அவன், அதே சமயத்தில் அந்த நகரத்தின் வேறொரு கோடியில் பெரும் அபாயத்தை நாடி அநபாயன் சென்றுகொண்டிருந்ததை மட்டும் அறியவில்லை.

அத்தியாயம் 27

# எங்கே என் தந்தை?

ஆரம்பத்தில் சாளரத்தின் அடிக்கட்டையை மட்டும் தொட்டு நின்ற வெண்மதிக் கிரணங்கள் இரவு ஏறிவிட்டதால் உள்ளே என்ன நடக்கிறது என்பதைப் பார்க்க இஷ்டப்பட்டனபோல் அறை நடுவிலிருந்த பஞ்சணை மீதும் லேசாகப் பாய்ந்துவிட்ட அந்த மனோகர வேளையில், கடாரத்துக் கட்டழகியின் பட்டுக் கைகள் தன் கைகளை ஆவலுடன் பற்றிய காரணத்தால் முதலிலிருந்த சஞ்சலம் சற்றே நீங்கி மனம் ஓரளவு அமைதியையும் பெற்றுவிட்டதன் விளைவாக மெள்ள நீண்டதொரு பெருமூச்சு விட்ட இளையபல்லவன் அந்த அமைதி எத்தனை நிலையற்றது என்பதைச் சில விநாடிகளுக்குள் புரிந்துகொண்டான். அறையின் சூழ்நிலையும் வெளியிலிருந்து காற்றில் மிதந்து வந்த இரவு பூத்த மலர்களின் நறுமணமும் அருகிலிருந்த பருவப் பெண்ணின் அருமை எழில்கள் அள்ளி வீசிய காந்தக் கதிர்களும், மெத்தென்ற பஞ்ச சயனமும், அதைவிட மெத்தென மேலே உராய்ந்த பக்குவ உடலும் ஆகிய அனைத்துமே, எத்தகைய சஞ்சலத்தையும் அறுத்து அமைதிக்கும் இன்ப உலகத்துக்கும் இழுத்துச் செல்லும் பெரும் சக்திகளென்றாலும், அத்தனை சக்திகளும் தன் மனத்துக்குப் போதிய சாந்தியை அளிக்கும் திறனைப் பெற முடியாததை நினைத்துப் பரிதாபப் பெருமூச்சு விட்ட இளையபல்லவன், காமத்தின் சக்தியை விட நட்பின் சக்தி எத்தனை வலிது என்பதை நினைத்து வியக்கவும் செய்தான். அழகிற் சிறந்த ஆரணங்கு ஒருத்தி பக்கத்திலிருக்க அநபாயனைப் பற்றிய எண்ணங்கள் திரும்பத் திரும்பத் தன் மனத்தில் அலைமோதி இடையே கிடைத்த அமைதியைத் திரும்ப உடைப்பதை அறிந்த அவன் 'இத்தனை அன்பு எனக்கு அநபாயரிடம் இருக்க

அவர் மட்டும் என்னைவிட அமீரைப் பெரிதாக நினைத்து விட்டாரே! அரச குலத்தாரின் அன்பு இப்படித்தான் நிலை யற்றதோ என்னமோ?' என்று தனக்குள்ளேயே எண்ண மிட்டான். பாலூர்ப் பெருந்துறை அன்றிருந்த அபாய நிலையில் ஆபத்தைப் பற்றிச் சிறிதும் லட்சியம் செய்யாமல் அநபாயன் சென்றது அவனுக்கு எந்த வியப்பையும் அளிக்கவில்லையென்றாலும், தன்னைவிட்டு அமீரைத் துணைகொண்டு சென்றது மட்டும் அவனுக்குப் பெரும் வியப்பையும் மனக்கொதிப்பையும் அளிக்கவே அவன் இதயத்தில் இன்பநிலை அகன்று துன்ப நிலையே துள்ளி நின்றது. அந்தத் துன்ப நிலையின் விளைவாக அவன் நீண்ட நேரம் பேசாமலே இருந்தான்.

அவன் ஏதும் பேசாவிட்டாலும் சில விநாடிகளுக்குள் அவன் மனநிலை மாறிவிட்டதையும், தான் அளித்த மனஅமைதியைத் தன்னைவிடப் பெரும் சக்தியொன்று உடைத்து விட்டதையும் வெகு சுலபத்தில் புரிந்துகொண்ட காஞ்சனாதேவி அநபாயனுக்கும் இளைய பல்லவனுக்கும் இருந்த நட்பின் உரத்தைப் பற்றிப் பெரிதும் வியப் படைந்து, 'இந்த இருவரின் நட்பு பெரும் காரியங்களைச் சாதிக்க வல்லது' என்றே எண்ணினாள். தன் கைகள் அவன் கைகளைப் பிடித்தபோது தன் விரல்களுடன் இணைந்த அவன் விரல்கள் மேற்கொண்டு விஷமம் ஏதும் செய்யாமல் சில விநாடிகளுக்குள் செயலற்றுவிட்டதையும் தன் உடல் உராய்ந்ததும் பதிலுக்குச் சாய்ந்து கொடுத்த அவன் உடம்புகூட திடீரென உணர்ச்சியற்றுவிட்டதையும் கவனிக்கத் தவறாத காஞ்சனாதேவி, அவன் இதய வேதனையை நன்றாக அறிந்து கொண்டாளாதலால், அவனை மீண்டும் சமாதானப்படுத்த முயன்று, "அநபாயர் உங்களை விட்டு அமீரை அழைத்துச் சென்றதை நீங்கள் இத்தனை பொருட்படுத்த வேண்டிய அவசியமில்லை" என்றாள் மெதுவாக.

இளையபல்லவன் இதற்கு உடனடியாகப் பதிலேதும் சொல்லவில்லை. குனிந்த தலை குனிந்தபடியே உட்கார்ந் திருந்தான். பிறகு தலையை நிமிர்த்தி அவள் முகத்தை அவன் ஏறெடுத்துப் பார்த்தபோது அவன் வாயினால் எதுவும் பேசாவிட்டாலும், 'ஏன் அவசியமில்லை?' என்ற கேள்வி மட்டும் அவன் கண்களில் தொக்கி நின்றது. அந்தக் கேள்விகூட கண்ணிமைக்கும் நேரத்தில் அவன் கண்களிலிருந்து அகன்றது. பிரமித்து அவள் முகத்தையே பார்த்தன வேல்களைவிடக் கூரிய அவன் கண்கள். மாறி வரும் இருளும் ஒளியும் போல அவன் சித்தம் மாறுபட்ட சக்திகளால் இழுக்கப்பட்டது. அவள் முக வசீகரத்தில் அவன் மீண்டும் மயங்கினான். இரவு ஏறிவிட்டதால் பஞ்சணைமீது பாய்ந்த பால் நிலவு அவள் முகத்தில் மிக வெண்மையாக அடித்திருந்தது. அந்த வெண்மையில் அவ்வப்பொழுது அவள் கண்களில் ஏறும் குங்குமச் சிவப்பு கூடத் தெரியாததால் நல்ல பளிங்குக் கல்லில் செதுக்கப்பட்ட சிலையெனக் காட்சியளித்தாள் காஞ்சனா தேவி. அந்த வெண்மை முகத்தில் கலந்த விண்மதியின் வெண் கிரணங்கள் அவள் நுதலிலும் கன்னங்களிலும் பிரதிபலித்து முகம் பூராவையும் கலப்படமற்ற வெண் ணொளி மயமாக அடித்துக் கொண்டிருந்தது. வெண் கிரணங்களில் கண்கள் பேரொளி வீசின. அத்தனை ஒளிக்கும் வெளுக்காத உதடுகள் மட்டும் அதிகச் சிவப் பாகப் பிரகாசித்து இருமுறை மெள்ள விரிந்து மூடின. அப்படி மூடிய சமயத்தில் ஒரு கணம் தெரிந்த இரண்டு உள்முத்துகள் திடீரென இளையபல்லவன் உள்ளத்தை அள்ளவே செய்தன. பெரும் மாயையில் மீண்டும் சிக்கினான் இளையபல்லவன். நிலவில் ஒரே ஒளிமயமாகக் கிடந்த அந்தப் பருவ மங்கையின் வசீகர வதனத்தின் ஒவ்வோர் அசைவிலிருந்தும் காமக் கணைகள் கணக்கின்றி எழுந்து அவன் சித்தத்தில் பாய்ந்தன. ஏதோ சொல்ல

உதடுகள் விரிந்தபோது கவிழ்க்கப்பட்ட குமிழ்க் கண்ணாடிபோல் எழுந்திருந்த கபோலங்களில் விழுந்த குழிவுகளும், உதடுகள் மூடியதும் ஏதோ மந்திர ஜாலம்போல் அவை மறைந்துவிட்ட மாயமும், கேள்வி கேட்க எழுந்தன போல் எழுந்து தாழ்ந்த பருவங்களின் அசைவும், சிறிது நேரம் நிலைத்து நின்று திடீரெனக் கொட்டிய இமைகளும் பளிச்சு பளிச்சென்று பற்பல ரகசியச் சேதிகளைச் சொல்லவே பிரமிப்பில் ஆழ்ந்து கிடந்தான் இளைய பல்லவன். காஞ்சனாதேவி மட்டும் இஷ்டப்பட்டிருந்தால் அந்தப் பிரமிப்பில் அவனை நீண்ட நேரம் ஆழ்த்தியே வைத்திருக்கலாம். ஆனால் அப்படி அவன்மீது கண்களை வீசிய காஞ்சனாதேவியே அவன் பிரமிப்பை உடைக்கவும் முயன்றாள்.

நான்கு வேல்களும் உராய்வது போல் தன் கண்களும் அவன் கண்களும் உராய்ந்த சமயத்தில் அவன் கண்களே வெற்றியடைந்ததையும் அவன் வெறித்த பார்வை தன் கண்களுக்குள் பாய்ந்து இதயத்துக்குள்ளேயும் புகுந்து இதயத்தை மூடியிருந்த வெட்கச் சிலையைக்கூடக் களைவதைப் போன்ற பிரமையைத் தனக்கு அளித்துவிட்டதையும் கண்ட காஞ்சனாதேவி, பெரும் சங்கடத்துக்கு இலக்கானாள். அந்தச் சங்கடத்தின் விளைவாகவோ, மேற்கொண்டு அந்த நிலை நீடித்தால் விளைவு என்ன ஆகுமோ என்ற பயத்தாலோ, அவள் திடீரென அவன் கைகளைப் பற்றி நின்ற தன் கைகளை விடுவித்துக் கொண்டாள். பஞ்சணையில் சற்று நகர்ந்து உட்கார்ந்து கொண்டாள். அந்த இரண்டு செய்கைகளாலும் அவன் பிரமிப்பை உடைத்துவிடலாமென்று எதிர்பார்த்த காஞ்சனா தேவி, அவை இரண்டும் வேறு விபரீதங்களுக்குத் தூண்டி விட்டதை மறுவிநாடி உணர்ந்து என்ன செய்வதென்று தெரியாமல் திணறினாள்.

கைகள் விடுவிக்கப்பட்டதும் திடீரெனத் துடித்துப் பஞ்சணையிலிருந்து விடுதலையடைந்த அவன் கரங்க ளிரண்டும் அவள் முகத்தைச் சிறைப்படுத்தி நிலவொளிக் காக அதை நன்றாகத் திருப்பின. அவன் முரட்டு உள்ளங் கையில் அவள் பட்டுக் கன்னங்கள் குழைந்தன. சற்றே திருப் பப்பட்டதால் நிலவொளி பூரணமாக விழுந்த முகத்தின் ஒவ்வொரு சாயையும் அவன் கண்கள் ஆராய்ந்தன. கன் னங்களின் வழவழப்பை கைகள் உணர்ந்தன. முகம் லேசா கத் திருப்பப்பட்டதால் அவள் வீசிய கடைக்கண் பார்வை யின் வேகத்தை அவன் கண்கள் உணர்ந்தன. கன்னங்கள் அழுத்திப் பிடிக்கப்பட்டதால் இன்ப வேதனையால் அத்தனை நிலவிலும் சிவந்துவிட்ட நுதல் அந்தச் சிவப்பை நாசிமீது பாய்ச்சி நிலவில் விகசிக்கும் புதுச் செம்பருத்தி போல் அடித்திருந்ததைக் கண்கள் மட்டுமென்ன, அவன் இதயமும் கவனிக்கவே செய்தது. கண்ணும், கண் மூலம் இதயமும் கவனித்தவை இவை. இவை காணாதவற்றைச் சித்தம் கற்பனை செய்தது, கண்டது. உணர்ச்சிகள் பேரிரைச் சலுடன் அவன் உள்ளத்தில் எழுந்து அலைமோதின.

அந்த அலைகளில் சிக்கித் தத்தளித்தாள் அஞ்சன விழியாளும்கூட. அலைகளிலிருந்து இதயத்தை மீட்க விரும்பிய அவள் விழிகளைச் சற்றே மூடினாள். மூடிய தால் அவன் பார்வையிலிருந்து மீளலாமென்றுதான் நினைத்தாள். ஆனால் மூடிய கண்கள் உள்ளே பல வாயில் களைத் திறந்துவிடவே இளையபல்லவன் கண்கள் எல்லா இடங்களிலும் எட்டிப் பார்ப்பன போலவே தெரிந்தது அந்தக் கடாரத்தின் கட்டழகிக்கு. அந்த எண்ணக் கடலி லிருந்து, கடலின் அலைகளிலிருந்து, அதன் சுழல்களி லிருந்து தன்னை விடுவித்துக்கொள்ள முயன்றாள் அவள். அத்தனை அலைகளையும் சுழல்களையும் மீறி எழ முயன்றது அவள் மனம். மீள முடியாமல் செய்திருந்தது இருவருக்கும் இடையே நிலவிய மௌனம். அந்த மௌனத்

தைக் கலைக்க அவள் விரும்பிப் பேச முயன்றாள். உதடுகள்தான் அசைந்தன, சொற்கள் உதிரவில்லை.

அவள் மனமுயற்சி எதையும் புரிந்துகொள்ளக் கூடிய நிலையில் இளையபல்லவன் இதயம் இல்லாததால், அவள் உதடுகளின் அசைவைத் தவறாகவே பொருள் கொண்டான் அந்த வாலிபன். தவறான பொருள்களின் விளைவாகக் கன்னத்தைத் தழுவி நின்ற விரல்கள் இரண்டும் சற்றே விலகி அவள் செவ்விய உதடுகளின்மீது தவழ்ந்து பேச வேண்டாம் என வலியுறுத்தின. அந்த வலியுறுத்தல் அவசிய மில்லை. அவள்தான் பேசும் சக்தியை அறவே இழந்தி ருந்தாளே!

கண்களும் மூடி, உதடுகளும் மூடி முகமே உறைந்து விட்டது போன்ற அந்த நிலையின் அபாயத்திலிருந்து விடு தலைடைய முடியாமலிருந்த அவள் மனத்தில் பலப்பல எண்ணங்கள், பலப்பல கதைகள், பலப்பல பழைய கனவுகள் எல்லாம் எழுந்து அர்த்தமில்லாமல் ஓடிக் கொண்டிருந்தன. அந்த ஓட்டத்தில் அவள் வாழ்விலும் ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தின் வாழ்விலும் சம்பந்தப்பட்ட பாத்திரங்களும் வலம் வந்தார்கள். அப்படி வலம் வந்த சமயத்தில் அவன் இதயத்தைச் சுற்றி நின்ற பெரும் வலை திடீரென அறுந்தது. அந்தப் பாத்திரங்களின் சுழற்சியில் ஒருவர் பின் ஒருவராகத் தோன்றிய மனிதர் வரிசையில் அவள் தந்தை குணவர்மனும் தோன்றினார். 'எதற்காகத் தமிழகம் வந்தாய்? எந்த நிலையில் இருக்கிறாய்?' என்று ஏதோ குற்றத்தைச் சுட்டிக் காட்டுவதுபோல் அவள் மனக் கண் முன் எழுந்தது குணவர்மன் முகம். அதன் விளை வாகத் திடீரெனக் கட்டிலை விட்டு எழுந்த காஞ்சனா தேவி ஒருவிநாடி நின்ற இடத்தில் ஸ்தம்பித்து நின்றாள். பிறகு தலையைத் தானாக ஒருமுறை ஆட்டிவிட்டுச் சரசர வென அறைக்குக் குறுக்கே நடந்து தூரத்திலிருந்த சாளரத்தை எட்டினாள்.

காஞ்சனாதேவி தன் கைகளின் பிடிப்பிலிருந்து சரே லென எழுந்ததும், அப்படி எழுந்ததால் கன்னங்களிலிருந்து நழுவிவிட்ட தன் கைகளை அவள் எழில்கள் தடை செய்தும் சிறிதும் லட்சியம் செய்யாமல் கனவேகமாக அவள் தன்னை இடித்துத் தள்ளிக்கொண்டு சாளரத்தருகே சென்றுவிட்ட தையும் கவனித்த இளைய பல்லவன் சற்றே வியப்பை மட்டுமல்ல வியப்பின் விளைவாக சற்று சுயநிலையையும் அடைந்தான். ஆகவே சாளரத்தை நோக்கி அவனும் நடந்து சென்றான். சாளரத்துக்கு வெளியே மனோகரமான காட்சியே விரிந்து கிடந்தது. அந்த இரவில் இயற்கை தன் வனப்பையெல்லாம் அள்ளிச் சொரிந்திருந்தது. கடலி லிருந்து வந்துகொண்டிருந்த காற்று சாளரத்தின் மீதிருந்த பூங்கொடியை அசைத்ததால் பூங்கொத்தொன்று கடா ரத்துப் பூங்கொடியின் நுதலை ஒருமுறை முத்தமிட்டுச் சென்றது. இயற்கையின் அந்தப் பெரும் கவர்ச்சி அவள் சம்பந்தப்பட்டவரை பயனற்றதாயிற்று. துன்பமும் கவலை யுமே அவள் இதயத்தைச் சூழ்ந்து கிடந்தது.

திடீரென அவள் மனத்தில் காதல் அறுபட்டுக் கவலை புகுந்து கொண்டுவிட்டதை அவள் நின்ற நிலை யிலிருந்தே புரிந்துகொண்ட இளையபல்லவன், அதன் காரணத்தை மட்டும் அறிய முடியாததால் அவளை அணுகி அவள் தோள்மீது தன் கரமொன்றைப் பொருத்தி, "காஞ்சனா" என்று ஆறுதலை அள்ளிச் சொரிந்த குரலில் அழைத்தான்.

"ஹூம்" இந்தப் பதில்தான் வந்தது அவளிடமிருந்து. குரலில் துன்பம் மண்டிக் கிடந்தது.

"ஏன் திடீரென இங்கு வந்துவிட்டாய்?" என்று மீண்டும் வினவினான் இளையபல்லவன்.

"ஒன்றுமில்லை" வெடுக்கென்று வந்தது அவள் பதில்.

"ஒன்றுமில்லாவிட்டால் நீ அங்கேயே உட்கார்ந்திருப் பதுதானே?" ஆதரவுடன் கேட்டான் அவன்.

"இங்கு நின்றால் என்ன?"

"நிற்கலாம், நிற்கலாம்."

"அதுதான் நிற்கிறேன்."

இதற்கு என்ன பதில் சொல்வதென்று தெரியாமல் இளையபல்லவன் திகைத்தான். இன்பம் அதிகமாகும் போதும் சரி, துன்பம் அதிகமாகும்போதும் சரி, பெண்கள் வெடுக் வெடுக்கென்று பேசுவார்களென்பதை மனோ தத்துவ சாஸ்திரத்தில் அவன் கற்றிருந்தான். அன்று ஏட்டில் கற்றான், இன்று அமீரின் வீட்டில் கிடைத்தது அனுபவம் அவனுக்கு. அந்த அனுபவம் வேறொன்றையும் உணர்த்தியது அவனுக்கு. அந்தச் சமயத்தில் அவள் அப்படிப் பேசியது துன்பம் போல் தோன்றியதே தவிர, அது இன்பத்தாலுமல்ல துன்பத்தாலுமல்ல; இரண்டும் கலந்த விபரீத நிலையால் என்பதை மட்டும் புரிந்து கொண்டான் சோழர்களின் படைத்தலைவன்.

பஞ்சணையில் தாங்களிருவரும் மௌனமாகக் கொஞ்சி நின்ற நிலைகளில் திடீரென ஏதோ ஒரு துயரத்தின் கதிர் அவள் இதயத்தில் பாய்ந்துவிட்டதென்பதையும், அந்தத் துயரம் ஊடுருவிய இன்பநிலை அவள் இதயத்தைக் கலக்கி விட்டிருக்க வேண்டும் என்பதையும் உணர்ந்து கொண்ட இளையபல்லவன் தன் உணர்ச்சிகளைப் பூர்ணமாக ஒரு கட்டுக்குள் கொண்டுவந்து "காஞ்சனா! உன் மனோநிலை எனக்குப் புரிகிறது. உன் இதயத்தைத் திடீரெனத் துயரம் ஊடுருவியிருக்கிறது. அதன் காரணத்தை எனக்குச் சொல்லலாமா?" என்று குரலில் குழைவுடன் கேட்டான்.

காரணம் ஏதும் அவள் சொல்லவில்லை. "புதுத் துயரம் பாய என்ன இருக்கிறது? நாம் இருப்பதே துயரந் தோய்ந்த நிலைதானே?" என்று பொதுப்படையாகப் பதில் சொன்னாள்.

"உண்மைதான் காஞ்சனா! துயரம் ஆபத்து எல்லாமே நம்மைச் சூழ்ந்திருப்பது உண்மை. அதனால்தான் நாம் அனைவரும் ஒருவருக்கொருவர் விபரீதமாகவும் நடந்து

கொள்கிறோம்" என்று துக்கத்துடன் இளைய பல்லவனும் பேசினான்.

"அப்படி என்ன விபரீதமாக நடந்துகொண்டுவிட்டோம்?" இளைய பல்லவனைத் திரும்பிப் பாராமல் வெளியே பார்த்தபடியே கேட்டாள் காஞ்சனாதேவி.

"என்னிடம் கலக்காமல் எதையும் செய்து பழக்கமற்ற எனது இளவரசர் என்னைப் புறக்கணித்து அமீரைத் துணை கொண்டு ஆபத்து நிறைந்த பாலூருக்குள் செல்கிறார். அதனால் வேதனையடைந்த நான் அமைதி நாடி உன்னிடம் வருகிறேன். நீ என்னைத் திடீரென உதறி இந்தச் சாளரத்திடம் வருகிறாய். என்ன காரணம் என்று சொல்லவும் மறுக்கிறாய். எந்த இருவரிடம் என் உயிரையே வைத்திருக்கிறேனோ அந்த இருவரும் என்னிடம் நடந்து கொள்ளும் முறை விசித்திரமாயில்லையா" என்று வினவினான் இளைய பல்லவன்.

இதைக் கேட்ட காஞ்சனாதேவியின் உள்ளம் சிறிது நெகிழவே அவள் மெள்ளத் திரும்பினாள் அவனை நோக்கி. "உயிர் நண்பரையும் என்னையும் நீங்கள் இப்படி எடை போடுவது சரியல்ல" என்று சொல்லவும் செய்தாள்.

"ஏன் சரியல்ல?"

"அது நம்பிக்கையைக் குறிக்கவில்லை."

"உங்களிருவரிடம் எனக்கு நம்பிக்கையில்லை என்கிறாயா?"

"நம்பிக்கையிருக்கிறது. ஆனால் உங்கள் ஆசாபாசங்களை அறுக்கும் அளவுக்கு அந்த நம்பிக்கை வளரவில்லை. உங்கள் நண்பர் உங்களை விட்டுச் சென்றால் அதற்குக் காரணம் உதாசீனம் என்று நினைக்கிறீர்கள். வேறு முக்கிய காரணம் இருக்கக்கூடும் என்று ஏன் நீங்கள் நினைக்கக் கூடாது. அவர் போகுமிடம் நீங்கள் போகத் தகாததாயிருக்கலாம் என்று ஏன் முடிவு கட்டக்கூடாது? நமக்கு வேண்டியவர்கள் நம்மைச் சில அலுவல்களில் விலக்கும்

போது அலுவல்களின் தன்மை அப்படியிருக்கும் என்று ஏன் தீர்மானிக்கக்கூடாது? அதிருக்கட்டும். துயரத்தின் காரணத்தை நான் சொல்லவில்லையென்கிறீர்கள். சொல் லத் தகாததாயிருக்கலாம் என்று நீங்கள் ஏன் எண்ணக் கூடாது."

அவள் கேள்விகளில் உண்மை பெரிதும் ஒளி விடுவதைக் கவனித்த இளையபல்லவன் ஏதும் பதில் சொல்ல முடியாமல் சில விநாடிகள் திணறினான். பிறகு பேச முற்பட்டபோதும் "என்னிடம் சொல்லத் தகாதது என்ன இருக்க முடியும்... இத்தனைக்குப் பிறகும்?" என்று மெள்ள மெள்ள இழுத்து சங்கடத்துடன் பேசினான்.

'இத்தனைக்குப் பிறகு' என்று அவன் எதைக் குறிக் கிறான் என்பதைப் புரிந்து கொண்டாளாதலால் மெள்ளப் புன்முறுவல் செய்தாள். அந்த இன்பப் புன்முறுவலிலும் ஓரளவு துன்பம் தோய்ந்து கிடந்தது. அந்த இன்பப் புன்முறுவலைத் தொடர்ந்து உதிர்ந்த அவள் சொற்களில் காதலும் வருத்தமும் கலந்தொலித்தன.

"நாமிருவரும் அங்கே..." என்று கட்டிலைச் சுட்டிக் காட்டினாள் அவள்.

"ஆம், உட்கார்ந்திருந்தோம்..." என்று அவன் பூர்த்தி செய்தான் வாசகத்தை.

"நான் மெய் மறந்திருந்தேன்."

"நானும்தான்."

"அநபாயர் விட்டுப் போனதைக் குறித்து."

"நான் துயரமடைந்தேன்."

"நான் அமைதியளிக்க... முயன்றேன்."

"ஆம்."

"அந்த நிலையில்?"

"நிலையில்?"

"சுயநிலை மறந்தேன்."

"ஓகோ!"

"எண்ணங்கள் சுழன்றன."

"என்ன எண்ணங்கள்?"

"தந்தையைப் பற்றிய எண்ணங்கள்" என்றாள் காஞ்சனாதேவி துயரத்துடன்.

அவள் பேதை உள்ளத்தை அப்பொழுதுதான் அவன் புரிந்துகொண்டான். அடுத்தடுத்து நேர்ந்த துரித நிகழ்ச்சி களால் அவள் தந்தையை அனைவரும் மறந்துவிட்டதை அப்பொழுதுதான் எண்ணிப் பார்த்தான் அவன். அந்த எண்ணத்தின் விளைவாக, "ஆம் ஆம். உன் தந்தையை மறந்துவிட்டோமே. அவர் இப்பொழுது எங்கிருக்கிறார்?" என்று வினவினான் அதிர்ச்சியுடன்.

"எனக்குத் தெரியாது" என்றாள் காஞ்சனாதேவி.

"உனக்குத் தெரியாதா!"

"தெரியாது" என்றாள் காஞ்சனாதேவி, கவலை தோய்ந்த குரலில்.

"நீயும் அவரும் எப்பொழுது பிரிந்தீர்கள்?" என்று மீண்டும் கேட்டான் அவன்.

"நீங்கள் என்னைவிட்டுப் பிரிந்த அன்றிரவே."

"பீமன் வீரர்கள் என்னை அழைத்துப் போனதுமா?"

"ஆம். நீங்கள் வீரர்களுடன் சென்ற அரை ஜாமத்துக் கெல்லாம் அநபாயர் அந்த இல்லத்தில் தோன்றி என்னை யும் தந்தையையும், பணிப் பெண்களையும் அவசர அவ சரமாக அழைத்துக்கொண்டு வெளியேறினார். எங்கள் பெட்டி பேழைகளும் துரிதமாக அவருடன் வந்த வீரர்களால் அப்புறப்படுத்தப்பட்டன. வெளிநாட்டுப் பிரமுகர் வீதியின் முகப்பிலேயே நான் வேறு, தந்தை வேறு, பணிப் பெண்கள் வேறாக, வெவ்வேறு திக்குகளில் பிரித்து அழைத்துச் செல் லப்பட்டோம். இரண்டு நாள்கள் நான் சிறைக் காவலன் ஒருவன் இல்லத்தில் தங்கியிருந்தேன். இன்று காலை

அநபாயர் வந்து உங்கள் விசாரணை பற்றிக் கூறினார். அவசர அவசரமாக என்னையும் அழைத்துக்கொண்டு நீதி மண்டபம் வந்தார். பிறகு நடந்ததை நீங்கள் அறிவீர்கள். ஆனால் தந்தை எங்கிருக்கிறார், என்ன ஆனார் என்பது எனக்குப் புரியவில்லை. அமீரின் பாதுகாப்பில் இருப்பதாக சீனக் கடலோடியிடம் அநபாயர் சற்று முன்பு கூறியது தான் எனக்குத் தெரியும். இந்தப் பாலூரில் தந்தையை எங்குதான் தங்க வைத்திருப்பார் அநபாயர்?"

இதற்குத் திடமான பதில் எதையும் இளைய பல்லவ னால்கூற முடியவில்லை. அநபாயன் போக்கு எதுவும் ஊகிக்க முடியாத புதிராயிருந்தது அவனுக்கு. ஆகவே அவன் காஞ்சனாதேவிக்குச் சொன்ன பதிலில் உணர்ச்சி யிருந்ததேயொழிய தெளிவு லவலேசமும் இல்லை. "காஞ்சனா! உன் தந்தையை அநபாயர் எங்கு தங்க வைத்திருக்கிறாரோ எனக்குத் தெரியாது. நான் பாலூரில் கால்வைத்த நாளாக நேரிட்ட நிகழ்ச்சிகள் அனைத்தும் பிரமையை ஊட்டக் கூடியனவாகவே அமைந்தி ருக்கின்றன. கனவில் நடப்பதுபோல் நிகழ்ச்சிகள் துரிதமாக நடந்திருக்கின்றன. நாமனைவரும் வெறும் பதுமைகள் போல் அநபாயரால் நடத்தப்பட்டிருக்கிறோம். அவர் இயக்கும் வழியில் நாம் இயங்குகிறோம். ஆனால் ஒன்று மட்டும் நிச்சயமாகச் சொல்லுவேன். அநபாயர் உடலில் உயிர் இருக்கும் வரை உன் தந்தைக்கு ஆபத்து எதுவும் இல்லை. ஆனால் உன் தந்தை இருக்குமிடத்தையோ, அநபாயர் இந்த இரவில் எதற்காக எங்கு போயிருக்கிறார் என்பதையோ என்னால் ஊகிக்க முடிய்வில்லை" என்று உணர்ச்சி ததும்பக் கூறிப் பெருமூச்சு விட்டான் இளைய பல்லவன்.

அவ்விருவரும் ஊகிக்க முடியாத, ஏன் கனவிலும் நினைக்க முடியாத, மிகவும் ஆபத்தான இடத்தைத்தான் அந்தச் சமயத்தில் அநபாயன் அணுகிக் கொண்டிருந்தான்.

அத்தியாயம் 28

# தோப்பில் தெரிந்த தீபம்

இயற்கை தன் இன்பத்தையெல்லாம் அள்ளிச் சொரிந்தும் அதை அனுபவிக்க முடியாமல் தந்தை எங்கிருக்கிறார் என்று கடாரத்துக் கட்டழகி எண்ணி ஏங்கித் தவித்துக் கொண்டிருந்த அந்தச் சமயத்தில், நீண்ட நாள் நண்பன் தானிருக்க அமீரைத் துணைகொண்டு சோழ குல இளவல் சென்றுவிட்டானே என்பதால் கருணாகர பல்லவன் கருத்துருகிக் கலங்கிய அந்த வேளையில், நள்ளிரவு நெருங்கிக் கொண்டிருந்தாலும் மக்கள் நடமாட்டமோ காவலின் கெடுபிடியோ சிறிதும் குறையாத அந்த நேரத்தில், அச்சத்தை அணுவளவும் அறியாத அநபாய குலோத்துங்கன், அராபிய நாட்டவனும் அத்தியந்த நண்பனுமான அமீருடன் பாலூரின் அரச வீதியை மிகச் சாவதானமாக அணுகிக் கொண்டிருந்தான். அவனைத் தாங்கி வந்த புரவி மட்டுமின்றி, அமீரைத் தாங்கிய புரவியுங்கூட அந்தச் சோழ நாட்டு அரசகுல வீரனின் கருத்தை நன்றாகப் புரிந்து கொண்டதுபோல் அமைதியாகவும் அலட்சிய நடை போட்டும் நடந்தது. வடநாட்டு வர்த்தகர்களைப் போல் அந்த இருவரும் வேடமணிந்திருந்ததன் விளைவாக அவர்கள் உடைகளை இடுப்புக்கு மேல் அடியோடு மறைத்துத் தலையிலும் முக்காடாக வளைந்து, முகங்களின் மேல் நீண்டு சற்றே தொங்கி, முகங்களின் மேற்பாகத்தை ஓரளவு மறைத்திருந்தாலும்

பார்வையை மட்டும் மறைக்காத காஷ்மீரத்துச் சால்வை கள்கூட, கடற்புறமிருந்து வந்த காற்றில் அதிகமாகப் பறக்காது உடல்களுடன் ஒட்டி அமைதியையும் எச்சரிக் கையையும் காட்டின. பாலூர் அன்றிருந்த பயங்கர நிலை யில் அத்தனை அமைதியும் எச்சரிக்கையும் தேவையாக இருந்தன.

புரவியில் அமர்ந்து, விலகிய மக்கள் கூட்டத்திடையே சர்வசாதாரணமாகச் சென்று கொண்டிருந்த அநபாயன், எதிரே அடிக்கடி புரவிகளில் வந்து கொண்டிருந்த காவலர் கூட்டத்தையும், தெருக்கள் சேரும் மூலை விடுதிகளின் ஓரங்களிலெல்லாம் சாதாரண மக்களைப்போல் காணப் பட்டாலும் கழுகுப் பார்வையாகப் போகிறவர் வருகிற வர்களைக் கண்காணித்த ஒற்றர்கள் எண்ணிக்கையும், தலையை அதிகமாகத் தூக்காமல் கண்ணை மாத்திரம் லேசாகத் தூக்கி ஊடுருவிப் பார்த்து, பாலூரின் மூலை முடுக்குகள்கூடப் பரிபூரண எச்சரிக்கையுடன் பாதுகாக்கப் படுவதை உணர்ந்தான். தவிர தெரு மூலைகளில் அசட்டை யுடனிருப்பதாகக் காணப்பட்ட ஒற்றர்களின் இடைகளில் குறுவாள்கள் காட்சியளித்ததையும் கண்ட சோழர்குல இளவல், தான் சற்று நிலை பிசகி யாரென்பதை வெளி யிட்டு விட்டால் அந்தக் குறுவாள்களுக்கும், ஏன், மூலை வீடுகளின் மறைவிலிருக்கக் கூடிய பெருவேல்களும் அடுத்த க்ஷணம் இரையாகக் கூடும் என்பதைப் புரிந்து கொண்டான். இத்தகைய காவலிலிருந்து தனது நண்பர் களைத் தப்புவிக்க வேண்டுமானால் சாதாரண மனிதப் பிரயத்தனால் அது சாத்தியமல்லவென்பதையும், பெரும் தந்திரத்தாலும், சாகசத்தாலுமே அதைச் சாதிக்க முடியு மென்பதையும் சந்தேகத்துக்கிடமின்றி உணர்ந்துகொண் டான் அநபாயன். அந்தச் சமயத்தில் அவன் எண்ணங்கள் மறுநாளிரவு தப்பிச் செல்லும் முறைகளைக்கூட அவ்வள வாகக் கவரவில்லை. இத்தனை பலமான காவலை மீறி

அப்பொழுது வந்து காரியத்தைச் சாதிக்க வேண்டுமே என்ற கவலை அவன் இதயத்தைப் பெரிதும் கௌவிக் கொண்டிருந்தது.

அந்தக் கவலையைச் சிறிதும் வெளிக்குக் காட்டாமலே பல வீதிகளையும் கடந்து அரச வீதியின் முகப்புக்கு வந்துவிட்ட அநபாயன், அந்த வீதியில் மற்ற வீதிகளை விட இரண்டு பங்கு காவல் இருந்ததையும், வீதிக்குள் நுழையும் ஒவ்வொரு புரவியும் நிறுத்திச் சோதிக்கப்படுவதையும் கண்டதும் குதிரையின் நடையை அதிகமாகத் தளர்த்தி முகத்தைக் குனிந்த வண்ணமே அமீரை அழைத்தான். அந்த அழைப்பின் விளைவாகத் தன் புரவியை அநபாயனின் புரவிக்கு வெக அருகில் கொண்டுவந்து விட்ட அமீர், "ஏன் அழைத்தீர்கள்?" என்று வினவினான். இருவரும் தலையைத் தூக்காமலும், மிகுந்த எச்சரிக்கையுடனும் குதிரைகளை நிறுத்தாமல் மெல்ல நடத்திக் கொண்டே சம்பாஷணையைத் துவங்கினார்கள். "அரச வீதியின் முகப்பைக் கவனித்தாயா அமீர்?" என்று வினவினான் அநபாயன்.

"கவனித்தேன்" என்றான் அமீர் தல்லயைக் குனிந்த வண்ணமே.

"அதோ செல்லும் ஒவ்வொரு வண்டியும் புரவியும் இதர வாகனங்களும் நிறுத்தப்படுகின்றன" என்று மீண்டும் குறிப்பிட்டான் அநபாயன், அமீருக்கு மட்டும் கேட்கும் குரலில்.

"அது மட்டுமல்ல, வாகனங்களை எட்டிப் பார்த்துச் சோதனையும் செய்கிறார்கள்" என்ற அமீரின் பதிலில் சிறிது கவலையும் தொனித்தது.

"புரவிகளில் வருபவர்கள் கீழிறக்கப்படுகிறார்கள்" என்று சுட்டிக் காட்டினான் அநபாயன்.

"ஆம். சிலருடைய வாள்களும் இதர ஆயுதங்களும் கூடப் பறிக்கப்படுகின்றன."

"ஆயுதமுள்ள யாரையும் அரச வீதிக்குள் அனுமதிக்க மாட்டார்கள் போலிருக்கிறது."

"அதைப்பற்றி நமக்கு ஏன் கவலை? உங்களிடம் ஆயுதம் ஏதுமில்லை. என்னிடமிருக்கும் குறுவாள்கள் இரண்டையும் காவலர் பறித்துக் கொண்டாலும் பாதக மில்லை."

"இதை அறிந்துதான் ஆயுதமேதும் கொண்டுவர வேண்டாமென்று என்னைத் தடுத்துவிட்டாயா?"

"ஆம்."

"எப்படித் தெரியும் உனக்கு?"

"இந்த ஆயுத நீக்கல் உற்சவம் பாலூரில் சில நாள் களாக அடிக்கடி நடக்கிறது. பாலூரின் ஜனத்தொகையில் மூன்றிலொரு பங்கு தமிழர்கள் இல்லையென்றால் இத்தனை நாள் தமிழ் வணிகரும், மற்றோரும் நிராயுத பாணி களாக்கப்பட்டிருப்பார்கள். அது முடியாததால், அடிக்கடி இத்தகைய பரிசோதனையும் ஆயுதப் பறிமுதலும் நடக் கிறது. சாதாரணமாகவே பாலூரில் தமிழரைப்பற்றி எச்ச ரிக்கை அதிகம். அதுவும் நீங்கள் சிருஷ்டித்த இன்றைய நிலை மிகவும் மோசமல்லவா?" என்று விளக்கினான் அமீர்.

"ஆம், ஆம்" அநபாயனின் அந்த இரண்டு 'ஆமி'னில் கவலை மிதமிஞ்சித் தொனித்தது.

"நீங்கள் உங்கள் நண்பர்களை நீதிமண்டபத்திலிருந்து விடுவித்தது முதல் ஊர் மூலை முடுக்குகளிலெல்லாம் காவல் பலப்படுத்தப்பட்டு விட்டது" என்று மேலும் விவரித்தான் அமீர்.

"அதைத்தான் வரும் வழியில் பார்த்தோமே" என்றான் அநபாயன்.

"அப்படியிருக்க, அரச வீதியில் மட்டும் எச்சரிக்கைக் குறைவாயிருக்குமா? அதுவும் பீமன் மாளிகையும் மாளிகை

யின் முக்கிய வாயிலான கிழக்குப் பகுதியும் இருக்கு மிடத்தில் கேட்க வேண்டுமா?" என்று அமீர் விளக்கினான்.

அமீரின் இந்த விளக்கம் தேவையென்றாலும், அது தேவைப்பட்டதுபோல் தலையை அசைத்த அநபாயன், "ஆம் அமீர்! நிலைமை புரிகிறது எனக்கு. இருப்பினும் இந்த வீதிக்குள் எப்படி நுழைவது என்பதுதான் புரிய வில்லை" என்றான்.

"அதற்கு மருந்து வைத்திருக்கிறேன்" என்று அமீர் சமாதானம் சொன்னான்.

"மருந்து பலிக்குமா?" என்று வினவினான் அநபாயன்.

"நூற்றுக்குத் தொண்ணூறு பலிக்கும்" என்று திடமாகச் சொன்னான் அமீர்.

"பத்து சந்தேகந்தான்?"

"ஆம்."

"அந்தப் பலிக்காத பத்தில் சிக்கிக் கொண்டால்?"

"போரிட்டுத்தான் தப்ப வேண்டும்."

"வாளைக்கூட வேண்டாமென்று நிராயுதபாணியாக அழைத்து வந்துவிட்டாயே! போரிடுவது எப்படி?"

அத்தனை அபாயத்திலும் மெள்ள நகைத்தான். "அநபாயரே! உங்கள் திறமையை அறியாமலா உங்களை நிராயுதபாணியாக அழைத்து வந்தேன்? நம்மிடம் வாளில் லாமற் போனாலென்ன, எதிரிகளிடம் வாளிருக்குமே. காவலன் எவனாவது சந்தேகப்பட்டால் என் குறுவாள் அவனைத் தீர்த்துவிடும். அது பலிக்கவில்லையென்றால் நீங்கள் அவன்மீது பாய்ந்துவிடலாம். புலிக்குட்டிக்குப் பாய்ச்சலை நானா சொல்லித் தர வேண்டும்?" என்றான் அமீர்.

இந்தப் பதில் சொல்லி முடிவதற்கும் இருவரும் வீதி முகப்புக் காவலை எட்டுவதற்கும் சரியாயிருக்கவே,

மேற்கொண்டு ஏதும் பேசாமல் ஈட்டிகளைக் கொண்டு வழிமறித்து நின்ற காவலர் கூட்டத்திடம் வந்து இருவரும் புரவிகளை நிறுத்தினார்கள். அவர்களுக்கு முன்பிருந்த இரண்டு வண்டிகள் சோதிக்கப்பட்டு அரச வீதிக்குள் நகர்ந்ததும் அமீரின் புரவியையும் அநபாயனின் புரவியை யும் இருமுறை சுற்றி வந்து அவை இரண்டிலும் பக்க வாட்டில் தொங்கிய நான்கு பெரும் பைகளைத் தட்டிப் பார்த்தனர் காவலர் இருவர். இந்தச் சோதனை நடந்து கொண்டிருக்கையிலேயே முன் வண்டிகளை அனுப்பி விட்டுப் புரவிகளை அணுகிய காவலர் தலைவனொரு வன், "ஏன் முக்காடிட்டிருக்கிறீர்கள்? எடுங்கள் முக்காட்டை? உங்கள் முகத்தைப் பார்ப்போம்" என்று மிக முரட்டுத் தனமாகக் கூறி, முக்காடுகளைக் களையத் தன் வாளின் நுனியையும் அநபாயன் முகத்துக்காகத் தூக்கினான்.

அந்த வாளின் நுனி மட்டும் அந்த முகத்திரையைச் சற்று விலக்கியிருந்தால் அடுத்து நிகழ்ந்திருக்கக் கூடிய சம்பவங்களையோ, அந்தச் சம்பவங்களின் முடிவையோ ஊகிப்பது கஷ்டம். ஆனால் அத்தகைய இக்கட்டான நிலையை அமீரின் அதிகாரக் குரல் தடுத்து நிறுத்தியது. "கலிங்கத்தில் பிறநாட்டு வணிகரை அவமதிக்கும் நாகரிகம் எத்தனை நாளாகப் பரவியிருக்கிறது?" என்று மிகவும் கசப்பும் கடுமையும் நிறைந்த குரலில் கேட்டான் அமீர்.

அமீரின் இந்தக் கேள்வியால் திடுக்கிட்ட காவலர் தலைவன் அநபாயனை விட்டு அமீரை நோக்கித் திரும்பி னான். "சில நாள்களாகத்தான் பரவியிருக்கிறது, அவசி யத்தை முன்னிட்டு" என்று அதிகாரத்துடன் கூறவும் செய்தான்.

"அந்த அவசியம் இதற்கும் தேவையா?" என்ற அமீர், தன் மடியிலிருந்து சின்னஞ்சிறு சீலையொன்றை எடுத்துக் காவலர் தலைவனிடம் நீட்டினான்.

அதைக் கையில் வாங்கிக் கொண்டு பக்கத்திலிருந்த வீரனொருவனைப் பந்தம் பிடிக்கச் சொல்லி பந்தத்தின் வெளிச்சத்தில் சீலையைப் பிரித்துப் படித்த காவலர் தலைவனின் முகத்தில் குழப்பத்தின் ரேகை பெரிதும் படர்ந்தது. "ஆம், உத்தரவு திட்டவட்டமாகத்தான் இருக் கிறது. ஆனால்..." என்று ஏதும் புரியாமல் இழுத்தான் காவலர் தலைவன்.

"சீலையிலிருப்பது கலிங்கபிரான் மாமன்னர் பீமரு டைய முத்திரை" என்று சற்றுக் கடுமையுடன் உணர்த்தி னான் அமீர்.

"அது தெரிகிறது" காவலர் தலைவன் பதில் சொன்னானே தவிர, மேலும் குழப்பமே அவன் குரலில் தொனித்தது.

"அரண்மனைக்கு வேண்டிய பல வாணிபப் பொருள் களைக் கொடுப்பவன் நான். அரசமாளிகைப் புரவி வர்த்தகத்திலும் பங்கு பெற்றவன். ஆகையால் நான் அரச மாளிகைக்குள் நுழைவதையோ, அரசரை நேரிடையாகப் பார்ப்பதையோ யாரும் தடை செய்ய முடியாது. என் பெயரைக் கூடக் கேட்க முடியாது. சீலையில் உத்தரவு தெளிவாயிருக்கிறது" என்றான் அமீர்.

காவலர் தலைவன் சில விநாடிகள் யோசித்தான். பிறகு கேட்டான், "அது சரி. நீங்கள் வேண்டுமானால் போகலாம். உங்களைச் சோதனை செய்ய அவசியமில்லை. ஆனால் இவரை ஏன் நாம் அனுமதிக்க வேண்டும்?" என்று.

"அரச காரியமாகப் போவதால்" என்றான் அமீர்.

"அரச காரியமாக எங்கு போகிறீர்கள்?"

"அரண்மனையின் பின்புறத்துக்கு?"

"பின்புறத்துக்கு எதற்காக?"

"அங்குதானே குதிரைச் சாலை இருக்கிறது."

"ஆம்."

"அதன் தலைவனிடம் இருபது புரவிகள் வாங்கப் போகிறோம்."

"அரசர் குதிரைச் சாலையில் புரவி விற்கிறார்களா?"

"இல்லை. விற்பதில்லை."

"பின் எதற்கு இருபது புரவிகள்?"

"மாற்றித் தர."

இதைக் கேட்ட காவலன் விவரம் புரியாமல் விழித் தான். அவன் விழிப்பதைப் பார்த்த அமீர், "குதிரைச் சாலையிலுள்ள புரவிகள் சில பயனற்றுவிட்டன. நாளை அரபு நாட்டுக் கப்பல் ஒன்று புரவிகளுடன் வருகிறது. அவற்றில் வரும் புரவிகளுக்கு இவற்றை மாற்ற வேண்டும். இதைப்பார்" என்று மேலும் இரண்டு ஓலைகளை எடுத்து அமீர் காவலர் தலைவனிடம் சமர்ப்பித்தான்.

அந்த ஓலைகள் இரண்டிலும் பாலூர் அரண்மனைக் குதிரைச் சாலைத் தலைவனின் கையொப்பம் இருந்ததை யும் அமீர் சொன்ன செய்திக்கும் அவற்றிலிருந்த விவரத் துக்கும் மிகுந்த பொருத்தமிருந்ததையும் கவனித்த காவலர் தலைவன் அவர்களிருவரையும் அதற்குமேல் கேள்விகள் கேட்காமல் அரச விடுதிக்குள் செல்ல அனுமதித்தான். வீதிக்குக் குறுக்கேயிருந்த காவல் தடை நீங்கிப் புரவிகள் அரச வீதிக்குள் நுழைந்ததும், "அப்பாடா!" என்று நிம்மதிப் பெருமூச்சு விட்ட அநபாயன், "அமீர்! அந்தச் சிலையைப் பற்றி என்னிடம் ஏதும் சொல்லவில்லையே!" என்று வினவினான்.

"அநபாயரே! அரபு நாட்டிலிருந்து சீனம் சென்று, அங்கிருந்து கலிங்கம் வந்து வாணிபம் செய்யும் நான், வாழ்க்கையில் எத்தனை சோதனைகளிலிருந்து தப்பியிருக்

கிறேன் என்பது உங்களுக்குத் தெரியும். ஆகவே சதா ஏதாவது இடுக்கண்களையே எதிர்பார்க்கிறேன். அதற்கு அவ்வப்பொழுது வேண்டிய பாதுகாப்புகளையும் செய்து கொள்கிறேன். சீலையும் ஓலைகளும் அத்தகைய பாது காப்புக் கருவிகள். ஆனால்..." என்று இழுத்தான் அமீர்.

"என்ன ஆனால்?"

"ஓலையிலிருந்த கையெழுத்துகள் குதிரைச் சாலைத் தலைவனுடையதல்ல."

"வேறு யாருடையது?"

"அடியேனுடையதுதான்."

அநபாயன் பிரமித்து அமீரை நோக்கினான். "கையெழுத்துப் பொய்யென்று கண்டுபிடிக்கப் பட்டி ருந்தால் என்ன ஆகியிருக்கும்?" என்று வினவினான்.

"என் சக்தியில் அநபாயருக்கு நம்பிக்கையில்லை போலிருக்கிறது. அவசியமானால் கலிங்கத்துப் பீமன் கையெழுத்தைக்கூடப் போட என்னால் முடியும். தேவை யில்லாததால் போடவில்லை" என்று அடக்கத்துடன் பதில் கூறினான் அமீர்.

மிகுந்த ஆபத்து சூழ்ந்து கிடந்த அந்த நிலையிலும் சற்று இரைந்தே நகைத்துவிட்ட அநபாயன் மேற்கொண்டு ஏதும் கேள்வி கேட்காமல் அமீரைத் தொடர்ந்தான். அநபாயனைப் பின்னால் வரச்சொல்லி முன்னால் தன் புரவியைச் செலுத்திய அமீர், அரச வீதியின் நடுவுக்கு வந்ததும் அங்கிருந்த அரச மாளிகையின் கிழக்கு வாயி லுக்குள் நுழைந்தான். ஒவ்வோர் இடத்திலும் காவலரால் தேக்கப்பட்டாலும் உத்தரவுச் சீலையின் மந்திரத்தால் காவலர் பணிந்துவிட அரண்மனையைச் சுற்றிச் சென்ற அமீர் அரண்மனையின் பின்புற வாயிலையும் கடந்து

அதற்கு நேர்ப் பின்னாலிருந்த பெரும் தோப்பிற் வந்து சேர்ந்தான்.

சந்திர வெளிச்சத்தில் பிரும்மாண்டமான அந்தத் தோப்பு மிகவும் கவர்ச்சியாகத் தெரிந்தது. தோப்பைச் சுற்றியிருந்த பெரும் மதிளுக்கு முன்புறத்தில் காவல் இல்லையென்றாலும் அதன் வாயிலுக்குப் பின்னால் இரண்டு வீரர்கள் காவல் புரிவது அவர்கள் எச்சரிக்கைக் கோஷங்களிலிருந்தே புரிந்தது. அந்தக் கோஷத்தைத் தூக்கி யடித்துக் கொண்டிருந்த நூற்றுக்கணக்கான புரவிகளின் கனைப்புச் சத்தம் வீரனான அநபாயன் காதுக்கு ரம்மி யமாயிருந்ததால் அவன் மனத்திலிருந்த ஆபத்து, கவலை முதலியன மறைந்து, அவை இருந்த இடத்தில் பெரும் இன்பம் புகுந்துகொண்டது. 'பல சாதிக் குதிரைகள்! பல நாட்டுக் குதிரைகள்! எத்தனை விதம்! எத்தனை ரகம். எத்தனை விதமான கனைப்புகள்! எத்தனை விதமான உடற்கட்டுகள்! இத்தனை வித்தியாசத்திலும் புரவியென்ற ஒரு பொதுச் சாதிதானே இருக்கிறது. ஈசுவர சிருஷ்டியில் எது பொது? எது தனி? அப்பப்பா! என்ன விந்தை!' என்று சிந்தித்துக்கொண்டே அமீரைத் தொடர்ந்தான் அநபாயன்.

அமீர் குதிரைச் சாலைத் தோட்டத்தின் அந்தப் பெருவாயிலைக் கண்டதுமே சிறிது ஏதோ சிந்தித்தான். பிறகு தலையை வேண்டாமென்பதற்கு அறிகுறியாக ஆட்டிவிட்டு மதிளை வலப்புறமாகச் சுற்றிச் சென்று ஒரு சிறு திட்டிவாசலுக்கு வந்து புரவியிலிருந்து கீழே குதித்து அநபாயனையும் இறங்கச் சொன்னான். அவன் சொற்படி அநபாயன் இறங்கியதும், "அநபாயரே! இனிமேல்தான், நாம் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். இந்தக் குதிரைச் சாலைகூடக் கண்காணிப்பில்தான் இருக்கும் என்று நினைக்கிறேன்" என்று அமீர் எதிரேயிருந்த திட்டிவாசலை நோக்கி மெள்ள நடந்தான். மெள்ளத் திட்டிவாசற் கதவில்

காதை வைத்துச் சில விநாடிகள் உற்றுக் கேட்டான். பிறகு அந்த வாயிற்கதவை மும்முறை லேசாகத் தட்டினான்.

சிறிது நேரம் பதில் ஏதுமில்லை. ஆளரவமும் கேட்க வில்லை. அநபாயன் மனத்திலும் மெள்ள மெள்ளச் சந்தேகம் எழுந்தது. "குதிரைகளின் இந்தக் கனைப்பில் நீ மெள்ளத் தட்டியது யாருக்குக் காது கேட்கும்" என்றும் வினவினான்.

"சற்றுப் பொருங்கள் அநபாயரே!" என்ற அமீர் திட்டி வாசலின் கதவிடுக்கின் மூலமாக உள்ளே நோக்கிவிட்டு அநபாயனையும் அழைத்து, "இதோ பாருங்கள்" என்றான்.

திட்டிவாசற் கதவின் பலகைகள் இடங் கொடுத்த இடத்தில் ஒரு கண்ணை வைத்து உள்ளே நோக்கினான் அநபாயன். தூர இருந்த மாளிகையின் வாசலில், திடீரென இரண்டு தீபங்கள் தெரிந்தன. அவற்றிலொன்று திட்டி வாசலை நோக்கி நகரவும் தொடங்கியது.



அத்தியாயம் 29

# பரிசுகள் இருபது

தென்கலிங்கத்து மன்னன் அரண்மனைக்கு நேர்ப் பின்புறத்திலிருந்த குதிரைச் சாலைத் திட்டிவாசல் கதவிடுக்கு வழியாகத் தூரத்தே தீபங்கள் இரண்டு தெரிந்ததையும் அந்தத் தீபங்களில் ஒன்று தாங்கள் இருந்த இடத்தை நோக்கி நகரத் தொடங்கியதையும் கண்ட அநபாயன் பெரும் ஆச்சரியத்திற்குள்ளாகிக் கதவிடுக்கிலிருந்து கண்ணை எடுத்துத் தலை நிமிர்ந்து உள்ளேயிருந்த வியப்பு முகத்திலும் ஒளிவிட அமீரை நோக்கினான்.

பாலூரையும் அதன் மக்களையும் அங்கிருந்த அரசாங்க அதிகாரிகளையும் சர்வ விளக்கமாக அறிந்தவன் நானொருவனே என்று மனப்பால் குடித்துக் கொண்டிருந்த அநபாயனுக்குத் தன்னை மீறி விவகாரங்கள் அறிந்தவன் ஒருவனிருக்கிறானென்பதே பெரும் வியப்பாயிருந்ததால் அந்த வியப்பைச் சொற்கள் மூலம் காட்ட முற்பட்டு, "அமீர், உன் திறமை இன்றுதான் எனக்கு முழுவதும் புலப்படுகிறது" என்று கூறினான்.

இதழ்களில் லேசான புன்முறுவலொன்று தவழ அநபாயனை நோக்கிய அமீர், சற்று விஷமத்துடனேயே கேட்டான், "ஏன் இதுவரை புலப்படவில்லையா?" என்று.

அநபாயன் பதிலுக்குச் சிரித்தான். "புலப்பட்டது அமீர், புலப்பட்டது. நீ திறமைசாலியென்பதும் எந்த நிலைமையையும் சமாளிக்கும் வல்லமை உனக்கு உண்

டென்பதும் எனக்கு ஏற்கெனவே தெரியும்" என்று பதிலும் சொன்னான் அநபாயன்.

"தெரியுமா?" அமீரின் கேள்வியில் ஏளனத்தின் சாயை நிரம்ப இருந்தது.

அதைக் கவனித்தும் கவனிக்காதவன்போல் பதில் சொன்ன அநபாயன், "தெரியும் அமீர். தெரியாவிட்டால் உன்னிடம் என்னுடைய அருமை நண்பர்களின் உயிரை யும் மாபெரும் கடாரத்தின் பிற்காலத்தையும் ஒப்படைப் பேனா? உன் திறமையைப் பற்றி நான் சந்தேகிக்கவில்லை. இந்தப் பாலூரின் முக்கிய இடங்களிலெல்லாம், நீ ஆள் களை உன் வாணிபத்துக்கு அனுகூலமாக வைத்திருப்பதும் எனக்குத் தெரியும். ஆனால் அரச மாளிகைக்கு அருகி லேயே, ஏன் உள்ளேயே என்று கூறலாம். நீ கை வைக்க முடியும் என்பதை நான் இதுவரை உணரவில்லை. இன்று வரை மூன்றிலொரு பங்கு தமிழரை உடைய இந்தப் பாலூரில் என் சக்திதான் அதிகம் என்று எண்ணியிருந்தேன். கை விரல் விட்டு எண்ணிவிடக் கூடிய சொற்ப அராபியர் உள்ள இந்த ஊரில் உன் சக்தியும் செல்வாக்கும் என் சக்தியைவிடப் பல மடங்கு அதிகம் என்பதை இன்று உணர்ந்து கொண்டேன்" என்று உணர்ச்சி பாய்ந்த குரலில் சொற்களை உதிர்த்தான்.

அந்தப் பாராட்டுதலால் ஓரளவு சங்கடத்துக்குள் ளான அமீர் சற்றே தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு, "தாங்கள் அளவுக்கதிகமாக என்னைப் புகழு கிறீர்கள்" என்று முணுமுணுத்தான்.

"இல்லை அமீர், அளவுக்கதிகமான புகழ்ச்சி அல்ல இது. உண்மையைத்தான் கூறுகிறேன். இன்று பாலூர் உள்ள நிலைமையில் அரச வீதிக்குள் புகுவதே கஷ்டம். ஏதோ பொய்க் கையெழுத்து ஓலைகளையும் பழைய உத்தரவுகளையும் காட்டி அதைச் சாதித்தாய். அரண் மனைக்குள் புகுந்து பின்புறம் வந்துவிட்டோம். குதிரைச்

சாலைக்குள் நுழைவது மிகக் கஷ்டமென்று நினைத்தேன். அதற்கும் வழி வைத்திருக்கிறாய்" என்று மேலும் பாராட்டிய அநபாயனை இடைமறித்த அமீர், "அநபாயரே! வயதும் சந்தர்ப்பமும் அனுபவத்தை அளிக்கின்றன. அனுபவம் புதுப்புது முறைகளைச் சுட்டிக்காட்டுகிறது. தங்களைவிட அறிவில் நான் குறைந்தவனாயிருந்தாலும், வயதில் பெரியவன். பல நாடுகளில் தங்கியிருக்கிறேன். ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொரு வித அனுபவம், சிக்கல் எனக்கு இருந்தன. அவற்றைத் தீர்க்கப் பலப்பல தந்திரங்களைக் கையாள வேண்டி வந்தது. கடைசியில் சொந்த நாடு விட்டுத் தூர நாடுகளில் உறைய வேண்டிய அவசியமுள்ள எனக்குத் தந்திரம் வாழ்க்கையின் ஒரு பகுதியாகி விட்டது. புதுப்புது நிலைகளில் புதுப்புது எச்சரிக்கைகளும், புதுப்புதுத் தந்திரங்களும் இயற்கையாகவே ஏற்படுவது பழக்கமாகிவிட்டது. என் கஷ்டங்களை வாழ்க்கையில் அனுபவித்த யாருக்கும் யுக்திகளும், குயுக்திகளும் தாமாகவே தோன்றும்" என்று கூறிவிட்டு அதற்குமேல் அந்தச் சம்பாஷணையை நீடிக்கவிட இஷ்டப்படாமல் பேச்சை வேறு திசையில் திருப்பி, "இதோ பாருங்கள் அநபாயரே! நீங்கள் தூரத்தில் பார்த்த விளக்கு சீக்கிரம் இந்த வாசலை நெருங்கிவிடும். கதவும் திறக்கப்படும். ஆகவே உள்ளே புகத் தயாராயிருங்கள்" என்று எச்சரித்தான்.

"சரி அமீர்! ஆனால் ஒரு சந்தேகம். இங்கு நீ கதவைத் தட்டினாய். விளக்கு தொலைவிலிருந்து வருகிறது. நீ மெள்ளத் தட்டியது அத்தனை தூரம் காதில் விழுமா?" என்று வினவினான்.

"விழாது அநபாயரே விழாது. இந்தக் கதவுக்கருகில் சதா காவல் உண்டு. விளக்குத்தான் இங்கே வைப்பதில்லை. ஆனால் கதவு தட்டியதும் இங்குள்ள காவலன் சென்று தோப்பு நடுவிலுள்ள வீட்டிலிருந்து விளக்கைக் கொண்டு வருவான்" என்று விளக்கினான் அமீர்.

"கதவுக்கருகில் ஏன் விளக்கு வைப்பதில்லை?" என்று மீண்டும் கேட்டான் அநபாயன்.

"இது அரசர் நுழையும் வாயில்."

"பீமனா!"

"ஆம். தென்கலிங்க மன்னருக்கு அரபு நாட்டுப் புரவிகளிடம் உள்ள ஆசை சொல்ல முடியாது. ஆகவே புரவிகளைப் பார்க்க அரசர் இங்கு வருவார். வந்து மும்முறை கதவைத் தட்டுவார். தட்டி உள்ளே நுழைந்து புரவிகளைப் பார்த்துவிட்டுப் போவார்."

மேலே ஏதும் அமீர் விவரிக்கத் தேவையில்லா திருந்தது. பீமன் தன்னந்தனியே புரவிகளுடன் உறவாட ஆடம்பரமேதுமில்லாமல் நுழையும் திட்டிவாசலுக்குள் நுழைய அதே முறையை அமீரும் கையாண்டிருக்கிறான் என்பதைப் புரிந்துகொண்ட அநபாயன் மேலும் வியப்பே எய்தினான். "அரசர் வந்திருப்பதாக எண்ணித்தான் காவலன் விளக்குக் கொண்டுவரப் போயிருக்கிறானா?" என்று ஆச்சரியத்துடன் வினவினான்.

"ஆமாம்" என்று சர்வசாதாரணமாகப் பதில் கூறினான் அமீர்.

"கதவைத் திறந்தபின் வந்திருப்பது அரசனல்ல வென்பதைக் காவலன் புரிந்துகொண்டால் என்ன செய்வது?"

"புரிந்து கொள்ள முடியாது."

"ஏன் புரிந்துகொள்ள முடியாது?"

"அரசரைக் கண்டவுடன் காவலன் தலைகுனிந்து வணங்க வேண்டும். பிறகு குனிந்த தலையை நிமிராமல் திரும்பி வீட்டை நோக்கி நடக்க வேண்டும். திட்டிவாசல் காவலருக்கு இப்படித் திட்டமான உத்தரவிருக்கிறது. அது மட்டுமல்ல..."

"வேறென்ன?"

"அரசரும் நம்மைப்போல் முக்காடிட்டுத்தான் வருவார். நமது புரவிகளைப்போல் அவர் புரவியும் சற்றுத் தொலைவில் தனித்துத்தான் நிற்கும்."

திட்டிவாசல் பிரவேசத்தை மிகக் கெட்டிக்காரத்தன மாகவே பீமன் ஏற்பாடு செய்திருக்கிறானென்பதை உணர்ந்துகொண்ட அநபாயன், பீமனைப்போல் தாங்கள் நுழைவது அத்தனை கஷ்டமல்லவென்பதைப் புரிந்து கொண்டான். இருப்பினும் மேற்கொண்டும் சந்தேகம் ஏற்படவே கேட்டான்: "மன்னன் வருவதாயிருந்தால் ஒரு புரவிதானே நின்றிருக்கும்."

"இல்லை, இல்லை. சில சமயம் பீமன் ஒரே ஒரு மெய்க்காவலனை அழைத்து வருவது உண்டு" என்று அந்தச் சந்தேகத்தையும் உடைத்த அமீர் மேலும் கையாள வேண்டிய முறைகளைக் கூறினான். "அநபாயரே! இதோ வாசல்! இன்னும் சில விநாடிகளில் இந்தத் திட்டிவாசற் கதவு ஓசைப்படாமல் திறக்கப்படும். முக்காட்டைத் தளர்த்தாமல் நேரே பார்த்தபடி உள்ளே நுழையுங்கள். காவலனைப் பேசாமல் பின்தொடருங்கள். தோப்பின் நடுவிலுள்ள வீட்டின் முகப்பில் சென்றதும் அவன் நின்று விடுவான். நீங்கள் சென்று எதிரேயிருக்கும் கதவைத் திறந்துகொண்டு உள்ளே செல்லுங்கள்" என்று விளக்கி னான் அமீர்.

குதிரைச் சாலைத் தோப்பு வீட்டை அடைய வேண்டியமுறை மிகத் தெளிவாக விளக்கப்பட்டதைக் கேட்ட அநபாயன், அமீரின் திறமையையும் அரண்மனை விவகாரங்கள், முறைகள் முதலியவற்றை அவன் நுட்பமாக அறிந்திருப்பதையும் எண்ணி உள்ளூர அவனைப் பாராட் டினான். அமீரைப்பற்றி அப்படி அவன் உவகை கொண்ட சமயத்தில் திட்டி வாசற்கதவு மெள்ளத் திறக்கப்பட்டது.

முக்காட்டை நன்றாக இழுத்துவிட்டுக் கொண்டு தோப்புக்குள் அநபாயன் நுழைந்தான். அநபாயனிடம் நடைமுறையை விவரித்துக் கொண்டிருக்கையிலேயே தன் புரவியின் பக்கங்களில் தொங்கிய பைகளிலொன்றிலிருந்து கனமான ஒரு துணி முடிப்பை எடுத்துக் கொண்ட அமீரும் அநபாயனைப் பின்பற்றித் தோட்டத்துக்குள் நுழைந்தான்.

தோட்டத்தில் சிறு செடி கொடிகள் அதிகமில்லாமல் எங்கும் பெரும் மரங்களே இருந்தன. அப்படியிருந்த பெரும் மரங்களும் நெருக்கமாக வைக்கப்படாமல் புரவிகளைப் பிணைக்கும் நோக்கத்துடன் விட்டுவிட்டு வைக்கப் பட்டிருந்ததால் அவற்றின் ஒவ்வொன்றின் அடியிலும் நீளக் கயிறுகளில் பிணைக்கப்பட்ட புரவிகள் கால் பாவி நகர்ந்து கொண்டிருக்க முடிந்தது. முன்னே விளக்குக் காட்டிச் சென்ற காவலனைப் பின்பற்றிய அநபாயன் எத்தனை விதவிதமான சாதிக் குதிரைகள் அங்கிருந்தன வென்பதை மட்டுமின்றி அவற்றின் பழக்கத்துக்குத் தக்கபடி அவை பிணைக்கப்பட்டிருப்பதையும் கண்டான். சில புரவிகளுக்குப் பின்னங்கால் ஒன்றில் மட்டும் பிணைக் கயிறு கட்டி மரத்தில் அக்கயிற்றைச் சுற்றிக் கட்டியிருந்தார்கள். இன்னும் சில புரவிகளுக்குக் கழுத்திலும் இன்னும் சிலவற்றுக்கு இடுப்பின் வாளிப்பிலும் கயிறுகள் கட்டப்பட்டிருந்தன. இப்படிப் பலவிதமாகக் கட்டப்பட்ட கயிறுகளால் பலவிதமாக உடலைச் சிலுப்பியும் உலாவியும் கனைத்துக் கொண்டிருந்த குதிரைகள் மீது இடையே மரக் கிளைகளில் ஊடுருவி வந்த சந்திர வெளிச்சம் விழுந்திருந்ததால் புரவிகள் தெய்வலோகப் புரவிகளைப் போலக் காணப்பட்டன.

புரவிகளின் கவர்ச்சி, வீரரான அநபாயன் இதயத்தை வெகு வேகமாக அந்தப் புரவிகளை நோக்கி இழுக்கத் தொடங்கியது. அப்படி இழுத்ததன் விளைவாகப் பேருவகை கொண்ட அநபாயன் அத்தகைய புரவிகளைக்

கொண்ட பீமனை அந்தச் சமயத்தில் மனத்துக்குள் பாராட்டவும் செய்தான். குதிரைகளுடன் உறவாட ஒரு மன்னன் தன்னந்தனியே திட்டிவாசல் வழியாக வருவா னேன் என்று முதலில் எண்ணிய அந்தச் சோழர்குல இளவல், 'இத்தகைய புரவிகளுடன் விருதுகளில்லாமல், காவலர் பாதுகாப்பு இல்லாமல், தன்னந்தனியே இருப் பதைவிடச் சிறந்த இன்பம் வேறென்ன இருக்க முடியும்?' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டான். அத்தகைய சிறந்த புரவிகளை உடைய பீமனிடம் பெரும் பொறாமை யும் கொண்டான் அவன். அந்தப் பொறாமையுடன் அரச ரீதியான பொறாமையும் கலந்துகொண்டது அந்த வீரன் மனத்திலே. 'சோழ நாட்டுக்கும் வெளிநாட்டுப் புரவிகள் வரத்தான் செய்கின்றன. ஆனால் அவை சோழர் கீழுள்ள முசிறிப் பெருந்துறையில் இறக்கப்படுகின்றன. அங்கிருந்து வடநாட்டவரும் சேரரும் வாங்கியது போக மீதிக் குதிரை களே சோழநாட்டுக்குக் கிடைக்கின்றன. முசிறிப் பெருந் துறைக்கு அடுத்தபடி பாலூரே பெரும் துறைமுகம். அரபு நாடுகளிலிருந்து வரும் பல்வகைப் புரவிகள் கடாரத்துக்கும் காம்போஜத்துக்கும் சீனத்துக்கும் போகின்றன. ஆகவே இந்தப் பாலூர் பெருந்துறை மட்டும் சோழர் வசமிருந்தால் எத்தனை வகைப் புரவிகளை வாங்கலாம். எத்தனை தரமான வேகமான புரவிப் படையை அமைக்கலாம்!' என்று எண்ணம் துளிர்த்தது அந்த வீரனின் சிந்தையில். 'ஏற்கெனவே திறமைமிக்க யானைப் படையை உடைய சோழர்களிடம் சிறந்த புரவிப் படையும் பெருகிவிட்டால் கலிங்கத்தை விழுங்குவதோ அந்தப் பீமனுக்குத் தகுந்த படிப்பினை அளிப்பதோ ஒரு பிரமாதமல்ல' என்று தனக்குத்தானே கனவு கண்ட அநபாயன் அங்கிருந்த புரவிகளின் மீது வைத்த கண்ணை வாங்காமலே நடந்து சென்றான். புரவிகளிடம் இருந்த அந்த வீரச் சிந்தனையில் கனவு கண்டுகொண்டே தான் தோப்பின் நடுவிடுதிக்கு

வந்துவிட்டதைக் கூட அறியால் விடுதியின் முகப்புக்கு வந்து ஏதோ பதுமைபோல் கதவைத் திறந்துகொண்டு வீட்டுக்குள்ளும் நுழைந்த பின்புதான் அவன் சுரணை யடைந்தான். "இவர்தான் என் நண்பர்" என்று அமீரின் வார்த்தைகள் பலமாக ஒலித்தபின்பே இக உலகத்துக்கு வந்த அநபாயன் தன் கண்களைத் தூக்கி எதிரேயிருந்த குதிரைச் சாலைத் தலைவனை ஏறெடுத்து நோக்கினான்.

கலிங்கத்து அரண்மனைக் குதிரைச் சாலைத் தலைவன் அமீரைப் போலவே அரபு நாட்டைச் சேர்ந்தவனென் பதைப் பார்த்ததும் தெரிந்துகொண்ட அநபாயன், "சரி யான நபரைத்தான் புரவிகளின் பாதுகாப்புக்குப் பீமன் பொறுக்கியிருக்கிறான்" என்று பீமனைக்கூட அந்தச் சமயத்தில் சிலாகித்தான். அமீரைவிட அதிக உயரம் பரும னுடனும் பெரிய தாடியுடனும் புஷ்டியான கன்னங்களுட னும் காணப்பட்ட அந்த அரபு நாட்டான் அநபாயர் தன்னை ஏறெடுத்துப் பார்த்ததுமே தலை வணங்கினான். அத்துடன் பணிவு பெரிதும் தொனித்த குரலில், "தாங்கள் யாரென்பது எனக்குத் தெரியும்" என்றும் கூறினான்.

அந்த அரபு நாட்டானை அதுவரை பார்த்திராத அநபாயன், ஆச்சரியத்தில் திளைத்தான். "என்னைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கலாம், பார்த்திருக்க முடியாது" என்றும் கூறினான்.

"கேட்டிருக்கிறேன். கேட்டது பார்த்தது போல்தான்" என்றான் குதிரைச் சாலைத் தலைவன்.

அமீர் இடைபுகுந்து, "தலைவரே! எங்களுக்கு மொத்தம் இருபது புரவிகள் வேண்டும். அதுவும் கட்டுக்கடங்காத, அதிகமாக பழக்கப்படாத புரவிகள் வேண்டும்" என்றான்.

குதிரைச் சாலைத் தலைவனின் புருவங்கள் ஆச்சரியத் தால் மேலெழுந்தன. "முரட்டுப் புரவிகளா வேண்டும்!"

என்று அந்த ஆச்சரியம் முகத்தில் விரியவும் குரலில் தொனிக்கவும் கேட்டான்.

"ஆம்" என்றான் அமீர்.

"அதுவும் யாருக்கும் அடங்காமல் நாலா பக்கத்திலும் சிதறி வெகு வேகத்துடன் ஓடக்கூடிய புரவிகள் வேண்டு மென்பாய் போலிருக்கிறதே?" என்று ஏளனமாகக் கேட்டான் அரபு நாட்டான்.

"ஆம். அவைதான் வேண்டும்" என்று திட்டவட்ட மாகப் பதில் சொன்னான் அமீர்.

குதிரைச் சாலைத் தலைவனின் முகத்திலிருந்த ஏளனக் குறி மறைந்து அது இருந்த இடத்தைப் பயத்தின் சாயை ஆட்கொண்டது. "அவற்றை அவிழ்த்துவிட்டால் நேரக்கூடிய ஆபத்து என்னவென்று தெரியுமா?" என்று வினவினான் அந்த அரபு நாட்டான் குரலிலும் கிலியின் ஒலி பாய.

"தெரியும்" என்றான் அமீர்.

"ஆபத்தை எதற்காக விலைக்கு வாங்குகிறாய்?"

"தேவையாயிருக்கிறது."

"ஆபத்து தேவையாயிருக்கிறதா?"

"ஆம்!"

இதற்குப் பதில் என்ன சொல்வதென்று விளங்க வில்லை அந்தக் குதிரைச் சாலைத் தலைவனுக்கு. அமீரின் முகத்தை விட்டு அநபாயன் முகத்தை நோக்கி, "அமீர் சொன்னதைக் கேட்டீர்களா?" என்று வினவினான்.

"ஆகா! கேட்டேன்" என்றான் அநபாயன். அவன் குரலில் பெரு மகிழ்ச்சி ஒலித்தது.

அமீர் தன் கையிலிருந்த பொற்கழஞ்சுகளைக் கலகல வென்று அரபு நாட்டான் எதிரில் கொட்டினான். "இரண் டாயிரம் பொற்கழஞ்சுகள் இருக்கின்றன" எனறு கணக்குச்

சொல்லி, பொற்குவியலைச் சுட்டியும் காட்டினான். புரவிச் சாலைத் தலைவன் கண்கள் பிரமை பிடித்த வண்ணம் பொற்காசுக் குவியலை இமைகொட்டாமல் பல விநாடிகள் பார்த்துக் கொண்டிருந்தன.

அரண்மனைப் புரவிகளில் ஒன்றை அரசர் அனுமதி யின்றி விற்பதே பெரும் குற்றம். அதற்கு மரண தண்டனை உண்டு. இருபது புரவிகளை விற்பது கனவிலும் நினைக்க முடியாத காரியம். அத்தகைய காரியத்துக்குத் தன்னைத் தூண்டிய இருவரையும் எதிரேயிருந்த பொற் குவியலையும் மாறி மாறிப் பார்த்த புரவிச் சாலைத் தலைவனின் முகம் பிரமையும் கிலியும் பிடித்துக் கலவரப் பட்டுக் கிடந்தது. அடுத்தபடி புரவிகளை விற்க அமீர் சொன்ன திட்டம் அவனைப் பைத்தியம் பிடிக்கும் நிலைக்குக் கொண்டு வந்துவிட்டது.



அத்தியாயம் 30

# இரவில் வந்த இருவர்

அரும்பாடுபட்டுப் பெரும் விலை கொடுத்துக் கலிங்கத்து மன்னனான பீமன் திரட்டி வைத்திருக்கும் இணையற்ற அரபுப் புரவிகளில் இருபதை விலைக்கு வாங்க வந்ததன்றி, அவற்றுக்கான பொன்னையும் தன் முன்னால் கொட்டிக் குவித்த அமீரையும் அவனுடன் ஆஜானுபாகுவாய் நின்ற அநபாயனையும் குழப்பமும் திகிலும் கலந்த பார்வையுடன் நோக்கிய அரண்மனைக் குதிரைச்சாலைத் தலைவன் நீண்ட நேரம் பதில் சொல்ல வகையறியாது மிரண்டு விழித்துக்கொண்டு நின்றான். அமீர் தன் நாட்டவன் என்ற காரணத்தாலும் அத்துடன் தன் உயிர் நண்பனென்ற நினைப்பினாலும் அவனுக்கு எந்த உதவியும் செய்யத் தயாராயிருந்த குதிரைச் சாலைத் தலைவன், அமீர் கேட்ட உதவியால் தன் பதவி, உயிர் அத்தனையும் பறிபோய்விடும் என்பதை உணர்ந்ததன் விளைவாகப் பெரும் பிரமை பிடித்துப் பல நிமிஷங்கள் குழம்பவே செய்தான். அது தவிர, யாரும் வாங்க அஞ்சும் பழக்கப்படாத முரட்டுப் புரவிகளை அவர்கள் ஏன் வாங்க முற்படுகிறார்களென்பதும் அவனுக்குப் புரியாத புதிராயிருக்கவே, இதில் ஏதோ மர்மம் புதைந்து கிடக்கிற தென்பதை மட்டும் உணர்ந்துகொண்டாலும் அந்த மர்மம் எதுவாயிருக்கக்கூடும் என்பது தெரியாததால் ஓரளவு திணறவும் செய்தான். அவர்கள் கேட்பதுபோல் தான்

எந்தக் காரணத்தைக் கொண்டு விற்பது, விற்றாலும் அவற்றை எப்படிக் குதிரைச் சாலையிலிருந்து அப்புறப் படுத்துவது, என்ற விஷயங்களை எண்ணிப் பார்த்துச் சிந்தை கலங்கிய அந்த அரபு நாட்டான் தன் குழப்பத்தி லிருந்து விடுதலையடைந்தாலும் கிலியிலிருந்து விடுதலை யடையாதவனாய் மெள்ள மெள்ளத் தன் எண்ணங்களைக் கேள்விகளாகத் தொடுக்கவும் முற்பட்டு, "அரண்மனை விற்பனைச் சாலையல்லவென்பதை நான் உனக்குச் சொல்ல வேண்டுமா அமீர்?" என்று வினவினான் உள்ளத் தில் பரவி நின்ற கிலி குரலிலும் ஒலி பாய.

வந்த காரியத்தின்மீது மெதுவாக ஆட்சேபனைப் புயல் வீச முற்பட்டுவிட்டதை உணர்ந்த அநபாயன், தன் கூரிய விழிகளை அமீரின்மீது திரும்பினான். அந்த விழி களைச் சந்திக்க முடியாத அமீர், தன் பார்வையைக் குதிரைச் சாலைத் தலைவன் விழிகளுடனேயே உறவாட விட்டு, "அரண்மனையை வர்த்தகச் சாலையென்று யாரா வது சொல்வார்களா? அதற்குத்தான் கலிங்கத்தின் பொது அங்காடி இருக்கிறதே. அது மட்டுமா? பெருவணிகர் சிறு வணிகர் வீதிகளிலும் வர்த்தகசாலைகள் இருக்கின்றனவே" என்றான் சர்வ சாதாரணமாக.

"அப்படியிருக்க அரண்மனையில் புரவி வாங்க ஏன் வந்தாய்?" என்று மீண்டும் வினவினான் அந்த அரபு நாட்டான்.

"மற்ற இடங்களில் கிடைக்காதவை இங்கிருப்பதால் தான்" என்று பதில் சொன்னான் அமீர்.

"கலிங்கத்தில் வேறெங்கும் புரவிகள் கிடைக்காதா?" குதிரைச்சாலைத் தலைவன் குரல் அப்பொழுதும் குழம்பிக் கிடந்தது.

"கிடைக்காமலென்ன? கிடைக்கும், ஏராளமாகக் கிடைக்கும்" என்றான் அமீர்.

"அப்படியானால் அந்தப் பொதுச் சாலைகளில் வாங்குவதுதானே?" என்று வினவினான் அரபு நாட்டான்,

"நாங்கள் பொதுச் சாலையில் தலைகாட்ட முடியா தென்பது ஒரு காரணம்" என்றான் அமீர் மெதுவாக.

"ஏன்?" கேள்வி ஆச்சரியத்துடன் எழுந்தது.

"இன்று கலிங்கத்தின் நீதி மண்டபத்தில் நடந்தது தெரியுமல்லவா?" அமீரின் இந்தப் பதிலில் ஓரளவு விளக்கமும் இருந்தது.

"தெரியும் தெரியும்" என்று கூறித் தலையையும் ஆட்டிய குதிரைச் சாலைத் தலைவன் அநபாயனை ஆச்சரியம் ததும்பும் கண்களுடன் நோக்கி, "இத்தகைய சாகசச் செயல்கள் அரபு நாட்டில் நடப்பதுண்டு. இந்த நாட்டில் நடப்பதை இன்றுதான் கேள்விப்பட்டேன். மிகவும் துணிகரச் செயல்" என்று பாராட்டிவிட்டு, மீண்டும் அமீரை நோக்கி, "புரிகிறது அமீர்! நீதி மண்டபச் சம்பவத்துக்குப் பிறகு அநபாயர் பொதுச்சாலைகளில் தலை காட்டுவது அபாயம். நீ அவர் நண்பன் என்பதும் கலிங்கத்தின் ஆட்சியாளருக்குத் தெரியும். ஆம், ஆம். நீங்களிருவரும் மறைவிலிருப்பதுதான் உசிதம்" என்று உள்ள நிலையைத் தெளிவாக விவரித்தான்.

குதிரைச்சாலைத் தலைவன் அத்தனை திட்டமாக நிலைமையைப் புரிந்துகொண்டதைப் பற்றி மகிழ்ச்சி கொண்ட அமீர் புன்முறுவலொன்றையும் தன் பெரு உதடு களில் தவழவிட்டு, "இப்பொழுது புரிகிறதா நான் உங்களி டம் புரவி வாங்க வந்த காரணம்?" என்றும் வினவினான்.

உண்மையில் அந்த அரபு நாட்டானுக்கு விளங்க வில்லை காரணம். ஆகவே அவன் கேட்டான், "பொதுச் சாலைகளுக்கு நீங்கள் போக முடியாதிருக்கலாம். நான் போகலாமல்லவா?" என்று.

"போகலாம்" என்றான் அமீர்.

"அப்படியானால் உங்களுக்குப் பதில் புரவிகளை நான் வாங்கலாமே?" என்றான் குதிரைச் சாலைத் தலைவன்.

"வாங்கலாம். அதில் சில கஷ்டங்களிருக்கின்றன" என்று சுட்டிக் காட்டினான் அமீர்.

"என்ன கஷ்டம்?"

"முதன் முதலில் உங்களை அரண்மனைக்குப் புரவி வாங்கவே அரசர் நியமித்திருக்கிறார்."

"ஆம்."

"அரண்மனைப் புரவிகள் அங்காடியிலிருந்து வாங்கப் படுவதில்லை."

"இல்லை."

"நேராக மரக்கலங்களில் வந்திறங்கும் புரவிகளில் சிறந்தவற்றை வாங்கிவிட்டுப் பிறகுதான் அங்காடிக்குப் புரவிகள் அனுப்பப்படுகின்றன."

"ஆம்..." உள்ளூர ஏற்பட்ட சந்தேகத்தால் வார்த்தையை நீள இழுத்தான் அரபு நாட்டான்.

"நீர் அங்காடியில் புரவி வாங்குவது அரசருக்குத் தெரிந்தால் முதலில் பதவி போய்விடும்..." என்று அமீரும் இழுத்தான்.

அரபு நாட்டான் கண்கள் அச்சத்தால் பெரிதாக விரிந்தன. "உம்..." என்ற பதில் ஒலியிலும் அந்த அச்சம் விரிந்து கிடந்தது.

"அடுத்தபடி புரவிகள் பிறருக்கு வாங்கப்பட்டது என்பது தெரிந்தால்..." என்று நீட்டினான் அமீர்.

"சிறை வாசம்" என்று திகிலுடன் வந்தது அரபு நாட்டான் பதில்.

"அநபாயருக்காக வாங்கப்பட்டது என்பது தெரிந்தால் சிரச்சேதம்" இதைச் சர்வ சகஜமாகச் சொல்லி வார்த்தையை முடித்த அமீர், "இப்பொழுது தெரிகிறதா பொதுச்

சாலைகளில் எங்களுக்காக நீரும் புரவி வாங்க முடியா தென்பது?" என்றும் கேட்டான்.

அமீருக்கு என்ன பதில் சொல்வதென்பதை அறியாமல் விழித்த குதிரைச் சாலைத் தலைவன், "அப்படி யானால் அரண்மனைப் புரவிகளை விற்பது உசிதம் என்பது உனது கருத்தா?" என்று ஆத்திரத்துடன் வினவி னான்.

"இதைப் பாருங்கள்" என்று பதிலக்கு அமீர் எதிரே குவித்திருந்த இரண்டாயிரம் பொற்கழஞ்சுகளைச் சுட்டிக் காட்டினான்.

"என் உயிர் இரண்டாயிரம் பொற்காசுகள்தான் பெறுமா?" அரபு நாட்டான் கேள்வியில் ஆத்திரத்தின் எல்லை தெரிந்தது.

"பெறுமானம் எத்தனை என்பதைச் சொன்னால் கொடுக்கச் சித்தமாயிருக்கிறோம். ஐயாயிரம்..." என்று கேட்டு நகைத்தான் அமீர்.

அரபு நாட்டானின் பெரும் கண்கள் கனலைக் கக்கின. "விளையாட இது நேரமல்ல அமீர். புரவி விற்பனைக்கு இது இடமுமில்லை" என்றான் அவன்.

"உண்மை, உண்மை" என்றான் அமீர்.

"எது உண்மை?" என்று சீறினான் குதிரைச்சாலைத் தலைவன்.

"விளையாட இது நேரமில்லையென்பது."

"விற்பனைக்கும் இது இடமில்லை என்று கூறினேன்" என்று கோபத்துடன் சுட்டிக் காட்டினான் அரபு நாட்டான்.

"அதில்தான் அடியவனுக்குச் சற்று கருத்து வேற்றுமை யிருக்கிறது" என்று அமீர் விண்ணப்பித்துக் கொண்டான்,

"கருத்து வேற்றுமையா?"

"ஆம்."

"என்ன கருத்து வேற்றுமை?"

"புரவிகளை நாங்கள் எங்காவது வாங்க வேண்டு மென்றால் அரண்மனையில்தான் வாங்க முடியும். அது மட்டுமல்ல. எங்களுக்குத் தேவையான முரட்டுப் புரவிகள் பொதுச் சாலைகளில் கிடைக்காது."

இந்தப் பதிலைக் கேட்டதும் குதிரைச் சாலைத் தலைவனின் இதழ்களில் இகழ்ச்சி நகை விரிந்தது. "புரவிகள் வாங்க வேண்டுமானால் இங்குதான் வாங்க வேண்டுமா?"

"ஆம்" என்றான் அமீர்.

"அதுவும் முரட்டுப் புரவிகள்!"

"ஆம். ஆம்."

"அமீர்!"

"உம்."

"உனக்குப் பைத்தியம் ஏதாவது உண்டா?"

"இதுவரை இல்லை."

"அப்படியானால் புரவிகளை வாங்க அரண்மனை தான் சரியான இடம் என்று ஏன் சொல்லுகிறாய்?"

"ஏனெனில் நாங்கள் புரவிகளை மீண்டும் விற்க வேண்டியதில்லை" என்று மிக மெதுவாகவும் திடமாகவும் சொன்னான் அமீர்.

முன்னுக்குப் பின் முரண்பாடாக வந்த அமீரின் பதிலில் ஏதோ மர்மம் புதைந்திருக்கிறதென்பதைப் புரிந்து கொண்ட குதிரைச் சாலைத் தலைவன் அமீரின் முகத்தை நன்றாக ஆராய்ந்தான். இருவர் கண்களும் நீண்ட நேரம் சந்தித்தன. அந்தச் சந்திப்பிலிருந்து பார்வையை அகற்றா மலே சொன்னான் அமீர், "புரவிகள் விற்பனைக்கு வேண்டியதில்லை. வாடகைக்குத்தான்" என்று.

"வாடகைக்கா?" மெள்ள வந்தது அரபு நாட்டான் கேள்வி. அவன் மூச்சு மட்டும் பெரிதாக வந்தது.

"ஆம். சில நாழிகைகளுக்கு" என்ற அமீர், "வேண்டு மானால், அநபாயரைக் கேளுங்கள்" என்றான்.

அவர்கள் உரையாடலைக் கேட்டுக் கொண்டும் ஏதும் பேசாமல் மௌனமாக நின்றிருந்த அநபாயனை நோக்கிய அரபு நாட்டான், அமீரின் பேச்சுக்கு அந்த வீர முகத் திலும் ஆமோதிப்பு இருந்ததைக் கவனித்தான். அவன் விழி களில் பயம் விரிந்தது. ஏதோ அபாயமான திட்டத்தில் அந்த இருவரும் தன்னை ஆழ்த்தத் திட்டமிட்டு வந்திருக் கிறார்கள் என்பதைப் புரிந்து கொண்ட குதிரைச் சாலைத் தலைவன், அமீரை மீண்டும் நோக்கி, "விவரமாகச் சொல் அமீர். புரவிகள் தற்காலிகமாக உங்கள் வசமிருக்க வேண்டுமா?" என்று கேட்டான்.

"இல்லை, இல்லை. உங்கள் வசமே இருக்கலாம். இரண்டு நாழிகைகள் நாங்கள் சொல்லும் இடத்திலிருந் தால் போதும். அதற்குப்பிறகு நீங்கள் புரவிகளை இங்கு கொண்டு வந்துவிடலாம். அதற்குத்தான் இரண்டாயிரம் பொற்காசுகள்" என்று விளக்கிய அமீரின் பெருவிழிகள் அர்த்த பாவத்துடன் அரபுநாட்டான் முகத்தில் நிலைத்தன.

"எந்த இடத்தில் புரவிகளை நிறுத்த வேண்டும்?" என்று கேட்டான் விஷயத்தை மெள்ளப் புரிந்துகொள்ளத் துவங்கிய குதிரைச்சாலைத் தலைவன்.

"கடற்கரையில்" என்று அமீர் குறிப்பிட்டான்.

"கடற்கரைக்குப் புரவிகளை ஏன் கொண்டு போனாய் என்று கேள்வி வந்தால்?"

"அரபு நாடு பாலைவன நாடு."

"ஆம்."

"அராபியப் புரவிகளை மணலில்தான் பழக்க வேண்டும்."

"ஓகோ!"

"ஆகவே அரண்மனை முரட்டுப் புரவிகள் இருப் பதைக் கடற்கரையில் பழக்குகிறீர்கள். இதை யாரும் ஆட்சேபிக்க முடியாது."

"முடியாது, முடியாது."

"பழக்கப்படும்போது புரவிகள் தாறுமாறாக ஓடுவது வழக்கந்தானே."

"ஆமாம்."

"அதையும் யாரும் ஆட்சேபிக்க முடியாது."

"முடியாது."

"அவ்வளவுதான் எங்களுக்குத் தேவை."

"எந்தச் சமயத்தில் புரவிகள் கடற்கரைக்கு வர வேண்டும்?" என்று கேட்டான் அரபு நாட்டான்.

"நாளை இரவு ஆறாவது நாழிகை வரட்டும். எட்டா வது நாழிகைக்கு மேல் அவை அங்கிருக்கத் தேவையில்லை. முரட்டுக் குதிரைகளை இரவில் பழக்குவது வழக்கமாத லால் எவ்விதச் சந்தேகமும் ஏற்படாது" என்று சுட்டிக் காட்டினான் அமீர்.

குதிரைச் சாலைத் தலைவன் அநபாயன்மீது தனது கண்களைத் திருப்பினான். "அநபாயரே! உங்களைப் போல் சிறந்த வீரர்கள் உலகத்தில் மிகவும் அபூர்வம். அந்த வீரத்துக்கும் அமீரின் நட்புக்கும் நான் பணிகிறேன். எந்த நேரத்துக்கு நான் குதிரைகளைப் பழக்க வேண்டும் கடற்கரையில்?" என்று கேட்டான்.

"அதற்கு அடையாளம் தரப்படும்" என்றான் அநபாயன்.

"எப்பொழுது? எங்கு?" என்று வினவினான் அரபு நாட்டான்.

"கடற்கரையில், ஆகாயத்தைக் கவனித்திரும்."

புரிந்து கொண்டதற்கு அறிகுறியாக தலையசைத்தான் அந்த அரபு நாட்டான்.

அநபாயன் மீண்டும் சொன்னான்: "குதிரைச் சாலைத் தலைவரே! நீர் நமக்கு இன்று செய்யும் உதவிக்குப் பிரதி இந்த இரண்டாயிரம் பொற்கழஞ்சுகளல்ல. உமது உதவியால் பெரும் அரசுகள் பயன்பெறப் போகின்றன. அந்தப் பயன் தகுந்த உருவெடுக்கும்போது அநபாயன் நெஞ்சத்தில் முதலில் நீர்தானிருப்பீர்."

உணர்ச்சியுடனும் ஆவேசத்துடனும் ராஜரீகத்துடனும் உதிர்க்கப்பட்ட சொற்களால் சொர்க்க போகத்தை அடைந்த அந்த அரபுநாட்டான் தலையை மிகவும் தாழ்த்தி அநபாயனை வணங்கினான். "இந்த அடிமையின் உயிர் இனி தங்களுடையது" என்றும் கூறினான்.

இந்த உறுதிமொழிக்குப் பிறகு அவனிடம் விடை பெற்றுக்கொண்டு செல்ல எழுந்த அநபாயன், அமீர் இருவரில் அமீர் மட்டும் திடீரென ஒரு விநாடி நின்று, "ஒரு முக்கிய விஷயம் மறந்துவிட்டேன்" என்று குதிரைச் சாலைத் தலைவனை நோக்கிக் கூறினான்.

"என்ன விஷயம்?"

"தங்களிடம் ஒப்படைத்தேனே சில பணியாட்கள்... பணிப்பெண்கள்..."

"ஆம், ஆம்."

"அவர்களைப் பொழுது விடிவதற்குள் இல்லத்திற்கு அனுப்பிவிட வேண்டும்."

"மிகவும் கஷ்டமாயிற்றே!"

"தங்களுக்கு எதுவும் கஷ்டமில்லை. அவசியம் அனுப்பிவிடுங்கள்" என்று திட்டமாகக் கூறி அந்த அரபு

நாட்டானைத் தலை தாழ்த்தி வணங்கிய அமீர், அதற்கு மேல் தாமதிக்காமல் அநபாயனை அழைத்துக்கொண்டு புறப்பட்டு, பழையபடி திட்டிவாசலுக்கு வெளியே வந்ததும், இருவரும் தலை முக்காடுகளை இழுத்துப் போர்த்திக் கொண்டு புரவிகளில் ஏறிச் சென்றார்கள்.

வணிகர் வீதியிலிருந்த இல்லத்தை அணுகியதும் அதற்குமேல் ஆபத்து ஏதுமில்லையென்ற காரணத்தால் முக்காட்டை நீக்கிய அமீர், "பிரபு! நீங்களும் முக்காட்டை எடுத்துவிடுங்கள்" என்று உற்சாகத்துடன் கூற முற்பட்டவன் திடீரென்று பேச்சை நிறுத்திக் கடிவாளத்தை இழுத்துப் புரவியையும் நிறுத்தினான்.

அவன் செய்கையைக் கவனித்த அநபாயனும் தானும் புரவியை நிறுத்தி, "என்ன அமீர்?" என்று கவலையுடன் வினவினான்.

பதிலுக்கு அமீர் தன் இல்லத்தின் வாயிலைச் சுட்டிக் காட்டினான். வாயிலில் இரு புரவிகள் நின்றிருந்தன. இரண்டும் அரசாங்க வீரர்களின் புரவிகள் என்பது அவற்றின் மீதிருந்து தொங்கிய பக்கச் சீலைகளிலிருந்து மிகத் திட்டமாகத் தெரிந்தது. அந்தப் புரவிகளிலிருந்து அப்பொழுதுதான் இறங்கிய இரு வீரர்கள் அமீரது விடுதியின் பெருங்கதவை நோக்கி மெள்ளச் சென்றனர். அடுத்தபடி கதவு தட்டப்படும் என்று அமீரும் அநபாயனும் எதிர்பார்த்தார்கள். அவர்கள் எதிர்பார்த்தபடி காரியம் நடக்கவில்லை. வர்த்தகர்களில் ஒருவன் தன் அங்கியிலிருந்த பெரும் சாவியொன்றை எடுத்து அந்தப் பெருங் கதவின் பூட்டு வாயில் பொருத்தினான். அமீரின் கண்களில் வியப்பும் பிரமிப்பும் மிதமிஞ்சித் தாண்டவமாடின. "பிரபு! பிரபு! ஆபத்து வந்துவிட்டது!" என்று அச்சத்துடன் குழறினான்.



## அத்தியாயம் 31

# வெற்றியின் வழி

**பா**லூர் சிறு வணிகர் வீதியிலிருந்த தன் விடுதியை அணுகியதும், அதுவரையிலிருந்த ஆபத்து நீங்கிவிட்டதென நினைத்து முக்காட்டை நீக்கிவிடலாமென முதலில் யோசனை சொன்ன அமீர், தன் விடுதிக்கு எதிரே அரசாங்க வீரர்களின் இரு புரவிகள் நிற்பதையும் அந்தப் புரவிகளில் வந்த இருவர் தன் வீட்டுக் கதவருகில் சென்ற தன்றி அவர்களில் ஒருவன் பெரும் சாவியொன்றைக் கதவின் துவாரத்தில் நுழைத்துப் பூட்டைத் திறக்க முயன்ற தையும் கண்டு சற்றே எச்சரிக்கை அடைந்து, "பொறுங்கள் அநபாயரே! புரவியை இந்தப் பக்கத்தில் நிழலுக்காக ஒதுக் குங்கள்" என்று கூறித் தானும் தன் புரவியை அநபாயன் புரவியுடன் சற்றுப் பக்கவாட்டில் நகரவிட்டான். புரவிகள் இரண்டும் நகர்ந்து தனது விடுதியின் பக்கத்து விடுதித் தாழ்வாரம் அடித்த நிழலில் ஒதுங்கியதும் தன் கூரிய விழிகளால் தன் வீட்டு முகப்பில் நடக்கும் காரியங்களை அமீர் கவனிக்கலானான். கவனிக்கக் கவனிக்க அவன் முகத்தில் ஆச்சரியக்குறி படருவதை அந்த இருளில் முழுதும் கவனிக்க முடியாவிட்டாலும் அமீர் திடீரெனக் கிளப்பிய, "ஹூம்" என்ற ஒலியால் அவன் புத்தியில் பேராச்சரியம் குடிகொண்டிருக்கிறதென்பதை ஊகித்துக் கொண்ட அநபாயன், "எதைக் கண்டு ஆச்சரியப்படுகிறாய் அமீர்?" என்று வினவினான்.

"அதோ அவர்களைக் கவனியுங்கள்" என்றான் அமீர் மேலும் ஆச்சரியம் ததும்பிய குரலில்.

அமீர் விடுதி முகப்பில் பெரும் தாழ்வாரம் இருந்த போதிலும் கிருஷ்ணபக்ஷத்தின் அந்த மூன்றாம் நாளிர வில் பிற்பகுதிச் சந்திரன் நன்றாகக் காய்ந்துகொண் டிருந்ததால் தாழ்வாரத்தில் இருட்டைச் சற்று மந்தப் படுத்தியே இருந்ததன் விளைவாக அநபாயன், அமீர் விடுதிக் கதவுக்கெதிரே நடந்த நாடகத்தை நன்றாகப் பார்க்க முடிந்தது. அமீரின் இல்லக் கதவை நோக்கி மிகுந்த எச்சரிக்கையுடன் நடந்து சென்ற இருவரும் தங்களைப் போலவே முக்காடிட்டு இருந்ததையும் மிகுந்த எச்சரிக்கையுடன் அக்கம் பக்கம் பார்த்துக்கொண்டே அவர்கள் கதவை நோக்கி நகர்ந்ததையும் அமீர் எச்சரிக்கை செய்யுமுன்பாகவே நோக்கிவிட்ட அநபாயனின் புலிக் கண்கள் அவர்களிலொருவன் பெரும் சாவியொன்றை எடுத்துப் பூட்டில் பொருத்தினதும் சிறிது ஆச்சரியப்பட்டே போனான். கதவோடு கதவாகப் பூட்டை இணைக்கும் வழக்கம் பாரதத்தில் கிடையாதென்பதையும், நாதாங்கி போட்டுத் தனிப்பூட்டும் தாழும் இடும் வழக்கமே உண்டென்பதையும் உணர்ந்திருந்த அநபாயன் அமீர் வீட்டுக் கதவிலேயே பூட்டு பொருத்தப்பட்டிருப்பதை அன்றுதான் கவனித்தானாகையால், சிறிது ஆச்சரியமே அடைந்தான். அப்படிப் பூட்டியிருந்தாலும் அந்தப் பூட்டைத் திறக்க அவர்களுக்குச் சாவி ஏது என்பதும் அவனுக்கு விளங்காததால் அமீரின் பக்கம் திரும்பி, "அமீர், உன் விடுதியில் சில நாட்களாகவே விசித்திரங்கள் பல நடக்கின்றன என்றான்.

இதைக் கேட்ட அமீரும் அநபாயன் பக்கம் திரும்பி, "ஆம் அநபாயரே! இதோ வந்திருக்கும் மனிதர்களும் விசித்திரமானவர்கள்" என்றான்.

"என்ன விசித்திரமாயிருக்கிறது அவர்களிடம்?" என்று அநபாயன் வினவினான்.

"வந்திருப்பவர்கள் கலிங்க வீரர்களல்ல" என்றான் அமீர் திட்டமாக.

"வேறு யார்?" அநபாயனின் குரலில் மேலும் ஆச்சரியம் ஒலித்தது.

"அதுதான் புரியவில்லை. புரவிகள் கலிங்க வீரர் புரவிகளேயொழிய வந்திருப்பவர்கள் கலிங்க வீரர் அல்ல. ஆனால் என் வீட்டுப் பூட்டின் மர்மத்தைத் தெரிந்து வைத்திருக்கிறார்கள்" என்று அமீர் விளக்கினான்.

"என்ன மர்மமிருக்கிறது உன் விடுதியின் பூட்டில்?" என்று வினவினான் அநபாயன் மீண்டும்.

"அதோ பாருங்கள், அந்த மனிதன் பூட்டில் சாவியைச் சொருகினானேயொழிய முழுவதும் திருப்ப வில்லை" என்று சுட்டிக் காட்டினான் அமீர்.

உண்மையில் சாவியைப் பூட்டுக்குள் கொடுத்த மனிதன் அதை வலதுபுறம் பூராவாகத் திருப்பவில்லை. அதற்கு மாறாகப் பூட்டும் பாவனையில் இடதுபுறமே அரைவாசித் திருப்பித் திருப்பி, பழைய நிலைக்குக் கொண்டு வந்தான். இதைக் கண்ட அநபாயன் கேட்டான், "பூட்டைத் திறக்கும் வழி இதுவா அமீர்?" என்று.

"இல்லை அநபாயரே! பூட்டைத் திறக்க அவன் முயலவில்லை. ஏனென்றால் அது பூட்டல்ல" என்றான் அமீர்.

"பூட்டல்லவா!" அநபாயனின் ஆச்சரியம் பன்மடங்கு அதிகமாகியது.

"இல்லை அநபாயரே! அது பூட்டல்ல. கதவில் இரண்டு துவாரங்கள் இருக்கின்றன. ஒன்றுதான் பூட்டு. மற்றொன்று தாழைத் திறக்க, உள்ளிருக்கும் அடிமைகளை அழைக்கும் சிறு மணி. அந்தத் துவாரத்தில் சாவியைக்

கொடுத்து மும்முறை திருப்பினால் உள்ளிருக்கும் மெல்லிய சலாகை நகர்ந்து பக்கத்துச் சுவரிலிருக்கும் மணிமீது தட்டும். அடிமைகள் கதவைத் திறக்க அது கட்டளை. இந்தச் சூட்சுமத்தை இவன் எப்படியோ அறிந்திருக்கிறான்" என்று மளமளவென்று விளக்கிய அமீர், "புரவியை விட்டு இறங்கி இந்த நிழலிலேயே வாருங்கள். இவன் யாரென்று பார்க்கலாம்" என்று கூறிவிட்டுத் தானும் புரவியிலிருந்து இறங்கிப் பக்கத்திலிருந்த தாழ்வார இருளில் பதுங்கிப் பதுங்கித் தன் வீட்டு முகப்பை அடைந்தான். அநபாயனும் அமீரின் வழியைப் பின்பற்றி, மெள்ள நடந்து வந்து பூட்டில் சாவியைக் கொடுத்து நின்றவன்மீது அமீர் பாய்ந்ததும் மற்றவன் கழுத்தைப் பின்னாலிருந்த வண்ணம் இறுகப் பிடித்து, "பேசாதே! வாயைத் திறந்தால் கழுத்தை நெறித்துவிடுவேன்!" என்று எச்சரித்தான்.

அநபாயன் கையில் சிக்கிக் கொண்டவனிடமிருந்து பதிலேதும் வரவில்லை. கழுத்து இறுகப் பிடிக்கப்பட்டிருந்ததால், "ஹூம்... ஹூம்..." என்ற மூச்சுத் திணறும் சப்தமே வெளிவந்தது. ஆனால் அமீரின் நிலை வேறு விதமாயிருந்தது. சாவியைப் பூட்டி அடிமைகளை வரவழைக்க முற்பட்டவன்மீது பின்னாலிருந்து அமீர் மிகுந்த எச்சரிக்கையுடன்தான் தாவினான். அவன் யார் மீது தாவினானோ அந்த மனிதனும் அமீரைப்போல் அப்படி அதிக உயரமோ பருமனோ உள்ளவனும் அல்ல. ஆனால் அவன்மீது பாய்ந்த மறுவினாடி அமீர் தரையில் புரண்டு கொண்டிருந்தான். அமீரின் ராட்சத உருவத்தைத் திரும்பிப் பாராமலே கையின் வேகத்தினால் தரையில் உருள வைத்த மனிதனை ஏறெடுத்து நோக்கிய அநபாயன் முகத்தில் வியப்பின் குறி பெரிதும் படர்ந்தது. அந்த இரவே தனக்கு அடுத்தடுத்து வியப்பை அளிப்பதற்காக ஏற்பட்டதோ என்பதை நினைத்து நினைத்துப் பரவசப்பட்ட அநபாயன், தான் பிடித்திருந்த கழுத்தை விடுதலை

செய்தான். மண்ணில் உருண்ட அமீர்கூடத் திடீரெனப் பரம சந்துஷ்டியுடன் எழுந்திருந்து தன்னை வீழ்த்தியவனுக்குத் தலை வணங்கி, "இந்த நிசியில் நீங்கள் வருவீர்கள் என்று எதிர்பார்க்கவில்லை. அப்பப்பா! எப்படி ஏமாற்றிவிட்டீர்கள்!" என்று மிகவும் பணிவும் வியப்பும் கலந்த குரலில் கூறினான்.

"இரவிலும் சரி, பகலிலும் சரி, எனக்கு இரு கண்கள் பின்புறம் உண்டு என்பது உனக்குத் தெரியாதா அமீர்?" என்று கூறிய சினக் கடலோடி, அமைதி நிரம்பிய அந்த இரவில் பயங்கரமாக ஆனால் மிக மெதுவாக நகைத்தான்.

"அது தெரியும் குருநாதரே! ஆனால் வந்திருப்பது நீங்கள் என்பது எனக்கெப்படித் தெரியும்" என்று வினவினான் அமீர்.

"பூட்டில் சாவியை நான் இடதுபுறம் திருப்பியதை நீ பார்த்திருக்க வேண்டுமே?" என்று கேட்டான் சினக் கடலோடி.

"பார்த்தேன்."

"இத்தகைய பூட்டுகள் சினாவைத் தவிர வேறு இடங்களில் ஏது?"

"கிடையாது."

"இந்த எச்சரிக்கை முறையும் நான் சொல்லிக் கொடுத்ததுதானே உனக்கு?"

"ஆமாம்."

"அப்படியிருக்க, மீதியை நீ ஊகித்துக்கொள்ள வேண்டியதுதானே?" என்று விளக்கிய சினக் கடலோடி, "உள்ளே வா அமீர்! நாம் பேச வேண்டிய விஷயங்கள் நிரம்ப இருக்கின்றன" என்று கூறிக்கொண்டு மீண்டும் இருமுறை சாவியைத் திருப்பவே கதவு திறக்கப்பட்டது. கதவு திறந்ததும் ஏதோ தான்தான் அந்த வீட்டுக்கு எசமானன் போல் உள்ளே தாராளமாக நடந்த சினக்

கடலோடி முதல் இரண்டு கட்டுகளையும் கடந்து முதல் நாள் தான் மற்றவர்களுக்கு அறிமுகம் செய்து வைக்கப் பட்ட மூன்றாம் கட்டின் பெரும் அறைக்கு வந்து சேர்ந்தான். வந்ததும் அடிமைகளை அழைத்து விளக்கைக் கொளுத்துமாறு உத்தரவிட்ட அந்தச் சீனக் கொள்ளைக் காரன் எந்தவிதக் கவலையுமில்லாத வதனத்துடன் அங் கிருந்த ஆசனமொன்றில் சாய்ந்துகொண்டு, "அநபாயரே! அமருங்கள். நாம் யோசிக்க வேண்டியது நிரம்ப இருக் கிறது" என்றான்.

மூன்றாம் ஜாமம் துவங்கிவிட்ட அந்த இரவு நேரத்தில் அவன் சொல்லக்கூடிய அப்பேர்ப்பட்ட தலை போகும்படியான காரியம் என்னவாக இருக்கும் என்பதை அறியாத அநபாயன் ஏதும் பேசாமல் அங்கிருந்த ஆசனத் தில் அமர, சீனக் கடலோடிக்குச் சற்றுப் பின்னடைந்தி ருந்த ஆசனத்தில் அவனுடன் வந்தவனும் மிகப் பணி வுடன் உட்கார்ந்துகொண்டான். அறையில் அப்பொழுதும் தூங்கா விளக்கொன்று மெல்லியதாக எரிந்து கொண்டி ருந்தாலும் அது போதாதென்ற காரணத்தால் சீனக் கடலோடியின் உத்தரவைத் தொடர்ந்து அடிமைகளிரு வரைப் பெருவிளக்குகள் இரண்டைக் கொண்டு வரக் கட்டளையிட்ட அமீர் அந்த விளக்குகள் வந்து உள்ளே பேரொளி பரவியதும், "மேற்கொண்டு என்ன தேவை குருநாதரே, சிறிது அரபு நாட்டு மது கொண்டு வரட்டுமா?" என்று மிகப் பணிவுடன் வினவினான்.

மிகப் பெரும் அபாயத்தை விளக்கும் குறியையோ வேறெவ்வித உணர்ச்சியையோ பிரதிபலிக்காமல் மிகுந்த அமைதியுடன் இருந்த முகத்தை இருமுறை அப்படியும் இப்படியும் ஆட்டி மது தேவையில்லையென்பதை உணர்த் திய சீனக் கடலோடி, "மது இருக்கட்டும் அமீர், நாம் வந்த காரியத்தை முதலில் கவனிப்போம்" என்றான்.

"என்ன செய்ய வேண்டும், சொல்லுங்கள். எந்த உத்தரவுக்கும் பணியச் சித்தமாயிருக்கிறேன்" அமீரின் கேள்வியில் பயமும் பக்தியும் சொட்டியது.

"முதலில் வாசலிலுள்ள புரவிகளின் மீதிருக்கும் சிலைகளை எடுத்து மறைத்துவிடு. அவற்றில் கலிங்கச் சின்னங்கள் இருக்கின்றன" என்றான் சீனக் கடலோடி.

"சரி" என்றான் அமீர்.

"பிறகு குதிரைகளை உன் கொட்டடியில் கட்டிவிடு" என்றும் உத்தரவிட்டான் அகூதா.

"புரிகிறது" என்றான் அமீர்.

அமீருக்கு மட்டுமல்ல. அநபாயனுக்கும் விஷயம் தெளிவாகப் புரிந்தது. ஆனால் ஏதும் புரியாதவன்போல் கேட்டான், "ஏது இந்தப் புரவிகள் உங்களுக்கு" என்று.

"இங்கு அவசரமாக வரத் தேவையிருந்தது. வரும் வழியில் கலிங்க வீரர் இருவர் மறித்து மல்லுக்கு வந்தார் கள்..." என்ற அகூதா வாசகத்தை முடிக்காமலே விட்டான்.

"அவர்களைக் குத்திப் போட்டீர்களா?" அமீர் பயத் துடன் வினவினான்.

வீரர்களைக் குத்தினானா அல்லது கட்டிப் போட் டானா என்பதை அகூதா சொல்லவில்லை. அது அத்தனை பிரமாத விஷயமல்லவென்பதற்காக அசட்டை யுடன் கையை ஆட்டிவிட்டு, "எப்படியிருந்தாலும் அவர் களால் நமக்குத் தொல்லையில்லை. நாம் கவனிக்க வேண்டியது நமக்கு முன்னுள்ள அபாயம்" என்றான்.

அநபாயன் விழிகள் மெள்ள எழுந்து சீனக் கட லோடியை நோக்கின. "புதிதாக என்ன அபாயம் நேரிட்டு விட்டது!" என்று வினவினான்.

"நான் இரண்டு மரக்கலங்களைக் கொண்டு வந்திருக் கிறேன்" என்றான் அகூதா எதையோ வற்புறுத்தும் நோக்கத்துடன்.

"அப்படியா!" என்றான் அநபாயன்.

"இதோ இருக்கும் இந்த அடிமை எனது இன்னொரு மரக்கலத்தை நடத்துபவன்," என்றான் அகூதா, தன் பின்னால் உட்கார்ந்திருந்த அந்த இன்னொரு சீனனைச் சுட்டிக் காட்டி.

தட்டை முகத்தில் எந்தவித உணர்ச்சியுமில்லாமல் சிலையென உட்கார்ந்திருந்த அந்தச் சீனனை நோக்கிய அநபாயன், "புரிந்து கொண்டேன்" என்பதற்கு அறிகுறி யாகத் தலையை மட்டும் அசைத்தான்.

அடுத்தபடி பெரும் வெடியொன்றை எடுத்து வீசி னான் அகூதா. "இவன் நடத்தும் மரக்கலம் இன்றிரவு கலிங்கத்தின் அதிகாரிகளால் சோதனை செய்யப்பட்டது" என்ற அகூதா, பளிச்சிட்ட தனது இரு விழிகளை அநபாயன் மீது நாட்டினான்.

அநபாயன் கண்களில் ஒரு வினாடி கவலையின் சாயை தோன்றி 'மின்னல் வேகத்தில் மறைந்தது. அதைக் கவனிக்கத் தவறாத சீனக் கடலோடி, அநபாயன் அத் தனை அபாயத்திலும் உணர்ச்சிகளைப் பெரும் கட்டுக்குள் வைத்திருப்பதை எண்ணிப் பெரிதும் வியந்து, 'இவன் ஆளப்பிறந்தவன்தான். சந்தேகமில்லை' என்று தனக் குள்ளேயே சொல்லியும் கொண்டான். மனத்தில் ஓடிய எண்ணங்களைச் சிறிதும் வெளிக்கு மட்டும் காட்டாத அகூதா அமீரை நோக்கித் திரும்பி, "சோதனை வியப் பில்லையா! உனக்கு?" என்று வினவினான்.

"இதில் வியப்பென்ன இருக்கிறது? வெளிநாட்டு மரக் கலங்களின் சரக்குகளைச் சோதனை செய்வது சுங்க அதிகாரிகளின் வழக்கம்தானே?" என்றான் அமீர்,

அப்பொழுதும் நிலைமையைச் சரியாகப் புரிந்து கொள்ளாமல்.

"வழக்கம்தான். ஆனால் இன்றிரவு இந்த மரக்கலம் மட்டுமே சோதனை செய்யப்பட்டிருக்கிறது" என்று அகூதா சற்று அழுத்திச் சொன்னான்.

"அப்படியா?" இம்முறை அமீரின் குரலில் கவலை நிரம்பி நின்றது.

"ஆம்" என்றான் அகூதா.

"ஏன்?" மீண்டும் வினவிய அமீரின் குரலில் நடுக்கமும் தொனித்தது.

இம்முறை அகூதா பதில் சொல்லு முன்பு அநபாயன் பதில் கூறினான். "அந்த மரக்கலம் புகார் செல்கிறது."

"சீனக் கடலோடியின் சிறு கண்கள் ஆச்சரியத்தால் அளவுக்கு அதிகமாக விகசித்தன. "எப்படித் தெரியும் உங்களுக்கு?" என்று வியப்புடன் வினவினான் சீனக் கடலோடி.

"நேற்றுவரை புகார் செல்லும் மரக்கலம் எதுவும் துறைமுகத்துக்கு வரவில்லை. நீங்கள் இரண்டு மரக்கலங் களைக் கொண்டு வந்திருக்கிறீர்கள். எங்களைத் தப்புவிக்க ஒரு மரக்கலத்தை உபயோகிக்க நீங்கள் தீர்மானித் திருக்கலாம். நானாயிருந்தால் அப்படித்தான் செய்வேன். அபாயம் நிரம்பிக் கிடந்ததால் இரண்டு மரக்கலங்களில் ஒன்றைத்தான் நான் பலி கொடுப்பேன்" என்று விவரித் தான் அநபாயன்.

"இருக்கலாம். ஆனால் என் எண்ணம் சுங்கக் காவலருக்கு எப்படித் தெரியும்?" என்று வினவினான் அகூதா.

"புகாருக்குச் செல்லும் சரக்குகளை அந்த மரக்கலத் தில் ஏற்ற நீங்கள் அனுமதித்திருக்கலாம்" என்ற அநபாயன்

மேலும் சொன்னான்: "நன்றாகக் கவனியுங்கள். இரண்டு அரசாங்கங்களைச் சேர்ந்தவர்கள், இரண்டு அரச குடும்பங் களில் அரியணையேறத் தகுதியுள்ளவர்கள் பீமன் கைகளி லிருந்து நழுவியிருக்கிறார்கள். நழுவிப் பாலூரில் மறைந் துறைகிறார்கள். அவர்கள் தப்பிச் செல்லும் வழி கடல் வழி ஒன்றுதான். அவர்கள் செல்லக்கூடிய துறைமுகம் புகார் ஒன்றுதான். எந்த மரக்கலம் புகாருக்குச் செல்லுமோ அதில்தான் அவர்கள் தப்பப் பார்ப்பார்கள். ஆகவே இன்றிரவிலேயே போலி வியாபாரிகளை விட்டுப் புகாருக்கு ஏதாவது மரக்கலம் போகிறதா என்று பார்த் திருக்கிறான் பீமன். இரவு பகலாகக் கப்பலில் சரக்கு ஏற்றுவது பாலூரில் சகஜம். ஆகவே புகாருக்குச் செல்லும் ஏதாவது ஒரு மரக்கலத்தில் போலிச் சரக்கை ஏற்ற ஏற்பாடு செய்திருக்கிறான். உங்கள் உபதலைவர்தானே இவர்? இவரிடம் வந்து போலி வியாபாரிகள் சரக்கைக் கொடுத்திருக்கிறார்கள். இவர் ஏற்றிக் கொண்டிருக்கிறார். அடுத்த ஜாமத்தில் நாங்கள் அந்த மரக்கலத்தில் இருக் கிறோமோ என்று சோதனை நடந்திருக்கிறது..."

தன் விளக்கத்தை இந்த இடத்தில் சற்றே நிறுத்திய அநபாயனை வியப்புத் ததும்பிய கண்களுடன் நோக்கிய அகூதாவின் அடிமை, "உண்மை! முக்காலும் உண்மை. வியாபாரிகள்தான் முதலில் சரக்கைக் கொண்டு வந்தார் கள். எனது கப்பல் புகார் செல்லவேண்டுமென எசமான் உத்தரவிட்டதால் ஏற்றிக்கொண்டேன்" என்றான்.

அகூதா பக்தி நிரம்பிய கண்களை அநபாயன்மீது திருப்பினான். "அநபாயரே! உமது அறிவு கூரியது. அந்த அறிவுதான் இப்பொழுது ஏற்பட்டுள்ள புதுச் சிக்கலையும் அவிழ்க்க வேண்டும்" என்று கூறிய அகூதா, "இனி இவன் நடத்தும் மரக்கலத்தின்மீது சிங்கப் படகுகளின் பார்வை இருக்கும். அதுமட்டுமல்ல, கடலோரமெங்கும் காவலிடப் பட்டிருக்கிறது. கடலுக்குச் செல்லும் கீழ்க்கோட்டை

வாசலிலும் காவல் இரட்டிக்கப்பட்டிருக்கிறது. இப்பொழு துள்ள நிலை இது. நாளை நிலை இன்னும் கடுமையா யிருக்கும்," என்றும் சுட்டிக் காட்டினான்.

இதைக் கேட்டதும் மிகத் தெளிவான அமீரின் பார்வையிலும் குழப்பம் தெரிந்தது. அநபாயன் விழிகள் மட்டும் நிர்மலமாயிருந்தன. சற்று யோசனையால் அவன் நுதல் மட்டும் சிறிது சுருங்கி வரிக்கோடுகள் மூன்று குறுக்கே பாய்ந்து சென்றன. பல வினாடிகள் தலை தாழ்த்தி மௌனமாகவே இருந்த அநபாயன் கடைசியாகத் தலை நிமிர்ந்தான். "அகூதா! நிலைமை அபாயமானது தான். ஆனால் அபாயந்தான் வீரர்களின் போர்த்திறமை யையும் சிந்தனைத் தெளிவையும் அளக்கும் கருவி. காலையில் இதற்கு ஒரு வழி கண்டுபிடிப்போம். எப்படியும் நாளை இரவு பாலூரை விட்டுப் புறப்பட்டு விடுவோம்" என்று திட்டமாக அறிவித்துவிட்டு அமீரை நோக்கித் திரும்பிய அநபாயன், "அமீர், குணவர்மர் எப்பொழுது இங்கு வரமுடியும்?" என்று வினவினான்.

"இன்றிரவு நான்காம் ஜாமத்தில் வருவார்" என்றான் அமீர்.

"எங்கு தங்க வைத்திருக்கிறாய் அவரை?"

"குதிரைச்சாலை விடுதியில்."

"என்ன! இப்பொழுது சென்றோமே அங்கேயா?"

"ஆம். குதிரைச்சாலை பீமன் அரண்மனைக்கு அருகில் இருக்கிறதல்லவா? ஆகவே யாரும் அங்கு அவரைத் தேடமாட்டார்கள்."

"அவரை அனுப்பச் சொல்லிக் குதிரைச்சாலைத் தலைவரிடம் நீ சொல்லவில்லையே."

"பணியாட்களைப் பற்றிச் சொன்னேனே?"

"கடாரத்தின் இளவரசன் பணியாளா!"

"மண்டலாதிபதிகளும் பணியாட்களாக வேஷம் போடும் அவசியம் நேரிடத்தானே செய்கிறது."

மற்ற அத்தனை பேர் மேலும் கலிங்கவீரர் கண்ணோட்டமிருக்கக் குணவர்மனைப் பற்றி மாத்திரம் தங்களுக்கோ கலிங்க வீரர்களுக்கோ எந்தவிதத் தகவலும் கிடைக்காத மர்மத்தைப் புரிந்துகொண்ட அநபாயன் சாதாரண சமயமாயிருந்தால் அமீரின் சாமர்த்தியத்தைப் பற்றிப் பெரிதும் பாராட்டியிருப்பான். ஆனால் ஆபத்து நிறைந்த அந்தச் சமயத்தில் அவன் மனம் அத்தகைய பாராட்டுதல்களை அள்ளி வீசும் நிலையில் இல்லை. ஆகவே, "சரி அமீர்! எல்லோரையும் காலையில் இந்த அறையில் திரட்டிவை. என் திட்டத்தை அதற்குள் முடிவு செய்கிறேன்" என்று கூறிவிட்டு அமீரிடமும் அகூதாவிடமும் விடை பெற்றுக்கொண்டு தன் அறைக்குச் சென்றான். அநபாயன் வார்த்தைகளைக் கேட்ட அகூதாவின் முகத்தில் நம்பிக்கையேதும் துளிர்விடவில்லை. பீமனுடைய பெரும் காவலை உடைக்கும்படியான அப்படியென்ன பெரும் திட்டத்தைக் காலைக்குள் அநபாயன் வகுக்க முடியும் என்று எண்ணினான் அந்தச் சீனக் கடலோடி. ஆனால் காலையில் அவர்கள் கூடிய சில நிமிடங்களில் அவன் சந்தேகம் பறந்தது. அநபாயன் திட்டம் அத்தனை கச்சிதமாக இருந்தது. அமீரின் விடுதியிலிருந்து கிளம்பி மரக்கலம் பாலூர்த் துறையிலிருந்து பாய் விரித்துப் பறக்கும் வரையில் ஒவ்வோர் எதிர்ப்பையும் சமாளிக்கத் தக்கதும் சந்தேகத்தக்கு இடம் கொடாதது மான பெரும் திட்டத்தை அநபாயன் வகுத்திருந்தான். "அபாயமான திட்டம்தான்! ஆனால் நூற்றுக்குத் தொண்ணூறு வெற்றி கிடைக்கும். வெற்றிக்கு இது வழிதான்..." என்பதை அகூதாவே ஒப்புக்கொண்டான். அந்தத் திட்டத்தைப் படிப்படியாக அனைவர் முன்னிலையிலும் விவரிக்கத் தொடங்கினான் அநபாய குலோத்துங்கன்.

அத்தியாயம் 32

# முதல் பலி

கிருஷ்ணபக்ஷத்து நான்காம் நாள் காலைப் பொழுது தனது ஆயுளில் ஐந்து நாழிகைகளை ஓட்டிக்கொண்ட சமயத்தில் அமீரின் இல்லத்தில் மூன்றாம் கட்டின் அந்தரங்க அறையில் தனது வெற்றித் திட்டத்தை விவரிக்க முற்பட்ட அநபாயன் பேச்சைத் துவங்கு முன்பாக எதிரே அமர்ந்திருந்தவர்களின் முகங்களைச் சில விநாடிகள் உற்றுநோக்கினான். பொழுது விடிந்ததும் எதிரேயிருந்த முகங்களில் கவலை மட்டும் விடியாதிருப்பதைக் கண்ட சோழர்குல இளவல் அவர்கள் கவலையின் வேகத்தை உணர்ந்தேயிருந்தான். கடந்த மூன்று நாள்களாகப் பாலூரில் நடந்த நிகழ்ச்சிகளில் சம்பந்தப்பட்ட அனைவரும் அந்த அறையில் கூடியிருந்ததைக் கவனித்த அநபாயன் கலிங்கத்தின் எதிரிகளை ஒரே அறையில் ஒழிக்கப் பீமனுக்கு அதைவிடச் சிறந்த சந்தர்ப்பம் கிடைப்பது அரிது என்ற நினைப்பால் தன் கடை இதழில் சிறிது புன்முறுவலையும் தவழவிட்டான். குதிரைச்சாலைத் தலைவனான அரபு நாட்டான் பாதுகாப்பில் அமீரால் வைக்கப்பட்டிருந்த குணவர்மனும் அமீரின் இல்லப் பாதுகாப்பிலிருந்த காஞ்சனாதேவியும் அக்கம் பக்கத்திலமர்ந் திருந்ததன்றி மீண்டும் மீண்டும் ஒருவரை யொருவர் பிரிய இஷ்டப்படாததுபோல் இருவர் கைகளும் ஒன்றையொன்று பற்றிக் கிடந்ததையும் அவர்களை விட்டுச் சற்றே விலகி உட்கார்ந்திருந்த இளையபல்லவன் காஞ்சனாதேவி மீது கூட கண்களைச் செலுத்தாமல் தன்னையே நோக்கிக் கொண்டிருந்ததையும் பீமனுடைய கடுமையான காவலை உடைக்கக்கூடிய என்ன விந்தைத் திட்டத்தைத்தான்

சொல்லிவிட முடியும் என்ற எண்ணத்தால் சீனக் கொள்ளைக்காரனான அகூதா தனது முகத்தில் ஓரளவு அவநம்பிக்கையுடன் அமர்ந்திருந்ததையும், தன்னிடம் அளவுக்கு மீறிய நம்பிக்கை உடைய அமீர் மட்டும் முகத்தில் எந்தவிதச் சந்தேகத்யையோ, கவலையையோ காட்டாமல் உத்தரவு எந்தத் திக்கில் பிறப்பிக்கப்படும் என்பதை எதிர்பார்க்கும் தூதன்போல் தன் வாயையே கவனித்துக் கொண்டிருந்ததையும் தனது புலிக் கண்களால் அளவெடுத்துக் கொண்ட அநபாயன், அவர்கள் மனங் களில் ஓடிய பல்வகை எண்ணங்களை எடை போட்ட தால் திட்டத்தை மெல்ல மெல்லவே விவரிக்கத் தொடங் கினான். திட்டத்தைத் திடீரென்று சொல்லாமல் அதற்குப் பூர்வ பீடிகையொன்றும் போட்டுக்கொண்டு பேச ஆரம்பித்து, "பௌர்ணமி கழித்த நான்காம் நாள் இது. கடந்த மூன்று நாள்களில் பாலூரில் நடந்த நிகழ்ச்சி களை நீங்கள் அறிவீர்கள். இரண்டு அரசாங்கங்களின் தற்போதைய உறவு, பிற்காலத்தின் நலன் அனைத்தும் அந்த நிகழ்ச்சிகளில் சம்பந்தப்பட்டிருக்கின்றன. இதோ அமர்ந்திருக்கும் கடாரத்தின் மன்னர்—இவர் இளவரசரா மன்னரா என்று தீர்மானிக்க முடியாத நிலையில் அந்த அரசாங்கம் இருக்கிறது—ஆகவே மன்னரென்றே அழைக் கிறேன். இவரும் இவரது மகள் இளவரசி காஞ்சனா தேவியும் கடாரத்தின் தளையை அவிழ்க்கச் சோழ நாட்டு உதவி நாடி வந்திருக்கிறார்கள். ஆகவே இவர்களைக் காப்பது சோழ நாட்டின் இளவரசன் என்ற முறையில் என் பொறுப்பாகிறது. பாலூர்ப் பெருந்துறையில் மூன்றி லொரு பங்குள்ள தமிழ்ப் பெருமக்களின் நலனைப் பாதுகாப்பதும் சோழ மன்னர் வீரராஜேந்திர சோழ தேவனின் பிரதிநிதி என்ற முறையில் என் கடமையாகிறது. இந்த இரண்டு கடமைகளையும் நிறைவேற்ற இரண்டு வழிகள் இருக்கின்றன. ஒன்று கலிங்கத்தின் படைகளிலும்,

மற்றத் துறைகளிலுள்ள தமிழ் மக்களைத் திரட்டிப் பாலூரை ரத்தக் களறியாக்குவது. இரண்டாவது எந்த ரத்தக் களறியும் ஏற்படாமல் தந்திரத்தால் நாலைந்து பேரின் வீரத்தாலும் துணிவாலும் தப்பிச் செல்வது. முதல் வழி பயங்கரமானது. நாம் அப்புறம் சென்றதும் இந்த ஊரிலுள்ள தமிழ் மக்களை உருத்தெரியாமல் அடிப்பது, போர் வெறி பிடித்திருக்கும் பீமனுக்கும் அனந்தவர்மனுக் கும் சோழர்களுடன் போர் தொடங்க ஒரு காரணத்தை அளிப்பது. இந்த முறையைச் சோழர் குல இளவரசனான நான் அனுமதிக்க முடியாது. நாடுகளின் வேறுபாடுகளைத் தீர்க்கக் கடைசி பக்ஷமாகத்தான் இருக்க வேண்டும். தவிர நாம் பாலூர் விட்டு நகர்ந்ததும் பெரும் படைகளைக் கொண்டு தமிழர்களையும் பழி வாங்க, பீமனைத் தூண்டும் வழி சிறந்த வழி அல்ல. ஓர் இளவரசன் காட்டக்கூடிய வழியும் அதுவல்ல. போரைக் கண்டு சோழநாடு அஞ்ச வில்லை. ஆனால் அனாவசியமாகப் போரில் நாட்டை இறக்குவதற்கும் அது இஷ்டப்படவில்லை. இன்று உங்க ளுக்கு ஒரு ரகசியம் சொல்லுகிறேன். அதோ உட்கார்ந் திருக்கும் எங்கள் படைத்தலைவரைப் போலவே நானும் இங்கு சோழ மன்னரால்தான் அனுப்பப்பட்டேன். ஆனால் சில வாரங்கள் முன்னதாக அனுப்பப்பட்டேன். எதற்கு?..." என்று பேசிக்கொண்டு போன அநபாயன் சற்றுப் பேச்சை நிறுத்தினான்.

அந்த அறையில் குழுமியிருந்த யாரும் பதில் சொல்லும் நிலையில் இல்லாததைக் கண்டு அநபாயன் தானே மேற்கொண்டு காரணத்தைச் சொன்னான். "தென் கலிங்கத்துப் பீமனும் வடகலிங்கத்து அனந்தவர்மனும் பரஸ்பர இணைப்பு ஏற்படுத்திக் கொண்டார்களா என்பதை அறிய அனுப்பினார். அது மட்டுமல்ல, இந்த இணைப்பு இருந்த போதிலும் தென் கலிங்கத்துப் பாலூரில் வாழும் தமிழர் நிலை நல்ல முறையிலிருக்கிறதா? சோழ

நாட்டிடம் தீரா விரோதமுள்ள அனந்தவர்மன் போதனை யால் பீமன் தமிழர்களின் விரோதியாகி விட்டானா என்பதை உணரவும் அனுப்பினார். அத்துடன் கடாரத்து மன்னர் சோழநாடு வருவதாகவும் செய்தி வந்தது. அப்படி வந்தால் அவரைப் பாலூரில் வரவேற்றுப் பத்திரமாகச் சோழநாடு அழைத்து வரும்படி சோழ மன்னர் பணித்தார். இத்தனை அலுவல்களையும் ஏற்று வந்தேன். வந்தபின் இங்கு நிலைமை கடுமையாயிற்று. சோழ நாட்டுக்கு இங்குள்ள நிலை பற்றிச் செய்திகூட என்னால் அனுப்ப முடியவில்லை. ஆகவே இளையபல்லவரையும் சமாதான ஓலையுடன் அனுப்பியிருக்கிறார். நாங்கள் இருவரும் வந்த பணியில் ஒன்று பலனற்று விட்டது. நிரந்தர சமாதானம் சாத்தியமில்லை. தமிழர் நிலை கேவலமாயிருக்கிறது. இந்தச் சமயத்தில் இங்கு போரைப் புகுத்துவதால் ஆரம்பத்தில் தமிழர் சேதம் பெருவாரியாயிருக்கும். இங்குள்ள தமிழர் சமூகம் பெரும் படைகளால் அழிக்கப்படாலும் படலாம். ஆகையால் அதைத் தவிர்க்க இஷ்டப்படுகிறேன். அதற்கு ஒரே வழிதான். நமது தலைகளைப் பணயம் வைத்துத் தப்புவதைத் தவிர வேறு வழியில்லை. அத்தகைய ஆபத் தான மார்க்கத்தைத்தான் நாம் கடைப்பிடிக்க வேண்டி யிருக்கிறது. நமது சிக்கலில் சம்பந்தப்படாதவர்களும் சிலர் இருக்கிறார்கள். ஆனால் நமக்கு உதவ முன்வந்தி ருக்கிறார்கள். அவர்கள் இப்பொழுதுகூட இந்த ஆபத்தை ஏற்க இஷ்டப்படாவிட்டால் விலகலாம். அவர்களை நமக்காகவோ சோழ நாட்டுக்காகவோ, தியாகம் செய்யச் சொல்ல நமக்கு உரிமையில்லை..." என்ற அநபாயன், அகூதா, அவன் அடிமை, அமீர் இவர்களை ஒருமுறை கூர்ந்து நோக்கினான.

இதைக்கேட்ட அமீரின் முகத்தில் சங்கடம் தெரிந்தது. அகூதாவின் அடிமை முகம் கல்லாயிருந்தது. அகூதாவின் சிறு விழிகள் ஆச்சரியத்துடன் அந்த வீர புருஷனின்

கண்களோடு கலந்தன. "நாங்கள் பின்வாங்கினால் தங்கள் விடுதலைத் திட்டம் நிறைவேறுவது சாத்தியமா?" என்று மெள்ளச் சொற்களையும் உதிர்த்தான் அகூதா.

"நீங்கள் பின்வாங்கினால் நான் இன்றிரவு கடைப் பிடிக்க இருக்கும் திட்டம் நிறைவேறாது. வேறு திட்டத் தைத்தான் யோசிக்க வேண்டும். ஆனால் உங்களைப் பேராபத்தில் சிக்கவைக்க எனக்கு என்ன உரிமை இருக்கிறது?" என்று கேட்டான் அநபாயன்.

"நாங்கள் மரக்கலங்களில் இருக்கப் போகிறோம். நீங்கள் வந்ததும் பாய் விரித்து ஓடப் போகிறோம். இதில் ஆபத்து என்ன இருக்கிறது?" என்று வினவினான் அகூதா.

"நீங்கள் மரக்கலங்களில் இருக்கலாம். ஆனால் உங்கள் படகுகளில் இரண்டு கரையருகே இருக்க வேண்டும். கரையிலும் காவலிருப்பதாக நீங்கள் சொல்லுவதால், உங்கள் படகுகளிலிருக்கும் மாலுமிகள் எந்த நேரத்திலும் சிறை செய்யப்படலாம் அல்லது எங்களால் கடற்கரையில் கலவரம் ஏற்பட்டால் வெட்டப்பட்டாலும் படலாம். அப்படி வெட்டப்பட்டு ரகளை நிகழ்ந்தால் உடனே பாலூர் அரசாங்க ஆயுதப் படகுகள் உங்கள் மரக்கலங் களை வளைத்துக் கொள்ளும்; தீப்பந்தங்களை எறிந்து உங்கள் மரக்கலப் பாய்களைக்கொளுத்த அவற்றுக்கு எத்தனை நேரம் பிடிக்கும்?" என்று வினவினான் அநபாயன்.

இதைக் கேட்ட அந்தச் சீனக் கடலோடி அநாயாச மாகச் சிரித்தான். "அநபாயரே! நீங்கள் சொல்லும் அபாயத்தை முன்பே நான் யோசித்தேன். நீங்கள் உணர்ந் திருக்கிறீர்களா என்பதற்காகத்தான் கேட்டேன். அபாய மில்லாத வாழ்க்கையில் ருசி எங்கிருக்கிறது? உங்களைப் போன்ற ஒரு வீர புருஷனுக்கு உதவ என் இரண்டு மரக் கலங்களல்ல, உயிரையே பலி கொடுக்கத் தயாரா யிருக்கிறேன். ஆனால் உன் உயிரைப் பலி கொடுக்க

வேண்டிய அவசியமில்லை. பலி கொடுப்பது சாத்தியமும் இல்லை. இதைவிடப் பெருத்த அபாயங்களே என்னை அழிக்க முடியவில்லை" என்று சொற்களை உதிர்த்தான் அகூதா அந்தப் பெரு நகைப்புக்கிடையே.

எதற்கும் அஞ்சாத அகூதாவின் துணிவைக் கண்டு அநபாயனே ஆச்சரியப்பட்டான். அத்துடன் நன்றியும் தொனிக்கும் குரலில் சொன்னான், "சீனக் கடல் வீரரே! உங்கள் உதவியைத் தமிழகம் என்றும் மறக்காது" என்று.

இத்துடன் அகூதாவுடன் சம்பாஷணையை முடித்துக் கொண்ட அநபாயன் அமீரை நோக்கிவிட்டு மற்றவர்களை யும் நோக்கிச் சொன்னான்: "முடிந்தால் அமீரை இந்த அபாயத்திலிருந்து விலக்கலாம். ஆனால் என் மனோ பாவத்தை முன்கூட்டி அறிந்த அமீர் அதற்கு வழி யில்லாமற் செய்துவிட்டான். நமக்காக அரண்மனைக்குப் பின்புறத்திலுள்ள குதிரைச்சாலை விடுதியில் அதன் தலைவன் பராமரிப்பிலேயே குணவர்மரையும், பணிப் பெண்களையும், அவர் பணியாட்களையும் தங்கவைத்துக் காப்பாற்றியிருக்கிறான். இங்கு நாம் தங்கியிருப்பது பீமனுக்குத் தெரிந்தாலும் அமீரின் தலை அவன் தோள் களில் பத்திரமாக உட்கார்ந்திருக்க முடியாது. தவிர அமீ ரில்லாமல் நாம் தப்பவும் முடியாது. நான் வகுத்திருக்கும் திட்டத்துக்கு அமீரும் அகூதாவும் இரு சக்கரங்கள். அச்சு சோழ நாட்டின் படைத்தலைவன். இவற்றில் ஏதாவ தொன்று கழன்றாலும் முறிந்தாலும் ஆபத்துதான்" இப்படிச் சொல்லிவிட்டுக் காஞ்சனாதேவியின் கருவிழி களைச் சந்தித்த அநபாயன், "தேவி! உங்களை விட்டு விட்டதாக நினைக்க வேண்டாம். உங்கள் வீரக்கலங் களுக்கும் முக்கிய பணி இருக்கிறது" என்று சொல்லி, "இதோ நன்றாகக் கவனியுங்கள்" என்று கூறி மற்றவர்கள் மீது ஒருமுறை தன் ஈட்டி விழிகளை உலாவ விட்டு எதிரே இருந்த வண்ணச் சுவரில் கையிலிருந்த சுண்ணாம்புக்

கட்டியால் வெள்ளைக் கோடுகள் சிலவற்றை இழுக்கவும், சில குறிகளைப் போடவும் முற்பட்டான். அடிக்கடி நின்று நின்று முடிக்கப்பட்ட அந்தச் சித்திரத்தைச் சில விநாடிகள் உற்று நோக்கிவிட்டுச் சற்று எட்ட உட்கார்ந்திருந்த இளைய பல்லவனையும் உற்று நோக்கினான் அநபாயன்.

அதுவரை கவலை மூடிக்கிடந்த இளையபல்லவன் வதனம் பனித்திரை கிழிந்த வானம்போல் திடீரென ஒளி பெற்றது. கண்களில் சரேலெனப் பளிச்சிட்ட வீராவேசம் முகத்திலும் கனவேகத்தில் பரவியது. துவண்ட உடலில் சுரணை பலமாக ஓடியதற்கான அறிகுறிகளும் தென் பட்டன. "நல்லது! நல்லது!" என்று அவன் நாவும் உற்சாகத்துடன் சொற்களைக் கொட்டின.

அநபாயன் வரைந்த கோடுகளிலிருந்து அவன் என்ன புரிந்துகொண்டான் என்பது காஞ்சனாதேவிக்குப் புரியாத தால் அவள் சற்றுக் கோபத்துடன் அநபாயனைப் பார்த்து, "இளைய பல்லவருக்கும் தங்களுக்கும் உயிர், நினைப்பு இரண்டும் ஒன்றாயிருப்பதால் அவர் புரிந்துகொண்டார் திட்டத்தை. ஆனால் எங்களுக்குப் புரியவில்லை" என்றாள்.

அந்தப் பெண்ணின் ஆத்திரத்துக்குக் காரணம் அநபாயனுக்குத் தெள்ளென விளங்கியது. தாங்கள் காதல் கொள்பவனுடைய எண்ணம், உணர்ச்சி, எல்லாம் தங்க ளுடன் ஒன்ற வேண்டுமேயொழிய வேறொருவனிடம் ஒன்றுவதை விரும்பாத பெண் மனப்பான்மையே அவள் சீற்றத்துக்குக் காரணமென்பதால் குறுநகை கொண்ட அந்தப் பிற்கால குலோத்துங்கன், "கோபம் வேண்டாம். எங்கள் நீண்ட நாள் பழக்கத்தால் கருணாகரன் என் யோசனையைப் புரிந்துகொண்டான். இன்னும் சில காலம் உங்களுடன் பழகினால் அவன் என்னைப் புரிந்துகொள்ள இஷ்டமும் படமாட்டான்" என்று பேசிவிட்டு, "கவனி யுங்கள் காஞ்சனாதேவி! அமீர் இதுவரையில் கொண்டு வந்துள்ள செய்திகளும் சரி. இன்று அகூதா கொண்டு

வந்திருக்கும் செய்தியும் சரி, ஒரு விஷயத்தை ஊர்ஜிதப் படுத்துகின்றன. பீமன் கடல் வழியையும் தடை செய்து விட்டான் என்பதுதான் அது. கடலை நாம் அடையக் கூடிய வழிகள் இரண்டு. ஒன்று கோதாவரி மார்க்கம். இரண்டாவது கிழக்குக் கோட்டை வாசலின் நிலவழி. பாலூரின் தெற்குத் தோப்பிலுள்ள அமீரின் குடிசைக்கு அப்பாலுள்ள கோதாவரித் துறையில் படகுகளை நிறுத்தி அவற்றில் ஏறிச் சங்கமத்தைத் தாண்டி மரக்கலங்களை அடைந்துவிடலாமென முதலில் யோசித்தேன். அது இப்பொழுது சாத்தியமல்ல. முதல் காரணம் இது சித்திரை மாதம். பௌர்ணமி போய் இன்று நான்காவது நாள். இந்த மாதத்துக்கு கோதாவரியுடன் கடலின் பேரலைகள் பனைமர உயரத்துக்கு மோதுகின்றன. அந்த இடத்தை அணுக வேண்டாமென அரசாங்கப் படகுகளுக்கே உத்தரவு உண்டு. அப்படியே அந்த அபாயத்தை எதிர்த்து வெண்மதி கிளம்புமுன் மரக்கலங்களை அடையலா மென்றால் இடையே சுங்கச்சாவடி இருக்கிறது. சுங்கச் சாவடியில் நமது படகுகள் தேக்கப் பட்டு வெண்மதி கிளம்பிவிட்டால் அலைகள் உக்கிரம் மிக அதிகமாகிவிடும். அப்புறம் கோதாவரி கடல் சங்கம எல்லைக்குள் போவதை விட பீமன் கையால் வெட்டுண்டு போவது மிகவும் சௌகரியமானது. ஆகையால் அந்த வழி பயனில்லை. பயனுள்ள ஒரே வழி கீழ்க்கோட்டை வாசல் ஒன்றுதான். அந்த வழியைத்தான் அமீர் குறிப்பிட்டான். அந்த வழியைத்தான் நானும் தேர்ந்தெடுக்கிறேன். அமீரின் நீர்க்குடங்கள் அவற்றுக்குப் பெரிதும் உதவுகின்றன. அந்தக் குடங்களும் நாமும் செல்லவேண்டிய முறையை அகூதா ஏற்கனவே சுட்டிக் காட்டியிருக்கிறார். அவர் சுட்டிக் காட்டிய வீரர்கள் திட்டம்தான் சிறந்தது. நீர்க்குடங்களில் ஒளிந்து காஞ்சனாதேவி, அவர் பணிப் பெண்கள் இருவர், குணவர்மர் வரலாம்; அமீர் வண்டி ஓட்டலாம். நானும் இளைய பல்லவனும் வண்டியின் பின்புறம் இருப்போம்

இதெல்லாம் முன்னால் நாம் ஒப்புக்கொண்ட ஏற்பாடுகள். ஆனால் வண்டி கடலோரத்தை அடைவதில் சில கஷ்டங்கள் இருக்கின்றன. இதோ பாருங்கள்" என்று கூறிவிட்டுத் தன் ஆள்காட்டி விரலால் சுவரிலிருந்த ஒரு பெரும் புள்ளியைச் சுட்டிக் காட்டினான்.

அதைத் தொடர்ந்து ஏற்பட்ட சம்பாஷணைகளில் இளையபல்லவன் கலந்து கொள்ளவில்லை. திட்டம் வெகு தெளிவாகப் புரிந்திருந்தது அவனுக்கு. அநபாயன் அந்தப் புள்ளியைத் தொட்டுக் காட்டியதும் தலையை மட்டுமே அசைத்தான் சோழர் படைத்தலைவன். ஆனால் காஞ்சனா தேவி தன் அஞ்சன விழிகளை அந்தப் புள்ளியின்மீது நிலைக்கவிட்டு, "அந்த இடம் நாம் இப்பொழுதிருக்கும் அமீரின் வீடுதான்" என்றாள்.

"இல்லை. அமீரின் வீட்டுக் கொல்லைப்புறம் இது. வீட்டுக்கு இதோ இரு குறிகள் போட்டிருக்கிறேன்" என்று திருத்திச் சொன்ன அநபாயன், "இன்றிரவு சரியாக ஐந்தாவது நாழிகை துவங்கியதும் நீங்களும் உங்கள் தந்தையும் பணிப்பெண்களும் நீர்க்குடங்களில் பதுங்குவீர்கள். அமீரின் பெருவண்டி பன்னிரண்டு பெரும் குடங்களை ஏற்றிக்கொள்ளக் கூடியவை. ஆறு குடங்களில் நீர் இருக்காது. நீங்களிருப்பீர்கள். இன்று மாலைக்குச் சற்று முன்பாகவே அகூதாவின் கப்பல்களுக்கு நீர் சேகரிக்கும் படலம் துவங்கும். இரண்டு மரக்கலங்களிலிருந்தும் அகூதாவின் மாலுமிகளும் அடிமைகளும் நீர்க்குடங்களை ஊருக்குள் கொண்டுவந்து வண்டிகளில் கொண்டு போய்க் கொண்டிருப்பார்கள்..." என்றான் அநபாயன்.

"மிகவும் சரி. அப்பொழுதுதான் இந்த வண்டி வரும் போது சந்தேகம் இருக்காது. மற்ற வண்டிகளைப் போலவே இதையும் நினைப்பார்கள்" என்று அகூதா இடைமறித்துக் கூறினான்.

"ஆம் சினத் தலைவரே! அப்பொழுதுதான் சந்தேகம் ஏற்படாது. நாம் கூடியவரையில் தைரியத்துடன் இந்த வீட்டின் கொல்லைப்புறத்தை விட்டுக் கிளம்பலாம். அமீர் வண்டியோட்டுவதால் யாருக்கும் சந்தேகமும் ஏற்படக் காரணமில்லை. அப்படிச் சந்தேகம் ஏற்பட்டால் மூன்று இடங்களில் ஏற்படலாம்" என்ற அநபாயன், அந்த இடங்களைத் தன் விரலால் சுட்டிக் காட்டி, "முதல் இடம் கிழ்க்கோட்டை வாயில், இரண்டாவது இடம் அதை அடுத்துக் கடலலைகள் மோதும் கரைக்குச் செல்லும் பாதை, மூன்றாவது இடம் கடலோரம். இந்த மூன்று இடத்தில் எந்த இடத்தில் தடை நேர்ந்தாலும் ஒரு பலி நிச்சயம்" என்று விளக்கினான்.

இதைக் கேட்டதும் அந்த அறையில் சில விநாடிகள் நிசப்தம் சூழ்ந்தது. 'திட்டத்தின் வெற்றிக்குப் பலி வேண்டுமா? பலி யாரைக் கொடுப்பது?' என்ற கேள்விகள் அங்கிருந்த முகங்களில் எழுந்து தாண்டவமாடின. ஒரு முகத்தில் மட்டும் கேள்வி தாண்டவமாடவில்லை. பதில் மட்டும் தாண்டவமாடியது. வெகுஅலட்சியமாக ஆசனத்தி லிருந்து எழுந்து பதிலை உதிர்த்த இளையபல்லவன் குரல் அந்த அறையை கணீரென்று ஊடுருவியது. "பலி இதோ இருக்கிறது. அதுவும் முதல் பலி" என்று தன் மார்பில் கையை வைத்துக் காட்டிய அவன் நுதலில் வீரக்களை சுடர் விட்டது. இதழ்களில் வீர நகையொன்றும் தவழ்ந்தது. அதுமட்டுமல்ல, "பலி கொடுப்பதானால் கொடுக்கும் இடம் அதோ" என்று தன் விரலையும் சுவரிலிருந்த கோடு களை நோக்கிச் சுட்டிக் காட்டினான் இளையபல்லவன். அத்துடன் அநபாயனை நோக்கி, "இதைவிடப் பெரும் பாக்கியம் எந்த வீரனுக்கும் கிடைப்பது அரிது. இந்தப் பலியெனும் பாக்கியத்தை எனக்களியுங்கள் இளவரசே" என்று அபாரத் துணிவும் தியாக வேட்கையும் நிரம்பிய சொற்களை உதிர்த்தான் சோழர்களின் படைத்தலைவன்.

அத்தியாயம் 33

# கை சொன்ன கதை

அமீர் வீட்டு அந்தரங்க அறையின் வண்ணச் சுவரிலே சுண்ணக்கட்டி கொண்டு கோடுகள் தீட்டப் பட்டதுமே திட்டத்தின் விவரங்களைத் திண்ணமாகப் புரிந்துகொண்ட இளையபல்லவன், கிழக்குக் கோட்டை வாயிலைக் குறிப்பிட்டு, முதல். பலியை இந்த இடத்தில் கொடுக்க வேண்டும் என்று சுட்டிக் காட்டியதன்றி, தன் ஆசனத்திலிருந்து எழுந்து நின்று அந்த நரபலியாகத் தன்னை ஏற்க வேண்டுமென்று கேட்டதும் அந்த அறை யில் பயங்கர மௌனமே ஒரு விநாடி நிலவியது.

அடுத்த விநாடி எழுந்த கேள்வியும் அங்கிருந்த ஆண் மக்களிடமிருந்து எழவில்லை. "கூடாது! கூடாது! யாரும் பலியாகக் கூடாது!" என்று காஞ்சனாதேவியின் கிள்ளைக் குரலே அந்த அறையில் ஊடுருவிச் சென்றது. பலி கொடுக்க வேண்டிய இடத்தைச் சுவரில் விரலால் சுட்டிக் காட்டி நின்ற அநபாயன் தன் ஈட்டி விழிகளை அந்தக் கடாரத்து இளவரசியின் பங்கஜ முகத்தின்மீது மிகவும் பரிதாபத்துடன் திருப்பினான். அவள் நிலைமீறி உணர்ச்சி பொங்கச் சொற்களை வெளியிட்டதன் காரணம் அவனுக்கு நன்றாகப் புரிந்தேயிருந்தது. 'இங்கு கடாரத்து இளவரசி பேசவில்லை. அவள் காதல் பேசுகிறது' என்று தனக்குள்ளேயே சொல்லிக்கொண்ட அநபாயன், "இந்தப் பலி கொடுத்தால் மற்றவர்கள் பிழைக்கலாம் தேவி. இல்லை யேல் இன்னும் ஒரேநாளில் நாமனைவரும் கலிங்கத்தின் வாள்களுக்குப் பலியாவோம்" என்றான்.

"வாழ்ந்தால் கூடிவாழ்வது. வீழ்ந்தால் கூடிவீழ்வது என்ற தத்துவம் உயரியதல்லவா?" என்று கேட்டாள் காஞ்சனாதேவி பளிச்சென்று.

இம்முறை அநபாயனுக்குப் பதில் இளையபல்லவனே பதில் கூறினான். காஞ்சனாதேவி இருந்த பக்கம் திரும்பிக் கூடப் பாராமல் எதிரே சுவரிலிருந்த கோடுகளிலேயே கண்களை நாட்டிக்கொண்டு, "தனி மனிதர்களுக்கு அந்தத் தத்துவம் சரி தேவி, நாடுகளுக்கல்ல!" என்று பதில் கூறினான் இளையபல்லவன்.

"இங்கு பலியாகப் போவது தனி மனிதரா, நாடா?" என்று கூறினாள் காஞ்சனாதேவி.

"தனி மனிதர் பாலியானால் நாடுகள் பலியாகா; இல்லையேல் இரண்டும் பலியாகும்" என்றான் இளைய பல்லவன்.

"நீங்கள் சொல்வது புரியவில்லை" காஞ்சனா தேவியின் குரலில் வருத்தம் துளிர்த்து நின்றது.

"புரியச் சொல்கிறேன், கேளுங்கள்" என்று துவக்கிய இளையபல்லவன், மற்றவர்களுக்கு முன்னால், தனக்கும் காஞ்சனாதேவிக்கும் சென்ற இரண்டு நாள்களுக்குள் வளர்ந்துவிட்ட காதலை வெளிப்படுத்த இஷ்டப்படாமல் அவளைக் "கேளுங்கள்" என்று மரியாதையாகவே அழைத் தான். மேற்கொண்டு அநபாயன் திட்டத்தை அவன் விவரித்தபோதும் அவளைச் சற்று மரியாதையாகவே விளித்து விஷயங்களை விளக்கலானான். "தேவி! இன்று இந்த அறையில் நாம் விவாதிக்கிறோம் நமது விடுதலை பற்றி. ஆனால் நமது விடுதலையில் பிணைந்திருப்பது நமது உயிர்கள் மட்டுமல்ல, கடாரம், சோழ நாடு இவற்றின் நலன்களும் கலந்திருக்கின்றன. நாம் அனைவரும் இந்த இடத்தில் பலியானால் நாடுகளின் நலன்களும் பலியாகும். உதாரணமாக உங்கள் தந்தையும் நீங்களும் பலியானால் கடாரத்தை ஜெயவர்மன் கையிலிருந்து மீட்பது யார்? குணவர்மன் வேண்டுகோளின்றி ஏன், வற்புறுத்தலின்றி சோழநாடு கடாரத்தின்மீது மரக்கலங்களை ஏவுமா? அநபாயர் பலியானால் சோழநாடு கலிங்கத்துடன் மோதா

திருக்குமா? அது மோதுவது இருக்கட்டும். இங்குள்ள தமிழர் வாளாவிருப்பார்களா? அடுத்த விநாடி ரத்தக் களரி ஏற்படும் தேவி! நீங்கள் நினைப்பதுபோல் கூடி வீழும் தத்துவம் நாம் இன்றுள்ள நிலைக்குப் பயன் படாது. தவிர, திட்டத்தில் அநபாயர் எதிர்பார்ப்பது போல் அப்படிப் பலி கொடுக்க வேண்டிய அவசியமும் இல்லை" என்றான் இளையபல்லவன்.

"பலிக்கு அவசியமில்லையா!" காஞ்சனாதேவியின் குரலில் சற்று நம்பிக்கை தொனித்தது.

"அவசியமில்லை. ஆனால் ஏற்படாது என்று திட்ட மாகச் சொல்ல முடியாது. அதோ அந்தக் கோடுகளையும் புள்ளிகளையும் கவனியுங்கள்" என்று திட்டத்தை விளக்க முற்பட்ட இளையபல்லவன், "மேற்குக் கோடியிலிருக்கும் புள்ளிதான் இந்த வீட்டின் கொல்லைப்புறம். அதற்கு அடுத்து, குறுக்கும் நெடுக்குமாக இழுக்கப்பட்டுள்ள கோடுகள் இந்தக் கொல்லைப்புறத்தை அடுத்த சிறு தோப்பைக் குறிக்கின்றன. தோப்புக்கு அடுத்தபடி பட்டையாக இழுக்கப்பட்டுள்ள மூன்று கோடுகளும் மூன்று பெருவீதிகள். அந்த வீதிகளைக் கடக்கும் வரையில் அதிக ஆபத்தில்லை. ஏனென்றால் முதல் சோதனை அந்த முப்பெரும் வீதிகளைத் தாண்டி, கடல் முகப்பிலிருக்கும் கிழக்குக் கோட்டை வாசலில்தான் நடக்கும். அங்கு நமது வண்டி மட்டும் இருந்தால் மாடுகளை வேகமாக முடுக்கி நீர்க்கரையை அடைய முயலலாம். ஆனால் வண்டிகள் பல நீர்க்கரைக்குச் செல்லும். அப்படிச் செல்லும் வண்டிகள் ஒன்றன்பின் ஒன்றாக நிறுத்திப் பரிசோதிக்கப் படும். அந்தப் பரிசோதனையில் நீர்க்குடங்களை வீரர்கள் அதிகமாகத் தட்டிப் பார்க்காமல் விட்டுவிட்டால் தப்பி விடலாம். பலிக்கு அவசியமிருக்காது. அப்படியில்லையேல், சோதனையில் சிறிது சந்தேகம் ஏற்பட்டாலும், வண்டியின் பின்புறம் உட்கார்ந்திருக்கும் நானோ அநபாயரோ கீழே

குதித்து வீரர்களை மறித்து வண்டி வேகமாக நீர்க்கரைக் குச் செல்ல அவகாசம் கொடுக்க வேண்டும். அப்படி அவ காசம் கொடுக்கும்போது வீரர்களைத் தடுத்து நிற்பவ னுக்குத் தப்ப அவகாசமிருக்காது. போரிட்டு மடிய வேண்டியதுதான்..." என்று சொல்லிக்கொண்டு போன இளையபல்லவனை இடைமறித்த காஞ்சனாதேவி, "ஏன் மடிய வேண்டும்? இந்த ஊருக்கு வந்த புதிதில் அதே கோட்டை வாசலிலிருந்து நீங்கள் தப்பவில்லையா?" என்று வினவினாள்.

இளையபல்லவன் இம்முறை அவளைத் திரும்பி நோக்கினான். அவன் கடை இதழ்களில் புன்முறுவ லொன்றும் தவழ்ந்து நின்றது. "அந்த நிலைமை வேறு, இன்று நிலைமை வேறு தேவி. அன்று நிகழ்ந்த சம்பவம் திடீரென்று நிகழ்ந்தது. இன்றிருப்பதுபோல் அத்தனைக் காவல் எச்சரிக்கையும் இல்லை. அன்று தப்புவதற்கும் அடைக்கலம் புகுவதற்கும் இடமொன்று கிடைத்தது..." என்று அர்த்த பாவத்துடன் அந்த அஞ்சன விழியாளைப் பார்த்த இளையபல்லவன் அநபாயனை நோக்கிக் கேட் டான்: "கிழக்குக் கோட்டை வாசலில் வீரர்களை நான் சில நிமிடங்கள் தடுக்கலாம். அதற்குள் நீர்க்கரைக்கு வண்டி போய்விட முடியுமா? நீர்க்கரைக்கும் கோட்டை வாசலுக்கு முள்ள பாதை நீண்டதாயிற்றே. என்னை வெட்டிப் போட்டு வீரர்கள் தொடர்ந்தால் என்ன செய்வீர்கள்?"

அநபாயன் கண்கள் இளையபல்லவன் கண்களுடன் சில விநாடிகள் கலந்தன. "அதையும் யோசித்தேன் கருணாகரா! நம்முடைய வண்டிக் காளைகள் என்ன தான் முடுக்கப்பட்டாலும் கோட்டை வாசலிலிருந்து நீர்க் கரையை அடைய நிமிடங்கள் பல ஆகும். உன்னைச் சுற்றிக்கொண்டே கலிங்கத்து வீரர்கள் வண்டி போகும் திசையையும் எண்ணத்தையும் புரிந்துகொண்டால் கண்டிப் பாக வண்டியைத் துரத்தி மடக்கப் பார்ப்பார்கள். ஆனால்

மடக்க முடியாது" என்று திட்டமாகத் தெரிவித்த அநபாயன், காஞ்சனாதேவியை நோக்கி, "தேவி! இந்த இடத்தில்தான் உங்கள் சேவை தேவையாயிருக்கும்" என்றான்.

"என்ன சேவை அநபாயரே?" என்று கேட்டாள் காஞ்சனாதேவி.

"உங்கள் நாட்டில் பெரு வில் மட்டும் உண்டு. எங்கள் நாட்டில் உண்டை வில் என்ற சிறு வில் உண்டு" என்றான் அநபாயன்.

சோழர்குல இளவல் எதற்காக இதைச் சொல்கிறான் என்பதைப் புரிந்துகொள்ளாத காஞ்சனாதேவி குழப்பத் துடன் கேட்டாள்: "உண்டை வில்லா?" என்று.

"ஆம் தேவி! உண்டை வில். உங்கள் பெரு வில் நீர்க் குடத்தில் பிடிக்காது. ஆனால் தமிழகத்தில் சிறுவர்கள் சிறு விற்களில் களிமண் உருண்டைகளை வைத்து மரக் கனி களை அடிப்பது உண்டு. சாதாரண வில் போன்றதுதான் அது. ஆனால் நாண் நல்ல சருமத்தைச் சுருட்டிச் செய்யப் படுவதால் பெரு வில்லின் வேகமுடையது. அந்த வில் மூலம் நன்றாக இழுத்து எய்யப்படும் அம்பு ஆகாயத்தில் நீண்ட தூரம் செல்லும்."

"எதற்கு அது இப்பொழுது?"

"ஒருவேளை நமது வண்டி தேக்கப்பட்டு, கருணாகரன் கீழே குதித்து வீரர்களைத் தடுத்து நின்றால் அமீர் தமது வண்டியைக் கடும் வேகத்தில் துரத்துவான். அந்த வண்டி அப்படிப் பறந்து ஐம்பதடி தூரம் சென்றதும் நீங்கள் நீர்க்குடத்தின் மறைவிலிருந்தே உண்டை வில் மூலம் எரியம்பு ஒன்றை ஆகாயத்தில் அனுப்ப வேண்டும். அதற்கான வசதிகள்— உண்டை வில், நீண்ட துணி சுற்றி எண்ணெய் தோய்த்த அம்பு, இவை உங்களுடன் நீர்க் குடத்தில் வைக்கப்படும். உங்கள் குடத்துக்குப் பக்கத்தில் வண்டியில் வெளிச்சத்துக்காகத் தீப்பந்தம் ஒன்றும்

செருகப்பட்டிருக்கும். அம்பை மட்டும் வெளிநீட்டிப் பற்றவைத்துக் குடத்திற்குள் கொண்டு போய் உண்டை வில்லில் நாணிழுத்து ஆகாயத்தில் பறக்கவிடுங்கள்."

இதை எதற்காகச் சொல்லுகிறான் அநபாயன் என்று மற்றவர்களுக்குப் புரியாவிட்டாலும் அமீருக்கு மட்டும் மிகத் தெளிவாகப் புரிந்தது. "ஆகாயத்தைப் பார்த்திருங்கள் அடையாளத்துக்கு" என்று அநபாயன் குதிரைச் சாலைத் தலைவனுக்குக் கூறியதன் நோக்கம் அப்பொழுதுதான் புரியவே, அமீர் பயமும் பக்தியும் ஆச்சரியமும் கலந்த பார்வையொன்றை அநபாயன்மீது செலுத்தினான்.

'ஆகாயத்தில் எரியம்பு போனதும் அரபு நாட்டான் முரட்டுப் புரவிகள் இருபதையும் அவிழ்த்துக் குறுக்கே விரட்டிவிடுவான். தாறுமாறாகப் பாய்ந்து செல்லும் அந்தப் புரவிகளைத் தாண்டி வண்டியை மடக்க ஆயிரம் கலிங்கத்து வீரர்களாலும் முடியாது. ஆகாகா! எப்பேர்ப் பட்ட திட்டம்! எத்தனை கூரிய அறிவு இவருக்கு! படிப்படியாக ஒவ்வொரு தடையையும் சமாளிக்க ஏற்பாடு செய்திருக்கிறாரே' என்று நினைத்து நினைத்து வியப்பில் ஆழ்ந்த அமீரின் உள்ளத்தில் கவலையும் புகுந்துகொண் டது. 'அரபுப் புரவிகளின் வேகம், தாறுமாறான பாய்ச்சல், பழக்கப்படாததால் கடிக்கும் சுபாவம், இத்தனையும் மீறிக் கலிங்க வீரர் வரமுடியாது. ஆனால் அதேபோல் அந்தப் புரவிகள் நம் வண்டி மீதும் பாய்ந்தால்!' என்று எண்ணி னான். அடுத்த வினாடி விளைவைப் பற்றி எண்ணவும் பயந்தான். 'விளைவு விபரீதமாகும். நீர்க்குடங்கள் உடையும். மாடுகள் மிரளும். வண்டியே புரவிகளால் கவிழ்க்கப்பட்டாலும் படலாம். அப்படிக் கவிழ்க்கப் பட்டால் யார் வண்டிச்சக்கரத்தில் அகப்படுவார்கள்? யார் புரவிகளின் கால்களில் சிக்குவார்கள்? சொல்ல முடியாத பயங்கரம்!' என்று நினைத்த அமீர் திகிலின் சொரூபமாக விளங்கினான்.

அவன் திகிலின் காரணத்தைப் புரிந்துகொண்ட அநபாயன், "நீ நினைக்கும் கஷ்டமும் இருக்கிறது அமீர். ஆனால் வண்டியை வேகமாகச் செலுத்த உனக்கிருக்கும் சாமர்த்தியத்தில்தான் நான் அந்த ஆபாயத்திலிருந்து மீள நம்பிக்கை வைத்திருக்கிறேன்" என்றான்.

அமீரும் அநபாயனும் பரிமாறிக்கொண்ட சொற்களையும் எண்ணங்களையும் புரிந்துகொள்ள முடியாததால் அந்தத் திட்டத்தைப் பற்றிய விவரங்களையும் மற்றவர்களுக்குத் தெரிவித்தான் அநபாயன். ஆகாயத்தில் எரியம்பு பறந்ததும் மூர்க்கத்தனமுள்ள இருபது அரபுப் புரவிகள் தாறுமாறாக ஓடிக் கிழக்கு வாசல் வீரர்களைத் தேக்கும். அவற்றைத் தாண்டுவது பெரும் படைக்கும் சுலபத்தில் முடியாது; அந்தக் குழப்பத்தில் கிடைக்கும் இடைக்காலத்தை நாம் நீர்க்கரையை அடையப் பயன் படுத்திக் கொள்வோம். நீர்க்கரையில் சீனத் தலைவரின் படகுகள் தயாராயிருக்கும். வண்டி நின்றதும் குடங்களில் உள்ளவர்கள் தரையில் குதித்துப் படகுகளுக்கு ஓட வேண்டும். தொடரும் வீரர்களை நானும் அமீரும் தடுத்து நிற்போம். தேவியும் குணவர்மரும் மற்றோரும் படகுகளில் ஏறியதும் நாங்களும் ஓடி ஏறிக்கொள்வோம். பிறகு படகுகள் புகார் செல்லும் மரக்கலத்தை நோக்கி விரையும். படகு அணுகியதும் அந்த மரக்கலம் பாய் விரித்தோடத் தயாராயிருக்கும். இதுதான் திட்டம். இடையே பல இடுக்கண்கள் நேரலாம். அவ்வப்பொழுது அவற்றை நமது யுக்தி கொண்டு முடிந்த வரை சமாளிக்க வேண்டும். மனித யுக்தி இவ்வளவுதான். மற்றபடி நாம் தப்புவதும் அல்லாததும் ஆண்டவனின் கரங்களில் இருக்கின்றன" என்று சொல்லித் தலையைக் குனிந்துகொண்ட அநபாயன் சில விநாடிகள் ஆண்டவனை நினைத்தான்.

அறையிலே மௌனம் நிரம்பி நின்றது. "இனி நாம் கலையலாம். இன்றிரவு ஐந்தாவது நாழிகை புறப்படச்

சித்தமாயிருங்கள்" என்று உத்தரவிட்ட அநபாயன் அனைவருக்கும் சிரம் தாழ்த்தினான். அன்று முழுதும் குணவர்மன் ஒரு நிலையில் இல்லை. 'எதற்காகச் சோழ நாடு வந்தோம்? சாவதாயிருந்தால் கடாரத்திலேயே செத் திருக்கலாமே!' என்று அன்று அடிக்கடி சொல்லிக் கொண் டிருந்தார். காஞ்சனாதேவி துக்கத்தின் சிகரமாக விளங்கி னாள். அன்று பகல் உணவுகூட அருந்த மறுத்தாள். பணிப் பெண்களை வெறுத்தாள். அறைக்கு வெளியே இருக்கக் கட்டளையிட்டாள். பஞ்சணையில் படுத்துப் புரண்டு கொண்டிருந்தாள். இளைய பல்லவனுக்கு நேர இருந்த கதி அவளை ஓர் உலுக்கு உலுக்கியிருந்தது. அவள் வேதனை யைச் சகிக்க இஷ்டப்படாது போல் பொழுது வேகமாக ஓடி விளக்கு வைக்கும் நேரமும் வந்தது. காஞ்சனா தேவியின் அறையிலும் ஒரு விளக்கு எரியத்தான் செய்தது. அந்தச் சுடர் போல தன் வாழ்க்கை விளக்கு எரியுமா அணையுமா என்பதை நினைத்து அவள் விளக்கின் சுடரை நோக்கிக் கொண்டிருந்த சமயத்தில்தான் இளைய பல்லவன் அவள் அறைக்குள் நுழைந்தான்.

அவன் தனியாக நுழையவில்லை. கையிலே ஒன்றும் தவழ்ந்து நின்றது.

அதைக் கண்டதும், பொலபொலவெனக் கண்ணீரை உகுத்தாள் அவள். அது ஆனந்தக் கண்ணீரா, சோகக் கண்ணீரா, பெரும் விந்தையைக் கண்டதால் ஏற்பட்ட கண்ணீரா! இதயத்தில் வேதனை விளைந்ததால் ஏற்பட்ட கண்ணீரா! அவளுக்கே புலப்படவில்லை. அவன் கையையே வெறித்து நோக்கினாள் அவள்.

அவன் கை சொன்ன கதைதான் என்ன?



அத்தியாயம் 34

# வீட்டுப் புறா! காட்டுப் புறா! கடல் புறா!

அறை விளக்கின் சுடரிலிருந்து அஞ்சன விழிகளை இளைய பல்லவனின் கையை நோக்கித் திருப்பிய காஞ்சனாதேவி தனது கண்களிலிருந்து திடீரெனப் பொலபொலவென உதிர்ந்து கன்னங்களில் வழிந்தோடிய கண்ணீருக்குக் காரணம் கற்பிக்க முடியாமல் திண்டாடி னாள். அது வாழ்க்கையின் சோதனையளித்த வேதனைக் கண்ணீரா அல்லது இதயத்தின் மகிழ்ச்சி நிரம்பி வழிந்த இன்பக் கண்ணீரா என்பதை அவள் சொந்த உணர்ச்சி களே கண்டுபிடித்துச் சொல்ல முடியாத குழப்ப நிலையில் இருந்தாள் அவள். இளைய பல்லவனின் இடது கையிலே தவழ்ந்து நின்ற வெண்மையான அந்தப் பெரும் காட்டுப் புறாவும் அதன் முதுகைத் தடவிக் கொடுத்துக் கொண்டி ருந்த அந்த வாலிப வீரனின் வலது கரமும் சொன்னவை பழங்கதைதான். ஆனால் அவற்றில் எத்தனை புதுமை களைக் கண்டாள் கடாரத்தின் அந்தக் கட்டழகி. 'இவர் கையிலே இன்று தவழும் இந்தக் காட்டுப் புறா மூன்று நாள்களுக்கு முந்திய இரவில் எத்தனை வேகமாக சாளரத் துக்குள் பறந்து வந்தது! அதை எத்தனை லாகவமாகப் பிடித்தார் இவர்! பிடித்ததும் எத்தனை நேரம் உற்றுப் பார்த்தார். உற்று மட்டுமா பார்த்தார். இறக்கைகளைத் தூக்கித் தூக்கி விரல்களால் என்னென்ன சோதனைகள் செய்தார்! செய்தவர் அடுத்தடுத்து என்னை ஏன்

பார்த்தார்?' என்று தன் மனத்துக்குள்ளே கேள்விகளைத் திரும்பத் திரும்ப வீசிக்கொண்ட காஞ்சனாதேவி, ஒரு புருஷன் ஒரு பெண்ணை எத்தனை சீக்கிரம் வசியம் செய்துவிட முடியும் என்பதையும் நினைத்து உள்ளூர வியந்தாள். அந்த வியப்பில், வியப்பில் விளைந்த காதலில், காதலில் விளைந்த தாபத்தில் அவள் மேற்கொண்டும் அந்த நிகழ்ச்சிகளைத் தொகுத்துத் தொகுத்து நினைந்து நினைந்து உருகினாள். அதே இரவில் அந்தக் காட்டுப் புறா சிறகடித்து இளையபல்லவன் அறையை நோக்கி ஓடியது. அதைத் தான் துரத்தியது, புறா இளைய பல்லவனை மூக்கால் கொத்தியது, புறாவை எடுத்து அவன் தன்னிடம் அளித்தது, ஆகிய அத்தனை காட்சிகளும் அவள் சிந்தனை யில் வலம் வந்தன. 'புறாவைத்தான் அவர் கொடுத்தார்! நான் அதை ஏன் வாங்கி மார்பில் அணைத்துக்கொண் டேன்? புறா மீது ஆசையா?' என்று அவள் தன்னைக் கேட்டுக்கொண்டு உள்ளூர வெட்கவும் செய்தாள். அந்த இன்ப நிகழ்ச்சிகளெல்லாம், அவள் இதயத்தில் வேதனை யையும் காதலையும் கலந்து பிரவகிக்கச் செய்தன. அடுத்து அன்று இரவு நேர இருந்த பயங்கரப் பயணம், அதில் இளைய பல்லவனுக்கு நேர இருந்த பயங்கர முடிவு இவை யிரண்டும் அவள் இதயத்தில் வேதனை வெள்ளத்தைக் கிளப்பிவிட்டன. இத்தனையையும் இதயம் தாங்க முடியுமா? முடியாததால் பொங்கிப் பொலபொலவென உதிர்ந்தன அவள் கண்களிலிருந்து நீர்த் துளிகள்.

பஞ்சணையில் உட்கார்ந்திருந்த அந்தப் பருவ அஞ்சுகத்தின் பங்கஜ விழிகளிலிருந்து, நெஞ்சமுருகியதால் வழிந்த கண்ணீரைக் கருணாகர பல்லவனும் கவனிக்கத் தான் செய்தான். அந்தக் கண்ணீருக்குக் காரணமும் அவ னுக்குப் புரிந்தேயிருந்தது. அநபாயனுக்காகத் தூது வந்த பறவைத் தீவின் அந்தக் காட்டுப்புறா, எதிரே பஞ்சணை யிலிருந்த நாட்டுப்புறாவுக்குப் பழைய நினைவுகளைக்

கிளறிவிட்டுவிட்டதையும், அந்த நினைப்புகளும் அன்றிரவு நிகழ இருக்கும் நிகழ்ச்சியில் தான் ஏற்கப்போகும் பங்குமாக இணைந்து அவள் இதயத்தை ஒரு கலக்கு கலக்கி விட்டிருப்பதையும் புரிந்துகொண்ட கருணாகர பல்லவன், காஞ்சனாதேவிக்கு ஆறுதல் சொல்லவும் உற்சாகப்படுத்த வும் கட்டிலை நோக்கி மெள்ள நடந்தான். இரண்டு அடிகள் எடுத்து வைத்ததுமே வீரனுக்கு வேண்டிய உறுதி தன் நடையிலில்லாததை அவன் புரிந்து கொண்டான். தன்னுடைய இரும்பு இதயங்கூடப் பஞ்சணையில் உட் கார்ந்து விளக்குச் சுடரில் சொர்ண பிம்பமென ஜொலித்த அந்தப் பைங்கிளியின் துக்க நிலையைக் கண்டதும் தளர்ந்து விட்டதைக் கண்டு வியப்பின் வசப்பட்டான். ருத்திர னிடமே கைவரிசையைக் காட்டும் துணிவு கொண்ட காமனுக்குத் தன்னைப் பலவீனப்படுத்துவது ஒரு பெரிய விஷயமல்ல என்பதையும் அறிந்து கொண்டான். அந்த உணர்ச்சியுடன் காஞ்சனாதேவியை அணுகிய இளைய பல்லவன், அவளது அழகிய தோளின் மேல் தனது வலது கரத்தை வைத்தான்.

அவள் உணர்ச்சிகள் கட்டுக்கடங்காமல் பிரவகித்தன. அவள் இதயத்தை முதலில் நெகிழச் செய்தது நினைப்பு. இப்பொழுது நெகிழச் செய்தது தோளில் தவழ்ந்த கை, முதுகுப் புறமும் இறங்கிக் கொடுத்த அணைப்பு. ஒன்று சிந்தனை, இன்னொன்று ஸ்பரிசம். இரண்டில் எது வேக முடையது என்பதை அந்த இருவராலும் உணர முடிய வில்லை. வலது கையை அவளது முதுகில் ஆறுதலாகத் தவழவிட்டு அவள் பூவுடலை அணைத்த வண்ணம் அவள் பக்கத்தில் அமர்ந்த இளையபல்லவன், இடது கையிலிருந்த புறாவை, "இந்தா காஞ்சனா! இதைப் பிடி!" என்று சொல்லி மடியில் செயலற்றுக் கிடந்த அவள் கைகளில் பொருத்தினான். அவள் இரண்டு கைகளும் புறாவைப் பற்றிக்கொண்டன. அப்படிப் பற்றி நின்ற அந்தச் சமயத்

திலும் இடது கையால் அவள் கையையும் வலது கையால் அவள் முதுகையும் ஆறுதலாகத் தடவிக் கொடுத்தான் இளையபல்லவன். அன்பின் அந்தச் செயலிலும் இன்பமும் வேதனையும் கலந்தே பாய்ந்தன அவள் உடலில். வாழ்க்கையே இரண்டும் கலந்ததுதான் என்பதை அவள் அந்த நேரத்தில் சந்தேகத்துக்கு இடமின்றிப் புரிந்துகொண்டாள். அப்படிப் புரிந்துகொண்டதால் ஓரளவு சாந்தியும் பெற்றாள். அந்த சாந்திக்கு மேலும் உறுதியளிக்க நினைத்த இளைய பல்லவன் தன் இடது கையினால் அவள் முகத்தைத் திருப்பி வலது கையால் அவள் கண்களையும் வழவழத்த கன்னங்களையும் துடைத்தான்.

அத்தனைக்கும் அவள் ஏதும் பேசாமல் சிலையென உட்கார்ந்திருந்தாள். சிந்தனை அலைகளில் புரண்டு கொண்டிருந்த அவள் சித்தம் பேசும் சக்தியை அறவே இழக்கச் செய்திருந்தது. அவள் நிலையைப் புரிந்து கொண்ட இளையபல்லவன் தானே மீண்டும் பேசமுற்பட்டு, "காஞ்சனா! நெஞ்சத்தை நெகிழவிடும் சமயமல்ல இது. துணிவுடன் இதயத்தை இரும்பாக்கிக் கொள்ள வேண்டிய நேரத்தை அடைந்துவிட்டோம்" என்று அவளுக்கு மட்டும் கேட்கும்படி காதுக்கருகில் உதடுகளைக் கொண்டு சென்று வார்த்தைகளை உதிர்த்தான். அப்படிக் காதுக்கருகில் அவன் பேசியபோது உதடுகளில் அவள் காதின் நுனிகளும் லேசாகப் பட்டனவாதலால் அவள் மேலும் உணர்ச்சிகளுக்கே அடிமையானாள். அவற்றிலிருந்து விடுவித்துக் கொள்ள இஷ்டப்படாததாலோ என்னவோ சரேலெனப் பஞ்சணையிலிருந்து எழுந்திருந்து சாளரத்தை நோக்கிச் சென்று அதனருகே நின்று ஒரு புறமாகச் சாய்ந்தும் கொண்டாள்.

புறாவைப் பிடித்த இடதுகை மார்பில் புதைந்து கிடந்ததால் புறாவின் பட்டு மேனியும் அவள் மார்பில் ஒரு புறத்தில் பட்டுக் கொண்டிருந்தது. அப்படியும் இப்படி

யும் திரும்பிய அதன் தலையும் மூக்கும் அங்கும் இங்கும் பட்டு வேதனையையும் அளித்துக் கொண்டிருந்தது. சாள ரத்துக்கு வெளியே தொங்கிய பூங்கொடி அவள் இதய வெப்பத்தைப் போக்க மெல்லக் காற்றில் ஆடி ஆடி ஆல வட்டம் போட்டும் அவள் வெப்பம் மட்டும் மாறவில்லை. அதை அதிகப்படுத்த இளைய பல்லவனும் பஞ்சணையை விட்டு எழுந்து அவளிருந்த இடத்துக்கு வந்து அவளுக்குப் பின்புறம் நின்று ஒரு கையைச் சாளரத்தின் மீதும் இன்னொரு கையை அவள் சிற்றிடையிலும் உலாவ விட்டான். அத்துடன் அவள் கன்னத்தை நோக்கித் தலை யைத் தாழ்த்தி, "காஞ்சனா, நேரம் ஓடுகிறது. ஐந்தாவது நாழிகை நாம் நமது பயணத்தைத் தொடங்க வேண்டும்" என்று மெள்ளச் சொன்னான்.

அந்தப் பயண விவரங்கள் தெரிந்த விஷயந்தான். திரும்பத் திரும்பச் சொல்லப்பட்டதுங்கூட. ஆனால் திரும்பத் திரும்பச் சொன்னாலும் சலிக்காத விஷயங்கள் உலகத்திலிருக்கின்றன அல்லவா? சிலவற்றை மறப்பதாலும் சிலவற்றைத் திரும்பத் திரும்ப நினைப்பதாலுமே மனித னுக்குத் துணிவும் திருப்தியும் ஏற்படுகிறது. இதை உணர்ந்து தானோ என்னமோ இளையபல்லவன் அந்த ஐந்தாவது நாழிகையை அவளுக்கு நினைப்பூட்டினான். ஆனால் அவள் நினைப்பு வேறாயிருந்தது. அந்த ஐந்தாவது நாழிகை புறப்பாடு தாங்களிருவரும் பிரியும் இறுதிப் புறப்பாடாக வுமிருக்கலாம் என்பதையே எண்ணி காஞ்சனாதேவி பதிலுக்குப் பெருமூச்செறிந்தாள். அந்தப் பெருமூச்சின் பொருளைப் புரிந்துகொண்ட இளையபல்லவன் சொன் னான்: "தேவி! பயப்படாதே. நாம் அத்தனை சுலபத்தில் பிரியமாட்டோம்" என்று.

அதைச் சொன்ன இளைய பல்லவனின் குரலிலிருந்த உறுதியைக் கண்ட காஞ்சனாதேவி அது உண்மை உறுதியா அல்லது தனக்குத் தைரியம் சொல்ல ஏற்பட்ட போலி

உறுதியா என்பதை நிர்ணயிக்கமாட்டாமல், "அதென்ன அத்தனை நிச்சயமாகச் சொல்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

"நிச்சயம் எதிலிருக்கிறது தேவி? பிரிவோம் என்பதில் மட்டும் இருக்கிறதா?" என்று வினவினான் இளைய பல்லவன் காதல் கரைபுரண்ட குரலில்.

"உள்ள அபாயம் பிரிவைத்தான் காட்டுகிறது" என்றாள் அவள் மெதுவாக.

"அந்த அபாயத்திலிருந்து நான் பலமுறை தப்ப வில்லையா? ஏன், நீதி மண்டபத்தில் மரணக் கூண்டி லிருந்து தப்பி வரவில்லையா? அப்பொழுதில்லாத புது அபாயம் இப்பொழுது எங்கிருந்து வந்துவிட்டது" என்றான் இளையபல்லவன்.

தர்க்க ரீதியில் அவன் பேச்சு சரியாகத்தானிருந்தது. ஆனால் உணர்ச்சிகளின் பீதிக்கு அது பதில் சொல்ல முடியவில்லை. ஆகவே காஞ்சனாதேவி சொன்னாள்: "என் மனத்திலென்னவோ சஞ்சலம் குடிகொண்டிருக்கிறது. வேதனை ஆட்கொண்டிருக்கிறது என் இதயத்தை" என்று.

வேதனையின் காரணத்தை அவன் புரிந்துகொண் டிருந்தான். தன்னிடத்தில் அவளுக்குள்ள காதல், தன் உயிரைப்பற்றி அவளுக்குள்ள பயம் இரண்டுமே வேதனைக் குக் காரணம் என்பதைப் புரிந்துகொண்ட இளைய பல்லவன், "தேவி! எனக்கு நன்றாகப் புரிகிறது. காதலின் தன்மையும் வன்மையும் அப்படிப்பட்டது" என்றான்.

"காதலின் தன்மையா?" காஞ்சனாதேவியின் இந்தக் கேள்வியில் அமுதம் கலந்திருந்தது.

"ஆம். தேவி! காதலென்பதை விஷயம் என்று வட மொழியில் அழைக்கிறார்கள்" என்று விளக்க முற்பட்டான் அவன்.

"அப்படியா?" அத்தனை வேதனையிலும் கேலி யிருந்தது அவள் குரலில்.

"ஆம் தேவி! விஷயம் என்று சொல்கிறார்கள். அது மட்டுமல்ல. விஷயத்துக்கும் விஷத்துக்கும் ஓர் எழுத்துத் தான் வித்தியாசமென்றும் சொல்கிறார்கள்."

"ஆம். ஓர் எழுத்துத்தானே வித்தியாசம்."

"ஆனால் விளைவில் பெரும் வித்தியாசமிருக்கிறது."

"எப்படி?"

"சாப்பிட்டால்தான் விஷம் மனிதனைக் கொல்லும். விஷயத்தை நினைத்தாலே போதும், மனிதன் உடல் உருகிப் போகிறான். வேதனைப்பட்டு இறப்பவர்களும் உண்டு. அத்தனை பயங்கரம் காதலின் நினைப்பு."

"இதை எனக்கு எதற்காகச் சொல்கிறீர்கள்?" என்று கேட்டு அவனை நோக்கித் திரும்பினாள் காஞ்சனாதேவி.

அவள் தோள்களை இரு கைகளாலும் பிடித்துக் கொண்டு அவன் சொன்னான்: "தேவி! நீ என்னை நினைந்து நினைந்து உருகக்கூடாது" என்று.

அவள் கண்களை வெட்கத்தால் நிலத்தில் தாழ்த்திக் கொண்டாள். "ஏன்?" என்று பவள இதழ்களிலிருந்து உதிர்ந்த சொல்லும் வெட்கத்தைப் பூசிக்கொண்டே வெளி வந்தது.

இளையபல்லவன் தனது குரலில் அன்பும் காதலும் கலந்தோடச் சொன்னான்: "நாம் ஒருவேளை இன்று பிரிந்தாலும் மீண்டும் கூடுவோம் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. அப்படிக் கூடும்போது உன் நிலை என் மனத்தைப் பிளக்கக் கூடாது. நீ சிந்தனையால் சிதைந்து உடல் உருக்குலைந்து போயிருந்தால் என் மனம் வெடித்து விடும். நான் உன்னைச் சந்திக்கும்போது இந்த எழில் உடலின் கவர்ச்சி, அஞ்சன விழிகளின் தீட்சண்யம், கபோலங்களின் பளபளப்பு அத்தனையும் மாறாதிருக்க வேண்டும். இன்று போலவே நீ அன்றுமிருக்க வேண்டும். புரிகிறதா?"

புரிந்தது அவளுக்கு. புரிந்ததால் அவனை நன்றாக நிமிர்ந்து நோக்கினாள். "நான் வாளை வீசுவேன். போரிடு வேன். இருப்பினும் நான் பெண், பேதை என் மனம் உறதி கொள்ள மறுக்கிறது" என்றாள் அவள்.

"தேவி! மனத்தை உறுதிப்படுத்திக்கொள். உனக்குத் தைரியம் சொல்லவும், என்னை நினைப்பில் வைத்துக் கொள்ள அடையாளமாக இந்தப் புறாவை உனக்குக் கொடுக்கவும் வந்தேன். அதற்காகவே அமீரிடமிருந்து இதை வாங்கினேன். அடுத்த சில நாழிகைகளின் நிகழ்ச்சி களைப் பற்றி நாம் எதுவும் சொல்ல முடியாது. நாம் பிரிந்தாலும் பிரியலாம், பிரியாவிட்டாலும் இல்லை. நான் மட்டுமென்ன, வண்டி சரியாக வளைக்கப்பட்டால் நீ கூட மாளலாம். அப்படிச் சாவதானால் வீரர்கள் குலத்தில் பிறந்தவர்களென்று உறுதியுடன் போரிட்டு மடிவோம். பிழைத்தால் வீரர் குலத்தின் மக்களாகச் சந்திப்போம்" என்று உறுதியும் வீரமும் நிரம்பிய சொற்களை உதிர்த்த இளையபல்லவன் அவள் முகவாய்க் கட்டையைத் தூக்கி அவள் கண்களை ஆழ்ந்து நோக்கி, "தேவி! நாம் பிரிவதா னாலும் மீண்டும் கூடு மட்டும் நினைவுச் சின்னமாக இந்தப் புறாவைக் கொடுத்திருக்கிறேன்" என்றான்.

பதிலுக்கு அத்தனை துன்பத்திலும் அவள் இளநகை புரிந்தாள். "உங்களை நினைத்திருக்கக் காட்டுப் புறாவைக் கொடுத்தீர்கள். உங்களுக்கு நான் என்ன தரட்டும்?" என்று கேட்டாள் அவள்.

"எதுவும் வேண்டாம் தேவி. நான் எங்கு இருந்தாலும் புறாவின் நினைப்பு எனக்கிருக்கும். இங்கு வந்ததும் வீட்டுப் புறா ஒன்றைக் கண்டேன். பிறகு காட்டுப் புறா ஒன்று கைக்கு வந்தது. இனி கடற் புறாவொன்றும் கப்பலில் பறக்கும்!" என்றான் இளையபல்லவன், ஆபத் தான நினைப்புகளை அவள் இதயத்திலிருந்து அகற்ற.

அவள் தனது கண்களை அகல விரித்தாள். "கடல் புறாவா!" என்றும் ஆச்சரியம் குரலில் ததும்ப வினவினாள்.

"ஆம் தேவி! இன்று நீ சினத்துக் கப்பலில் கடல்மீது பறந்து கொண்டிருப்பாயே?" என்றான் விஷமத்துடன் அந்த வாலிபன்.

அவள் உள்ள வேதனை அவன் அரவணைப்பில் மறைந்தது. அவள் இதழ்களிலும் விஷமம் தாண்டவ மாடியது. "வீட்டுப்புறா இருந்த இடத்தில் ஒரு வாலிபன் சாளரத்தின் மூலம் குதித்துத் திரையில் மறைந்து வேடிக்கை பார்த்தார். காட்டுப் புறாவைக் கையிலேந்தி இறக்கைகளை நீக்கி விரல்களால் துருவித் துருவிச் செய்திச் சுருளை எடுத்தார். கடல் புறாவை என்ன செய்யப் போகிறார் அவர்?" என்று கேட்டாள் அவள்.

அவன் கைகள் அவளைச் சுற்றிச் சென்றன. விழிகள் அவள் விழிகளைக் கூர்ந்து நோக்கின. "ஏன் கடல் புறாவுக்கு மட்டும் இறக்கைகள் இல்லையா?" என்று கேட்டான். அந்தச் சொற்கள் அளித்த ஆனந்தம், குரல் ஒலி கிளப்பிய வேட்கை இரண்டும் அவளை எங்கோ கொண்டு சென்றன. சொல்லிலும் செயலிலும் இணையற்ற கருணாகர பல்லவனின் காதலியாகத் தான் திகழ நேர்ந்ததைப் பெரும் பாக்கியமாக மதித்த அவள் இதயம் மீண்டும் உறுதி கொண்டதன்றி, ஒருவேளை கிழக்குக் கோட்டை வாசலில் வண்டி தடுக்கப்படாவிட்டால் கடற் கரையோரத்தில் அவனும் தானும் அக்கம் பக்கத்தில் நின்று போரிடலாம் என்ற நினைப்பும் அவளுக்கு மிகுந்த தைரியத்தை ஊட்டியது. துணிவு துளிர்த்ததன் விளைவாக அவனை ஏறெடுத்து நோக்கிய காஞ்சனாதேவி, "கடற் புறாவை நீங்கள் சோதிக்கும் காலம் அதிக தூரத்தில் இல்லை. அது சிறகடித்து எதிரிகளை வீழ்த்தும் காட்சியை

இன்றிரவு எட்டு நாழிகைக்குள் கடற்கரையில் பார்க்கப் போகிறீர்கள்" என்றாள்.

அவன் பதில் சொல்லவில்லை. சற்று மௌனமாக நின்றான். கடைசியாகப் பிரியாவிடை பெற்ற அவன், "வருகிறேன் தேவி! நாழிகைகள் ஓடிக்கொண்டு இருக் கின்றன. வண்டியும் சித்தமாகிவிடும். நானும் சித்தமா கிறேன்" என்று சொல்லி அவள் கைகளை மெல்ல நெறித்து விட்டுச் சென்றான்.

வண்டி புறப்படும் நேரம் வந்தது. நீர்க்குடங்களுடன் வண்டி தயாராக நின்றது. அதில் ஏற நின்றிருந்தவர்களை நோக்கி அநபாயன் சொன்னான்: "நமது பயங்கரப் பயணம் துவங்குகிறது. எச்சரிக்கையுடன் இருங்கள். அவரவர் பணியை அந்தந்தச் சமயத்தில் செய்யுங்கள். எதற்கும் அஞ்ச வேண்டாம். கடமையை நாம் செய்வோம்; பலன் ஆண்டவன் கரங்களிலிருக்கிறது."

இதைச் சொன்ன அவன் சிரம் தாழ்த்தி ஆண்ட வனைச் சில விநாடிகள் நினைத்தான். பிறகு அனைவரை யும் வண்டியிலேறி அவரவர் இடங்களை அடைய உத்தர விட்டான். அவரவர் அமர்ந்ததும் அவனும் அமர, பெரும் காளைகள் பூட்டப்பட்ட அந்த வண்டியும் திடுதிடுவென சக்கரங்கள் சப்திக்க, பாலூரின் வீதிகளில் புரண் டோடியது.

அப்படிப் புரண்டோடி ஆறாவது நாழிகையில் கிழக்குக் கோட்டை வாசலை வண்டி எட்டியதும் தூர இருந்த நிலையை நோக்கிய அமீரின் இதயம் படபடவென அடித்துக் கொண்டது. பெரும் பயம் புத்தியைச் சூழ்ந்து கொண்டது.



கலிங்கத்தின் பெரும் சாதிக் காளைகள் இரண்டு பூட்டப்பட்ட தனது வண்டியை அரை நடையாகவும் அரை ஓட்டமாகவும், மிகுந்த எச்சரிக்கையுடன் விட்டுக் கொண்டு வந்த அமீர், நான்காம் பிறைச்சந்திரன் உதயமா வதற்கு முந்திய ஆறாவது நாழிகையின் துவக்கத்தில் கிழக்குக் கோட்டை வாசலின் ஆரம்பப் பகுதியை அணுகி யதுமே கண்களை உயர்த்திச் சற்று தூரத்தே எதிரேயிருந்த நிலைமையை நோக்கி அச்சத்தால் இதயம் படபடக்கச் சில விநாடிகள் திணறியே போனான். சிறு வணிகர் வீதியி லிருந்த இல்லத்தை விட்டுப் புறப்படும் முன்பே வண்டி யின் ஏற்பாட்டைப் பலத்த முன் யோசனையுடன் செய்து முடித்திருந்த அந்த அரபு வர்த்தகனின் சிந்தனையின் ஒரு பகுதி, அச்சத்துக்கு ஏதும் இடமில்லையென வற்புறுத்தி னாலும், இன்னொரு பகுதி கண்ணுக்கெதிரேயிருந்த ஆபத்தை விளக்கி அச்சத்தின் அவசியத்தை வலியுறுத்தலா யிற்று. வாணிபப் பொதிகளை ஏற்றிச் செல்வதற்வதற்கா கவே நிர்மாணிக்கப்பட்டிருந்த அந்தப் பார வண்டியில் அசையக்கூட இடமில்லாத வண்ணம் பன்னிரண்டு நீர்க் குடங்களைத் திணித்திருந்த அமீர் அவற்றின் ஆறடி உயரத் தளவுக்குப் பக்கக் கழிகளைச் செருகியதன்றி, அவற்றுக்குப் பாதுகாப்பளிக்கும் பாவனையில் ஏராளமாக வைக் கோலையும் வாழை இலைச் சருகுகளையும் திணித்து அவை கழுத்தளவுவரை மறையும்படி செய்திருந்ததாலும், அவற்றில் ஆறு குடங்களில் காஞ்சனாதேவி, குணவர்மன்

இவர்களைத் தவிர கூலவாணிகன், சுங்க அதிகாரி, காஞ்சனாதேவியின் பணிப்பெண்கள் இருவர் ஆகியோரை ஒரு குடம் விட்டு இன்னொரு குடமாகப் பதுங்க வைத் திருந்ததாலும் அவர்களைப் பதுங்க வைத்த குடங்களின் கழுத்துக்குக் கீழே இரண்டொரு பெரும் துவாரங்களைச் செய்து மூச்சு விடவும் ஏற்பாடு செய்திருந்ததாலும், அச்சத் துக்கு எந்தவிதக் காரணமும் இல்லை. நீர் நிரம்பியிருந்த குடங்களைத் தவிர்த்து மனிதர்கள் பதுங்கியிருந்த குடங் களில் மூச்சுக் காற்றுக்காகத் துளைத்திருந்த துவாரங்கள் வைக்கோலின் மறைவிலும் வாழைச் சருகுகளின் மறை விலுமிருந்தபடியால் அவை இருப்பது யார் கண்ணுக்கும் புலப்படாமல் செய்திருந்தான் அமீர். கிழக்குக் கோட்டை வாசலைத் தாண்டிக் காஞ்சனாதேவி உண்டைவில் மூலம் எரியம்பு வீச நேர்ந்தால் அவள் இருந்த நீர்க்குடத்தின் மூடியை விலக்கும் நோக்கத்துடன் அவள் பதுங்கியிருந்த குடத்தை மட்டும் முன்னணியில் தன் சாட்டைக் கைக்குப் பக்கத்தில் வைத்திருந்தான் அவன். இரவில் செல்லும் இத் தகைய வண்டிகளில் வெளிச்சத்துக்கு இருபுறமும் பந்தங் கள் செருகுவது வழக்கமானாலும், வண்டியில் அதிக வெளிச்சமிருக்கக் கூடாது என்ற எண்ணத்தால் ஒரே ஒரு பந்தத்தை மட்டும் சாட்டை பிடித்திருந்த தனது வலது கைக்கு அருகேயிருந்த பெரும் கழியில் கட்டியிருந்தான். அப்படிப் பிணைத்திருந்த அந்தப் பந்தத்தில் துணியும் அவன் அதிகம் சுற்றாமல் மெல்லிய பந்தமாகவே அதை எரியவிட்டிருந்ததால் அது மிகக் குறைவான ஒளியையே வண்டியில் வீசியிருந்ததன் விளைவாக ஒரு குடத்துக்கும் இன்னொரு குடத்துக்கும் எந்தவித வித்தியாசமும் இல்லா திருந்ததோடு அந்தப் பந்தம் வண்டியின் முகப்பில் அமீரின் சாட்டைக் கரத்துக்குப் பக்கத்திலிருந்த காரணத் தால் காஞ்சனாதேவி சரேலென எரியம்பைக் கொளுத்தும் வண்ணம் அவளிருந்த குடத்துக்கு வெகு அருகாமையிலும்

அமைந்து கிடந்தது. இது தவிர குடங்களைக் கழுத்து வரையில் மறைத்த பெரும் வாழைச் சருகுகளைச் சின்னஞ் சிறு விசிறிகள் போல் பிரித்து ஆங்காங்கு வைத்திருந்ததால் அவை அந்தந்த இடங்களில் பந்தத்தின் வெளிச்சத்தைத் தடை செய்து குடங்களின்மீது பட்டை பட்டையாக இருட்டைப் பாய்ச்சியிருந்தது. இப்படிப் பல வழியிலும் மறைக்கப்பட்ட குடங்களின் மூடப்பட்ட வாய்கள் கூடச் சட்டென்று பார்வைக்குப் புலனாகாமலே இருந்தன. இத்தனை முன்னேற்பாடுகளைச் செய்த அமீர் இவற்றை யும் மீறிச் சோதனை நடந்தால் தான் நடத்த வேண்டிய வேலையை எண்ணித் தன் வயிற்றுப் பகுதியிலிருந்த கச்சையில் வரிசையாகப் பல குறுவாள்களையும் செருகிக் கொண்டிருந்தான்.

இந்த ஏற்பாடுகளைச் செய்து முடிக்கும் முன்பாகவே அநபாயனுக்கும் இளைய பல்லவனுக்கும் தனது அடிமை களின் வேடங்களை அணிவித்த அமீர் அவர்கள் இருவரை யும் முக்காடுகளை நன்றாக இழுத்து முகங்களை மறைத்துக் கொள்ளுமாறு வாள்கள் வெளியில் தெரியாத வண்ணம் அரபு நாட்டுப் பெரு அங்கிகளின் மடிப்புகளில் பதுக்கிப் பிடித்துக் கொள்ளுமாறும் எச்சரிக்கை செய்துவிட்டு, அவர்களிருவரையும் வண்டியின் பின்புறத்தில் உட்கார வைத்த பின்பே வண்டியை ஓட்ட முற்பட்டான். இந்த ஏற்பாடுகள் பரிபூரண திருப்தியையே ஆரம்பத்தில் அளித் திருந்தன அமீருக்கு. தன் வாணிபத்தை முதல் நாளே மற்றொரு வாணிகனுக்கு விற்று அவனிடமிருந்த விலைப் பொருளைப் பொற்காசுகளாகப் பெற்றுக்கொண்ட அமீர், அந்தப் பொற்காசுகளைத் தான் வழக்கமாக வைக்கும் பெட்டியில் வைத்துக்கூடக் கொண்டு வரவில்லை. நீர்க் குடங்களின் வண்டியில் பணப்பெட்டி தென்பட்டால் கேள்விக்கு இடமாகுமென்று கருதிய அமீர் பொற்காசு களை ஐந்தாறு துணிப்பைகளில் கட்டி நீர்க் குடங்களுக்கு

இடையிடையே இருந்த இடங்களில் வைத்து மேலே வைக்கோலைத் தூவி மறைத்திருந்தான். இப்படி ஒவ்வொரு காரியத்தையும் அணு அணுவாகக் கவனித்து ஆபத்தை எத்தனை தூரம் தவிர்க்க முடியுமோ அத்தனை தூரம் தவிர்த்து சந்தேகத்தை எவ்வளவு தூரம் விலக்க முடியுமோ அவ்வளவு தூரம் விலக்கியிருந்தான் அந்த அரபு நாட்டுச் சிறுவணிகன். அது மட்டுமின்றிச் சீனக் கப்பலுக்குத் தன் வீட்டிலிருந்தே நீர்க்குடங்கள் செல்வதை வலியுறுத்தும் பொருட்டுப் பகல்முதலே சீனக்கப்பல்களிரண்டிலிருந்தும் பல நீர்க்குடங்களை வரவழைத்துத் தனது வண்டிகள் இரண்டொன்றிலும் நீர் நிரம்பிய குடங்களை அந்தக் கப்பல்களுக்கு இரண்டு மூன்று முறை அனுப்பியும் இருந்தான். அப்படி அனுப்பிய ஒவ்வொரு வண்டியையும் கோதாவரிக்கரைக் குடிசைக்கு அனுப்பி சங்கமக் கலங்கலற்றிருந்த தெள்ளிய கோதாவரி நீரை அங்கிருந்தே நிரப்பிப் பிறகு வண்டிகளைத் தன் வீட்டுக்குக் கொண்டு வந்து வீட்டிலிருந்தே வண்டிகளைக் கடற்கரைக்கு அனுப்பி வைத்தான். அப்படி அனுப்பிய ஒவ்வொரு வண்டியிலும் வண்டியோட்டுபவனைத் தவிர பின்புறத்தில் இரு அடிமைகளையும் உட்கார வைத்து அனுப்பினான். கடைசியாக வரும் தனது வண்டியை யாரும் சந்தேகிக்கக் கூடாதென்பதற்காக முன்கூட்டியே இத்தகைய எச்சரிக்கை யுடன் ஏற்பாடுகளைச் செய்த அமீர், தனது வண்டிகள் பலவற்றின் சோதனை ஏற்கெனவே நடந்துவிட்டதையும் உணர்ந்திருந்தானாகையால் எப்படியும் இந்த வண்டிக்கு அதிகச் சோதனையிருக்காதென்ற துணிவுடனேயே வீட்டை விட்டுக் கிளம்பினான். அப்படித் துணிவைத் துணை கொண்டு கிழக்குக் கோட்டை வாசலைத் தூரத்திலிருந்து பார்த்த அமீரின் துணிவைப் பயம் எனும் அம்பு திடீ ரெனத் துளைத்தது. தூரத்தில் தெரிந்த காட்சியைக் கண்டதும் அவன் இதயம் பெரிதும் படபடக்கத் துவங்கியது.

சந்திரன் உதயமாக இன்னும் இரண்டு நாழிகைகள் இருந்ததால் இருள் சூழ்ந்து கிடந்த கடல் பிரதேசத்துக்கு வெளிச்சம் காட்டும் தூதன் போல் பெரும் பந்தங்களுடன் ஜாஜ்வல்லியமாகக் காட்சியளித்தது கிழக்குக் கோட்டை வாசல். கோட்டை வாயிலின் பக்கச் சுவர்களில் பொருத்தப் பட்டிருந்த பெரும் பந்தங்கள் மட்டுமின்றி யவன நாட்டு வெண்கலப் பெருவிளக்குகளும் தங்கள் தீ நாக்குகளைப் பெரிதாக நீட்டி ரத்த வெறி பிடித்த ராட்சதர்களைப் போல் காட்சியளித்தன. சாதாரணமாகப் பத்துப் பன்னி ரண்டு வீரர்களுக்கு மேல் காவலிருக்காத அந்தக் கோட்டை வாசலில் காவல் நான்கு பங்கு அதிகமாயிருந்ததால் காவல் வீரர்களின் புரவிகள் அணிவகுப்பட்டு ஒன்றை யொன்று பயங்கரமாய் உராய்ந்துகொண்டு நின்றன. வெறும் வாள்களையே ஏந்தி நிற்கும் காவல் வீரர்கள் மட்டுமின்றிப் பெரிய ஈட்டிகளைத் தாங்கிக்கொண்டு இருபது குதிரை வீரர்கள் கிழக்குக் கோட்டை வாசலின் கடலின் வழியை மறித்து நின்றுகொண்டிருந்தனர். சுமார் நாற்பதடி அகலமிருந்த அந்தக் கிழக்குக் கோட்டை வாசலின் இருபுறங்களிலும் புரவி வீரர்கள் இரட்டை வரிசையாக நிற்க வைக்கப் பட்டிருந்ததால் இடையே ஒரு சமயத்தில் ஒரு வண்டி மட்டுமே செல்ல மார்க்கமிருந்தது.

இந்த ஏற்பாடுகளைத் தூரத்தில் இருந்தே கவனித்த அமீர், காவலின் அமைப்பிலிருந்த முறையை நோக்கி தாங்கள் எத்தனை சாமர்த்தியமாக நடந்துகொண்டாலும் தப்புவது பிரம்மப்பிரயத்தனமென்ற தீர்மானத்துக்கு வந்த தால் அவன் அஞ்சா நெஞ்சமும் அஞ்சவே செய்தது. ஆகவே அவன் தலையை திருப்பாமலே சாட்டையைப் பின்புற நீர்க்குடமொன்றில் திருப்பித் தட்டி, "சற்றுக் கோட்டை வாசலைப் பாருங்கள்" என்றான். அந்தச் சொற்கள் காதில் விழுந்ததும் ஏக காலத்தில் இளைய பல்லவனும் அநபாயனும் சற்றுத் திரும்பிக் கோட்டை

வாசலைக் கவனித்தார்களானாலும் அநபாயன் மட்டுமே அமீருக்குப் பதில் சொல்லத் துவங்கி, "ஆம், காவல் கடுமையாகத்தானிருக்கிறது" என்று முணுமுணுத்தான்.

"வண்டி கோட்டை வாசலை நெருங்கியதும் நாற்புறமும் சூழப்படும். முன்னும் பின்னும் பக்கங்களிலும் காவல் நெருக்கமாக இருக்கிறது" என்று முன்னே வைத்த கண்ணைப் பின்புறம் திருப்பாமலே மெள்ள விளக்கினான் அமீர்.

"ஆம். சோதனை முடிந்து அவர்கள் வழி விட்டாலும் நாம் கோட்டை வாயிலைக் கடந்து நீர்க்கரைக்குச் செல்லும் பாதையிலிறங்குவது கஷ்டம். அந்தப் பாதையையும் அடைத்து நிற்கிறது படை" என்றான் அநபாயன்.

"சோதனையின்போதே சந்தேகம் வந்தால் என்ன செய்வது?" என்று மீண்டும் வினவினான் அமீர்.

"சோதனையின் போதும் காளைகளை அடியோடு நிறுத்தாதே. தாரைப் பாய்ச்சிக் காளைகளை அசைய விட்டு அவை பழக்கப்படாத முரட்டுக் காளைகளெனப் பாசாங்கு செய்துகொண்டிரு. வீரர்களுக்குச் சந்தேகம் ஏற்பட்டால் காளைகளை ஒரே முடுக்காக முடுக்கிப் பாய்ச்சலில் செல்லவிடு" என்றான் அநபாயன்.

"எதிரே சுவர்போல் மறைந்திருக்கும் குதிரை வீரர் வரிசையை என்ன செய்வது?" என்றான் அமீர் அச்சத்துடன்.

"வண்டியின் வேகம் வரிசையைப் பிளந்துவிடும். பிளவு கூடுவதற்குள் வண்டி பாதையில் இறங்கிவிடும். அடுத்த பொறுப்பு படைத் தலைவருடையது" என்று திட்டமாக அறிவித்தான் அநபாயன்.

மேற்கொண்டு எதுவும் பேசாமல் காளையை முடுக்கிய அமீர், உள்ளே அச்சமிருந்தாலும், வெளியே மிகுந்த அலட்சியத்துடன் வண்டியின் முகப்பில் சாட்டை

யும் கையுமாக அமர்ந்திருந்தான். ஜல்ஜல் என்று கழுத்துச் சலங்கைகள் சப்திக்க, கிழக்குக் கோட்டை வாசலின் சோதனைத் தளையை அடைந்துவிட்ட அமீரின் வண்டிக்கு முன்பாக சுமார் பத்து வண்டிகள் நின்றிருந்தனவாகையால் அமீரின் வண்டி முன்பிருந்த வண்டிகள் நகர நகர மெதுவாகவே நகர வேண்டியதாயிற்று. கோட்டை வாசலில் அன்று காவல் மட்டும் பலமல்ல, காவல் முறையிலும் புதுமையிருந்ததை கவனித்த அமீரின் சஞ்சலம் பன்மடங்கு அதிகமாயிருந்தது. சாதாரணமாக வரும் வண்டிகளை நான்கு வீரர்கள் மடக்குவார்கள், சுற்றி வந்து சோதனை செய்வார்கள். பிறகு போகலாம் என்று அனுமதிப்பார்கள். அந்த அனுமதி கிடைத்ததும் கடல் நீர்க்கரைக்குச் செல்லும் பாதையில் வண்டிகள் உருண்டோடும். இன்று அந்த முறை கையாளப்படவில்லை. வாயிலுக்குக் குறுக்கே பெரும் கயிறுகளைக் கொண்ட தளையிருந்தது. அந்தத் தளை நீக்கப்பட்டு ஒவ்வொரு வண்டியாகக் கோட்டை வாயிலுக்குள் அனுமதிக்கப்பட்டது. பிறகு தளை போடப் பட்டு, தளைக்கும் நீர்ப்பாதைக்கும் இடையே இருந்த உட்புறத்தில் சோதனை நடந்தது. அதன்பிறகு 'வழி விடு' என்று ஒரு வீரன் கூவியதும் நீர்க்கரைப் பாதையை அடைத்து நின்ற குதிரைப்படை வழி விட்டது. பிறகு வண்டி, பாதையில் சென்றது. இப்படி வண்டிகள் சென்று கொண்டிருந்த முறையைக் கண்ட அமீர், 'இனி அஞ்சிப் பயனில்லை, தலைக்குமேல் ஓடிய வெள்ளம் சாண் ஓடினால் என்ன முழம் ஓடினால் என்ன' என்ற முடிவுக்கு வந்தான்.

முன் வண்டிகள் மெள்ள மெள்ள நகர்ந்தன. தளைக் கயிறுகள் நீக்கப்பட்டு நீக்கப்பட்டு மீண்டும் கட்டப் பட்டன. 'வழி விடு' என்று வீரர்கள் போட்ட கூச்சல் மீண்டும் மீண்டும் கேட்டது. முன்னிருந்த ஒவ்வொரு வண்டியும் செல்லச் செல்ல அமீர் வண்டிச் சக்கரங்கள்

மெள்ள உருண்டனவே தவிர, அவன் இதயம் மட்டும் வேகத்தைக் குறைக்காமல் அதிகமாக ஓடத் துவங்கியது. முன் வண்டி சட்டென்று நின்ற சமயத்தில் மட்டும் இதயம் ஒரு விநாடி நின்றுவிட்டது போன்ற பிரமையும் அமீருக்கு அவ்வப்பொழுது ஏற்பட்டது. காவல் வீரர்கள் அமர்ந் திருந்த குதிரைகளின் கனைப்பும், அவை காலைத் தூக்கிச் சிலசமயம் தரையில் தட்டி அசைத்ததால் ஏற்பட்ட குளம்படிச் சத்தங்களும் அமீரின் இதயத்தையே தாக்கிக் கொண்டிருந்தன. அவ்வப்பொழுது பந்தங்களுக்குக் காவ லாளிகள் எண்ணெய் விட்டதால் ஏற்பட்ட 'சொய்' என்ற சத்தம் அமீரின் இதயத்தையே பந்தமாகவும் எண்ணத் தையே எண்ணெயாகவும் மாற்றி எரியவிட்டதால் அமீரின் உள்ளம் மட்டுமின்றி உடலும் வேகமாக எரியத் தொடங் கியது.

முன் வண்டிகள் மீண்டும் மீண்டும் நகர்ந்தன. அமீரின் வண்டிச் சக்கரங்கள் உருண்டு உருண்டு நின்றன. பின்னா லும் வண்டிகள் வந்துகொண்டிருந்தன. சில சமயங்களில் வெகு அருகில் வந்துவிட்ட பின் வண்டிமாடுகள் அமீர் வண்டியின் பின்புறத்தில் நீண்டு கிடந்த வைக்கோலை இழுத்துத் தின்னவும் தொடங்கின. அப்படி வைக்கோல் இழுக்கப்பட்ட சத்தம்கூடப் பயங்கரமாகத் தெரிந்தது, அந்தச் சூழ்நிலையில் அமீருக்கு. கடைசியாக எழுந்தது வீரர்களின் எச்சரிக்கை ஒலி. "உம். உள்ளே வா!" என்றான் புரவியில் அமர்ந்திருந்த காவல் வீரன் ஒருவன். அந்த ஆணையைத் தொடர்ந்து கயிறுத் தளை அவிழ்க் கப்பட்டதும் உள்ளே வண்டியை ஓட்டினான் அமீர். பின்னால் மீண்டும் தளை பூட்டப்பட்டதைக் கவனித் தான். முன்னால் கடலுக்குச் செல்லும் பாதையைச் சுவர் போல் மறித்து நின்ற புரவிக் காவற்படையையும் பார்த் தான். தனக்கு வெகு அருகில் பக்கவாட்டில் வாளை உருவிப் பிடித்த வண்ணம் இரு புரவிக் காவலர் எந்த

விநாடியிலும் தன் இதயத்தில் வாளைப் பாய்ச்சிவிடக் கூடிய வகையில் நின்றுவிட்டதையும் கவனித்தான். உள்ள நிலையை ஒரு விநாடியில் எடைபோட்ட அமீர் சாட்டை யால் கையை நெற்றிக்காக இருமுறை உயர்த்தி எதிரே யிருந்த வீரர் தலைவனை இருமுறை வணங்கினான். அவனிடம் தனக்குள்ள பரிச்சயத்தைக் காட்டப் புன்முறுவ லொன்றையும் முகத்தில் படரவிட்டுக் கொண்டான்.

அவன் புன்முறுவலை எதிரேயிருந்த காவலர் தலை வனும் கவனித்தானானாலும் அவன் இதழ்களில் பதிலுக்குப் புன்முறுவலேதும் விளையவில்லை. முக்கால் முகத்தைக் கவசத்தால் மூடியிருந்த அந்த வீரன் அமீரைக் கூர்ந்து ஒருமுறை நோக்கியபின்பு, தன் புரவியை நடத்திக் கொண்டு இருமுறை வண்டியை வலம் வந்தான். தன் வாளின் நுனியால் இரண்டொரு குடங்களைத் தட்டவும் செய்தான். குடங்களிரண்டும் நீர் நிரம்பியிருந்ததால் 'தட் தட்' என்று ஏற்பட்ட சத்தம் பெரும் அமுதமாக அமீரின் இதயத்தில் பாய்ந்தது. அதற்குமேல் அபாயம் நீங்கி விட்டதாக நினைத்த அமீர் சற்றுத் தைரியத்துடன் பெருமூச்சும் விட்டான். ஆனால் நீர்க்குடங்களின் சப்தங் களைக் கேட்ட காவலர் தலைவன் திருப்தியடைந்ததாகத் தெரியவில்லை. மீண்டும் ஒருமுறை வண்டியைச் சுற்றி வந்தான். இம்முறை பின்புறம் வந்ததும் அங்கு உட்கார்ந் திருந்த இரு அடிமைகளையும் நோக்கிவிட்டு, அவ்விருவரில் ஒருவரை, "யார் நீ?" என்று கேட்டு அடுத்தவிநாடி என்ன நடக்குமென்று மற்றவர்கள் யோசிக்குமுன்பே தன் வாளின் நுனியால் ஒருவனது முக்காட்டைச் சரேலெனத் தூக்கி னான். இளையபல்லவன் ஈட்டி விழிகள் காவலன் கண் களுடன் திடீரெனக் கலந்தன. கலந்த கண்கள் அதிர்ச்சி யடைந்தன. அந்த இருவரும் ஒருவரையொருவர் அந்த இடத்தில் எதிர்பார்க்கவேயில்லை.

# கடல் புறா



36. சாதனை

சாண்டில்யன்

அத்தியாயம் 36

# சாதனை

**பா**லூர்ப் பெருந்துறையின் கிழக்கோட்டை வாசல் காவலர் தலைவன் உடையில் மறைந்து புரவிமேல் ஆரோ கணித்து ராட்சத சொரூபமாய் விளங்கிய மன்னன் பீமனுடைய பெரு விழிகளைக் கண்டதால் கருணாகர பல்லவனும், நீர்க்குடங்கள் நிரம்பிய பின்புற வண்டியில் அடிமை வேடத்தில் இளையபல்லவன் காட்சியளித்ததால் தென் கலிங்கத்து பீமனும் திகைப்பின் எல்லையை ஒரே சமயத்தில் அடைந்தார்களானாலும், அந்தத் திகைப்பு பீமனைவிட கருணாகர பல்லவனுக்கே அதிகமாய் இருந்தது. தன் கைவசமிருந்து பறந்துவிட்ட பறவைகள் தப்பும் ஒரே மார்க்கம் கிழக்குக் கோட்டை வாசல்தான் என்பதைச் சந்தேகமறத் தீர்மானித்துக் கொண்டதாலும், அப்படித் தப்புவதானால் அவர்கள் சந்திரன் உதயமாகு முன்புள்ள இருட்டிலேயே தப்ப வேண்டுமென்பதையும் ஊகித்துக் கொண்டதாலும், காவலரையும் நம்பாமல் எதிரிகள் எப்படி வருவார்களென்பதை எதிர்பார்த்த வண்ணம் காவலர் தலைவன் உடையணிந்து தானே வண்டிகளை எட்டு நாழிகைகள் வரை பரிசோதிப்பதென முடிவு கட்டிக் காவல் புரிந்த தென்கலிங்கத்துக் காவலனுக்கு இளையபல்லவனைக் கண்டதும் அதிர்ச்சி ஏற்பட்டாலும் முன்கூட்டி எதிர்பார்த்த காரணத்தால் அதிர்ச்சி சற்று குறைவாக இருந்தது.

ஆனால் தங்களைப் பிடிக்க பீமன் காவலன் உடையணிந்து காவல் புரியவும் முனைவானென்பதைச் சற்றும் எதிர்பாராத இளையபல்லவன் அவனைத் தன் எதிரே

கண்டதும் அளவுக்கு மீறிய வியப்பும் அதிர்ச்சியுமே அடைந்தான். அதுமட்டுமல்ல. இரண்டு தடவை வண்டியைச் சுற்றி வரும்வரை பீமனை அமீர் எப்படி அடையாளம் கண்டுகொள்ளாமல் இருந்தான் என்பதும் சட்டென்று புரியாது போகவே அதிர்ச்சி சற்று எல்லை கடந்ததாகவே இருந்தது. ஆனால் அடுத்த வினாடி பீமன் தலையில் யவனர்களின் உலோகக் கவசத்தை அணிந்திருந்ததையும் அதன் முகப்பு மூடியை முகத்தை முக்கால் வாசி மறைக்கும்படி இழுத்துத் தாழ்த்தியிருந்ததால் நேர்ப் பார்வைக்கு முகத்தின் கீழ்ப்பாகம் மட்டுமே தெரியுமாதலால் யாரும் பீமனைச் சட்டென்று புரிந்துகொள்ள முடியாதென்பதையும் உணர்ந்துகொண்ட இளைய பல்லவன், ஆபத்தான அந்தச் சமயத்திலும், அதிர்ச்சி மனத்தைக் கவ்விய அந்த நேரத்திலும், தென் கலிங்கத்து மன்னன் திறனை மனத்துக்குள் பாராட்டவே செய்தான். பீமன் புரவிமேலிருந்து தன்னைக் கீழ்ப்புறம் கவனித்ததாலும் தானும் திடீரெனத் தலையைத் தூக்கியதாலுமே பீமனை யாரெனத் தான் புரிந்துகொள்ள முடிந்ததென்பதைச் சந்தேகமற உணர்ந்த இளையபல்லவன் சரேலெனத் தன் வாளை வெகு வேகமாக உறையிலிருந்து உருவினான். அந்தச் சமயத்தில் மட்டும் பீமன் ஆணவத்துக்கு இடங் கொடுக்காமல் நடந்துகொண்டிருந்தால் அடுத்த நாள் உதயத்தை அந்த வண்டியிலிருந்த யாரும் பார்த்திருக்க மாட்டார்கள்.

ஆனால் இரத்தத்தில் இயற்கையாக ஊறிவிட்ட மமதை பீமனைப் பலமாக நகைக்கச் செய்தது. முதலில் நகைத்தவன் அத்துடன் நிற்காமல் காவல் பலத்தால் ஏற்பட்ட துணிவாலும், அசட்டையாலும் உடனே நடவடிக்கை துவங்காமல், “அடிமை வேடத்தில் படைத் தலைவரா?” என்று இரைந்து கூறி இடிஇடியென இன்னொரு முறையும் நகைத்தான். மூன்றாம் முறை அவன் நகைக்கவில்லை.

காளைகள் கனவேகத்தில் திடீரென எதிரேயிருந்த குதிரைப் படை வரிசையை நோக்கிப் பாய்ந்தன. அடுத்த விநாடி அந்தக் கோட்டை வாயிலைப் பெரும் குழப்பம் சூழ்ந்துகொண்டது.

சிரிப்பினால் விளைந்த விபரீதங்கள் பல. புராணங்களில் அத்தாட்சி அவற்றுக்கு நிரம்ப உண்டு. அன்று திரௌபதி சிரித்ததால் விளைந்தது மகாபாரதம். இன்று பீமன் சிரித்ததால் விளைந்தது வேறொரு விபரீதம். கலிங்கத்தின் பிற்கால அவலநிலைக்கு அன்றே அடிகோலியது பீமன் சிரிப்பு. எந்த விநாடியிலும் தாங்கள் வளைக்கப் படலாமென்பதை அறிந்து இந்திரியங்களை ஊசி முனையில் நிறுத்திக்கொண்டிருந்த அமீர் பின்னால் திடீரென ஏற்பட்ட சிரிப்பைக் கேட்டதும் தன் இடையிலிருந்த குறுவாள்களை மின்னல் வேகத்தில் எடுத்து விர்விர்ரென்று எதிரே வழிமறித்து நின்ற குதிரை வீரர்கள் மீது வீசிவிட்டு அதேசமயத்தில் சாட்டையையும் பளீர் பளீரெனக் காளைகளின் முதுகில் வெகு வேகமாகத் தாக்கினான்.

எண்ணிக்கையின் அதிகத்தாலும், காவலை யாரும் பிளக்க முடியாதென்ற சித்தத்தாலும் பலத்த எச்சரிக்கையிலும் சிறிது அசிரத்தையைக் கலந்துகொண்ட குதிரை வீரர் வரிசை, கண்ணிமைக்கும் வேகத்தில் அமீர் வீசிய குறுவாள்களால் சட்டென்று பிளவு கொடுத்தது. புரவிகளிலிருந்து சட்டென்று நிலத்தில் மூன்று வீரர்கள் விழுவதற்கும் குறுவாளால் தாக்கப்பட்ட புரவியொன்று வீரிட்டுக் குறுக்கே ஓடி வரிசையைக் கலைப்பதற்கும் வண்டிக் காளைகள் திடீரென வாயு வேகத்தில் பறப்பதற்கும் அவகாசம் சரியாக இருக்கவே எதிர்வரிசை மின்னல் வேகத்தில் பிளந்தது.

அப்படிப் புரவிகள் வரிசை பிளந்த அதே விநாடியில், "மடக்குங்கள் வண்டியை" என்று பிரம்மாண்டமாக எழுந்த பீமன் கூச்சல் அந்தக் கோட்டைப் பிரதேசத்தில்

பலமாக எதிரொலி செய்யவே இருபது முப்பது வீரர்கள் வாள்களுடனும், ஈட்டிகளுடனும் வண்டியின் பின்புறம் கனவேகத்தில் நெருங்கினார்கள். வேல்கள் வண்டியை நோக்கிப் பறந்தன. ஆனால் வண்டி, வேல்களைவிட வேக மாகப் பாதையில் பறந்தது. காளைகளைவிடப் புரவிகள் வேகம் வாய்ந்தவைதான். காவல் செய்த புரவிப் படைக்குச் சுதந்திரம் இருந்தால். அவை அந்தக் காளைமாட்டு நீர்க் குட வண்டியைத் துரத்தி கணநேரத்தில் மடக்கியிருக்க முடியும். ஆனால் முடியாத ஒரு பெருந்தடை அவர்களுக்கு எதிரே நின்றது. சோழ நாட்டு வீரம் எப்படியிருக்கும் என்பதை அங்கே அன்று கலிங்க வீரர்கள் கண்டார்கள். அமீர் மூன்று புரவி வீரர்களைத் திடீரெனத் தன் குறுவாள்களுக்கும் பலி கொடுத்துக் குதிரையொன்றின் வயிற்றிலும் கத்தி எரிந்து குழப்பத்தை விளைவித்துப் புரவிப் படையைப் பிளந்து ஊடுருவியதும் வண்டி கோட்டை வாசலின் உயரத்திலிருந்து கனவேகமாகச் சரிவுப் பாதையில் பாய்ந்தது. கோட்டை வாசலின் முகப்பி லிருந்து கடற்கரை மணலில் இறங்கிய அந்தப் பாதையின் ஆரம்பம் வந்ததும் சரேலெனக் கீழே குதித்த இளைய பல்லவன் தன் வாளை உருவிக்கொண்டு எதிரே வந்த புரவிப்படையைத் தேக்கினான்.

அமீர் விளைத்த குழப்பத்தின் விளைவாக அணி வகுத்து வரமுடியாமல் தாறுமாறாக வந்த புரவிப் படை யின் முகப்பில் வந்த வீரனொருவன் புரவியின் வயிற்றில் கண்ணிமைக்கும் நேரத்தில் தன் வாளைப் பாய்ச்சி இழுத்த கருணாகர பல்லவன் மல்லாந்து அந்தக் குதிரையிலிருந்து விழுந்த வீரனின் கழுத்திலும் கத்தியைப் பாய்ச்சிவிட்டு அவன் கையிலிருந்த வேலை எடுத்து எதிரே வந்த நாலைந்து புரவி வீரர்களில் ஒருவன்மீது வீசினான். வேலை நேராக மார்பில் தாங்கி மாண்டு விழுந்த அந்த வீரனின் குதிரைமீது ஒரே தாவாகத் தாவி ஏறிய சோழர் படைத்

தலைவன் குதிரையைக் கன வேகத்துடன் அப்புறமும் இப்புறமும் திருப்பியும் தன் நீண்ட வாளை மின்னல் வேகத்தில் சுழற்றியும் வண்டியைப் பின்பற்ற முயன்ற புரவி வீரர்களைத் தேக்கினான்.

அமீரின் வண்டி திடீரென முன்னோக்கிப் பாய்ந்து சென்றுவிட்டதாலும், தன் ஆணைப்படி காவல் வீரர்கள் வண்டியைத் தொடர முற்பட்டதாலும் பின்னால் தங்க நேர்ந்த பீமன் தன் கண்ணெதிரே நடந்து கொண்டிருந்த வீர ஜாலத்தைக் கண்டு நம்ப முடியாமல் வியப்பின் வசப் பட்டு, குதிரையில் அசையாமல் சில விநாடிகள் உட்கார்ந்து விட்டான். அமீரின் வண்டி திடீரெனப் பாய்ந்த வேகம், புரவிப் படை வரிசையில் மூன்று வீரர்கள் திடீரென உருண்டு மாண்டது, வரிசை பிளந்து வண்டி யோடியது, இத்தனையும் பீமனுக்கு வியப்பை அளித்த தென்றால், இளையபல்லவன் வண்டியிலிருந்து குதித்துக் குதிரையொன்றை மாய்த்துத் தன் வீரர்களைக் கோட்டை வாசல் முகப்பிலேயே தேக்கியதன்றி, தன் காவல் வீரனொருவனின் புரவிமீதும் தாவி வாளைச் சுழற்றிக் குதிரையைத் திருப்பி வளைந்து வளைந்து போரிடவும் முற்பட்டது ஆச்சரியத்தின் எல்லையையும் தாண்டி அவனைக் கொண்டு சென்றது. அதன் வசப்பட்ட பீமன் அவசியமான நாழிகைக்கு அதிகமாகவே தன் வீரர்கள் தேக்கப்பட்டு விட்டதைக்கூட நினைத்துப் பார்க்கச் சக்தியற்றவனாய் இளையபல்லவனின் துணிவை நினைத்து மலைத்து நின்றான்.

அந்த நினைப்பும், நினைப்பினால் ஏற்பட்ட மலைப்பும் சில விநாடிகள்தான் நின்றன. ஆனால் அந்த விநாடிக்குள் நிகழ்ந்த விபரீதம் கணக்கிட முடியாது. புரவிமேல் ஆரோ கணித்து வாளை வீசிக்கொண்டு கால ருத்திரன் போல் சுழன்ற இளையபல்லவன் நாலைந்து வீரர்களை மாய்த்து விட்டதன்றி, தனது புரவியைக் கோட்டை வாயிலின்

குறுக்கே வடக்கும் தெற்குமாக ஓடவிட்டு, புரவிப் படையினர் யாரும் அருகே வர முடியாதபடி தடுத்து நின்றான். அப்படி நின்ற சமயத்தில் தற்காலிகமாகத் தனக்கு ஏற்பட்ட வெற்றியைக் கண்டு பெருமிதமும் அந்த வெற்றியின் விளைவாக அநபாயன் காஞ்சனாதேவி முதலியோர் தப்பிவிட முடியும் என்ற நினைப்பால் மன ஆறுதலும் கொண்டான் இளையபல்லவன். அந்த மன ஆறுதலுடன் தன் நிலையும் புரிந்தே இருந்தது அவனுக்கு. எதிரே வரிசை வரிசையாக வந்து கொண்டிருந்த வீரர் களுக்குத் தான் பலியாக அதிக நேரமாகாது என்பதை உணர்ந்துகொண்ட கருணாகர பல்லவன், அந்த உணர்ச்சி யின் விளைவாகச் சற்றும் கலவரப்படாமல் மிகுந்த வேகத்துடனும் ஆனால் நிதானத்துடனும் போரிட்டான். தன் உள்ளத்தைக் கவர்ந்து நின்ற காஞ்சனாதேவியும் அநபாயனும் தப்புவதற்கும், தான் முதல் பலியாவதானால், எதிரிகளைப் பெரும் பலிகொடுத்தே சாவதென்ற முடி வுடன் மிக உக்கிரமாகப் போரில் இறங்கிய இளைய பல்லவன், எதிர்நோக்கி வந்த புரவி வீரர்களின் நால்வர் வாள்களைத் தன் வாளால் மிக வேகமாகத் தடுத்தான். அப்படித் தடுத்தும் திடீரெனக் குதிரையை முன் செலுத்தி இரண்டொருவர் மார்புகளில் வாளைப் பாய்ச்சி இழுத்தும் பலி கொடுத்து மெள்ள மெள்ளப் பின்னடைந்தான்.

எதிரேயிருந்த வீரர்கள் மீண்டும் மீண்டும் பலியான தால் அவர்கள் பிரிந்து பக்கவாட்டிலும் வரத் தொடங்கி னார்கள். "உம்! சூழ்ந்து கொள்ளுங்கள் அவனை" என்று தூரத்திலிருந்து கூவிய பீமனின் உத்தரவைத் தொடர்ந்து நாற்புறத்திலும் வீரர் நெருங்க முற்படவே, தன் காலம் நெருங்கிவிட்டதென்ற முடிவுக்கு வந்தான் இளைய பல்லவன். அவன் வாளைச் சுழற்றிச் சுழற்றிக் குதிரை யையும் சுழற்றிப் போரிடப் போரிட எதிரிகளும் அவனை நாற்புறமும் சூழ்ந்தார்கள். அதே சமயத்தில் பீமன்

உத்தரவுப்படி மற்றொரு பிரிவு அவனைப் பக்கவாட்டில் தாண்டி அமீரின் வண்டியையும் மிக வேகமாகத் துரத்தியது. அடுத்த விநாடி தன் கழுத்திலிருந்த கொம்பை எடுத்துப் பீமன் மும்முறை ஊதினான்.

அந்த ஊதலால் கடற்கரைப் பிராந்தியமே திடீரென உயிர்பெற்றுத் துடித்தது. அந்தக் கொம்பின் ஒலியால் தூரத்தே சுங்கச் சாவடியிலிருந்த வீரர்கள் பலர் சண்டை நடக்கும் இடத்தை நோக்கி விரைந்து கொண்டிருந்தார்கள். வாள்களின் ஒலியினால், இளையபல்லவனின் வாளால் மாண்ட குதிரைகளின் ஓலத்தாலும் அந்தக் கடற்கரை மிகப் பயங்கரமாக எதிரொலி செய்தது. எதிர்பாராத சண்டை ஏற்பட்டதால் படகிலிருந்து மூட்டைகளைத் தூக்கிச் சுங்கச் சாவடிக்குச் சென்றுகொண்டிருந்த பணியாட்கள் மூட்டைகளைக் கீழே போட்டுக் கலவரப்பட்டு ஓடினார்கள்.

இந்தக் குழப்பத்தில் இளையபல்லவன் நிலை விநாடிக்கு விநாடி அபாயமாகிக் கொண்டிருந்தது. வெகு வேகமாக வாளைச் சுழற்றிப் போரிட்ட போதிலும் எதிரிகளின் வாள்கள் விளைவித்த காயங்கள் பலவற்றால் அவன் உடலில் குருதி புறப்பட்டு உடையை நனைத்திருந்தது. அவன் புரவியும் காவல் வீரனொருவனின் வேல் வீச்சால் மாண்டுவிடவே அது சாயுமுன்பு நிலத்தில் குதித்த இளையபல்லவன் நிலத்தில் நின்றபடியே போரிட்டான். அந்த நிலையில் நான்கு புரவிகள் அவனை நோக்கிப் பாய்ந்து வந்தன. அவற்றிடம் துவைபடாதிருக்கப் பின்னோக்கிச் சில அடிகள் ஓடி மீண்டும் போரிடத் திரும்பினான் இளையபல்லவன். அதே விநாடியில் பின்புறத்திலிருந்தும் பெருத்த அபாயம் வந்தது அவனுக்கு. குதிரை வீரர்கள் இளையபல்லவனையும் தாண்டி வண்டியைத் தொடர்ந்ததால் அமீர் காஞ்சனாதேவி பதுங்கியிருந்த நீர்க்குடத்தின் மூடியை நீக்கிவிடவே அநபாயன் உத்தரவுப்படி எரியம்பை

ஆகாயத்தில் வீசினாள் காஞ்சனாதேவி. ஆக்னேயாஸ்திரம் போல் வானவீதியில் இருளைக் கிழித்துக்கொண்டு சென்ற அந்த எரியம்பின் மர்மம் அறியாத குதிரை வீரர்கள் திடீரெனப் பேராபத்தில் சிக்கினார்கள். எரியம்பின் அடையாளத்தைக் கண்டதும் குதிரைச்சாலைத் தலைவன் முன்னேற்பாட்டின்படி தயாராக வைத்திருந்த முரட்டு அரபுப் புரவிகளின் தளைகளைப் பல ஆட்களைக் கொண்டு ஒரே சமயத்தில் தரித்துவிடவே, கிழக்குக் கோட்டை வாசலுக்கு அடியிலிருந்த கடற்கரை மணலில் இருபது வெறி பிடித்த புரவிகள் வாயு வேகத்தில் தாறு மாறாகப் பறக்கத் தொடங்கியதால் பயங்கரமான பெரும் குழப்பம் அந்தப் பிராந்தியத்தில் ஏற்படவே செய்தது.

அசாயத்தியமான வேகத்துடனும், திடீர் திடீரென கால்களைத் தரையில் உதைத்து மணலைக் கிளப்பிக் கொண்டும் பயங்கரமான விதவிதமான கனைப்புகளுடன் அந்த உயர்ந்த சாதி அரபுப் புரவிகள் குறுக்கே ஓடியதால் வண்டியைத் துரத்திய புரவி வீரர்கள் தடுக்கப்பட்டனர். பழக்கப்படுத்தப்படாத அந்த அரபுப் புரவிகள் மிகுந்த வேகத்துடன் அப்புறமும் இப்புறமும் அம்புகள்போல் பாய்ந்து பாய்ந்து திரிந்தன. சில புரவிகள் குதிரை வீரர்களின் குதிரைகளையும் தாண்டி எழும்பியதால் அவற்றில் ஆரோகணித்திருந்தவர்கள் மணலில் புரண்டார்கள். மணலில் புரண்ட சிலர் சில புரவிகளின் குளம்புகளில் சிக்குண்டு கதறினார்கள். அந்தப் பயங்கரப் புரவிகள் பழக்கப்பட்ட படைப் புரவிகளை உதைத்தன; கடித்தன. திடீர் திடீரெனத் திரும்பித் திரும்பி ஓடின. மீண்டும் திரும்பித் திரும்பிப் பாய்ந்து வந்தன. சுதந்திரமாகத் தாங்கள் திரிந்த அரபுப் பாலைவன ராஜ்யத்தை இங்கு ஸ்தாபித்தன.

புரவி வீரர்களுடன் போரிட்டுக் கொண்டு பின்னுக்கு நகர்ந்த இளையபல்லவன் ஒருமுறை பின்னுக்குக்

கண்ணை ஓட்டி அங்கு நிகழ்ந்த பயங்கரத்தைக் கண்டான். கண்டு வியந்தானா! அஞ்சினானா! அவனுக்கே புரிய வில்லை அவன் உணர்ச்சி! புரவிகள் இருபதை விட்டுப் பின்தொடரும் படையை எப்படி மடக்க முடியும் என்று ஆரம்பத்தில் சந்தேகித்த இளையபல்லவன், அந்தப் புரவிகளின் வேகத்தாலும் முரட்டுத்தனத்தாலும் நிகழ்ந்த சேதத்தைக் கண்டு வியக்கவே செய்தான். அந்த வியப்பில் ஒரு வருத்தமும் எழுந்தது அவன் உள்ளத்தில்.

தானும் மெள்ளப் போரிட்டுக் கொண்டு பின்னால் வந்துவிட்டாலும் தான் தப்பும் மார்க்கத்தை அந்தப் புரவி கள் அடியோடு அடைத்துவிட்டதை எண்ணி வருந்தினான். பின்னால் சென்றால் அரபுப் புரவிகள் மிதித்துவிடும். முன் னால் சென்றால் வீரர்கள் அழித்துவிடுவார்கள். எப்படியும் மரணம் நிச்சயம் என்ற முடிவுக்கு வந்த இளையபல்ல வனின் இதயத்தில் சந்துஷ்டியும் நிலவியது. "எப்படியும் அநபாயனும் காஞ்சனாதேவியும் தப்பிவிட்டார்கள். இது பெரும் சாதனை. என் சாதனை" என்று தன்னைப் பாராட்டிக் கொண்டு மரணத்தை வரவேற்க வெறியுடன் போரிட முற்பட்டு, தன் வாளை வெகு வேகமாகச் சுழற்றி முன்னேறி, சுற்றிலும் சூழ்ந்து வந்த வீரர் கூட்டத்தில் புகுந்தான். அந்தத் தருணத்தில் மரணமும் அவனை வரவேற்க முற்பட்டிருக்க வேண்டும். இல்லாவிட்டால் பின்புறம் முரட்டு அரபு நாட்டுப் புரவிகள் நான்கு அவனை நோக்கி ஏன் பாய்ந்து வர வேண்டும்?

அவை மட்டுமா பாய்ந்து வந்தன? இல்லை, இல்லை. பீமன் சற்றுத் தூரத்திலிருந்து இம்மி பிசகாமல் குறிவைத்து எறிந்த வேலொன்றும் அவன் கழுத்தை நோக்கிப் பறந்து வந்தது.

அத்தியாயம் 37

# பிரிவா, முடிவா?

தூரத்தே புரண்டு புரண்டு வந்து தரையில் மோதிய கடலலைகளைவிடப் பெரும் கனைப்புகளுடனும் வேகத்துடனும் தன்னைப் பின்புறத்தில் மோதப் பாய்ந்து வந்த முரட்டு அரபுப் புரவிகளைப் பார்க்கச் சற்றுக் கண்ணைப் பின்புறம் திருப்பிய இளையபல்லவன், முன்புற எச்சரிக்கையை இழந்தது அரை வினாடியே என்றாலும், அந்த அரை விநாடிக்குள் வெகு லாகவமாக குறிவைத்துப் பீமன் எறிந்த பெரும் வேல் அவன் கழுத்தை மின்னல் போல் தடவி உராய்ந்து தோலையும் ஓரளவு உரித்துச் சென்றதால் மற்றக் காயங்களைவிட அந்தக் காயத்திலிருந்து குருதி பலமாகப் பிரவாகிக்கத் தொடங்கியது. வேலெறிவதில் குறி தவறாதவன் எனப் பிரசித்தமுடைய தென் கலிங்கத்துப் பீமனின் வேல் அன்றும் குறி தவறாமல் இளையபல்லவன் கழுத்தை ஊடுருவத்தான் வந்ததென்றாலும், சோழர் படைத் தலைவன் தலைவிதியும் கலிங்கத்தின் பிற்காலக் கதியும் அவன் உயிரை மயிரிழையில் காக்கவே செய்தன. இளையபல்லவன் போராட்டத்திலேயே இருந்திருந்தால் அந்த வேலே அவனை மாய்த்திருக்கும். ஆனால் திடீரெனப் பின்புறத்தில் புரவிகளின் சத்தத்தைக் கேட்டுத் திரும்பி விட்டதாலும், மீண்டும் அவன் கழுத்தைத் திருப்பி எதிரிகளை நோக்கு முன்பு வெகு வேகத்துடன் புரவியொன்றும் அவனை முட்டியதால் அவன் உடல் சிறிது நகர்ந்துவிட்டதாலும் பீமனின் வேல் அவன் உயிரை உறிஞ்ச சக்தியற்றதாயிற்று. இருப்பிலும் அவன் வேலைவிட்ப் பயங்கரமாகப் பாய்ந்து வந்தன பின்புறத்தில் அரபுப் புரவிகள். எதிரிகள் மீண்டும் அவனைச் சுற்றி வளைத்துத் தாக்கினார்கள்.

மனித வாழ்க்கையில் சில சந்தர்ப்பங்களில் அபாயமே பெரும் உதவியாக மாறத்தான் செய்கிறது. இளையபல்லவன்

அந்தச் சமயத்திலிருந்த அபாயநிலையில் பின்னால் வந்த புரவிகள் விளைவித்த அபாயம் ஓரளவு நன்மையே விளை வித்தது. கலிங்க வீரர்களுக்கும் இளையபல்லவனுக்கும் எந்தவித வித்தியாசத்தையும் எட்டாத அந்த முரட்டுப் புரவிகள் இளைய பல்லவனை மட்டுமின்றி அவனைச் சூழ்ந்து வந்த கலிங்க வீரர்மீதும் பாய்ந்ததால் வீரர் படை அவனைச் சூழ முடியாமல் பின்னடையவே நாற்புறத்தி லும் சுழன்று போரிட அவசியமில்லாமல் எதிரிகளை நேர் முகமாகவே வாளால் தடுத்தும் வீழ்த்தியும் போரிட்டான் சோழர் படைத் தலைவன். அந்தப் போரும் சில விநாடி களே நிகழ்ந்தன. புரவிகளின் பாய்ச்சலுக்கும் கடிக்கும் உதைக்கும் அஞ்சிய கலிங்கக் காவல் வீரர்கள் சில அடிகள் பின்வாங்கியது இளைய பல்லவனுக்கு ஓரளவு சௌகரிய மாயிருந்தாலும் அவன் அந்தச் சமயத்தில் மரண வேதனை யைப் பரிபூரணமாக அனுபவித்தான். புரவிகள் அவனைச் சில சமயம் உராய்ந்து சென்றபோது, ஏற்கெனவே பல காயங்களிலிருந்து ரத்தம் பெருகியதால் சோகப்பட்டிருந்த அவன் உடல் தள்ளாடியது. புரவிகள் கடல் மணலைப் பின்புறக் காலால் வாரி வாரியடித்ததால் மணலிலிருந்த சிறுசிறு கற்கள் சுள்சுள்ளென்று அவன் தேகத்தில் பல இடங்களிலும் தாக்கின. வீசப்பட்ட மணல் அங்கியணிந்த பாகங்களைப் பாதிக்காவிட்டாலும் குருதி பாய்ந்த கழுத் தின் பின்புறத்திலும் சதை பிய்ந்த பக்கப் பகுதிகளிலும் தாக்கி, பதிந்து, மிகுந்த எரிச்சலையும் சொல்லவொண்ணா வேதனையையும் விளைவித்தன. திடீர் திடீரெனக் கிடைத்த இரண்டொரு உதைகள் அயராத அவன் கால் களையும் அயர வைத்தன. இத்தனையையும் சமாளித்துக் கொண்டு எதிரிகளைத் தேக்கி நின்ற இளைய பல்லவன், காவல் வீரர்களில் சிலர் மாண்டுவிட்டாலும் அவருக்குப் பின்புறத்திலிருந்து மீண்டும் இருபது முப்பது புரவிப் படை வீரர்கள் உதவிக்கு வருவதைக் கவனித்தான். துவண்ட தன் கால்களையும் சற்றே மயக்கம் வந்துகொண்டிருந்த தனது

நிலையையும் எண்ணினான். தனக்கு முடிவு நெருங்கிக் கொண்டிருக்கிறதென்பதைச் சந்தேகமற உணர்ந்தான்.

மரண உணர்ச்சி மனிதனுக்கு எப்பொழுதும் எதிர் பாராத பலத்தையும் வேகத்தையும் அளிக்கும் தன்மை வாய்ந்ததால், மரணத்தை எதிர்நோக்கி நின்ற அந்தக் சமயத்தில் இளையபல்லவனுக்கு இணையற்ற பலத்தையும் அளித்தது. அதைத்தவிர அந்தச்சமயத்தில் புரவி வீரர் அணி முகப்பில் தன் எதிரே ராட்சதன்போல் வந்துவிட்ட பீமன், "வெட்டிப் போடுங்கள் அவனை. உங்களில் நால்வர் சுங்கச் சாவடிப் பக்கம் போய்ச் சங்கமக் கரையோரமாகப் போய் அந்த வண்டியைத் தடை செய்யுங்கள்" என்று உத்தரவிட்டதையும் அந்த உத்தரவைத் தொடர்ந்து அவனுக்குப் பின்புறமிருந்த வீரர் சிலர் புரவிகளின் இடையூறு இல்லாத பக்கமாகச் சுங்கச் சாவடியை நோக்கி விரைந்ததையும் கவனித்த இளையபல்லவன், வெகு சீக்கிரம் அமீரின் வண்டியையும் ஆபத்து சூழ்ந்துவிடும் என்பதை உணர்ந்து கொண்டானாகையால் வாளால் எதிரிகளைத் தாக்கிக்கொண்டு பின்புறம் திரும்பி வண்டியை நோக்கினான். அடுத்த வினாடி பின்புறம் பாய்ந்த முரட்டுப் புரவியொன்று மோதித் தள்ள அவன் நிலத்தில் உருண்டான். அவன் தலையில் இருமுறை இரு குளம்புகள் சட்சட்டென்று தாக்கின. அத்துடன் அவன் நினைவிழந்தான். வேறுபல புரவிகள் அவன்மீது பாய்ந்து சென்றன.

புரவிகளின் அந்தத் தாக்குதலில் அந்த வீரனின் உடல் மணலில் புரண்டதைக் கண்ட பீமன், இனி அவனைக் கவனிக்கத் தேவையில்லையென்ற காரணத்தாலும், தாறு மாறாகப் படையைத் தேக்கும் புரவிகளோடு போரிடுவது அவசியமில்லை என்ற காரணத்தாலும், வண்டியை மடக்க ஏற்பாடு செய்து அநபாயன் முதலியவர்களைப் பிடிப்பதே அடுத்தபடி செய்ய வேண்டிய வேலை என்ற உத்தேசத் தாலும் தன் வீரர்களைப் பக்கவாட்டில் திரும்பச் சொல்லி

அவர்களுடன் சுங்கச் சாவடிப் பாதையில் வெகு துரித மாகச் சென்றான். அப்படிச் சென்று கொண்டிருந்த சமயத் தில் அமீரின் வண்டி எங்கிருக்கிறதென்பதைக் கவனிக்க நீர்க் கரையருகே கண்களை ஓட்டினான். புரவிகள் எழுப்பிய மணல் தூசியும் இடையே போடப்பட்ட கப்பிச் சாலையிலிருந்து கிளம்பிய செம்மண் தூசியும் கடற்கரைப் பிராந்தியத்தில் மண்டிக் கிடந்ததால் வண்டி இருந்த இடம் கண்ணுக்குத் தெரியவில்லை கலிங்கத்து அதிபனுக்கு. அந்தத் தூசி மட்டும் மறைக்கவில்லை அமீரின் வண்டியை. அந்த வண்டிக்கு முன் ஓடிய வண்டிகளும் கிழக்குக் கோட்டை வாசலில் நிகழ்ந்த சண்டையால் 'பயந்த பணி யாட்கள் தாறுமாறாக ஓடியதும் கடற்கரையில் கலவரத் தைத் தடுப்பதற்காகவே நிறுத்தப்பட்டிருந்த சுங்கக் காவல் வீரர் நீர்க்கரையை அடைக்க விரைந்ததால் ஏற்பட்ட கூட்டமும்கூட வண்டி கண்ணுக்குப் புலப்படாததற்குக் காரணமாயின. புலப்படாத அந்த வண்டியைத் தேக்கும் காரணத்துடன் வெகு வேகமாகச் சுங்கச் சாவடியை அடைந்த பீமன், அங்குள்ள காவல் வீரர்களை நீர்க்குடம் ஏற்றிச் செல்லும் சகல வண்டிகளையும் மறிக்குமாறு உத்தர விட்டான். அத்துடன் எந்த மரக்கலத்தையும் நங்கூரம் எடுக்க அனுமதிக்க வேண்டாமென்று காவல் படகுகளின் மாலுமிகளுக்கும் உத்தரவிட்டான். இந்த உத்தரவுகளின் விளைவாகக் காவல் வீரர்கள் வேகமாக நீர்க்கரை எல்லை முழுவதையும் வளைக்க முற்பட்டனர். பந்தங்களை ஏந்திய படகுகளில் பல, கோதாவரி சங்கம நீரில் படர்ந்து சென்று எங்கும் பரவத் தொடங்கின.

நாலைந்து வண்டிகளின் மறைவில் தனது வண்டியை ஓட்டினாலும் பின்புறமே பார்த்து வந்த அமீர், இளைய பல்லவனின் நிலையைக் கவனித்தான். புரவிகளின் அட்டகாசத்தைக் கவனித்தான். பீமன் சுங்கச் சாவடியை நோக்கி விரைந்ததையும் கவனித்தான். அடுத்த சில நிமி டங்கள் சங்கம நீரில் படகுகள் படர்ந்து சென்றதையும்

பந்தங்கள் பல அலைமோதிய கரையை நோக்கி ஊர் வதையும் பார்த்தான். தாங்கள் நன்றாக வளைக்கப் பட்டதை உணர்ந்து கொண்டதால் அதுவரை வண்டிக்குப் பின் சென்றவன் சுவடு மாற்றி மற்ற வண்டிகளைத் தாண்டிச் செல்லத் தனது காளைகளை முடுக்கினான்.

வேகமாகச் சென்ற அந்த வண்டியின் பின்புறம் அமர்ந்திருந்த அநபாயனும், அத்தனையையும் கவனிக்கவே செய்தான். அவன் முகம் உணர்ச்சியேதுமற்றுக் கல்லா யிருந்தது. இளையபல்லவன் கதியை முழுவதும் நிர்ணயிக்க முடியாவிட்டாலும், ஓரளவு ஊகிக்க முடிந்த அவன் இதயத்தின் நிலை எதுவோ சொல்ல முடியாது. ஆனால் முகத்தின் நிலையில் எந்த மாறுதலுமில்லை. வெறித்துச் சில வினாடிகள் கோட்டை வாசல் பிராந்தியத்தில் தன் கண்ணுக்கெதிரே விளைந்த காட்சியை நோக்கினான். பிறகு ஏதும் நடக்காதது போல, "இனி மறைவுக்கு அவசிய மில்லை அமீர். வெகு சீக்கிரம் நாம் காவலரால் சூழப்படு வோம். ஆகவே இவர்களைக் குடங்களிலிருந்து எழுந் திருக்கச் சொல். ஆளுக்கொரு வாளையும் கொடு" என்றான் அநபாயன் வறண்ட குரலில்.

அமீருக்கு நிலைமை புரிந்திருந்தது. வண்டி நீர்க்கரையை அணுகுவதற்குச் சில அடிகளே இருந்தன. தூர நீர்க் கரையில் பெரும் பந்தமேதுமில்லாமல் மினுக்மினுக்கென்று சிறு விளக்குகளுடன் ஒரு படகு நின்றிருந்ததையும் கவனித் தான். அந்தப் படகைத்தான் தாங்கள் அணுக வேண்டு மென்பதையும், அதை அணுகுமுன்பு சற்றுத் தூரத்தில் வந்துகொண்டிருந்த சுங்கக் காவலர் அதை அணுகி விடுவார்களென்பதையும் உணர்ந்து கொண்டானாதலால், "அநபாயரே சிறிது தாமதியுங்கள். நீர்க்கரையை அடையும் தருணத்தில் அதைச் செய்வோம்" என்று கேட்டுக் கொண் டான். அமீரின் தாமதத்துக்குக் காரணம் அநபாயனுக்குப் புரியாவிட்டாலும், அவன் அதை ஆட்சேபிக்காமல் அடுத்து நேரவேண்டிய சண்டைக்குத் தயாராக நினைவை

முடுக்கிக் கொண்டு உட்கார்ந்திருந்தான். நீர்க்கரையை அநேகமாக வண்டி நெருங்கிய தருணத்தில் காவலரும் நெருங்கி வந்தனர். வந்தது காவலர் மட்டுமல்ல, அங்கு நின்றிருந்த படகிலிருந்து நான்கு மாலுமிகளும் கரையில் குதித்து வண்டியை எதிர் கொண்டனர். அதேசமயத்தில், "அநபாயரே! வாள்களை எடுத்து இவர்களுக்குக் கொடுங் கள். காஞ்சனாதேவி! வெளியே வாருங்கள். உங்கள் தந்தை யாரும் வெளிவந்து அந்த மாலுமிகளுக்குப் பக்கத்தில் குதிக்கட்டும்" என்றான்.

அடுத்த விநாடி நீர்க்குடங்கள் வண்டியிலிருந்து உருண்டன. அவற்றைத் தொடர்ந்து வண்டியிலிருந்தவர்கள் மணலில் குதித்துக் கரையை நோக்கி விரைந்தார்கள். கட்டின காளைகளை அப்படியே விட்டுவிட்டுக் குதித்த வர்களுக்கு வைக்கோல் மறைவிலிருந்த வாள்களையும் எடுத்தளித்துவிட்டு, வைக்கோல் மறைவிலிருந்த தனது குறுவாள்களையும் கைக்கொண்ட அமீரும், அவர்களைத் தொடர்ந்தான். அவர்களில் முன்சென்ற குணவர்மனும் பணிப்பெண்களுமே படகை அடைய முடிந்தது. மற்றவர் காவலரால் சூழப்பட்டார்கள். சூழ்ந்த காவலர் பதின்மரே யென்பதையும் மற்றவர் சற்றுத் தூரத்திலேயே வருகிறார்க ளென்பதையும் கவனித்த அநபாயன் தன் வாளைக் கண்ணிமைக்கும் நேரத்தில் இரண்டு மூன்று பேர் மேல் பாய்ச்சி இழுத்தான். அவன் வாளுக்கு இரையாகி விழுந்த வர்களை அடுத்து வந்த மற்ற இருவர்களின் வாள்கள் காஞ்சனாதேவியின் வாளின் சுழற்றலுக்குப் பலியாகி ஆகாயத்தில் பறந்தன. போரிட்டுக் கொண்டே அந்த அபூர் வத்தைக் கவனித்த அநபாயன், எதிரிகளின் கைகளிலிருந்த வாள்களை ஒரு சுழற்றில் அவள் எப்படி நீக்கிப் பறக்க வைக்க முடிந்தது என்பதை அறிய முடியாமல் வியப்பின் வசப்பட்டான்.

காஞ்சனாதேவி குழந்தைகளைச் சமாளிப்பது போல் நாலைந்து வீரர்களின் வாள்களைச் சமாளித்துக் கொண்

டிருந்தாள். கையில் உறுதியுடன் பிடிக்கப்பட்டிருந்தாலும், அச்சில் சுழலும் சக்கரம்போல் அவள் வாள் அநாயாச மாகச் சுழலுவதையும், வாள் சுழற்சிக்குத் தக்கபடி அவள் மணிக்கட்டு அநாயாசமாக அசைந்ததையும் கவனித்த அமீர் கூடப் பிரமித்துப் போனான். அப்படிப் போரிட்ட சமயத்திலும் ஆடை சிறிதும் அலங்காமலும் அங்கலாவண் யங்களில் அதிர்ச்சி ஏதுமில்லாமலும் அவள் போரிட்டதை யும், போரிட்டுக் கொண்டே அவள் பின்னடைந்த சமயத் திலும் அவள் நடையில் அழகுடன் நிதானமுமிருந்ததையும் கவனித்த அமீர், 'இது எப்படி சாத்தியம்' என்று வாயைப் பிளந்துகொண்டே வண்டியிலிருந்து கொண்டுவந்த குறு வாள்களைப் பட்பட்டென்று எறிந்து எதிரிகளில் நாலைந்து பேரை விண்ணுலகு அனுப்பினான்.

முதலில் குணவர்மனையும் பணிப்பெண்களையும் கடலை நோக்கிப் போகச் சொல்லி அவர்களுக்குப் பாது காப்பளித்துக் கொண்டே போரிட்டான் அநபாயன். காஞ்சனாதேவி, அமீர், அநபாயன் மூவரும் மெள்ளப் படகை நோக்கி நகர்ந்தார்கள். அந்த மூவராலும் முடிக்கப் பட்ட சுங்கக் காவலர் பதின்மரைத் தொடர்ந்து மேலும் மேலும் சாரிசாரியாக வீரர்கள் வரவே காஞ்சனாதேவி யையும், அநபாயனையும் படகுக்கு விரையச் சொன்ன அமீர், தான் மட்டும் நின்று தூரத்திலிருந்தே இரு குறுவாள் களை வீசினான். சில அடிகளில் வந்து கொண்டிருந்த வீரர் இருவரும் புரவிகளும் மாண்டு விழவே அவர்கள் வேகம் சற்றே தடைப்பட்ட இடை நேரத்தில் அமீர் மாலுமிகளை நோக்கி, "படகு நகரட்டும்" என்று உத்தர விடவே படகு நகர்ந்தது அமீரில்லாமலே. அமீர் கரையில் தங்கிவிட்டதையும், அவனை வீரர்கள் அணுகி வந்து கொண்டிருப்பதையும் ஊர்ந்த படகிலிருந்து கவனித்த அநபாயன், தன் நிலையையும் மறந்து, "அமீர் அமீர்" என்று வாய்விட்டுக் கூவினான்.

காஞ்சனாதேவியின் அஞ்சன விழிகள் கரையைக் கவனித்தன. அமீர் வெகு வேகமாக நீர்க்கரையில் வேறு புறம் ஓடிவந்த வண்டிகளின் மறைவில் மறைந்து விட்டதை அவள் பார்த்தாள். அவனைத் தொடர்ந்து சுங்க அதிகாரியும் கூலவாணிகனும் ஓடுவதும் அவள் கண்ணுக்குத் தெரிந்தது. "அவர்கள் எங்கு ஓடுகிறார்கள்," என்று கவலையுடன் கேட்டாள் காஞ்சனாதேவி.

"தெரியாது" என்றான் அநபாயன்.

"அவர் கதி?" மீண்டும் எழுந்தது அவள் குரல்.

அதுவரை தைரியமாயிருந்த காஞ்சனாதேவி விம்மினாள். கண்களில் நீர் சுரந்து கரைக்குத் திரையிட்டது. அந்தத் திரையிலும் ஒரு முரட்டுப் புரவி வெகு வேகமாக நீர்க்கரையை நோக்கி ஓடிவருவது தெரிந்தது அவளுக்கு. அந்தக் காட்சியும் சீக்கிரம் இருளில் மறைந்தது. கண்ணுக் குத் தெரிந்ததெல்லாம் சொப்பனமோ என்று கூட அவள் நினைத்தாள். சொப்பனத்தைக் கலைத்தது படகு மாலுமியொருவனின் குரல். "கப்பல் வந்துவிட்டது" என்று கூறினான் மாலுமி.

அதைத் தொடர்ந்து, "நூலேணியில் ஏறுங்கள் காஞ்சனாதேவி!" என்றது அநபாயன் குரல்.

ஏதோ கனவில் ஏறுவதுபோல் நூலேணியின் மூலம் மரக்கலத்தில் ஏறினாள் அவள். ஏற்கெனவே நங்கூரம் நீக்கப்பட்ட அந்த மரக்கலம் அவளுக்காகவே அத்தனை நேரம் தாமதித்ததைப்போல் அவள் ஏறியதும் நகரவும் தொடங்கியது. அவள் பாலூர் கிழக்கு வாசலை நோக்கி மீண்டும் விம்மினாள். எதிரே அப்பொழுதும் கடற்கரையில் வீரர்கள் நடமாட்டமும் குழப்பமும் கூச்சலும், பந்தங்களின் அசைவும் இருந்தன. அந்தத் தூரத்திலும் முரட்டுப் புரவிகளின் கனைப்புக் கேட்டது அவள் காதுகளுக்கு. காவற் படகுகள் பல எங்கும் சங்கமப் பகுதியில் விரைந்து கொண்டிருந்தன. கப்பல் செல்ல முற்பட்டு

விட்டதைக் கண்ட காவற் படகுகளின் எரியம்புகள் அந்தக் கப்பலின்மீது சரமாரியாக வரத் தொடங்கின. அவளைச் சுற்றிலும் பறந்தன. அவற்றைச் சிறிதும் லட்சியம் செய்யாமல் கடற்கரையைப் பார்த்துக் கொண்டே நின்றாள் கடாரத்தின் இளவரசி.

'எங்கே அவர்? என்ன ஆனார்?' என்று அவள் தன்னைத்தானே மீண்டும் மீண்டும் கேட்டுக் கொண்டாள். "கடல் புறா பறந்து போகிறதே? வாருங்கள்! வாருங்கள்!" என்று கடற்கரையை நோக்கிக் கையை நீட்டிக் கதறினாள். அவள் கதறலுக்கு யாரும் பதில் சொல்லவில்லை. பெரிதாக எழுந்து மரக்கலத்தைத் தள்ளிச் சென்ற அலைகள்கூட அவளுக்கு ஆதரவு சொல்ல மறுத்து, பேய்ச் சிரிப்புச் சிரிப்பதுபோல் பயங்கரமாகச் சப்திக்கவே செய்தன. காற்றுக் கடவுள்கூட அவளிடம் கருணை இழந்திருக்க வேண்டும். அந்த மரக்கலத்தில் செல்ல இஷ்டமில்லாத அந்தக் கடாரத்து இளவரசியைக் கனவேகத்தில் கடத்திக் கொண்டு பாய்களில் மும்முரமாகப் பாய்ந்து மரக்கலத்தைக் கடலில் வேகமாகச் செலுத்தினான் காற்றுக் கடவுள். மரக்கலம் ஓடியது. அத்துடன் தன் வாழ்க்கையும் எங்கோ ஓடுவதாக அவள் எண்ணினாள். கரையைப் பிரிந்து கப்பல் வேகத்துடன் சென்றது. காதலனைப் பிரிந்த அவள் வேதனையுடன் சென்றாள். பிரிவுக் கனலில் அவள் வெந்து கொண்டிருந்தாள். 'இது பிரிவா? முடிவா?' என்று திரும்பத் திரும்பக் கேட்டுக்கொண்டு ஏங்கினாள். துக்கம் தொண்டையை அடைத்துக் கொண்டதால், மேலும் மேலும் விம்மினாள். அந்த விம்மலுக்குச் சரியாக அவள் மார்பகம் போலவே கடலின் அலைகளும் எழுந்து எழுந்து தாழ்ந்தன. கப்பல் மட்டும் எதையும் லட்சியம் செய்யாமல் ஓடிக்கொண்டிருந்தது.

– முதல் பாகம் முற்றும் –

